ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:





உபய வேதாந்த வித்வான் காரப்பங்காடு
ஸ்ரீ சிங்கப்பெருமாள் ஸ்வாமி
திருவாய் மலர்ந்தருளிய

# ஸ்ரீ ராமாநுஜ ஸித்தாந்தப் ப்ரகாசிகை



கோதா நிலையம் வெளியீடு

10, தியாகராஜபுரம், சென்னை—600 004.

# முன்னுரை

ஸ்ரீ உ. வே. வித்வான் காரப்பங்காடு சிங்கப் பெருமாள் ஸ்வாமி உபய வேதாந்தங்களிலும், குறிப்பாக ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய ரகஸ்யார்த்தங்களிலும் தன்னிகரற்ற புலமை வாய்ந்தவராவர். பல திவ்ய தேசங்களில் எழுந்தருளி சிரந்த காலக்ஷேபங்களையும், உபந்யாஸங்களையும் லோகோபகாரமாக நிகழ்த்தி வந்ததோடு, தம்மிடம் பயின்ற ஐம்பதுக்கும் மேற்பட்ட உபய வேதாந்த வித்வான்களை உலகுக்கு உபகரித்தவர். சென்னையில் பிரசித்தி பெற்று விளங்கிய ஸ்ரீகாரப்பங்காடு வேங்கடாசாரியார் ஸ்வாமியின் ஸ்வீகார பிதாவும், ஆசார்யனுமாக விளங்கியவர்.

சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன் 'ஹரி சமய திவாகரம்' மாத இதழில் ஸ்ரீ. உ. வே காரப்பங்காடு சிங்கப் பெருமாள் ஸ்வாமி எழுதிய 'ஸ்ரீராமாநுஜ சித்தாந்தப் ப்ரகாசிகை என்னும் இந்நூலை தொடர் கட்டுரைகளாக வெளியிட்டு வந்தனர். அவ்வாறு வெளிவந்த கட்டுரைகளில் ஒரு பகுதியை மதுரை ஸ்ரீ சேஷராமாநுஜம் என்பார் 1961இல் ஒரு தனிநூலாக வெளியிட்டார். இரண்டு பகுதிகளுக்கு மேல் வெளியிடப்படாமல் தனிக்கட்டுரைகளாகவே இருந்து விட்டன. இப்போது எல்லாத் தொடர் கட்டுரைகளுமே சேர்ந்து இந்நூல் காரப்பங்காடு ஸ்ரீ பெருந்தேவித்தாயார் ஸமேத அபீஷ்ட வரதராஜஸ்வாமி ஸம்ப்ரோக்ஷண வைபவத்தையொட்டி வெளிவருகிறது.

இந்நூலில் ஸ்ரீராமாநுஜ தரிசனப் பிரமாணங்கள், பிரமேயங்கள் பற்றி முதலில் ஸ்தூலமாகவும், பிற்பகுதியில் ஸூக்ஷ்ம யோசனையாக ஸம்பிரதாய பேதங்களின் நுட்பமான விசாரங்களும், அனுஷ்டானத்தில் காணப்படும் வேற்றுமைகளும் வெகுஅற்புதமாக வெளியிடப்பட்டிருக்கின்றன. அக்காலத்திய மணிப்ப்ரவாள நடையில் இந்நூல் அமைந்திருந்தாலும், பயன்கருதி, ஸ்வாமியின் தொடர்கட்டுரைகள், இப்போது ஒரு தனி நூலாக வெளிவருகிறது.

இந்நூலை வெளியிடுவதாக மிகமிகக் குறுகிய காலத்தில் முடிவு செய்து சுமார் ஒருமாத காலத்தில் இந்நூல் வெளிவந்துள்ளது. இக்கட்டுரைகள் நூல்வடிவமாக வெளிவருவதில் உறுதுணையாக இருந்தவர் உ. வே. குமாரவாடி ஸ்ரீராமாநுஜாச்சாரியர். இந்நூலை, பல அலுவல்களுக்கிடையேயும் சோதித்து, திருத்தி உதவியவர். இந்நூல் ஒருமாத காலத்திற்குள் வெளிவரும் பொறுப்பை ஏற்று, ஊக்கத்துடன் செய்து முடித்தவர் ஸ்ரீ G. ரங்கராஜன் Free India Press. அதே மாதிரி அச்சுக்கோப்பு முழுவதையும் உரிய காலத்தில் செய்து இந்நூல் ஸம்ப்ரோக்ஷண ஸமயத்தில் வெளிவர மிகவும் உதவியவர்கள் திருவல்லிக்கேணி B R V Pressஐ சேர்ந்த திரு V. பாலன் அவர்கள். இந்நூலின் மேலட்டையை மிகச்சிறப்பாக அச்சிட்டுக் கொடுத்தவர் பூச்சி ஆர்ட்ஸ் ஸ்ரீகண்ணன் இவர்கள். அனைவருக்கும் நாங்கள் நன்றி செலுத்துகிறோம்; கடமைப் பட்டிருக்கின்றோம். அச்சிடுவதில் உள்ள நிறைவை அவர்களுடையதாகவும் குறையிருப்பின் எங்களுடையதாகவும் ஏற்கவும்.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயக் கருத்துக்களை உள்ளபடியறிய உறுதுணையாக அமைந்துள்ள இந்நூலை ஆஸ்திக—ஸ்ரீவைஷ்ணவ உலகம் வரவேற்று எங்களது இந்த சிறு முயற்சிக்கு ஊக்கமளிக்கும் என நம்புகிறோம்.

அடியேன்

ஸ்ரீ. உ. வே. காரப்பங்காடு வெங்கடாசாரியார் குமாரன்

24-4-1984

K. V. சிங்கராச்சாரி



ஸ்ரீ பெருந்தேவித் தாயார், உபய நாச்சிமாருடன் அபீஷ்ட வரதராஜ ஸ்வாமி
(காரப்பங்காடு) திருக்கல்யாண கோலம்



உபய வேதாந்த வித்வான் காரப்பங்காடு ஸ்ரீ சிங்கப்பெருமாள் ஸ்வாமி

ஸ்ரீரங்கம், தலைவர் சிங்கமய்யங்கார் தென்னாசார்ய ஸம்ப்ரதாய
வித்யா தர்மபரிபாலன சாலை காலக்ஷேப சாத்துமுறை கோஷ்டி 1920



(இடமி இருந்து வலம்): (1) சேஷய்யங்கார், (2) வித்வான் கோவிந்தாசாரியார் ஸ்வாமி (3) கோபாலய்யங்கார், (4) K. சிங்கமய்யங்கார் பேரன் K. ஸ்ரீநிவாஸன், (5) K. சிங்கமய்யங்கார், (6) வித்வான் காரப்பங்காடு சிங்கப் பெருமாள் ஸ்வாமி (7) வித்வான் பத்ராவய்யங்கார் ஸ்வாமி, (8) வித்வான் மெய்யுவாசாரியார் ஸ்வாமி (9) வித்வான் சேஷய்யங்கார் ஸ்வாமி, (10) வித்வான் சடகோபாசாரியார் ஸ்வாமி.

श्री:

श्री पेरुन्देवीनायिकासमेत श्री अभीष्ट वरदराजस्वामिने नमः ।



श्रीमतेरामानुजाय नमः ।

# ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்த ப்ரகாசிகை

ஸ்ரீ உ.ப. வே. வித்வான் காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமி.

तरुणारुणांबुज विकासि लोचनं
करुणारसैक वरुणालयं विभुम् ।
शरणागतार्ति हरणैक दीक्षितं
शरणं भजेय वरदं रमासखम् ।। १ ।।

वारणाचल शिरो विभूषणं
वारणार्ति हरणैक दीक्षितम् ।
वारणांतक मुदार वैभवं
वारणाय विपदा मुपास्महे ।। २ ।।

निरंकुशत्वेन यथा मनोरथं
विहार भाजो हरिमत्त दंतिनः ।
यदंकुशं प्राहुर गाध मेधसः
तदास्तृणीतां महतीं श्रियं नः ।। ३ ।।

कुवलय मुद मेधयन् स्वगोभिः
कुमतिमतान्ध तमो निरासदक्षः ।
रचयतु कुशलं सताम धीशः
रजनिकरो यतिसार्वभौमनामा ।। ४ ।।

यद्वाणी वैखरींतां शठरिपु फणिति-
व्याक्रिया केबिलोलाम् ।
श्रुत्वा चित्रा कुलान्तः करणइह मुदा-
रंग सर्वं सहेशः ।।
श्रीशैलेत्यादि पद्यं बुध सद सिजगौ-
बाल भावेन सोयम् ।
भूंना सर्वातिशायी वरवरमुनिरा-
ढास्त्र णीतां श्रियं नः ।। ५ ।।

தருணருணம்பு3ஜ விகாஸி லோசநம்
கருணரஸைக வருணலயம் விபு4ம் ।
ஶரணைக3தார்த்தி ஹரணைக தீ3க்ஷிதம்
ஶரணம் ப4ஜேய வரத3ம் ரமாஸக2ம் ॥ 1 ॥

வாரணைசல ஶிரோ விபூ4ஷணம்
வாரணார்த்தி ஹரணைக தீ3க்ஷிதம் ।
வாரணாந்தகம் உதா3ர வைப4வம்
வாரணய விபதா3ம் உபாஸ்மஹே ॥ 2 ॥

நிரங்குஶத்வேந யதா3 மநோரத3ம்
விஹார பா4ஜோ ஹரி மத்த த3ந்திந: ।
யத3ங்குஶம் ப்ராஹு ரகா3த4 மேத4ஸ:
ததா3ஸ்த்ருணீதாம் மஹதீம் ஶ்ரியம் ந: ॥ 3 ॥

குவலயமுத3மேத2யந் ஸ்வகோ3பி4:
குமதி மதாந்த2தமோ நிராஸத3க்ஷ: ।
ரசயது குஶலம் ஸதாமதீ4ச:
ரஜநிகரோ யதிஸார்வபௌ4ம நாமா ॥ 4 ॥

யத்2வாணீ வைக3ரீம் தாம் சட4ரிபு ப2ணிதி-
வ்யாக்ரியா கேபிலோலாம் ।
ஶ்ருத்வா சித்ராகுலாந்த: கரணஇஹ முதா3-
ரங்க3ஸர்வம் ஸஹேஶ: ॥
ஶ்ரீஶைலேத்யாதி3 பத்3யம் பு3த2ஸத3ஸி ஜகௌ3-
பா3ல பா4வேந ஸோऽயம் ।
பூ4ம்நா ஸர்வாதிஶாயீ வரவரமுநிராட்-
ஆஸ்த்ருணீதாம் ச்ரியம் ந: ॥ 5 ॥

---

## நூல் தொடக்கம்

ஆழ்வார் தொடங்கி எம்பெருமானர் நடுவாக மணவாள மாமுனிகள் முடிவாகவுள்ள ஆசார்ய பரம்பரையில் ஸம்ப்ரதாய பரம்பரா ப்ராப்தங்களான அர்த்தவிசேஷ நிர்ணய மானது (1)நிரதிசய புருஷார்த்த ப்ராப்திக் குறுப்பாகையாலே, அவர்களால், சுருக்கியும் விரித்தும் அருளிச் செய்யப்பட்ட அர்த்த விசேஷங்கள், எளிதில் அறியும் பொருட்டு அவ்வவ் விடங்களிலுள்ளவைகளைக் கொண்டு மிகச் சுருக்கமும் விரிவுமின்றிக்கே இங்கு நிருபிக்கப்படுகின்றன.

## இந்நூல் இரண்டு பரிச்சேதமாய் இருக்கு மென்கை

அதில் ''மாநாதீநா மேயஸித்தி:'' என்கிற படி ப்ரமாணத்தைக் கொண்டே பிரமேயம் ஸித்திக்க வேண்டியிருப்பதால், முதலில் பிர மாணத்தை நிருபித்துக்கொண்டு பின்பு பிர மேயங்களான அர்த்த விசேஷங்களை நிருபிக்க வேண்டியது அடைவாகையாலே, இப்பிர பந்தம் பிரமாண பரிச்சேதமென்றும் பிரமேய பரிச்சேதமென்றும் இரண்டு பாகமாயிருக்கும்.

## ப்ரத்யக்ஷாதி ப்ரமாண நிருபணம்

அவற்றுள் பிரமாணங் களாவன—பிர மேயங்களை உள்ளபடி அறிகைக்குச் சாதனங் களான பிரத்யக்ஷமும், அநுமானமும், சப்தமு மாம். அவற்றுள் பிரத்யக்ஷப் பிரமாண மாவது—ரூப ரஸ கந்த ஸ்பர்ச சப்தங்களையும், இவைகளுக்கு ஆதாரங்களான திரவியங் களையும், உள்ளுறையான சுக துக்கங்களையும் அறிதற்குச் சாதனங்களான கண் முதலான ஐந்து இந்திரியங்களும், மனஸ்ஸுமாகிற ஆறுவது இந்திரியுமாம். அநுமானப் பிர மாணமாவது— பிரத்யக்ஷத்தால் அறியப்படும் வஸ்துக்களுடைய ஒன்றைவிட்டு ஒன்று பிரி யாமலிருக்கிற நிலைமையைக் கொண்டு ஒன்றாலே ஒன்றை அறிகைக் குறுப்பான தர்க்கமென்று சொல்லப்படுகிற யுக்தி விசே ஷம். அஃதாவது—அறியப்பட்ட தொன்றை விட்டுப் பிரிந்திருக்க மாட்டாதென்றறிந்த தொன்றை அறியாதவிடத்தும் அவ்வறியப் பட்டதைக்கொண்டறியும் யுக்தி விசேஷம் என்றபடி. சப்தப் பிரமாணமாவது—பிரத் யக்ஷத்தால் அறியமுடியாத வஸ்துக்களை உள்ளபடி அறிகைக்குச் சாதனமான அக்ஷர ராசி ரூபமான சப்தம்.

## சப்த ப்ரமாண விசேஷ நிருபணம்

அந்த சப்தம் நாலுவகையாயுள்ள வேதங் களும், அவைகளின் அர்த்தத்தை உள்ளபடி தெரிவித்தற்குச் சாதனங்களான மீமாம்ஸை முதலான அங்கங்களும். அந்த வேதங்களு டைய அர்த்தத்தை விஸ்தரித்துச் சொல்லியும், அந்த அர்த்தங்களுக்கு விரோதமில்லாமல், அதற்கு (2) உபயுக்தமான அர்த்தங்களைச் சொல்லியும் போருகிற மநுஸ்ம்ருதி முதலான தர்மசாஸ்திரங்களும் இதிஹாஸ புராணங் களும், பாஞ்சராத்ரமும், மயர்வறமதிநல மருளப் பெற்ற ஆழ்வார்களுடைய திவ்யஸூக் திகளும், அவைகளை அநுஸரித்த பூர்வாசார் யர்களுடைய ஸூக்திகளுமாம்.

## வேதத்தின் பெருமை விளக்கம்

அவைகளில் வேதமானது—ஒரு புருஷனுற் சொல்லப்படாமையாலே (3) பிரமம் வஞ்சனை (4)அநவதாநம் ஆகிய இவைகளால் உண்டா குந்தோஷம் அதற்கு இல்லையாம். மற்றும் அவ்வேதமானது ஒரு வஸ்துவைத் தெரி விக்கும் விஷயத்தில் மற்றொன்றை அபேக்ஷி யாமலிருக்கும்படியான பெருமையும். நித்ய மாயிருக்கையும் உடையது. ஆனால், ஸித்தாந் தத்தில் சப்தம் அஹங்கார மென்கிற தத்து வத்தினுடைய காரியமாயிருப்பதால், நித்ய மென்று சொல்லும்படி எங்ஙனே என்னில்? சப்தம் அநித்யமாயிருந்த போதிலும், கல்பங் கள் தோறும், (5) ஆநுபூர்வி வேறுபட்டிராமல் ஒரே ஆநுபூர்வியாக உச்சரிக்கப்படுவதைப் பற்றி நித்யமென்றே சொல்லப்படும்.

## இதிஹாஸ புராணங்களின் தன்மை

மற்ற இதிஹாஸ புராணங்களுக்கு வேதத் தைஅநுஸரித்தே பிராமாண்யம் ஏற்படுவதால் வேதவிரோதமான அர்த்தங்களைச் சொல்லு மிடத்து அவை பிரமாணமாக மாட்டா.

## பாஞ்சராத்ர-திவ்யப்ரபந்தங்களைப் பற்றி

பாஞ்சராத்ரம், ஸர்வஜ்ஞனுய் சேதனர் களுடைய உஜ்ஜீவனத்தில் ப்ரவ்ருத்தனுயிருக் கிற ஸர்வேசுவரனுல் அருளிச்செய்யப்பட்ட தாகையால், வேதம் போல் தன்னுடைய ப்ராமாண்யத்தில் மற்றொன்றை அபேக்ஷியா மலிருப்பதால் வேத துல்யம். (6) அப்படியே மயர் வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களு டைய திவ்யஸூக்திகளும் வேத துல்யங்களாம். அன்றிக்கே வேதம் போல் ஆநுபூர்வி வேறுபடா மல் ''என்முன் சொல்லும் மூவுருவா முதல்

வனே" என்றும், "திருநாமச் சொற் கற்றனமே" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வேசுவரன் ஆழ்வாருக்கு உபதேசிக்க, ஆழ்வார் மதுரகவிகளுக்கு உபதேசிக்க, இப்படி நாத முனிகள் முதலாகப் பரம்பரையாக வருகிற படியால், நம்மாழ்வார் அருளிச்செய்த நாலு பிரபந்தங்களும் நாலு வேதங்களாகவும் மற்ற ஆழ்வார்களுடைய திவ்யஸூக்திகள் அவைகளுக்கு அங்கங்களாயும் உபாங்கங்களாயும் உள்ளன என்பது சில ஆசார்யர்களுடைய அபிப்பிராயம்.

### வேதத்தின் பாகுபாடு.

இனி வேதம் கரும பாகமென்றும் ப்ரஹ்ம பாகமென்றும் இரண்டு வகையாயிருக்கும். அவற்றுள் கருமபாகம் ஆராத்யனான ஸர்வேசுவரனுடைய ஆராதனங்களான யஜ்ஞம் முதலான கர்மாக்களையும், அவைகளுடைய அநுஷ்டானப்பிரகாரத்தையும் விளக்கமாய்ச் சொல்லும். இதற்கு உபப்ரும்ஹணங்கள் (வழி நூல்கள்) மநுஸ்மிருதி முதலான தர்ம சாஸ்திரங்களாம். ப்ரஹ்மபாகம் ஆராத்யனான ஸர்வேசுவரனுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளையும் அவனை யடைவதற்குரிய உபாயத்தையும் அதனுடைய பலத்தையும் நேராகப் பிரதிபாதிக்கும். இதற்கு வழிநூல்கள் ஸ்ரீ ராமாயண பாரதங்களான இதிஹாஸங்களும் விஷ்ணுபுராணம் முதலான ஸாத்விக புராணங்களுமாம்.

### வேதத்தின் வழிநூல்களைப்பற்றி

இதில் பூருவபாகத்தின் வழிநூல்களான தர்ம சாஸ்திரங்களில் ஆராதனமான கர்மாவினுடைய நிருபணத்தில் ஆராத்யனான ஈசுவரனுடைய ஸ்வரூப நிரூபணமும் ஆராதனமான கர்மாவினுடைய நிருபணமும் இன்றியமையாததாய் ஏற்பட்டிருக்கும்.

அந்த இரண்டு நிருபணங்களும் மிகவும் உபயுக்தங்களாகையால், இரண்டு விதமான வழிநூல்களும் இரண்டுவித நிருபணங்களிலும் அவைகளுக்காகவே ப்ரவ்ருத்தங்களாகையால் ஈசுவர ஸ்வரூப நிருபணத்தில் தர்மசாஸ்திரங்களும் (7) கர்மநிருபணத்தில் இதிஹாஸ புராணங்களும் அமுக்யங்களன்று. ஆதலால் ஈசுவரஸ்வரூப நிருபணத்தில் தர்மசாஸ்திரம் இதிஹாஸ புராணத்தைக் காட்டிலும் துர்ப்பலமென்றும், அப்படியே ஆசார நிருபணத்தில் தர்மசாஸ்திரத்தைக் காட்டிலும் புராணம் துர்ப்பலமென்றும் சொல்லுவது பிரமாணத்துக்கு ஒத்ததன்று. இந்த விஷயம் ஸ்ரீ பாஷ்யத்தில் இரண்டாவது அத்தியாயத்தில் ஸ்மிருத்யதிகரணத்தில் விளக்கமாகக் காணலாம். இந்த விஷயத்தைத் தர்மசாஸ்திர நிபந்தனகாரரான வைதிக ஸார்வ பௌமர் "தச நிர்ணயி" என்கிற க்ரந்தத்தில் ஸ்ரீஜயந்தி நிர்ணயத்தில் விவரித்து நிருபித்திருக்கிறார். இது நிற்க.

### ரஹஸ்ய க்ரந்த ப்ரஸ்தாவம்

"சாஸ்த்ர ஜ்ஞாநம் பஹுக்லேசம் புத்தேச் சலந காரணம்—உபதேசாத் ஹரிம் புத்வா விரமேத் ஸர்வ கர்மஸு" என்கிற சுலோகத்தின்படி உபதேச சாஸ்த்ரமும் பிரமாணம். உபதேச சாஸ்த்ரமாவது—ஆசார்யனால் உபதேசிக்கப்பட்ட ரஹஸ்ய த்ரய சாஸ்த்ரம். இந்த விஷயம் ஸ்ரீபாஷ்யத்தில் லகு ஸித்தாந்த ச்ருதப்ரகாசிகையில் விளக்கமாம். இவ்விஷயம் பிரமேய பரிச்சேதத்தில் விவரிக்கும் படியாயிருக்கும். இந்த உபதேச சாஸ்த்ரார்த்த விசாரரூபங்களான ஸூத்திரங்களாகவே "ஸ்ரீ வசன பூஷண"மும், "ரஹஸ்யத்ரய"மும், லோகதேசிகனால் அருளிச்செய்யப்பட்டுள்ளன. இவற்றிற்கு வ்ருத்தி க்ரந்தம் மணவாளமா முனிகள் அருளிச்செய்த வியாக்யானங்களாம். இந்த ஸூத்திரங்களுக்குப் பாஷ்யங்களாக குன்னத்தூர் ஐயன், சுத்த ஸத்வம் எம்பாவையங்கார் என்கிற இவ்விருவரும், "ஸ்ரீ வசன பூஷண மீமாம்ஸா பாஷ்யம்" என்றும், "ரஹஸ்ய த்ரய மீமாம்ஸா பாஷ்யம்" என்றும் இரண்டு பாஷ்யங்கள் முறையே அருளிச் செய்திருக்கிறார்கள்.

இந்த அர்த்தவிசேஷங்கள் ஸ்ரீபாஷ்யத்தில் ஏற்கனவே சுருக்கமாய் அருளிச் செய்யப்பட்டன. இவை பிரமேய பரிச்சேதத்தில் நிருபிக்கும்படியாயிருக்கும். இவ்வர்த்த விசேஷங்கள் "சரம சுலோக சந்திரிகை"யிலும், "சரமசுலோக டிப்பணி" யிலும் ஸ்ரீ பரமஹம்ஸேத்யாதி எம்பார் ஜீயர் ஸ்வாமி ஸாதித்த க்ரந்தங்களிலும் விஸ்தரிக்கப்பட்டன.

### சிஷ்டாசார ப்ராமாண்ய ப்ரஸ்தாவம்

அப்படியே "தர்மஜ்ஞ ஸமய: ப்ரமாணம்" என்கிறபடியே சிஷ்டாசாரமும் பிரமாணம். "தர்மஜ்ஞஸமயம் பிரமாண"மென்று முந்திச் சொல்லப்பட்டிருப்பதால், சிஷ்டாசாரம் முக்ய

பிரமாணம். சிஷ்டர்களாகிறுர் பகவத் கடாக்ஷ விசேஷத்தால் அடையப்பெற்ற திவ்ய ஜ்ஞானத்தை யுடையவர்களான ஆழ்வார்கள். இந்த விஷயத்தை "சொல்லும் அவிடு சுருதியாம்" என்று ஞானசாரத்தில் அருளாளப்பெருமா ளெம்பெருமாஞர் ஸூசிப்பித்திருக்கிறுர். அப்படியே திருப்பாவையில் "மாலே மணிவண்ணு" என்கிற பாட்டில் "மேலேயார் செய்வனகள்" என்கிற வாக்யத்தினுடைய வ்யாக்யான ஸரத்தில் அழகிய மணவாளப்பெருமாள் நாயஞர் வியக்தமாக அருளிச்செய்திருக்கிறுர். நிற்க. மீமாம்ஸையில் சுருதி ஸ்மிருதி விருத்தமான சிஷ்டாசாரம் பிரமாணமன்றென்று சொல்லியிருப்பது ஸாக்ஷாத் பகவத் தத்வ தர்சிகளான ஆழ்வார்களைத் தவிர, கேவல ஸ்மர்த்தாக்களான சிஷ்டர்களுடைய ஆசார விஷயம்.

## இராமாநுச நூற்றந்தாதியைப்பற்றி

இனி இராமாநுச நூற்றந்தாதி திவ்யப் பிரபந்தங்களின் எண்ணிக்கையிற் சேராமல் திவ்யப்பிரபந்தங்களுக்குண்டான பெருமையைப் பெற்றது என்கிற விஷயம் சிஷ்டாசார ஸித்தம்.

ஆழ்வார்களின் அருளிச்செயல்களான திவ்யப்பிரபந்தங்கள் ஆழ்வார்கள் காலத்திற்குப் பிறகு பிரசாரம் இல்லாமல் லோபத்தையடைய, பின்பு நாதமுனிகள் காலத்தில் நாதமுனிகளுக்கு ஆழ்வார் நாலாயிரத்தையு மருளிச்செய்ததாகக் குருபரம்பரா ப்ரபாவத்திலிருக்கிறது. அப்போது இராமாநுச நூற்றந்தாதி இல்லாமையாலும் அவ்வாறில்லாதிருக்கினும் ஆழ்வார் இனி ஏற்படும் இந்தப் பிரபந்தத்தையும் ஸாக்ஷாத்கரித்து அருளிச்செய்தார் என்பதற்குப் பிரமாணமில்லாமையாலும், நாதனுக்கு நாலாயிரமும் உபதேசித்த பிறகு பூர்வர்களுக்கு இராமாநுச நூற்றந்தாதியும் உபதேசமாகவே வந்ததாகப் பிரமாணமில்லாமையாலும், "வேதத்துக்கு ஓம் என்னுமது போல்" என்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்தபடி "கண்ணி நுண் சிறுத்தாம்பு"க்கு முந்தியுள்ள பிரபந்தங்கள் ப்ரணவார்த்த விவரணமாயும், நம: சப்தத்துக்கு முக்யார்த்தமான பாகவத சேஷத்வத்தை ப்ரதிபாதிக்கிறபடியால் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" நம: சப்தார்த்த விவரணமாயும் "பெரிய திருமொழி" மந்த்ர சேஷத்தினுடைய விவரணமாயும், திருவாய்மொழி த்வயார்த்த விவரணமாயும், இயற்பா சரமச்லோகார்த்த விவரணமாயும் இருக்கும்படியை அழகிய மணவாளப்பெருமாள் நாயஞர் ஆசார்ய ஹ்ருதயத்தில் நிர்வஹித்தபடியை அநுஸரித்து, "உபதேச ரத்தின மாலை"யில் "வாய்த்த திருமந்திரத்தின் மத்திம மாம் பதம்போல்" என்று தொடங்கி "அருளிச் செயல்நடுவே சேர்வித்தார் தாற்பரியந்தேர்ந்து" என்று "கண்ணி நுண்சிறுத்தாம்பை"த் திவ்யப்பிரபந்தங்களிற் சேர்த்து அருளிச்செய்ததுபோல் இராமாநுச நூற்றந்தாதியைத் திவ்யப் பிரபந்தங்களிற் சேர்த்து அருளிச்செய்யாமையாலும், அப்படி நாலாயிரத்திற் சேர்த்துக் கொள்வதாயிருந்தால் பாகவத சேஷத்வஞ் சொல்லப் பெற்ற இப்பிரபந்தத்தைக் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்ற பிரபந்தத்தோடு சேர்த்து அநுஸந்திக்கவேண்டி வருகையாலும், ஸம்பிரதாயம் அவ்வாறில்லாமல் பிரபந்தாந்தத்தில் ஸேவித்து வருகிறபடியாலும் இராமாநுச நூற்றந்தாதி நாலாயிரத்திற் சேர்ந்ததன்று.

ஆகிலும் கோயிலில் பெரியதிருநாள் ஸப்தாவரணோத்ஸவத்தில் நம்பெருமாள் உடையவரைக் கோஷ்டிக்கு எழுந்தருளாமலிருக்க நியமித்து, உடையவர் விஷயமான இப்பிரபந்தத்தைத் தாம் திருச்செவி சாத்தியருளி அன்றுமுதல் திவ்யப் பிரபந்தங்களுக்குச் சமமாக இதை ஸேவித்துவரும்படி நியமித்தபடியால், திருப்பல்லாண்டுக்கு முந்தி இப்பிரபந்தத்தையும் சாற்றுமுறை செய்கிறதும், திவ்யப் பிரபந்தங்களை அத்யயநம் பண்ணக் கூடாத அநத்யயந காலங்களில் இப்பிரபந்தத்தையும் அத்யயநம் பண்ணுமலிருக்கையுமாகிற திவ்யப் பிரபந்தங்களுக்குண்டான இந்த கௌரவத்தை இதற்கும் ஏற்படுத்தியிருக்கிறுர்கள். இவ்விஷயம், "கோயிலொழுகு" முதலான பிரபந்தங்களில் தெளிவாகக் காணலாம்.

## நாலாயிரமென்னும் ஸங்கியையைப்பற்றி

இதில் "திருவெழு கூற்றிருக்கை" "சிறிய திருமடல்" "பெரிய திருமடல்" என்ற மூன்றும் ஒவ்வொரு பிரபந்தமும் ஒவ்வொரு பாட்டாகக் கொள்ளவேண்டியது தமிழ் முறைக்குச் சேர்ந்தது. ஆயிரக்கணக்கான தொகைகளில் சற்றேறக்குறைய விருந்தாலும், அவைகளை அவ் வாயிரக்கணக்கால் வழங்குவதும் உசிதமே யாம். இதனை, இதிஹாஸ புராணுதிகளுக்கும் பகவத் விஷயம் முதலான

வியாக்யானங்களுக்கும் சொல்லும் கிரந்த ஸங்கியைகளைக் கணக்கிட்டும் காணலாம். ...

### உபய மீமாம்ஸைகளைப்பற்றி

வேதத்தின் கர்மபாகத்திற்கும், ப்ரஹ்ம பாகத்திற்கும் முறையே அர்த்த விசாரமாக வியாஸ சிஷ்யரான ஜைமினியாலும் வியாஸ ராலும் செய்யப்பட்ட பூர்வ மீமாம்ஸையும், உத்தர மீமாம்ஸையும் இரண்டுங்கூடி ஒரே சாஸ்திரமாகும்; இதனை (8) "ஸம்ஹிதமேதத் சாரீரகம் ஜைமிநீயேந ஷோடச லக்ஷணேந இதி சாஸ்த்ரைகத்வஸித்தி:" என்று போதாயந வ்ருத்தியிற் சொல்லியிருப்பதால் அறியலாம். ஆகவே அவை இரண்டும் பரஸ்பரம் விருத்தங்களென்றுவது வெவ்வேறு சாஸ்திரங்களென்றுவது கொள்ளக்கூடாது.

### மஹாபாரத ஸ்ரீராமாயணங்களைப்பற்றி

இனி இதிஹாஸங்களுள் பாரதத்திற் காட்டிலும் ஸ்ரீராமாயணம் சிறந்த பிரமாண மாகும். இதனை, பட்டர் அருளிச்செய்த ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில்(9) "ராமாயணவத் மஹாபாரதமபி சரணம்" என்று ஸ்ரீராமாயணத்தை திருஷ்டாந்தமாகக் காட்டியிருப்பதாலறியலாம்.

### புராண விவேசனம்

இனி, புராணங்களுக்குள் ராஜஸ தாமஸ புராணங்களைக் காட்டிலும், ஸாத்விக புராணங்கள் மேலானவைகள். அவற்றின் விபாகக் கிரமமும் நிரூபிக்கலாம். புராண ப்ரவர்த்தகரான ருஷிகள் ப்ரஹ்மாவிடஞ் சென்று எங்களுக்குப் புராண தத்வங்களைச் சொல்ல வேணுமென்று கேட்க, "நான் முக்குண வயத்தன்; ஸத்வம் தலையெடுத்தபோது நாராயணனைப் பிரதிபாதிக்கிற புராணங்களையும், ரஜோகுணத்தின் வயமானபோது என்னுடைய பெருமை யப்பேசும் புராணங்களையும், தமோகுணத்தின் வயமானபோது அக்கினி, சிவன் இவர்களுடைய பெருமையைப் பேசும் புராணங்களையும் சொல்லுவேன்; இவற்றுள் ஸத்வம் தலையெடுத்தபோது சொல்லிய புராணங்கள் உண்மை யுரைப்பதிற் சிறந்தவைகளாம்; மற்றைப் புராணங்களில் ஸாத்விக புராணங்களோடு மாறுபாடில்லாத பகுதிகளே மெய்யுரைகளாம்" என்றிவ்வாறு பிரமன் சொன்னதாகக் (10) கூர்ம புராணங் கூறுவதால் ஸாத்விக புராணங்கள் மேலானவைகள்.

### வ்யுத்பத்தி ப்ரகார நிருபணம்

இனிச் சொற்கள் பொருள்களை யுணர்த்துமாறு காட்டப்படும். பாலர்களுக்குத் தாய் தந்தை முதலானவர்கள் ஓரோர் பொருளைச் சுட்டிக்காட்டி, அததற்குரிய சொல்லைச் சொல்லிப் பயிற்றுதலால் உண்டாகும் சப்தார்த்த ஸம்பந்த ஜ்ஞாநத்தை (சொற்பொருளுணர்ச்சியை)ப் புத்தி பூர்வக வியுத்பத்தியென்று சொல்லலாகும். இவ்வாறன்றி ஒருவன் ஒருவனை ஒரு காரியத்தில் ஏவும் போது, ஏவுவோன் சொல்லுஞ் சொற்களையும், இயற்றுவோன் செய்யுங்காரியங்களையுங் கண்டு இச்சொற்கு இது பொருளென்றுணர்தலை யாத்ருச்சிக வ்யுத்பத்தி யென்பர். இவ்வாறு ஒவ்வொரு சொல்லும் அததற்குரிய பொருளை யுணர்த்தி முடியும் சொல்லாற்றலை (சப்த வ்ருத்தியை)ப் பரியவஸாந விருத்தியென்று வழங்குவர்.

### அபர்யவஸாந வ்ருத்தி நிருபணம்

சரீரத்தை யுணர்த்துஞ் சொற்களும், குணத்தை யுணர்த்துஞ் சொற்களும், ஜாதியை யுணர்ந்துஞ் சொற்களும் அவற்றை யுணர்த்தும் அவ்வளவில் நில்லாமல் முறையே சரீரத்தையுடைய ஜீவனையும் குணங்களையுடைய பொருள்களையும். ஜாதிக்குப் பற்றுக்கோடான (ஆசிரயமான) வடிவத்தையும், உணர்த்துவன போல ஒவ்வொரு சொல்லும் அதனதன் பொருளுணர்த்திய வளவில் நில்லாமல் அவ்வப்பொருள்களையெல்லாம் உடலாகவுடைய ஸர்வேசுவரனளவிற் செல்லும் சொல்லாற்றலை (சப்த விருத்தியை) அபர்யவஸாந வ்ருத்தி என்பர். எப்படி தேவதத்தன் என்ற பெயர் தேவதத்தனது சரீரத்தை யுணர்த்தி, அதற்கபிமானியாயுள்ள ஜீவனையுமுணர்த்துமோ அப்படியே அந்த ஜீவனுக்கும் அந்தர்யாமியான ஈசுவரனையுஞ் சொல்லுமாகையால், உலக வழக்கான சொற்களும், வேத வழக்கான சொற்களும், ஸர்வேசுவரனைச் சொல்லத் தட்டில்லை. இப்படியான அபர்யவஸாந வ்ருத்தி யிருந்த போதிலும்; கோத்வம், கடத்வம், சரீரம் முதலான சொற்கள் ஈசுவரனை யுணர்த்தாமல் கோத்வம், கடத்வம், சரீரம் என்னும் அப்பொருள்களையே யுணர்த்தும். நீல: சுக்ல: தேவதத்த: என்பன போன்ற சொற்கள் ஒரு கால் நீல ரூபத்தையும், சுக்ல ரூபத்தையும்,

தேவதத்த சரீரத்தையும், முறையே உணர்த்தியும் ஒருகால் இவைகளையுடைய பொருள்களை உணர்த்தியும் நிற்கும். இவ்வாறான சொற் பொருளாற்றல்களை இடங் கண்டு கொண்டு லௌகிக வைதிக வாக்கியார்த்தங்களை யறியவேண்டும்.

### இனி, பாஷா நிரூபணம்

ஸம்ஸ்கிருதம் தேவபாஷையாகையால் மேன்மையுடையதே; திராவிடபாஷை நிஷித்த பாஷை யாகையால் தாழ்வுடையதாகும்; ஆகவே அதிலுள்ள பிரபந்தங்களும் பிரமாண மாகும்படி எங்ஙனே? என்னில், தாழ்வுடைய பாஷையானாலும். (11) "ஹரிகிர்த்திம் விநைவாந்யத் ப்ராஹ்மணேந நரோத்தம!, பாஷா காநம் நகாதவ்யம் தஸ்மாத்பாபம் த்வயா க்ருதம்.என்னும் மாத்ஸ்ய புராண வசனத்தின் படிபகவத் விஷயமாகையாலும், ஸம்ஸ்கிருதம் போல் அநாதியாகையாலும், அகஸ்தியர் இப்பாஷைக்குப்பிரவர்த்தகராகையாலும் (12) "ஸம்ஸ்க்ருத ச்ருதயோ யத்வத் த்ராமிட ச்ருதயஸ் ததா" என்கிற பிரமாணத்தாலும் தோஷமில்லையென்று கொள்ளத்தக்கதே-

மேலும் ஸம்ஸ்கிருத பாஷையே கொள்ளத்தக்கதென்றால் ஜைந பௌத்த சாஸ்திரங்களும் கொள்ளத்தக்கதாக வேண்டும்; ஆதலால் பாஷைகளைக் கொள்ளுதலும் விடுதலும் விஷயங்களைப் பற்றியவையாம். இந்த விஷயங்களை வேதாந்தாசார்யர் பாதுகா ஸஹஸ்ரத்தில் (13) "விந்த்யஸ்தம்பாதவிஹத கதே: விஷ்வகாசாந்த ஸிந்தோ: கும்பீஸூநோ ரஸூர கபளக்ராஸிந: ஸ்வைரபாஷா" (14) என்றும், த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் "வேதாந் ஆகஸ்த்ய பாஷாவபுஷ உததரத் ச்ரேயஸே ப்ராணிநாம் ய:" என்றும் அருளிச் செய்திருக்கிறார். ஈட்டிலும் இவற்றிற்குப் பரிஹாரம் அருளிச்செய்திருப்பது கண்டுகொள்ளத்தக்கதாகும்.

### இனி, திவ்யப் பிரபந்தங்களுக்கு வக்தாக்களான ஆழ்வாராதிகளுடைய அவதார விசேஷம் விசாரிக்கலாகும்

ஆழ்வாராதிகள் நித்யஸூரிகளுடைய அவதார விசேஷங்களென்று புராணாதிகள் சொல்லுகின்றன; அதை அநுஸரித்து திவ்ய ஸூரி சரிதையிலும், குருபரம்பரா ப்ரபாவத்திலும் சொல்லியிருக்கிறார்கள். ஆனாலும் ஈட்டிலும் ஆசார்யஹ்ருதயத்திலும் ஆழ்வார் ஸம்ஸாரிகளிலொருவராகச் சொல்லப்பட்டிருக்கிறார். இதற்குப் பிரமாணம் "மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து" என்பது தொடக்கமான திவ்யஸூக்திகளாம்.

புராணங்களில் அவதார விசேஷமாகச் சொல்லியிருப்பதைக் கொண்டு ஆழ்வாருடைய ஸூக்திகளை அபிநய பரங்களாகக் கொள்ளுவோமானால், தங்கள் தங்களுடைய ஸ்வரூப ஸ்பாவ நிர்ணயத்தில் தங்கள் தங்களுடைய வாக்கியங்களே முக்கிய பிரமாணமாகையாலும், பொய்யில் பாடலான பிரமாண சிரேஷ்டமாயும், ஸ்வ வசனமாயுள்ள பாசுரத்தை அநுஸரித்து புராணங்களே வைபவ பரங்களென்று கொள்ளவுங்கூடும்; ஆகையால் இரண்டு பிரமாணங்களுக்கும் விரோதமில்லாமல் நிரூபிக்கவேண்டும். அப்படி நிரூபிக்குங்கால், (15) "பூர்வோத்பந்நேஷு பூதேஷு தேஷு தேஷு கலௌயுகே, அநுப்ரவிச்யகுருதே" என்று வேதாந்தாசார்யர் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் அருளிச் செய்தபடி ஸம்ஸாரியான சேதந விசேஷத்தில் ஸர்வேசுவரனுடைய சக்தியாவேசமுண்டாயிருப்பதைக் கொண்டு பரசுராமாவதாரம் போலும் ஆவேசாவதாரமென்று சொல்லலாம்.

ஒரு சேதந விசேஷத்தில் சக்த்யாவேசம் உண்டாவதற்கு ஹேது ஸர்வேசுவரனுடைய நிர்ஹேதுக கடாக்ஷமென்று நிர்வஹிக்கும்படியிருப்பதால், ஸம்ஸாரிகளில் ஒருவரை ஈசுவரன் தன்னுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தால் "மயர்வற மதிநல மருளினன்" என்பதற்கும் விரோதமில்லை. ஆகவே (16) "ஸாக்ஷாந் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்ய மயீம் தநும், மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாச் சாஸ்த்ர பாணிநா" என்கிற சுலோகத்தால் ஆசார்யனைப் பகவதவதாரமென்று சொல்லியிருப்பதும் பொருத்தமுடையதாம்.

இதை அநுஸரித்தே ஸ்ரீ வசனபூஷண வ்யாக்யானத்தில் ஐநந்யாசார்ய ஸ்வாமி "குருரேவபரம்ப்ரஹ்ம" என்கிற சுலோகத்தில் குரு சப்தத்துக்கு அர்த்தம் விலக்ஷண ஜீவ விசிஷ்ட பகவத் தத்வம் என்றும், அந்த குரு சப்தமான எழுவாய்க்கும் ப்ரஹ்ம என்கிற பயனிலைக்கும் ஒரு நிலையிருக்கை [ஸாமாநாதி கரண்யம்] கூடுமென்றும் நிர்வஹித்திருக்கிறார். ரஹஸ்ய த்ரய ஸார வ்யாக்யானமான

ஸாரா ஸ்வாதிநியிலும், ஆழ்வார்கள் ஆவேசா வதாரமென்றும், பரசுராமாவதாரம் ஆவேசா வதாரமாயிருந்தபோதிலும், தசாவதாரத்துட் சேர்க்கப்பட்டிருப்பதுபோல் ஆழ்வார்களையும் அபிநவ தசாவதாரமென்று கொள்ளலாம்படி சொல்லப்பட்டிருக்கிறது.

இப்படியான பொருத்தங்களைக் கொண்டு "ஈடு","ஆசார்ய ஹ்ருதயம்" திவ்யஸூக்திகள் புராணங்கள் இவைகளுக்கு விரோதமில்லை யென்று கண்டுகொள்ளத்தக்கது.

**இனி உடையவர், தேசிகன், மணவாள மாமுனிகள் இவர்களுடைய அவதார விஷயம் நிரூபிக்கப்படுகிறது.**

உடையவர் விஷயமான நூற்றந்தாதியில் "அடையார் கமலத்தலர் மகள் கேள்வன்" என்கிற பாசுரத்தில் உடையவரைப் பஞ்சா யுதங்களுடைய அவதாரமாகச் சொல்லியிருக் கிறது. அப்படியே வேதாந்தாசார்யரும் "வந்ருதே பஞ்சபிராயுதைர் முராரே:" என்றும், "விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ் த்ரிதண்ட:" என்றும் யதிராஜ ஸப்ததியில் அருளிச்செய்திருக்கிறார். திருவனந் தாழ்வான் அவதாரமாகப் பிரஸ்தாவிக்க வில்லை; அனால் குருபரம்பரா ப்ரபாவத்திலும், திவ்யஸூரி சரிதத்திலும் திருவனந்தாழ்வா னவதாரமாகப் பேசப்பட்டிருக்கிறது. தொண் டனூரில் ஜைனர்களுடன் வாதம் செய்யும் போதும் திரைக்குள் திருவனந்தாழ்வானாக இருந்ததாகவும், "கலௌ கச்சித் பவிஷ்யதி" என்று யாதவகிரி மாஹாத்மியத்தில் இருக்கிற சுலோகத்தில் "கச்சித் பவிஷ்யதி" என்று சொல்லியது தம்மையென்று உடையவர் காட்டினதாகவும் குருபரம்பரா ப்ரபாவத்தி லிருக்கிறது. அதற்கு அடையாளமாக இப் போது தொண்டனூரில் திருமுடியில் ஏழு படங்களுடன் அர்ச்சாரூபமாக ஸேவை ஸாதித்துக்கொண்டிருக்கிறார். ஸ்ரீவரவரமுனி சதகத்தில், திருவனந்தாழ்வான் முந்தி உடைய வராக அவதரித்து, பிந்தி மணவாள மாமுனிகளா யவதரித்ததாக எறும்பியப்பா அருளிச்செய்திருக்கிறார். அப்படியே மணவாள மாமுனிகள் விஷயமான பிரபந்தத்தில், "ஆதியிலே அரவரசை யழைத்து" என்கிற பாட்டில் உடையவரைத் திருவனந்தாழ்வான் அவதாரமாகச் சொல்லியிருக்கிறது. இப்படி யிருக்கிற பிரமாணங்களைக்கொண்டு உடைய வர் திருவனந்தாழ்வானுடைய பூர்ணாவதார மாகவும், பஞ்சாயுதங்களுடைய சக்தியாவேச மாகவும் கொள்க.

அப்படியே வேதாந்தாசார்யரை (17) "வேங்கடேசாவதாரோயம் தத்கண்டாம்சோ தவா பவேத்" என்கிற சுலோகத்திலும் (18) "வித்ராஸிநீ விபுதவைரி வரூதிநீநாம் பத்மாஸநேந பரிசாரவிதௌ ப்ரயுக்தா, உத்ப்ரேக்ஷ்யதே புதஜநை: உபபத்திபூம்நா கண்டா ஹரே: ஸமஜ நிஷ்டயதாத்மநேதி" என்று வேதாந்தாசார்யர் அருளிச் செய்திருக் கிற ஸங்கல்ப ஸூரியோதயத்திலும், வேதாந்த சார்ய விஷயமான ஆசார்ய சம்பு முதலான கிரந்தங்களிலும் சொல்லியிருக்கிறது.

திக்விஜயம் எம்பார் ஸ்வாமி யருளிச் செய்த சரமசுலோக டிப்பணியில் "அஸ்மத் குரு மநோஜுஷ்டகண்டாசேஷாவதாரயோ" ஆஸ்யோத்தௌ நாதநிச்வாஸௌ நிக்நதாம் நோவிகாதகாந்" என்று கண்டாவதாரமாகச் சொல்லியிருப்பதால், வேதாந்தாசார்யரைக் கண்டாவதாரமாகக் கொள்ள வேணும்.

அப்படியே மணவாளமாமுனிகள், திரு வனந்தாழ்வானாக உத்தமநம்பி முதலானவர் களுக்கு ஸேவை ஸாதித்திருப்பதாலும், "ரபஸுதேராஸ்திதோ பத்ரபீடம்" என்று எறும்பியப்பா தமக்கு ஸேவை ஸாதித்த பிர காரத்தை வரவரமுனி சதகத்தில் அருளிச்செய் திருப்பதாலும், மற்றுமுள்ள ஐதிஹ்ய விசேஷங் களாலும் திருவனந்தாழ்வா னவதாரமென்று கொள்ளத் தட்டில்லை.

"சேஷச்ஸ்ரீமாந் நிகமமகுடீ யுக்ம ரக்ஷாப் ப்ரவ்ருத்த:
விந்தந் ராமாவரஜமுநிதாம் ராம்யஜா மாத்ருதாஞ்ச"

(19) என்று நியாய பாஸ்கரத்தில் த்வித்ய பரிச் சேதத்தில் அனந்தாழ்வானருளிச் செய்திருப் பதையுங் கண்டுகொள்க.

**இனி ஆழ்வார்கள் தாழ்ந்த வர்ணங்களிலும் அவதரித்தவர்களாகையால் அவர்கள் அருளிச் செய்த பிரபந்தங்களுக்கு அப்ராமண்ய சங்கை பரிஹரிக்கப்படுகிறது.**

முதலில் ஜாதியினுடைய ஸ்வரூபம் நிரூ பிக்கப்படுகிறது. ஸித்தாந்தத்தில் ஜாதி, (20) அவயவ ஸமஸ்தான விசேஷமென்று நிரூ பித்து, நிரவயவ த்ரவ்யங்களில் அவயவ ஸம்ஸ் தானரூப ஜாதி கூடாமையால் பகவத் ஸங்கல்ப

விசேஷமென்று முடிவில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அப்படியே ப்ராஹ்மண்யம் முதலான ஜாதிகளும் ஸங்கல்பரூபமென்றே கொள்ள வேணும். இந்த விஷயம் "ததுபர்யய பாதராயணஸ் ஸம்பவாத்" என்கிற ஸூத்ர வ்யாக்யா நாவஸரத்தில் சுருத ப்ரகாசிகையில் நிரூபிக்கப்படுகிறது.

மேலும் நியாய ஸித்தாஞ்ஜந வியாக்யானத்தில் ரங்க ராமாநுஜ ஜீயர், பிராமணனுக்கு பிராமண ஸ்திரீயினிடத்தில் உண்டாகையே பிராஹ்மண்யமென்று சொல்லும் பக்ஷத்தில் விசுவாமித்திரர் முதலானவர்களிடத்தில் அது கூடாமையால் சக்தி விசேஷமாகக் கொள்ள வேணுமென்று நிரூபித்திருக்கிறார். கீதா பாஷ்ய தாத்பரிய சந்திரிகையில் "ப்ராஹ்மம் கர்ம ஸ்வபாவஜம்' என்கிற சுலோக வியாக்யான அவஸரத்தில், ஸத்வகுண மிகுதியான ப்ரகிருத்யம்சங்களுடைய ஸங்காதம் பிராஹ்மண்யமென்றும் இப்படியே ரஜோகுண மிகுதியான பிரகிருத்யம்ச ஸங்காதம் க்ஷத்திரியத்வமென்றும் இப்படியே வைச்யத்துவ சூத்ரத்வாதிகளையும் ரஜோகுணம் குறைவாயும் தமோகுணம் அதிகமாயுமுள்ள பிரகிருத்யம்ச ஸங்காதமென்றும், தமோகுணமாத்ர பிரகிருத்யம்ச ஸங்காதமென்றும் நிரூபித்திருப்பது ஸர்வ ஸாதாரணமாகக் கொள்ளலாகாது. ஏனெனில்? விசுவாமித்ர வீதஹவ்ய ராஜாதிகளிடத்தில் அது கூடாமையால் ஸம்பவாபிப்பிராயமாம். ஆதலால் ஸங்கல்ப விசேஷமே ஜாதியாகையால் அந்த ஜாதியும் தபஸ்ஸு, பிராஹ்மண வாக்கியம், சாபம் இவைகளால் மாறுவதுபோல் ஆழ்வார்களிடத்திலும் பகவத் கடாக்ஷ விசேஷத்தாலே மாறத் தட்டில்லை.

ஆனால், விசுவாமித்ர ப்ராஹ்மண்யத்துக்குக்காரணம் (21) சரு வ்யத்யாஸமேயன்றி தபஸ்ஸு காரணமாகாதென்பதுசேராதென்று நிரூபிக்கப்படுகிறது. சரு வித்யாஸமே விசுவாமித்ர ப்ராஹ்மண்யத்துக்குக் காரணமென்னில்? இந்தச் சரு வித்யாஸம் பரசுராமனிடத்திலும் இருப்பதால் பரசுராமனுக்கு க்ஷத்ரியத்வம் ஏற்படத் தட்டில்லை. ஆனால், அப்படி க்ஷத்திரியத்வங்கொள்ளில் "ப்ராஹ்மணோ ஸிதி" என்ற ஸ்ரீராமாயணத்தோடு விரோதிக்கும். மேலும் பாரதத்தைக் காட்டிலும் ஸ்ரீராமாயணம் பிரபல ப்ரமாணமாகையால் அந்த ஸ்ரீராமாயணத்தில் "ப்ராஹ்மண்யம் தபஸா ப்ராப்தம்" என்கிறதோடு விரோதிக்கும். ஆனால் சரு வித்யாஸஞ் சொல்லியிருப்பதற்குப் பிரயோஜனம் யாதெனில்? விசுவாமித்ர ப்ராஹ்மண்யம் வருகைக்குக் காரணமான தவம்புரிதற்கு ஹேதுவென்று கொள்ள வேண்டும். பாகவதம் நவம ஸ்கந்தத்தில் விசுவாமித்ரருக்கு தபஸ்ஸாலே பிராஹ்மண்யம் ஏற்பட்டதென்று சொல்லுகிற இடத்தில் சரு வித்யாஸம் பிராஹ்மண்யத்துக்கு ஹேதுவான தபஸ்ஸுக்குக் காரணமென்று வீரராகவீயத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அப்படியே ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் (22) "ஸ்வசநேந க்ஷத்ரியம் விச்வாமித்ரம் ப்ராஹ்மணம் க்ருதவதோ வஸிஷ்டஸ்ய" என்று பட்டர் அருளிச்செய்திருக்கிறார்.

முராரி கவி, "அநர்க்க ராகவம்" என்கிற நாடகத்தில் த்ரிஜன்மாவென்று சொல்லியிருக்கிறார். அஃதாவது (23) 'ஔத்பத்தி கேந பிராஹ்மணேந த்ரிஜாதகாந் முநே:" என்று சொல்லியிருக்கிறது. போஜராஜாவும் போஜ சம்புவில் (24) "ஸங்க்ராந்த வர்ணாந்தர காதிஸூநோ: ஸம்பர்க்க புண்யாதிவ ராமபத்ர:" என்றுசொல்லியிருக்கிறார். ஆகையால் சரு வித்யாஸத்தை விசுவாமித்ரருடைய பிராஹ்மண்யத்துக்குஹேது வாகக்கொள்ளில் அது ஜன்மம் முதல் அநுவர்த்திக்க வேண்டியதாகையால் வர்ணாந்தர மென்றும் திரிஜன்மா வென்றும் சொன்னது பொருந்தாது. அப்படியே விசுவாமித்ர விஷயத்தில் சரு வித்யாஸத்தைக் காரணமாகச் சொன்னாலும் ருஷி வாக்யத்தால் பிராஹ்மண்யத்தை யடைந்த வீதஹவ்ய விஷயத்தில் வேறுகாரணம் சொல்ல முடியாது. அப்படியே இந்த விஷயத்தை (25) "கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்ம நாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்" என்று பாரத்வாஜ ஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிறது. பாகவதத்திலும்(26) "தக்த துர்ஜாதி கில்பிஷ:" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் தாழ்ந்த ஜாதி போனால் உயர்ந்த ஜாதி வரும் பக்ஷத்தில் அதுக்குண்டான தர்மங்களும் வர ப்ரஸங்கிக்குமே எனில்? அதற்குப் பரிஹாரம் சொல்லப்படுகிறது. எப்படி ராமகிருஷ்ணாத் யவதாரங்களில் அந்த விக்ரஹம் அப்ராகிருத மாகையால் ஒரு ஜாதியுமில்லையோ அதுபோல (27) "ப்ராதுர்பாவைஸ் ஸுர நர ஸமோ தேவதேவ: ததீயா

ஜாத்யா வ்ருத்தைரபிச குண த: தாத்ருசோ நாத்ர கர்ஹா'' என்கிற சுலோகத்தின்படி தாழ்ந்த ஜாதி போனது மாத்ரமேயல்லாது அவர்களிடத்தில் மற்ெருரு ஜாதி வருவதில்லே: (28) ஸாஜாத்யத்தைக்கொண்டு அந்தந்த ஜாதிகளுக்கு ஏற்பட்ட தர்மாநுஷ்டானமும் மற்ற ஜாதிகளுக்கேற்பட்ட அநநுஷ்டானமும் ஏற்பட்டிருக்கும். ஸ்வவர்ணமர்யாதையைக் கடக்கவுங் கூடாது. ஆகையால் ஆழ்வார்கள் ராமகிருஷ்ணுத்யவதாரங்கள் போல ஸர்வ வர்ணுதீதர்களாகையால் தேஹத்தைப்பற்றிவரும் ஜன்மத்துக்குப் பொருத்தமான உயர்வு தாழ்வு வருவதற்கு இடமில்லே.

இனி இதற்கு அனுகுணங்களான அனுஷ்டானங்கள் காண்பிக்கப்படுகின்றன. பாரதத்தில் தர்மபுத்ர ராஜஸூய யாகத்தில் பட்டத்துக்குரிய க்ஷத்திரியர்கள், ருஷிகள் இவர்களுடைய ஸபையில் கிருஷ்ணனுக்கு அக்ரபூஜை செய்ததாகச் சொல்லப்படுகிறது. பெரும்பூலியூரில் திருமழிசைப்பிரான் வருகிறபோது அவரை சூத்ர ஜாதியாக நினேத்து வேதாத்யயநத்தை நிறுத்தியவர்கள் பின்பு அவர்களே அப்படிப்பட்ட திருமழிசைப் பிரானுக்கு யஜ்ஞத்தில் அக்ரபூஜை செய்திருக்கிருர்கள். கிருஷ்ணன் தூது செல்லுகைக்காக ஹஸ்திநாபுரத்துக்கெழுந்தருளும்போது சூத்ர ஜாதி விதுரருடைய வீட்டில் அமுது செய்ததாகச் சொல்லியிருக்கிறது. சூத்ரஜாதியில் சமையற்ெருழிலில் அதிகாரம் இருந்த போதிலும் சூத்திர வீட்டில் சூத்திர சொத்தான ஆஹாரத்தை அமுது செய்யக் கூடுமா? அப்படி சாஸ்திர ஸித்தமாக இருக்கும் பக்ஷத்தில் துர்யோதனன் (29) ''பீஷ்ம த்ரோணு வதிக்ரம்ய மாஞ்சைவ மதுஸூதந, கிமர்த்தம் புண்டரீகாக்ஷ புக்தம் வ்ருஷல போஜநம்'' என்று கேட்கப் பிரஸக்தியில்லே. ஆனுல் (30) ''ப்ராப்யம் ஜ்ஞானம் ப்ராஹ்மணுத் க்ஷத்ரியாத்வா'' என்கிற சுலோகத்தின்படி ஆபத்காலத்தில் தாழ்ந்த வர்ணஸ்தர்கள் உயர்ந்த வர்ணஸ்தர்களுக்கு உபதேசிக்கலாமென்னில்? அப்படியே உபதேசிக்கும் பக்ஷத்தில் அவர்களிடத்தில்(31)அநுவ்ரஜ்யை சுச்ருஷை கூடாதென்று சாஸ்த்ரம் சொல்லியிருக்க, மதுரகவிகள் ஆழ்வார் விஷயத்தில் அநுவ்ரஜ்யை முதலானவை செய்யக்கூடாது. மேலும் திருப்பாணழ்வாரை லோகஸாரங்க மஹாமுநிகள் எழுந்தருளப் பண்ணிக் கொண்டுபோய்ப் பெரிய பெருமாள் ஸந்நிதியில் சேர்த்திருக்கிருர்: ஆதலால் திருப்பாணுழ்வார் முநிவாஹனர் என்று சொல்லப்படுகிருர். ஆழ்வார்கள் அர்ச்சையில் பூஜ்யர்களென்றும் விபவத்தில் பூஜ்யர்கள் அல்லரென்றும் சொல்லுவதும் மதுரகவிகள் விபவத்தில் ஆழ்வாரை அநுவர்த்தித்தார் என்பதோடும் விரோதிக்கும். மேலும் விபவத்தில் அர்ச்சிக்க நேரிடாமல் போன தற்காக ப்ரதிநிதியாக அர்ச்சையில் விபவ ஸஜாதீயமான விக்ரஹத்தை ஏற்படுத்திக் கொண்டு பூஜிப்பது லோகஸித்தம். இந்த விஷயம் ஏகலவ்யனிடத்திற் காணலாம். இப்படியே திருக்கச்சிநம்பி விஷயத்திலும் ''ராமாநுஜமுநேர் மாந்யம் வந்தேஹம் ஸஜ்ஜநாச்ரயம்'' என்று தனியன் அநுஸந்தித்து வருகிருர்கள். ஆனுல் விதுர ப்ரஜாகரத்தில் விதுரர் ''சூத்ரயோநாவஹம் ஜாதோ நாதோந்யத்வக்து முத்ஸஹே'' என்று த்ருதராஷ்ட்ரன் தன்னே சூத்ரனுக நினேத்திருப்பதனுலும், தாம் ஜ்ஞாநாதிக்யத்தைக்கொண்டு சூத்ரஜாதிக்குத் தகாத ப்ரஹ்மவித்யோபதேசத்தைச் செய்யும் பக்ஷத்தில் ஸாமாந்ய சூத்ரர்களும் அப்படிச் செய்வார்களாகையால்(32) லோகஸங்க்ரஹம் ஏற்படாதென்பதை உத்தேசித்துச் சொன்னதாகக் கொள்ள வேணும். அப்படிக் கொள்ளாதவரையில் கீழ் விதுரர் வீட்டில் கிருஷ்ணன் அமுது செய்ததோடும் விதுரரை தர்மபுத்தர ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்தாரென்பதோடும் விரோதிக்கும். ப்ரஹ்மமேத ஸம்ஸ்கார விஷயத்தில் பாரதத்தில் ''யதிதர்ம மவாப்தோஸௌ, போபோ ராஜந் ந தக்தவ்யம் ஏதத் விதுர ஸம்ஜ்ஞிதம்'' என்கிற அசரீரி வாக்யத்தை ப்ரமாணமாகக்கண்டு கொள்வது. (33) தூஷ்ணீம் ஸம்ஸ்காரமென்னில் கீழ்ச்சொன்ன வாக்யத்தோடு விரோதிக்கும்.

### சில ஆக்ஷேப ஸமாதானங்கள்

ஆனுல் த்ரௌபதி விவாஹம்போல் சில வியக்திகளிடத்திலிருக்கிற அநுஷ்டானமும் நமக்கு க்ராஹ்யமன்றென்று சொல்லும் பக்ஷத்தில் அங்கு இப்படிப்பட்ட விவாஹம் கூடாதென்று துருபத மஹாராஜா ஆக்ஷேபிக்க வியாஸர் ஸமாதானஞ் சொன்னதுபோல இங்கு அப்படி ஆக்ஷேப ஸமாதானங்கள்- ஏற்படவில்லே. ஜ்ஞாநாதிக்ய விஷயத்தில்-

இப்படியே செய்ய வேண்டுமென்று அசரீரி வாக்யத்தால் தெரியவருகிறது. இப்படியே சக்ரவர்த்தி திருமகன் ஜடாயுவுக்கு ப்ரஹ்ம மேத ஸம்ஸ்காரம் பண்ணிய விஷயத்தையும் கண்டுகொள்வது. இப்படி சாஸ்த்ரார்த்த மிருந்தபோதிலும் அந்தப்படியே அனுஷ்டிக்கும் பக்ஷத்தில் லோகக்ஷேபம் பிறக்குமென்றும் அப்படிச் செய்வது வ்யக்தி விசேஷ நியதமென்றும் தேசிகன், அருளிச்செய்திருக்கிறார். இப்படியிருந்த போதிலும், ஸாக்ஷாத்க்ருத பகவத்தத்வரான திருமங்கையாழ்வார் "அந்தணர் மாட்டு அந்தி வைத்த மந்திரத்தை" என்றருளிச் செய்த பாசுரத்தின் வியாக்யானத்தில் பெரியவாச்சான் பிள்ளை, "திருவுள்ளத்தில் வேதார்த்தங்கள் விசதமாக இருக்கச் செய்தேயும் தமக்கு அநதிகாரந்தோற்ற அந்தணர்மாடென்கிறார்காணும்" என்றருளிச்செய்திருக்கிறார்.

மதுரகவிகள் முதலானவர்கள் ஆழ்வாருடைய அதிமானுஷ்ய வியாபாரத்தைக் கண்டு மிகவும் அனுவர்த்திக்க விசேஷார்த்தங்களை அருளிச்செய்தாரே ஒழிய, ஸர்வ ஸாதாரணமாக அருளிச்செய்யவில்லை. திருக்கச்சிநம்பி நேரில் பேரருளாளப் பெருமாளுடன் வார்த்தை சொல்லிக் கொண்டிருந்ததும் "அஹமேவ பரம் தத்வம்" என்று தொடங்கி ஆறுவார்த்தை அருளிச்செய்ததும் லோக ப்ரஸித்தம்.

அப்படியிருக்க, அவர் உலக மர்யாதையை அதிக்கிரமிக்கவில்லை. எப்படிப்பட்ட ஜ்ஞானவான்களாயிருந்தபோதிலும் அவரவர்களுடைய வர்ணதர்மங்களை லோக ஸங்க்ரஹத்தின் பொருட்டு அனுஷ்டித்துக்கொண்டே வந்திருக்கிறார்கள். இந்த விஷயத்தை "யதிஹ்யஹம் ந வர்த்தேய ஜாது கர்மண்யதந்த்ரித; ஸங்க்ரஹஸ்ய சக கர்த்தாஸ்யாம் உபஹந்யாமிமா: ப்ரஜா:" என்று கீதாசார்யன் அருளிச்செய்தான். பாரத்வாஜ ஸம்ஹிதையில் ஆசார்யன் நல்ல குலத்தில் அவதரித்தவனாயிருக்க வேணும்; ஜ்ஞாநாநுஷ்டானங்களோடே கூடினவனாயிருக்கவேணும்; ப்ராஹ்மணர்களைத் தவிர மற்றவர்கள் ஆசார்யர்களாகக் கூடாதென்று சொல்லிவிட்டு, "ப்ரத்யக்ஷிதாத்ம நாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்" என்று சொல்லியிருப்பதால், ப்ரத்யக்ஷிதாத்ம நாதர்களான ஆழ்வார்கள் ஆசார்யர்களாக இருப்பது பொருத்தமானதேயாம்.



இப்படி ப்ரமாண நிரூபணம் முந்திச் செய்யவேண்டிய விஷயமும், ப்ரமாணங்களுடைய ஸங்க்யைகளும் பிராமாணங்களுடைய பிராபல்ய தௌர்பல்யங்களும், ஆழ்வார்களுடைய திவ்ய ஸூக்திகளுக்கு ப்ராமாண்ய நிர்வாஹத்தின் பொருட்டு, பாஷா விஷய ப்ரஸ்தாவமும் ஆழ்வார்களுடைய அவதார விஷய விசாரமும் அதுவடியாக ஜாதி விஷய ப்ரஸ்தாவமும், யதாமதி நிரூபிக்கப்பட்டன. இப்படி பிராமணங்களின் ஸ்வரூபமும் லக்ஷணமும், ஸங்கியைகளும் சொல்லி இடையே ப்ராஸங்கிகமாய் ப்ரமாதாக்களின் அவதார ப்ரஸ்தாவமடியாக வந்த ஜாதி சங்கா பரிஹாரமும் செய்யப்பட்டது.

### இனி ப்ரமேயம் நிரூபிக்கப்படுகிறது

ப்ரமேயங்களாவன — ப்ரமாணங்களால் உள்ளபடி அறியப்படுமவைகள்; தத்வ ஹித புருஷார்த்தங்கள்.

அவற்றுள் தத்வமாவது, சேதனனுக்கு ப்ராப்யமாய் அவனுக்கு இஷ்டமான பலன்களைக் கொடுக்குமதாய் இவனாற் செய்யப்படும் உபாஸனம் முதலியவற்றிற்கு விஷயமாயுள்ள பரதேவதை. (இது பர தத்துவமாகையால் அவர தத்துவமாகிற சேதனசேதனங்களும் சரீரதயா உடலாக இதிலடங்கும்.)

ஹிதமாவது. அந்த பர தேவையான ஈசுவரனை அடைவதற்கு ஸாதனமாயும் அவன் பலனளிக்கும்படி அவனை உவப்பிப்பதாயுமுள்ள பக்தி முதலான உபாயங்களாம்.

புருஷார்த்தமாவது, புருஷனால் விரும்பத் தக்கவையான ஐசுவர்ய கைவல்யங்கள். இம் மூவகையான ப்ரமேயங்களுக்குள் தத்வார்த்தமான ஸர்வேசுரன்—சேதனா சேதனங்களை சரீரமாகக் கொண்டவனாயும், அவைகளைக் காட்டிலும் விலக்ஷணனாயுமிருப்பதால் முதலில் சேதனாசேதனங்களினுடைய ஸ்வரூப நிரூபணம் செய்கை ஆவசியகம். இவைகளை உள்ளபடியறிந்து புருஷார்த்தங்களை அடைய வேண்டியவன் சேதனனாகையாலே முந்தி சேதனனுடைய ஸ்வரூபம் நிரூபிக்கப்படுகிறது.

### சேதந ஸ்வரூப நிரூபணம்

சேதன ஸ்வரூபமாவது — ஈசுவரனுக்கு சேஷமாயும் பரதந்திரமாயும் ஜ்ஞானஸ்வரூபமாயும் ஜ்ஞானமுடையதாயும் நித்தியமாயும் அணுவாயும் சரீரந்தோறும் வேறுபட்டிருப்ப

தாயும் தேஹேந்திரிய மந: ப்ராணன்களைக் காட்டிலும் வேறுபட்டதாயுமிருக்கை.

(சேஷத்வமாவது தன்னின் ஆதிக்யமுடைய தொன்றின் அம்சமாய், அம்சிக்குத் தன்னால் வைசிஷ்ட்ய (சிறப்பு) முண்டாம்படியிருக்கை; இதுசேதனனிடத்தில் காணும்போது தாஸ்ய மென்று வழங்கப்படும்; இந்த வைலக்ஷண்யத் தாலே) இங்கு சேதனன் ஈசுவரனுக்கு சேஷமா யிருக்கையாவது—தன்னைக்காட்டிலும் பரனா யிருக்கிற ஸர்வேசுவரனுக்கு அதிசயத்தைவிளை விப்பதை விஷயமாகவுடைய இச்சையோடே அவனை அநுவர்த்தித்திருக்கை. இந்த சேஷத் வம் நிருபாதிகமென்றும ஸோபாதிகமென்றும் இரண்டுவகையாயிருக்கும். இவற்றுள் நிருபா திகமாகையாவது—ஸ்வரூப ப்ரயுக்தமாயிருக் கை. (அதாவது இயல்பாகவேயிருக்கை). ஸோ பாதிக மாகையாவது — (செயற்கையாகவுண் டாவது) ஈசுவரனுடைய குண ப்ரயுக்தமா யிருக்கை. இதில் உபாதி பூதங்களான ஈசுவர குணங்கள் நித்யமாகையால், அவற்றைப் பற்றி வருகிற சேஷத்வமும் நித்யமாயிருக்கும். ஆகை யால் இரண்டு வகையான சேஷத்வமும் நித்ய மாம்.

இவற்றுள் நிருபாதிகத்துக்கு ப்ரமாணங் கள். திருமங்கை யாழ்வார் அருளிச்செய்த திரு மொழியுள் (34) ''வேம்பின் புழு வேம்பன்றி யுண்ணாது'' என்கிற பாட்டும், ஸ்ரீராமாயணத் தில் (35),'' யத்யப்யேஷ பவேத் பர்த்தா மமார்யே வ்ருத்த வர்ஜித: '' என்பது முதலிய பிராட்டி வாக்கியங்களும் (36) ''தாஸ பூதாஸ் ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:'' (37) ''ஜ்ஞாநாநந்த மயஸ் த்வாத்மா சேஷோஹி பரமாத்மந: ''என்பது முதலிய சுலோகங்களுமாம்.

குணத்தால் வரும் ஸோபாதிக சேஷத்வத் துக்கு 'குணைர்தாஸ்ய முபாகத:'' என்கிற ஸ்ரீ ராமாயண சுலோகத்தையும் திருமந்திரத் திலே பிரணவத்தின் அகாரார்த்த நிருபணத் தில் லுப்த சதுர்த்தியால் சொல்லப்படுகிற சேஷத்வத்துக்குக் கல்யாணகுணங்களை பிர யோஜகமாகக் கொண்டு, ''இதிலே கல்யாண குணங்களையும் சொல்லும்'' என்கிற லோக தேசிகன் ஸூக்தியையும் பிரமாணமாகக் கொள்க.

பாகவத சேஷத்வம் பகவத் ஸம்பந்த மடியாக வருவதாகையால், அதுவும் ஔ பாதிகம். சேஷி பக்கல் பிரீதியோடு கூடிய சேஷத்வமே தாஸ்யமென்று வழங்கப்படும். இதில் சேஷபூதனாலே சேஷிக்குண்டாம் அதி சயம் ப்ரீதி ஜநக வியாபாரமாகையால் போக தசையில் சேஷி தாழநின்று பரிமாறினாலும் அதற்கு இசைந்திருக்குமது சேஷத்வ கார்யம். இந்த அர்த்தத்தை ''போக தசையில் ஈசுவர னழிக்கும் போது'' இத்யாதி ஸ்ரீஸூக்தி களாலே லோக தேசிகன் அருளிச்செய்தார்; ஆழ்வார் அருளிச்செய்த ''உருகுமால் நெஞ்சம்'' என்கிற திவ்ய ஸூக்தியில் இந்த அர்த்தம் ஸ்பஷ்டம்.

இப்படி சேஷியும் சேஷபூதன் விஷயத்தில் ப்ரணயித்வத்தாலும் ஸ்வாதந்த்ரியத்தாலும் சேஷபூதனுயிருக்கிறபடியால் சேஷிக்கும் ஸோ பாதிக சேஷத்வமுண்டு. இந்த விஷயம் (38) இமௌ ஸ்ம முநி சார்த்தூல கிங்கரௌ ஸமுபஸ்திதௌ''(39) ''லோகநாத: புர்ா பூத்வா'', ''ஸூக்ரீவம் சரணங்கத: ''என்றும் ஸ்ரீராமயணத்தில் வெளியாம்.

இந்த சேஷத்வம் ஜ்ஞாத்ருத்வம் இரண் டும் ஸ்வரூப நிரூபகங்கள். (ஸ்வரூப நிரூபக மாவது ஸ்வரூபம் தோன்றும் போதெல்லாம் தோன்றிக்கொண்டிருப்பது) இவற்றுள் சேஷத் வம் அந்தரங்க நிரூபகம். அஃதெப்படியெனில் ''உபாதத்தே ஸத்தா ஸ்திதி நியமநாத்யை: சிதசிதௌ'' என்கிற பட்டர் ஸூக்தியின் படி ஸர்வேசுதரன் தன்னுடைய அதிசயத்தின் பொருட்டே, சேதனாசேதனங்களுடைய ஸ்வ ரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகளைத் தான் நிர்வஹிக் கிறுனைகயால் அவனுடைய அதிசயாதானமே சேஷத்வமாகையால், இது அந்தரங்க நிரூபக மென்று நிரூபிக்கப்படுகிறது. இந்த அர்த்தம் திருமந்த்ரத்தில் ப்ரணவத்தில் லுப்த சதுர்த்தி யாலே சேஷத்வத்தை முன்புசொல்லி மகாரத் தாலே ஜ்ஞாத்ருவத்தைப் பின்பு சொல்லியிருக் கையாலும் ஈட்டில் உதாஹரித்த ஐதிஹ்யத் தாலும் விளங்கும்.

இனி, பரதந்த்ரமா யிருக்கையாவது தன் னுடைய ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகள் ஈசுவரா தீனங்களாக விருக்கை. ஆகவே ஈசுவரனுக்கு அதிசயத்தை விளைக்கைக் குறுப்பாக இஷ்ட விநியுக்தமாவதற்கு யோக்யமா யிருக்கை சேஷத்வமென்றும், இஷ்டவிநியுக்த மாகை பாரதந்த்ரியமென்றுங் கண்டுகொள்வது. இவற் றிற்கு உதாஹரணமாக(40) கட்டிப்பொன் போலேயிருக்கை சேஷத்வமென்றும் (41)

பணிப்பொன்போலேயிருக்கை பாரதந்த்ரிய மென்றும் சொல்லுவர்.

**பாரதந்த்ர்ய ப்ரகார விசேஷ நிரூபணம்**

இப்படியிருந்துள்ள பாரதந்த்ரியம் ஸ்வரூப பாரதந்த்ரியமென்றும் உபாய பாரதந்த்ரியமென்றும் பலபாரதந்த்ரியமென்றும் மூன்று வகையாயிருக்கும். அவற்றுள் ஸ்வரூப பாரதந்த்ரியம் ஈசுவராதீன ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகமாயிருக்கை. உபாய பாரதந்த்ரியம் இரண்டு வகையாயிருக்கும். அவன் விதித்த உபாயங்களை அவனுக்குப் பரதந்த்ரனாய்க்கொண்டு அநுஷ்டித்து, பலத்துக்கு அவன் கைபார்த்திருக்குமது கேவல பாரதந்த்ரியமென்றும், "என்னுடம்பில் அழுக்கை நாமே போக்கிக், கொள்ளேனோ" என்கிற லோகதேசிகன் ஸூக்திப்படி இவன் சரீரமாய் ஈசுவரன் சரீரியாயும் பல போக்தா வாயுமிருப்பதால், தனக்கு ஒரு பிரயோஜனத்தை யுத்தேசித்து உபாயாநுஷ்டானம் பண்ணுகைக்கு யோக்யதையில்லாமல் அவன் பண்ணும் ரக்ஷணத்தை விலக்காமையை அறிவிக்கிற சைதந்ய கார்யமாய் வருவதான ப்ரபத்த்யநுஷ்டானத்தை அத்யந்த பாரதந்த்ரிய மென்றும் வழங்குவர்கள்.

பல பாரதந்த்ரியமும் இரண்டு வகையாயிருக்கும். தன்னுடைய போகம் அப்ரதானமாகவும் ஈசுவரனுடைய போகத்தைப் பிரதானமாகவுங் கொள்ளுகை. கேவல பல பாரதந்த்ரியமென்றும் ஈசுவரனுடைய முகோல்லாஸமே பிரயோஜனமாய் சைதந்ய கார்யமாய்த் தனக்கு வரும் போகத்தை ஈசுவர போகத்திற்கு அதிசயத்தை விளைவிப்பதாக உத்தேசித்திருக்கை பாரதந்த்ரிய காஷ்டையென்றும் சொல்லுவர்கள்.

ஈசுவர போகத்துக்கு அதிசயத்தை விளைக்கையாவது—சேதனனுக்குப் போகமில்லாமல் அசித்துப்போலே பரதந்த்ரனாயிருந்தால், பாஞ்சாலிகா பரிஷ்வங்கம் (பொம்மையைத் தழுவுவது) போலே ஈசுவரனுக்குப் போகம் ரஸிக்காதாகையால், இவனுக்கு போகம் உண்டாகும் பக்ஷத்தில் அவனுக்கு போகம் ரஸிக்கும்படியாயிருக்கை. புஷ்பத்திற்குப் பரிமளம்போலேயும் ரத்னத்திற்கு ஒளிபோலேயும் இவனுடைய போகம் பரார்த்தமாயிருக்கும். இந்த அர்த்தம் திருமந்த்ரத்தில் வ்யக்த சதுர்த்தியோடு கூடின நம: சப்தத்திலும், த்வயத்தில் உத்தரவாக்யத்தில் நம: சப்தத்திலும் "தனக்கேயாக வெனைக் கொள்ளுமீதே" யென்கிற ஆழ்வார் திவ்ய ஸூக்தியிலும் "மற்றை நங் காமங்கள் மாற்று" என்கிற ஆண்டாள் திவ்ய ஸூக்தியிலும் கண்டுகொள்வது.

இந்த அர்த்தத்தை வேதாந்த தேசிகன் (42) "புங்க்தே ஸ்வபோக மகிலம் பதிபோக சேஷம்" என்று அருளிச்செய்திருக்கிறார்.

ஆசார்ய ஹ்ருதயத்திலும் "முற்பாடர்க்கு க்ரியாங்கமானவை இரண்டும் செயல் தீர்ந்தார் வ்ருத்தியில் ஸ்வநிர்ப்பந்தம் அறுக்கும்". என்று அருளிச்செய்திருக்கிறார். அதாவது முற்பாடரான உபாயாந்தர நிஷ்டர்களுக்கு உபாஸனத்திற்கு அங்கங்களான சேஷத்வ போக்த்ருத்வங்கள் இரண்டும் ஈசுவரனையே உபாயமாகப் பற்றி க்ருத க்ருத்யர்களாயிருக்கிற அதிகாரிகள் பண்ணும் கைங்கர்யத்தில் தனக்கென்னப் பண்ணுகிற நிர்ப்பந்தத்தைப் போக்குமென்பதாம்.

ஜ்ஞான ஸ்வரூபமாகையாவது தன்னுடைய பிரகாசத்தில் மற்றொன்றை யபேக்ஷியாமல் தானே பிரகாசிக்கை.

ஜ்ஞானாச்ரயமாகையாவது நான் அறிகிறேன் என்கிற பிரதீதியாலே ஜ்ஞானத்துக்கு இருப்பிடமாயிருக்கை. இவை யிரண்டும் ஸ்வரூப நிரூபகங்கள்.

இவன் ஜ்ஞானாச்ரயனாயாலே அதடியாக வரும் கர்த்ருத்வமும் ஆத்மாவுக்கு ஸ்வரூபம். கர்த்ருத்வமாவது ஒரு வஸ்துவை உள்ளபடியே யறிந்து, அதை யடையவேணுமென்கிற இச்சையுண்டாகி, அதனையடைய முயலுகை. இந்த ஜ்ஞாநேச்சா க்ருதிகள் ஜ்ஞானத்தினுடைய அவஸ்தா விசேஷங்களாகையாலே, ஜ்ஞானாச்ரயமா யிருக்கையாகிற ஜ்ஞாத்ருவத்தில் அடங்கும்.

இந்த கர்த்ருத்வம்(43) "பராத்து தச்ச்ருதே:" என்கிற ஸூத்ரத்தின்படி ஸர்வேசுவராதீனம். (44)அந்த கர்த்ருத்வம் ஈசுவராதீனமாயிருக்கையாவது, "ஆதாவீச்வர தத்தயைவ" என்கிற அம்மாள் சுலோகத்தின்படி ஸ்ருஷ்டி காலத்தில் கரண களேபரங்களைக் கொடுத்து, ஜ்ஞான சக்தி பிரவிருத்தி நிவ்ருத்தி சக்திகளையுங் கொடுத்து, சேதனனுடைய பிரதம பிரவ்ருத்தியில் தான் உதாஸீனனாயும் த்விதீய ப்ரவ்ருத்தியில் அநுமந்தாவாயுமிருக்கை.

இது நிற்க. இந்த சேதனன் பத்த தசையில் பிரக்ருதி ஸம்பந்தமுள்ளவனாயிருப்பதால், அந்த பிரக்ருதியினுடைய குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களுடைய ஸம்பந்தத்தால் வருமதான கர்த்ருத்வம் ஔபாதிகம். இந்த அர்த்தம் "ப்ரக்ருதே: க்ரியமாணானி குணை: கர்மாணி ஸர்வச:, அஹங்கார விமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே" என்கிற சுலோகத்தால் பிரக்ருதியினுடைய குணங்களினுடைய சேர்க்கையாலே பண்ணப்படுகிற கர்மாக்களை, தானே செய்கிறதாக நினைக்கிறான் என்று சொல்லப்பட்டிருப்பது காண்க.

இப்படியில்லாமல் பகவத் கடாக்ஷ விசேஷத்தினாலே நிஷ்க்ருஷ்ட ஸத்வம் தலையெடுத்து பகவந் முகோல்லாஸமே ஏற்படுகிற கர்த்ருத்வம் மோக்ஷ தசையிலும் தொடருகையால், ஸ்வாபாவிகமாகும். கீழ்ச் சொல்லிய கர்த்ருத்வம் பிரக்ருதி ஸம்பந்தத்தைப் பற்றி வருமதாய் மோக்ஷ தசையில் மாறுதலால் வந்தேறியாகும்.

ஆதலால் மிச்ர ஸத்வத்தால் ஏற்படுகிற உபாய புத்தியா அனுஷ்டிக்கப்படுகிற பக்தி பிரபத்திகளில் கர்த்ருத்வம் ஔபாதிகம். இப்படியன்றிக்கே ஸ்வயம் பிரயோஜனமான பகவந் முகோல்லாஸத்தை உத்தேசித்துச் செய்யப்படுகிற பக்தி பிரபத்திகளில் கர்த்ருத்வம் நிஷ்க்ருஷ்ட ஸத்வகார்ய மாகையால் ஸ்வாபாவிகம். இந்த அர்த்தம் "இவன் பாசுரம் கேட்டவாறே திருவுள்ள முகக்கும்" என்கிற லோகதேசிகன் ஸ்ரீஸூக்தியால் வியக்தமாம். அதாவது தாயானவள் தன்னாலே போஷிக்கப்படுகிற பிரஜைக்கு அந்த போஷணத்தின் பொருட்டு, ஆஹாரம் கொடுப்பதில் ஒரு ஸாதனத்தையும் அபேக்ஷியாமல் இருக்கச் செய்தேயும் அந்த பிரஜையானது, முந்தி ஒரு ரோக விசேஷத்தினால் ஆஹாரத்தில் இச்சையில்லாமலிருந்து பின்பு அந்த ரோகம் தீர்ந்து ஆஹாரத்தை அபேக்ஷித்துச் சொல்லுகிற வார்த்தை தாயினுகப்புக்குக் காரணமாவது போலும் என்பதாம்.

ஆகையால் ஈசுவரனும் அப்படியே இவனுக்குப் புருஷார்த்தத்தைக் கொடுப்பதில் உத்யுக்தனாயிருக்கச் செய்தேயும் ஸம்ஸார மாகிற பெரிய ரோகத்தினால் அந்த புருஷார்த்தத்தில் இச்சையில்லாமலிருந்து, மறுபடி ஈசுவரனுடைய கடாக்ஷ மூலமாக யாத்ருச்சிக ஸுக்ருதமடியாகப் புருஷார்த்தத்தை யபேக்ஷித்து ஈசுவரனைக்கேட்குமதே பக்தி ப்ரபத்திகளாகையால் இந்த பக்தி ப்ரபத்திகள் கைங்கர்ய ரூபமாய் அநுஷ்டிக்கப்பட்டிருந்த போதிலும் ஈசுவரன் பலப்ரதானம் பண்ணுகைக்குப் பிரயோஜகங்களாக ஏற்படுகின்றன. அதைப் பற்றியே பக்தி ப்ரபத்திகள் வியாஜ ஹேதுக்களாக, நம்முடைய ஆசார்யர்களால் வியவஹரிக்கப்படுகின்றன. அப்படியிருக்க, பக்தி ப்ரபத்திகளை உபாயமாகச் சொல்லுவது போஜனத்துக்குப் பசிபோல பக்தி பகவதனுபவத்துக்கு ஸாதனமான அபிநிவேச ரூபமாகையாலும், ப்ரபத்தி சேதனனுடைய அநந்ய சரணத்வ ரூபமான ஸ்வரூபத்தினுடைய ஜ்ஞான கார்யமாய் வந்து ஸ்வரூப யாதாத்ம்ய ஜ்ஞானமாயிருக்கையாலும் ஸங்கதம். இன்னும் மற்ற விஷயங்கள் ஹித நிரூபணத்தில் கூறப்படும்.

போக்த்ருத்வமும் ஸ்வார்த்தமென்றும் பரார்த்தமென்றும் இரண்டு வகையாக இருக்கும். ஸ்வார்த்த போக்த்ருத்வமாவது, தன்னுடைய போகத்தையே முக்கிய உத்தேச்யமாக நினைத்திருக்கை. பரார்த்த போக்த்ருத்வமாது தன்னுடைய போகத்தை முக்கியமல்லாததாக நினைத்து, ஈசுவர போகத்தை முக்கிய உத்தேச்யமாகக் கொள்ளுகை. அங்ஙனமன்றிக்கே தன்னுடைய போகத்தை ஈசுவர போகத்துக்குச் சிறப்பை விளைப்பதாக உத்தேசிருக்கையுமாம். இந்த விஷயம் கீழ் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

இப்படி ஆத்மஸ்வரூபம் ஜ்ஞான ஸ்வரூபமாயும் ஜ்ஞாநாச்ரய மாயுமிருப்பதையும் அதடியாக வந்த கர்த்ருத்வ போக்த்ருத்வங்களையும் நிரூபித்து நின்றது கீழ்; இனி ஆத்மாவைப் பற்றியிருக்கும் ஜ்ஞான ஸ்வரூபம் நிரூபிக்கப்படுகிறது.

**ஆத்மாவின் ஜ்ஞாந ஸ்வரூப நிரூபணம்**

ஜ்ஞானமாவது வஸ்துக்களைத் தான் உணரும் காலங்களில் தன்னுடைய ஆசிரயத்துக்கு மற்றொன்றை எதிர்பாராமல் தானே பிரகாசிப்பதாயும் ஸங்கோச விகாஸங்களையுடையதாயுமிருக்கும். ஸூர்யன் முதலான தேஜ: பதார்த்தங்களைப் பற்றியிருக்கும் பிரபையானது தேஜோமய த்ரவ்யமாயும் ஸூர்யாதிகளுக்குக் குணமாயுமிருப்பது போல், ஜ்ஞானமும் தான் த்ரவ்யமாயும் ஆத்மாவுக்குக் குணமாயிருக்கும். இப்படியிருக்கை

யாலே ஆத்மா தர்மிபூதஜ்ஞானமென்றும், இது தர்மபூத ஜ்ஞானமென்றும் வழங்கப் படும். இந்த ஜ்ஞானத்துக்கு எப்போதுமுள்ள ஆகாரம் (வடிவம்)எல்லா வஸ்துக்களையும் ஒரே காலத்தில் ஸாக்ஷாத்கரிக்கையாகிற விகாஸமே யாம். அப்படிக் கில்லாமலிருப்பது ஸங் கோசம். இந்த ஸங்கோசம் ஸம்ஸாரிகளுடைய கர்மத்தாலே வந்ததாயிருப்பதால் வந்தேறி யாகும். ஸம்ஸார ஸம்பந்தமற்ற முக்தர் களுடையவும் நித்யர்களுடையவும் ஈசுவரனு டையவும் ஜ்ஞானம் எப்போதும் விகாஸ முடையதாயிருக்கும். இந்த விஷயம் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில்,

(45) ''தயா க்ஷேத்ரஜ்ஞ சக்திஸ் ஸா வே ஷ்டிதா ந்ருப ஸர்வகா
ஸர்வபூதேஷு பூபால தாரதம்யேந வர்த் ததே''
''அப்ராணிமத்ஸு ஸ்வல்பாஸா ஸ்தாவரேஷு ததோதிகா''

இத்யாதி சுலோகங்களால் நிரூபிக்கப்பட்டது.

இப்படியே முமுக்ஷுக்களான ஆழ்வார்களு டைய ஜ்ஞாநமும் நிஷ்பந்நமான யோகத்தை யுடைய ரிஷிகளுடைய ஜ்ஞாநமும் எப்போதும் கீழ்ச்சொன்ன விகாஸத்துடனிருக்கும். அதில் ஆழ்வாருடைய ஜ்ஞாந விகாஸத்துக்கு ஹேது நிர்ஹேதுகமான பகவத் கடாக்ஷ விசேஷம். ரிஷிகளுடைய ஜ்ஞாந விகாஸத்துக்கு ஹேது அவர்கள் அநுஷ்டித்த பக்தியோகத்தால் ப்ரஸந்நனான எம்பெருமானுடைய கடாக்ஷ விசேஷம்.

ஆனால் ஜ்ஞானம் பூத காலீநமாயும் வர்த்த மாந காலீநமாயும் பவிஷ்யத் காலீநமாயுமுள்ள எல்லா வஸ்துக்களையும் ஏக காலத்தில் ஸாக்ஷாத்கரிக்கும்படி எங்ஙனே யென்னில்? நம்முடைய ஸித்தாந்தத்தில் தத்வ த்ரயமும் நித்யமாகையால், அவஸ்தைகளைப் பற்றியே உத்பத்தி விநாச வ்யவஹாரங்களுண்டா கின்றன. அந்த அவஸ்தா ச்ரயமான வஸ்துக் கள் எப்போதும் உள்ளவைகளாகையாலே, அந்த வஸ்துக்களை ஸாக்ஷாத்கரிக்கக் கூடும் ஆயினும் அந்தந்த அவஸ்தா விசிஷ்டமாக ஸாக்ஷாத்கரிக்கக் கூடுமோவென்னில்? காலத் துக்கு அதீதமென்றும் வர்த்தமாநமென்றும் பவிஷ்யத் தென்றும் சொல்லப்படுகிற வ்யவ ஹாரம் உபாதியால் வருவதாகையால் உபாதி யில்லாத அகண்ட காலத்தில் எல்லா வஸ்துக் களும் உள்ளபடியேதத்தத் அவஸ்தா விசிஷ்டங் களாகவே யிருப்பதால், அந்த அகண்ட காலத் தில் ஸாக்ஷாத்கரிக்கக்கூடும். இந்த விஷயம் பகவத் விஷயத்தில் ''நாலாம் பத்தில் மூன்றும் திருவாய்மொழி'' ''கோவை வாயாள்'' ப்ர வேசத்தில் பட்டர் நிர்வாஹத்தில் நிரூபிக்கப் பட்டிருக்கிறது.

இந்த ஜ்ஞானம் பத்த தசையில் இந்திரி யங்களின் வழியால் ப்ரஸரித்து விஷயங்களை கிரஹிக்கிறபடியால் ஸங்கோசப்பட்டு சாக்ஷு ஷாதி வ்யவஹாரங்களை யடையும்; மோக்ஷ தசையில் கர்மம்போலே நிவிருத்தமாகையால், இந்திரியங்களை அபேக்ஷியாமல் விகஸித்து ப்ரஸரிப்பதால் ப்ரத்யக்ஷமென்றே வ்யவஹரிக் கப்படும். இந்த விஷயத்தை,

(46) ''அபாணி பாதோ ஜவநோ க்ரஹீதா பச்யத்யசக்ஷுஸ் ஸ ச்ருணோத்யகர்ண:''

இத்யாதி சுருதி வாக்கியங்களில் கண்டு கொள்வது.

ஆத்மா நித்யனாயிருக்கையாவது, ''அஜோ நித்ய: சாச்வத:'' இத்யாதி கீதா சுலோகத் தின்படி ஸ்வத: உத்பத்தி விநாசங்கள் இல்லா மையாம். ஜன்மாந்தரங்களில் பண்ணின கர்மாவினுடைய பலமாக ஜன்மாந்தரங்களில் சுகதுக்கங்களை அனுபவிக்கையாலும் நித்யத்வம் ஸித்தம். இப்படியிருக்க, ஆத்மாவுக்கு உத் பத்தி விநாச வ்யவஹாரங்கள் தேஹத்தினு டைய ஸம்யோக (47) வியோகங்களைப்பற்றி வருகிறது.

அணுவாயிருக்கையாவது(47)—''வாலாக்ர சத பாகஸ்ய'' என்கிற வாக்யத்தின்படி அத்யந்தம் ஸூக்ஷ்மமாய் ஒரு வஸ்து வினுடைய தடைக்கும் யோக்யதை இல்லாமை. இந்த விஷயத்தை ஸூத்ரகாரர் (48) ''உத்க்ராந்தி கத்யா கதீநாம்'' என்கிற ஸூத்ரத்தில் நிரூபித்திருக்கிறார். இப்படி யிருக்கிற ஆத்மா, ஹ்ருதயகமலத்திலிருந்த போதிலும், ஆகாசத்திலிருக்கிற ஸூர்யன் தன்னுடைய ப்ரபையாலே எங்கும் வ்யா பிப்பதுபோல் ஜ்ஞானமாகிற குணத்தாலே சரீரமெங்கும் வியாபித்து, ஸுக துக்கங் களை அனுபவிக்கிறான். யோகிகளாயிருக்கிற ஸௌபரி முதலானவர்கள் யோக ப்ரபாவத் தாலே வேறு சரீரங்களிலும் ஜ்ஞானத்தாலே வ்யாபித்து ஸுகாதிகளை அனுபவிக்கிறார்கள்.

(49) "குணத்வா லோகவத்" என்கிற ஸூத்ரத்தில் இந்த அர்த்தம் வெளிப்படை. இப்படியிருப்பதைக் கொண்டு, ஆத்மா விபுவாக சாஸ்த்ரங்களில் வ்யவஹரிக்கப் படுகிறுன். ஆத்மாக்கள் சரீரந்தோறும் வேறு பட்டிருந்த போதிலும், எல்லா ஆத்மாக் களுக்கும் ஜ்ஞாநம் ஏகரூபமாயிருப்பதைப் பற்றி, வ்ரீஹி (நெல்) ஸமுதாயத்துக்கு ஏகோ வ்ரீஹி-ஒரு நெல்-வ்யவஹார மிருப்பதுபோல் ஏகத்வ வ்யவஹாரம்பொருத்தமே. இப்படியே என்னுடைய தேஹம், என்னுடைய இந்திரியம், என்னுடைய ப்ராணன் என்று பேத வ்யவஹார மிருப்பதால், ஆத்மா தேஹ இந்திரியங்களைக் காட்டிலும் வேறுபட்டவன். ஆனல் (50) "ராஹோ: சிர:" மமாயமாத்மா" "சிலா புத்ரகஸ்ய சரீரம்" என்கிற சில வ்யவஹாரங்களை அபேத பரங்களாக நிர்வஹிப்பதுபோல், இங்கும் நிர்வஹிக்கலாமே யென்னில், அவ்விடங்களில் பேதம் பாதிதமாகையால், ஔபசாரிகமான அபேத வ்யவஹாரம் ஏற்படுகிறது. இவ்விடத்தில் ஆத்மாவுக்கும் சரீரத்துக்குமுள்ள பேதத்துக்கு பாதகமில்லாமையால், முக்கியமான பேத வ்யவஹாரமே உபபந்நம்: இன்னும் இவை களினுடைய விஸ்தரம் தத்வத்ரய வியாக்கியாநாதி க்ரந்தாந்தரங்களிற் கண்டுகொள்க.

இனி இந்த ஆத்மாக்கள் பத்தர்கள் என்றும் முக்தர்களென்றும் நித்யர் களென்றும் மூன்று வகையாக யிருப்பார்கள். அவர்களில் பத்தர்கள் அநாதியான பிரகிருதி ஸம்பந்தத்தால் வருகிற அவித்யா கர்ம வாஸநா ருசிகளால் தேவாதி சரீரங்களைப் பரிக்ரஹித்து ஸ்வர்க்க நரகாதிகளில் ஸுக துக்காநுபவம் பண்ணித்திரியும் சேதனர்கள். இங்ஙனமன்றிக்கே—மூல ப்ரகிருதியில் கரண களேபர விதுரர்களாய், போக மோக்ஷ சூன்யராயிருந்துள்ள பத்தர்களில் சிலர் யாத்ருச்சிக ஸுகிருத விசேஷத்தாலே (51) "ஜாயமாநம் ஹி புருஷம்" இத்யாதி சுலோகத்தின்படி பகவத் கடாக்ஷத்துக்குப் பாத்ர பூதர்களாய் அதடியாக அத்வேஷாபி முக்யங்களைப்பெற்று, ஸாத்விக ஸம்பாஷணத்தை யுடையவராய் மோக்ஷாபிலாஷ முண்டாக, ஆசார்ய ஸமாச்ரயணத்தைப் பெற்று தங்கள் தங்கள் அதிகாராநுகுணமாக பக்தி முதல்ய உபாயங்களை அநுஷ்டிக்குமவர்கள். அங்ஙனமன்றிக்கே,

(52) "நிர்ஹேதுக கடாக்ஷேண மதீயேந மஹாமதே!" என்றும்,
(53) "நாஸௌ புருஷகாரேண நசாப்யந் யேந ஹேதுநா" கேவலம் ஸ்வேச்சயை வாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந"

என்றும் சொல்லுகிறபடியே நிரங்குச ஸ்வதந்த்ரனை ஸர்வேசுவரன் மயர்வற மதிநலமருள அத்தாலே ஸாக்ஷாத்கரிக்கப்பட்ட பகவத் ஸ்வரூப ரூப குண விபூதிகளையுடையராய், அப்போதே நிரந்தரமான பகவதநுபவத்தைப் பெறவேணுமென்று இச்சையுண்டாகி, அது கிடையாமையாலும், அந்த பகவதநுபவத்துக்கு இடைச்சுவரான ஸம்ஸாரத்தினுடைய கொடுமையை அநுஸந்திப்பதாலும் வந்த த்வரா விசேஷத்தால் கலங்கி, அடிக்கடி ப்ரபத்தியை அநுஷ்டித்தும் மடலூருகை முதலான ஸ்வ ப்ரவ்ருத்திகளை அநுஷ்டித்தும் போருமவர்களான ஆழ்வார்கள் போல்வார். இப்படி அடிக்கடி ப்ரபத்தியை அநுஷ்டிக்கச் செய்தேயும், ஈசுவரன் தன்னுடைய அநுபவத்தைக் கொடாமல் மேன்மேலும் அநுபவத்துக்குப் பரிகரமான பரபக்தி, பரஜ்ஞான, பரமபக்திகளை அபிவ்ருத்தமாம்படி பண்ணிக்கொண்டு போரும். ஆதலால் இவர்கள் உத்தேசித்த பலத்துக்கு ஹேது கேவல பகவத்கிருபையே யொழிய, இவர்களநுஷ்டித்த ப்ரபத்தி ஹேதுவன்று. இந்த அர்த்தத்தை (54) "நல மருளினன் என் கொல் என்று ஆழுலசூடம் அருளால் மன்னுமிவர்க்கு அன்புக்கடியானதுவே அடிசேருகைக்கும் ஸாதநம்" என்று ஆசார்ய ஹ்ருதயத்தில் அருளிச் செய்தார்.

ஆனல் இப்படி ஈசுவரனலே மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களுக்கு அஜ்ஞான கார்யமான கலக்கமும், அதடியாக அடிக்கடி ப்ரபத்தியை அநுஷ்டிப்பதும், மடலூருகையும் கூடும் படி எங்ஙனேயென்னில், ஈசுவரன் இவர்களுக்கு அருளின ஜ்ஞானம் பக்தி ரூபாபன்ன ஜ்ஞானமாகையாலே, அதடியாக வந்த கலக்கம் விஷய ஸ்வபாவத்தைப் பற்றி வருவதால் கூடும்.

நித்ய விபூதியில் ஸர்வஜ்ஞர்களான நித்ய ஸூரிகளும் (55) "ஸ்நேஹா தஸ்தாந ரக்ஷா வ்யஸநி பிரபயம் சார்ங்க சக்ராஸி முக்யை;" என்கிற பட்டர் ஸூக்திப்படி கலங்கு

கையாலும் (56) "ஸம்ஸ்ப்ருசந் ஆஸநம் சௌரே; விதுரஸ்ஸ மஹாமதி: என்கிற சுலோகத்தின்படி மஹாமதியான விதுரர் தன்னுடைய க்ருஹத்தில் தான் போட்ட ஆசனத்தில் தான் துர்யோதன ஸஹவாஸத்தால் போடப்பட்ட பொய்யாஸன மென்கிற கலக்கமுண்டாகி, ஆஸனத்தைத் தடவிப்பார்த்தார் என்று சொல்லுகையாலும், பெரியாழ்வார் குலசேகராழ்வார் இவர்களுடைய விருத்தாந்தங்களாலும் இந்தக் கலக்கம் வருவது மிகவும் ஸங்கதமாம். (57) "ஜ்ஞாந விபாக கார்யமான அஜ்ஞாநத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்" என்று ஸ்ரீ வசன பூஷணத்தில் இந்த அர்த்தம் நிருபிக்கப்பட்டது.

இப்படி ஸர்வேசுரன் ஒரு ஹேதுவையும் அபேக்ஷியாமல் கேவலம் தன்னுடைய கிருபையாலே சில வ்யக்திகளைக் கடாக்ஷித்தால், அவனுக்கு வைஷம்ய நைர்க்ருண்யம் வாராதோ வென்னில் வாராது. எப்படியென்றால் ஈசுவரனை உள்ளபடி அறிவிக்கிற ப்ரமாணங்கள் அவன் நிரங்குச ஸ்வதந்த்ரனென்றும் அந்த ஸ்வாதந்த்ரியத்தாலே சில வ்யக்திகளை நிர்ஹேதுகமாக கடாக்ஷித்திருக்கிறானென்றும் சொல்லிருப்பதால், தர்மி க்ராஹக மாநத்தாலே வைஷம்ய நைர்க்ருண்ய தோஷங்கள் வர ப்ரஸக்தியில்லை.

ஆனால் '(58) வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்" என்கிறஸூத்ரத்தில் சேதனனுடைய கர்மாவை யபேக்ஷித்து ஸுகதுக்கங்களை சேதனனுக்கு ஈசுவரன் கொடுப்பதால், வைஷம்ய நைர்க்ருண்யங்கள் இல்லையென்று பரிஹரித்ததோடு விரோதியாதோ வென்னில்? கீழ் நிர்ஹேதுமாகக் கடாக்ஷிக்கிறானென்பதற்கு பிரமாணங்களாகக் குறிக்கப்பட்ட வாக்கியங்களுக்கும் "வைஷம்ய நைர்க்ருண்யே" என்கிற ஸூத்ரத்துக்கும் விரோதமில்லாமல் அதிகாரி பேதேந, வ்யவஸ்தை பண்ணியிருப்பதால் தோஷமாகாது.

அதுவுமின்றி "வைஷம்ய நைர்க்ருண்யே" என்கிற ஸூத்ரத்தில் பண்ணியிருக்கிற வைஷம்ய நைர்க்ருண்ய பரிஹாரம் ஸ்ருஷ்டி விஷயமென்று சில ஆசார்யர்கள் அபிப்ராயம். இப்படி இந்த ஸ்வாதந்த்ரியத்தை (59) 'ஸ்வாதந்த்ர்ய மைச்வர மபர்யநுயோஜ்ய மாஹு:' என்று ஆழ்வானருளிச் செய்தார். இப்படியே ஆசார்ய ஹ்ருதயத்திலும் (60) "பட்டத்துக்குரிய ஆனையும் அரசும் செய்யுமவை ஆராயாது" என்று அருளிச் செய்திருக்கிறார்.

இப்படியே ஸ்ரீ பாஷ்யத்தில் ரசநாநுபபத்த் யதிகரணத்தில் (61) "ப்ராதிகூல்ய நிவ்ருத்தி மாத்ரேண அநந்தாபராதாந் அநாத்ருத்ய ஸ்வ ப்ராப்தி ஹேதுஷு ருசிம் ஜநயதி" என்று ப்ராதிகூல்ய நிவ்ருத்தியே பற்றாசாக ஈசுவரன் தன்னையடைய ஸாதனங்களான உபாயங்களில் ருசியையுண்டு பண்ணுகிறான் என்றிருப்பதாலும், (62) "நிதாநம் தத்ராபி ஸ்வய மகில நிர்மாணநிபுண:" என்றும், (63) "அவ்யாஜ ஸித்தமநபாய முபாய மாஹு:" என்றும்(64) "நிருபதி ஸுஹ்ருதம்" என்றும், வேதாந்த தேசிகன் அருளிச்செய்தார்.

## ஆசார்ய ஸ்வரூப சோதகம்

இங்கு ஆசார்ய ஸமாச்ரயணமென்று கீழ்ச்சொல்லிப் போந்தமையால், ஆசார்ய ஸ்வரூபம் ப்ரஸங்காத் நிருபிக்கப்படுகிறது. ஆசார்யனென்பது ப்ரஹ்ம வித்யையை உபதேசிக்குமவனை. மற்ற வித்யைகளை உபதேசிக்குமவனுக்கு ஆசார்யத்வ பூர்த்தியில்லை; அவனை ஆசார்யனென்று வ்யவஹரிப்பது ஔபசாரிகம்.

ஆசார்யனுவான் ஸத்ஸந்தான ப்ரஸூதனாய், ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் அறிந்தும் அநுஷ்டித்தும் அப்படியே பிறர்களை அறிவித்தும் அநுஷ்டிப்பித்தும் போருமவனாய் பரம ஸத்வைக நிஷ்டனாய் க்யாதி லாப பூஜைகளில் அபேக்ஷையில்லாதவனாய் பரம க்ருபாளுவாயிருக்குமவன்.

இந்த ஆசார்யன் குல க்ரமாகதனென்றும் ப்ரத்யக்ரனென்றும் இரண்டு வகையாயிருக்கும். அதில் குல க்ரமாகதன்-தான் வம்ச பரம்பரையாக ஆசார்ய பதத்தை நடத்திப் போருமவன். ப்ரத்யக்ரனுவான்—தான் ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் அறிந்தும் அநுஷ்டித்தும் போருமவனாய், ஜ்ஞாநாபேக்ஷையுள்ளவர்களுக்கு ஜ்ஞான ப்ரதானம் பண்ணுமவனாய் பாரம்பர்யத்தால் வந்ததான ஆசார்யத்வமில்லாமல் நவீனனாயிருக்குமவன்.

இவர்களுள் குல க்ரமாகதனான ஆசார்யன் முக்யன். இப்படி குல க்ரமாகதனான ஆசார்

யனை தானும் வம்ச பரம்பரையாக ஆச்ரயிக்கு மொருவன், அந்த ஆசார்யனுக்கு பாதித்யாவஹமான தோஷமில்லாதிருக்கும் பக்ஷத்தில், மற்றொரு ஆசார்யனை அந்த ஆசார்யனுடைய நியமனமில்லாமல், ஆச்ரயித்தானாகில், குல க்ரமாகதரான ஆசார்யராயுள்ள வஸிஷ்டரையும் தத்புத்ரர்களையும் நிராகரித்து விசுவாமித்திரரை ஆச்ரயித்த த்ரிசங்குவின் படியாம். இந்த அர்த்தம் பாஞ்சராத்ரத்தில் பரமபுருஷ ஸம்ஹிதையில் நிருபிக்கப்பட்டிருக்கிறது. அந்த சுலோகங்களும் இங்கே விவரிக்கப்படுகின்றன.

### பாஞ்சராத்ரம் பரமபுருஷஸம்ஹிதை

*அத வக்ஷ்யே மஹாசார்ய சப்தார்த்தம் ச்ருணு பத்மஜ*
*தஸ்ய ச்ரவண மாத்ரேண முக்தோ பவதி மாநவ:!!*
*ஆசிநோதிஹி சாஸ்த்ரார்த்தாந் ஆசாரே ஸ்தாபயத்யபி*
*ஸ்வயமாசரதே யஸ்மாத் தஸ்மாதாசார்ய: உச்யதே!*
*ஆசார்யோ த்விவித: ப்ரோக்த: ஸர்வ சாஸ்த்ரார்த்த வேதிபி!*
*குலக்ரமாகத: பூர்வ: ப்ரத்யக்ரச: ததாபர:*
*குலக்ரமாகதாசார்யம் தமாசார்ய விதோவிது:*
*பும்ஸ: பரகதி ஜ்ஞாநே ஜிஜ்ஞாஸா ஜாயதே யதா!!*
*தத்பூர்வ தேசிகா பாவாத் யஸ்ஸமித் பாணி ராச்ரயேத்*
*ததாநீமஸ்ய தயயா தீக்ஷா ஸம்ஸ்கார பூர்வகம்*
*மந்த்ர வ்யாக்யா க்ருதாசார்ய: ஸப்ரத்யக் ராக்ய உச்யதே*
*குலாசார்யய பஜநம் யேவா ஸுக்ருதிநோ ஜநா: !!*
*குர் வந்தி ஸததம் பக்த்யா தே வந்த்யா:ஸர்!! தைவதை!*
*ஸர்வ க்ரது சதம் க்ருத்வா யத்பலம் ஸமவாப் நுயாத் !!*
*தத்பலம் ஸமவாப்நோதி குலாசார்யஸ்ய பூஜநாத் !!*
*தைவாத் தேசாந்தரகதே லுப்தேவா குல தேசிகே*
*ததீய புத்ர ப்ராத்ராதே: உபதேசோபி க்ருஹ்யதாம் !!*
*தத்புத்ராதே ரபாவேது சிஷ்ய: சேத் தத்வ லோலுப:*
*தத்துல்ய பாவம் ஸர்வஜ்ஞும் ஆசார் யாந்தர மாச்ரயேத் !!*
*தேநோபதிஷ்டஸ் ஸர்வஜ்ஞ: சிஷ்ய:ஸத்கதி மாப்நுயாத் !!*
*தமேவ குரும் அஸ்யாபி புத்ராத்யா: பூஜயந்த்யத: !!*
*தைவாதீநாத் குலாசார்ய தத்பத்ராதௌ ததா கதே !*
*உபதேசோ க்ரஹீதவ்ய: புந: குலகுரோர் மநோ !!*
*குலக்ரமாகதாசார்ய ஸந்நிதௌ அந்ய தேசிக: !*
*அநுமத்யா விநா தஸ்ய ஸம்பூஜ்யோ நகதாசந !!*
*குலாசார்யாநிதேசேந தத்ரவை தேசிகாந் தரம் ;*
*தத்துல்ய பக்திர் பஜதே ஸவை நரகபாஜநம் !!*
*பஹுநாத்ர கிம் உக்தேந ப்ரஹ்மந் ஸம் க்ஷேபத: ச்ருணு*
*ந யஜ்ஞைர் ந தபோபிர்வா ந தீர்த்தைர் வ்ரதகோடி பி:*
*நாந்யை ருபாயைர் விவிதைர் மந்த் ரௌஷத புரஸ்ஸரை: !*
*குலக்ரமாகதாசார்ய திரஸ்காரஜபாதகாத்*
*முச்யதே மநுஜோ மூட: ஸர்வ துஷ்க்ருத பாஜநம் !*
*தஸ்மாத் ஸர்வாத்மநா ப்ரஹ்மந் குலாசார்யம் ப்ரபூஜயேத்*
*கர்மணா மநாஸ வாசா நிர்தோஷ: சுத்தி மாப்நுயாத்!!*

இந்த சுலோகங்களின் தாத்பரியமெல்லாம் கீழே சொல்லப்பட்டன.

இனி குல க்ரமாகதனை ஆசார்யன் முக்யன் என்பதற்கு உபபத்தி சொல்லப்படும். குல க்ரமாகதனை ஆசார்யனுக்கு தனக்கு முந்தின ஆசார்யர்களுடைய, ஈசுவரனுக்கு அத்யந்தாபிமதமான திருமேனியினுடைய ஸம்பந்தமும், ஜ்ஞான ஸம்பந்தமும் இருப்பதால் தத் ஸம்பந்தம் உத்க்ருஷ்டம். இதைத் திருவுள்ளம்பற்றியே ஸ்ரீபாஷ்யகாரர்எழுபத்து நாலு ஸிம்ஹாஸநாதிபதிகளை நியமித்தருளி தத்வம்ச்யர்களே பஞ்ச ஸம்ஸ்காராம் முதலான வ்யாபாரங்களுக்கு அர்ஹர்க

ளென்றும் மற்றவர்கள் அவர்கள் நியமனத்தாலே கீழ்க்குறிக்கப்பட்ட பஞ்சஸம்ஸ்காராதிகளைப் பண்ணக் கடவரென்றும் வ்யவஸ்தை பண்ணியிருக்கிறார். இந்த ஸம்ப்ரதாயமே நம்முடைய ஸித்தாந்தத்தில் இப்போது நடந்து வருகிறது.

இந்த ஆசார்யன், கேவல மந்த்ரோபதேஷ்டாவென்றும், மந்த்ரார்த்தோபஷ்டாவென்றும் இரண்டு வகையாயிருப்பன். அதில் மந்த்ரோபதேஷ்டாவே மந்த்ரார்த்தத்தையும் உபதேசிக்கக் கடவன். அப்படி அவனுபதேசிப்பது ஸௌகர்யப்படாதிருந்தால் அவனுடைய நியமனத்தாலே மற்ற ஆசார்ய வம்ச்யனிடத்திலாவது கீழ்ச்சொன்ன ப்ரத்யக்ராசார்யனிடத்திலாவது அர்த்தக்ரஹணம் பண்ணிக்கொள்ளலாம். இந்த விஷயம் ஸ்ரீபஷ்யகாரர் ஐந்து ஆசார்யர்களிடத்தில் விசேஷார்த்த க்ரஹணம் பண்ணியிருப்பதாலும் நடாதூர் அம்மாள் தனக்குப் பிதாவும் ஆசார்யனுமுள்ள நடாதூராழ்வானுடைய நியமனத்தாலே எங்களாழ்வானிடத்தில், ஸ்ரீ பாஷ்யார்த்த க்ரஹணம் பண்ணினபடியாலேயும் ஸ்பஷ்டம். இப்படியே வித்யா வம்சயரும் முக்யர்கள். இந்த விஷயத்தை ''நாஸ்யாவரபுருஷா: க்ஷீயந்தே'' என்று சுருதி சொல்லிற்று.

இதில் ஓராண் வழியாவது—ஒரு ஆசார்யனுக்கு அநேக சிஷ்யர்களிலிருந்த போதிலும் அவருள் ஒருவரே ஓராண்வழிக் கிராமத்தை அநுஸரித்திருப்பர். அதாவது — நாதமுனிகளுக்கு அநேக சிஷ்யர்களிருக்கச் செய்தேயும் அவருள் உய்யக்கொண்டாரும், அப்படியே ஆளவந்தாருக்குப் பெரிய நம்பியும், பாஷ்யகாரருக்கு எம்பாரும் அப்படியே மணவாளமாமுனிகள் பர்யந்தம் இந்த க்ரமமானது ஏற்பட்டிருக்கிறது.

மற்ற ஆசார்ய வம்ச்யர்களுக்கும் ஓராண்வழியாய் வந்த ஆசார்யர்களுக்கும் வாசி என்னென்னில், ஓராண்வழியாய் வந்த ஆசார்யர்கள் ஜ்ஞாநாதிகளை ஆசார்யவம்ச்யனன்றியிருக்குமவனுக்கும் நவீனமாக ஆசார்ய பதத்தைக் கொடுக்கத் தகுந்தவர்கள். மற்றை ஆசார்ய வம்ச்யர்களுக்கு அந்த அதிகாரமில்லை.

இந்த விஷயம் நஞ்சீயர், நம்பிள்ளை இவர்களிடத்தில் காணலாம். அப்படியிருக்கையாலே ஆசார்ய வம்சத்தில் அவதரித்தவர்களும் ஓராண்வழி ஆசார்யர்களை ஆசிரயித்து மற்றவர்களுக்கு ஆசார்ய பதத்தைக் கொடுத்திருக்கிறார்கள். இதற்கு உதாஹரணம், மணவாள மாமுனிகள் எழுபத்துநாலு ஸிஹ்மாஸநாதிபதிகளில் ஒருவரான கோமடத்தாழ்வான் வம்ச்ராயிருந்த போதிலும், திருவாய்மொழிப் பிள்ளை திருவடிகளில் ஆசிரயித்தார். அப்படி ஓராண்வழியிலே அந்வயித்தவரானபடியாலே, மணவாளமாமுனிகள் வானமாமலை ராமாநுஜ ஜீயருக்கு ஓராண்வழி க்ரமத்தை ஸாதித்தார். ஆதலால் வானமாமலை ராமாநுஜஜீயரும் ஓராண்வழி ஸம்ப்ரதாயத்தை அநுஸரித்து மற்றவர்களுக்கு ஆசார்ய பத ப்ரதானம் பண்ணியிருக்கிறார். அங்ஙனமன்றிக்கே ஓராண் வழி க்ராமத்தில் கோயில் கந்தாடை அண்ணனும் அந்வயிதவரென்று சில ஆசார்யர்களுடைய அபிப்பிராயம். யதா ஸம்ப்ரதாயம் கண்டு கொள்வது.

கேவல மந்த்ரோபதேஷ்டாவும், அர்த்தோப தேஷ்டாவும் கௌரவ்யதையிலே துல்யர்கள்; (65) ''அஸாவ ஸாவித்யா பகவத்த:'' என்றும், ''லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்'' என்றும் ஸ்வாசார்யன் முதலாக எம்பெருமான் பர்யந்தமும், எம்பெருமான் முதலாக ஸ்வாசார்ய பர்யந்தமும் அநுஸந்திக்கப்படுகிற குருபரம்பரையில் இருவரும் அநுஸந்தேயர்; இதற்கு ப்ரமாணம் (66) ''மந்த்ரே தத்தேவதாயாஞ்ச ததா மந்த்ர ப்ரதே குரௌ த்ரிஷு பக்திஸ் ஸதாகார்யா ஸாஹி ப்ரதம ஸாதநம்'' (67) ''ஸஹி வித்யா தஸ்தம் ஜநயதி தச்ச்ரேஷ்டம் ஜந்ம கரீயாந் ப்ரஹ்மத: பிதா'' இத்யாதி வசனங்களாம்.

### ஆசாரியர்களில் இரண்டு வகை

இந்த ஆசார்யன் க்ருபாமாத்ர ப்ரஸந்நனென்றும் அநுவ்ருத்தி ப்ரஸந்நனென்றும் இரண்டு வகையாயிருக்கும். அதில் க்ருபா மாத்ர ப்ரஸன்னாசார்யராவார், சேதனனுடைய துர்க்கதியைக்கண்டு பொறுக்கமாட்டாமல், கேவலக்ருபையால் விமுகரான சேதனருக்கும் ஜ்ஞாநோபதேசம் பண்ணுமவர்கள்; பிராட்டியும் ஆழ்வாரும் போல்வார். இந்த அர்த்தம் (68) ''தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும்'' என்கிற ஆசார்யஹ்ருதய சூர்ணிகையில் வ்யக்தம். சிஷ்யனுடைய அநுவ்ருத்தியினாலே கிருபையுண்டாகி ஜ்ஞாநோபதேசம்

பண்ணுபவர்கள் அநுவ்ருத்தி ப்ரஸன்னுசார் யர்கள். இவர்களில் க்ருபாமாத்ர ப்ரஸந்நா சார்யர்கள் சிரேஷ்டர்கள்.

### ப்ராஹ்மணனே ஆசார்ய பதத்துக்கு உரியவன்

ஆசார்யன் ஸத் ஸந்தாந ப்ரஸூதனுய் ஆஸப்தபூருஷம் சுத்தனுயிருக்கவேணுமென்று பாரத்வாஜ ஸம்ஹிதையில் சொல்லயிருக்கிற படியால், அப்படிப்பட்ட ப்ராஹ்மணனே ஆசார்ய பதத்துக்குரியவன். ஆனுல், ப்ரபத்தி யில் எல்லோருக்கும் அதிகாரமிருப்பதாலும் ஜ்ஞானியாயிருக்கிறவன் விஷயத்தில் வர்ணுச்ரமாதி நியமம் முக்கியமல்ல வென்றிருப்பதாலும் மற்ற வர்ணத்தாரும் ஜ்ஞானுேபதேசம், பண்ணலாமோ வென்னில்? அது கூடாது. பாரத்வாஜ ஸம்ஹிதையில் கீழ்ச் சொன்ன ப்ராஹ்மணனே ஆசார்ய பதத்துக்கு உரியவனென்று சொல்லிவிட்டு, மற்ற வர்ணத் தார் அதற்கு அநர்ஹர் என்றும் நிரூபித்து விட்டு, "கிமப்யத்ராபி ஜாயந்தே" என்கிற ச்லோகத்தால் பகவத் ஸாக்ஷாத்காரம் வந்த வர்களிடத்தில் குலம் முதலானவற்றைச் சிந்திக்கலாகாதென்றும் அவர்களே ஆசார்ய பதத்துக்கு உரியவர்களென்றும் சொல்லியிருப்பதால்—அவர்களைத் தவிர மற்ற ஆஸப்த புருஷம் சுத்தரல்லாதார் ஆசார்ய பதத்துக்கு உரியரல்லர், அப்படி ஸாக்ஷாத்காரம் வந்த வர்களும் லோகக்ஷோபம் பிறக்குமென்று ஸர்வ ஸாதாரணமாக உபதேசித்தார்களில்லை. இந்த விஷயம் நம்மாழ்வாரிடத்திலும் திருமழி சைப்பிரானிடத்திலும் கண்டு கொள்வது.

இப்படியே "விதுரஸ் ஸ மஹா மதி:" என்று ஜ்ஞானுதிகராகச் சொல்லப்பட்ட விதுரரும், (உத்யோக பர்வத்தில் விதுரப்ரஜா கரத்தில்) "சூத்ரயோநா வஹம் ஜாத: நாதோந்யத்வக்து முத்ஸஹே" என்று த்ருத ராஷ்டிரனைக் குறித்து, தான் ப்ரஹ்மவித்யோப தேசம் பண்ணினுல் மற்ற ஸாமான்ய சூத்ரர் களும் அப்படியே செய்வார்களாதலால் லோக க்ஷோபம் பிறக்குமென்று தான் ப்ரஹ்மவித்யோபதேசம் பண்ணலாகாதென்று சொல்லியிருக்கிறுர்.

எப்படிப்பட்ட ஜ்ஞானுதிகர்களும் லோக ஸங்க்ரஹார்த்தமாகத் தங்கள் தங்களுடைய வர்ணுச்ரம தர்மங்களை அதிக்ரமித்தார்களில்லை யென்பது ஸ்பஷ்டம். ஆழ்வாருக்குப் பின்பு இதுவரையிலுள்ள ஆசார்ய பரம்பரையில் ப்ராஹ்மணரைத் தவிர மற்ற வர்ணத்தவர்கள் ஆசார்ய பதத்தை அவலம்பித்தார்களில்லை. நேரில் தேவப்பெருமாளுடன் ஸல்லாபம் பண்ணிக்கொண்டிருந்த திருக்கச்சிநம்பியை விட்டு, ஸ்ரீபாஷ்யகாரர் பெரியநம்பியை ஆச்ரயித்தபடியாலும் அந்த அர்த்தம் ஸுஸ்பஷ்டம்.

ஆதலால் அவர வர்ணத்தார் ஜ்ஞானுதிகராயிருந்தாலும் "தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம்" என்கிற ப்ரமாணத்தின்படி கேவலம் விசேஷார்த்தங்களை உபதேசிக்க மட்டும் அர்ஹராவரல்லது பஞ்ச ஸம்ஸ்கார பூர்வமாக மந்த்ரோபதேசம் பண்ணலாகாது. அப்படி யோக்யதையுள்ளவர்கள் பகவத் ஸாக்ஷாத்காரம் வந்த ஆழ்வார்கள் போல் வார்கள். அவர்களும் லோகஸங்க்ரஹத்தின் பொருட்டு ஸர்வஸாதாரணமாகச் செய்ய வில்லை. இவற்றுல் ப்ரஸக்தமாய் வந்த ஸதா சார்ய ஸமாச்ரயண க்ரமமிருக்கும்படி கண்டு கொள்ளத்தக்கது.

### முக்த நித்ய ஸ்வரூப நிரூபணம்

இனி முக்தராவார் கீழ்ச்சொன்ன பிர காரம் உபாயங்களை அநுஷ்டித்து, அத்தால் ப்ரஸந்நனுன ஈசுவரனுடைய அநுக்ரஹத் தாலே ஸம்ஸார பந்தம் அற்றவர்கள். இவர் கள் கேவலர்களென்றும் பகவதநுபவ பரர் களென்றும் இரண்டு வகையாயிருப்பர்கள். இப்படி இரண்டு வகையாயிருப்பதற்கு "தத்ய தித்தம் வித:" இத்யாதி சுருதியும், 69 "ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப" என்கிற கீதாவாக்யமும், 70 "அப் ரதீகாலம்பநாந் நயதீதி பாதராயண:" என்கிற ஸூத்ரமும் ப்ரமாணங்களாம். இதனுடைய அவாந்தர ப்ரகாரங்கள் புருஷார்த்த நிரூ பணத்திற் சொல்லப்படும்.

இனி நித்யராவார் ஒருநாளும் ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாதவராயும், பகவதநுபவ கைங் கர்யங்களே தாரக போஷக போக்யங்களாகக் கொள்ளுமவர்களாயு முள்ள நித்ய விபூதி வாஸிகளான அனந்த கருட விஷ்வக்ஸேநாதி கள். இந்த விஷயத்துக்கு (71) "யத்ரர்ஷய: ப்ரதமஜா யே புராணு:" (72) "யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:" (73) ஸதா பச்யந்தி ஸூரய:" என்கிற சுருதிகளும் பாஞ்ச ராத்ராதிகளும் ப்ரமாணங்களாம்.

### ஆத்மாக்களின் ஆனந்த மயத்வ நிரூபணம்

கீழ் பத்த முக்த நித்யர்களாகச் சொல்லப் பட்ட மூன்றுவகை ஆத்ம ஸ்வரூபமும் ஆனந்த மாயும் ஆனந்தத்துக்கு ஆசிரயமாயுமிருக்கும். ஆனந்தமாவது அநுகூலமென்றறிகை. அங்ஙனன்றிக்கே தனக்குத்தானே அனுகூலமாயிருப் பதும் ஆனந்தம் என்று சொல்லப்படும். இங்கு அநுகூலமாகையாவது வேறொன்றைப் பெறு கைக்கு ஸாதனமாக விரும்பப்படுவதன்றிக்கே, தானே விரும்பப்படுமதாயிருக்கை. ஆத்மா கீழ் நிரூபித்தபடி அநுகூலமாயிருக்கும். அனுகூல வஸ்துக்களையும் அனுகூலங்களென் றறியுமதாயிருக்கும். இப்படி கருதி முதலான பிரமாணங்களால் ஆத்ம ஸ்வரூபம் நிரூபிக்கப் பட்டிருக்கிறது.

இங்ஙனன்றிக்கே உறங்கினவன் உணர்ந்த பிறகு நான் ஸுகமாக உறங்கினேன் என்று தான்வெளிபடுத்துவதாலும், ஆத்மா ஆனந்த ரூபனுயிருப்பது ப்ரத்யக்ஷ ஸித்தமாயறியப் படும். அதெப்படியென்றால் உறங்குகின்ற காலத்தில் வேறு அறிவு ஒன்றுமில்லாமல் தன் னுடைய ஸ்வரூபம் மட்டும் துலக்கமாகத் தனக்குத்தானே விளங்கிக் கொண்டிருக்கும் போது, அனுகூலமாகத் தோற்றிக் கொண்டி ருந்தமையால் விழித்த பிறகு அந்த ஸ்மரண பூர்வகமாயுள்ள ப்ரத்ய பிஜ்ஞா ப்ரத்யக்ஷ முண்டாகிறது.

உறக்கமாவது:— ஆத்மா பிறிது ஒன் றையும் அறியாதிருப்பதாகையால், அவ் வறியாமை அபாவ ரூபமாகிறது. நம்முடைய ஸித்தாந்தத்தில் அபாவம் தனக்கு ஆசிரயமா யுள்ள ஸ்வரூபமே தவிர, வேறு பதார்த்த மன்றென்று ஸித்தித்திருப்பதால், அந்த உறக்க மும் ஆத்ம ஸ்வரூபபேயாம். அந்த ஆத்மஸ்வ ரூபத்தை ஸுசமாக உறங்கினேன் என்று ப்ரத் யபிஜ்ஞா ப்ரத்யக்ஷம் விஷயீகரித்திருப்பதால், ஆத்மா ஸுக ரூபம் என்று ஏற்படுகின்றது. எங்ஙனமெனில்? இனிதாகப் பாடினேன், மெதுவாக நடந்தேன் என்கிற ப்ரத்யபிஜ்ஞா ப்ரத்யக்ஷத்தில் இனிமை பாட்டிலும், மெது வாயிருக்கை நடையிலும் அந்வயிப்பதுபோலே, ஸுகமாகத் தூங்கினேன் என்கிற ப்ரத்ய பிஜ்ஞா ப்ரத்யக்ஷத்தில், ஸுகமாயிருக்கைதூக் கத்தில் அநவயிக்கிறது. இதனால் கீழ் நிரூபித்த படி அந்த ஸுகா காரமான தூக்கமானது தனக்கு ஆசிரயமாயுள்ள ஆத்மாவின் ஸ்வரூப மாக ஏற்படுகிறபடியால், ஆத்மா ஆனந்த ரூப மென்று ஸித்திக்கிறது. ஒவ்வொருவரும் நன்று யுறங்குகிற சமயத்தில் பிறர் எழுப்பும்போது, உறக்கத்தில் விருப்பமும், எழுப்புவதில் வெறுப்பு முண்டாக்காண்கையால் உறக்கத்தில் ஆத்மா ஸுகரூபமாகத் தனக்குத்தானே தோற்றிக்கொண்டிருக்கிறதென்பது ஸகலருக் கும் தம் அநுபதஸித்தமாயும் அறியத்தக்கதே.

### அசித் ஸ்வரூப நிரூபணம்

இனி அசித்தினுடைய ஸ்வரூபம் நிரூபிக் கப்படும். அசித்தாவது— அறிவில்லாததாயும் எப்போதும் பரிணமமுள்ளதாயும் ஈசுவரனுக்கு சரீரமாயும் இருக்கும். அது ப்ரக்ருதி என்றும், சுத்த ஸத்வமென்றும், காலமென்றும் மூன்று வகைப்படும்.

அவற்றுள் ப்ரக்ருதியாவது — ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களுக்கும் ஆச்ரயமாயும் சேதனனுடைய கர்மானுகுண மான பகவத் ஸங்கல்பத்தாலே எப்போதும் பரிணமத்தையுடைத்தாயுமிருக்கும். இது ப்ரகிருதியென்றும், அவிபக்த தமஸ்ஸு என்றும், விபக்த தமஸ்ஸு என்றும், அக்ஷரம் என்றும், அவ்யக்தம் என்றும் சில அவஸ் தைகளை யுடைத்தாயிருக்கும்.

அவற்றுள் அவிபக்த தமஸ்ஸாவது—மஹா ப்ரளய தசையில் ஈசுவரனுடைய ஸ்வரூபத்தில் ஏகிபவித்து தனித்து வ்யவஹரிக்க யோக்யதை யில்லாமலிருக்கும்.

விபக்த தமஸ்ஸாவது—தனித்து வ்யவ ஹரிக்கப்படுமதாயிருக்கும்! அக்ஷரமாவது— அக்ஷரன் என்று பெரையுடைய ஜீவ ஸமஷ்டி கர்ப்பமாயிருந்து கார்யோன் முகமாயிருக்கும்.

அவ்யக்தமாவது— கார்யத்தை யுண் டாக்கக் கடவதாயிருக்கும்.

இப்படியிருந்துள்ள அவ்யக்தத்தில் நின் றும் மஹான் என்கிற தத்வமுண்டாகும்; அதில் நின்றும் அஹங்காரம் உண்டாகும். அது ஸாத் விகமென்றும் ராஜஸமென்றும், தாமஸமென் றும் மூன்று வகையாயிருக்கும். ஸாத்விகாஹங் காரத்தில் நின்றும் த்வக், ஜிஹ்வா, க்ராண, சக்ஷுஸ், ச்ரோத்ரங்களாகிற ஜ்ஞானேந்திரி யங்கள் ஐந்தும், வாக், பாணி, பாத, பாயூபஸ் தங்களாகிற கர்மேந்திரியங்கள் ஐந்தும் மனஸ் ஸும் உண்டாகும். இவற்றுள் ஜ்ஞானேந்திரி

யங்கள் அறிவுக்குரிய ஸாதனங்களாம். கர்மேந் திரியங்கள் அறிவுடைய கார்யமான க்ரியை களுக்கு ஸாதனங்களாம். மனஸ்ஸு அவ்விரு வகை இந்திரியங்களுக்கும் ஸஹகாரியாயிருக் கும். தாமஸாஹங்காரத்தில் நின்றும் பூதங் களுடைய ஸூக்ஷ்மாவஸ்தைகளாயுள்ள, தந் மாத்ரங்களும், ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம் ப்ருதிவீ என்கிற பஞ்சபூதங்களும் அடைவே யுண்டாகும்.

இப்படியிருந்துள்ள ஐந்து பூதங்களும் அஹங்காரம் மஹான் இவைகளேழும் தனித் தனி கார்யம் செய்யமுடியாமையால் பகவத் ஸங்கல்பத்தாலே 74 ஸப்தீ க்ருதங்களாய்க் கொண்டு கார்யங்களை யுண்டாக்கும்.

ஸப்தீகரணமாவது — இவைகளில் ஒவ் வொன்றையும் இரண்டு பாகமாக்கி ஒரொன் றின் ஒவ்வொரு பங்கை அவ்வாறு பாகமாக்கி மற்றுள்ள ஆறோடும் கூட்டிக் கார்யோந்முக மாக்குகை. இப்படி ஸப்தீக்ருதங்களான இவை களேழும் கூடி அண்டத்தை யுண்டாக்கும்.

சுருதியில் த்ரிவ்ருத் கரணமே சொல்லி யிருந்தபோதிலும் அந்த த்ரிவ்ருத்கரணமானது பஞ்சீகரணம், ஸப்தீகரணம் இவைகளுக்கும் உபலக்ஷணம். இந்த விஷயமானது ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் 'மஹதாத்யா விசேஷாந்தாஹ யண்ட முத்பாதயந்தி தே'' என்று நிரூபிக்கப் பட்டது.

அண்டமாவது — கீழேழு லோகங்களும் மேலேழு லோகங்களும் அடங்கியதாய் கீழ்ச் சொன்ன ஐந்து பூதங்களாலும் மஹதஹங் காரங்களாலும் ஆக்கப்பட்டதாய், ஒன்றை டொன்று பதின்மடங்கு விஸ்தாரமுள்ள ஆவரணங்களோடே கூடினதாயிருக்கும். இப்படியே அநேக அண்டங்கள் ஏற்பட்டி ருக்கும். இதற்கு ப்ரமாணங்கள் 75 ''அண்டா நாந்து ஸஹஸ்ராணி கோடி கோடி சதாநிச'' என்றற்றொடக்கத்தனவாம்.

இப்படிருந்துள்ள அண்டங்களில் ஒவ் வொரு அண்டத்திலும் ப்ரஹ்மா முதலான தேவதைகளும் மனுஷ்யாதி ஜந்மங்களும் மற்றுமுள்ள பதார்த்தங்களும் அடங்கி யிருக்கும். இந்த விஷயத்தை ஸ்ரீ பாகவதத்தில் ப்ரஹ்ம ஸ்துதியில். (76) ''க்வாஹம் தமோ மஹதஹம் கசராக்நிவார் பூஸம்வேஷ்டி தாண்டகட ஸப்தவிதஸ்தி காய:, க்வேத்ரு க்விதா தகணிதாண்ட பரார்த்தசர்யா பாதாத்வரோம விவரஸ்யச தேமஹித்வம்'' என்று ப்ரஹ்மா நிரூபித்திருக்கிறார். இவ்வள வோடு ப்ரகிருதி தத்வம் நிரூபிக்கப்பட்டது,

## சுத்த ஸத்வ நிரூபணம்

இனி சுத்த ஸத்வம் நிரூபிக்கப்படும்:— சுத்த ஸத்வமாவது—ரஜஸ் தமஸ்ஸுக்கள் கலசாத கேவல ஸத்வ குணத்துக்கு ஆசிரய மாகவிருக்கும். இந்த சுத்த ஸத்வம் ப்ரகிருதிக்குமேல், 'ததநந்தம்' என்றும் சொல்லுகிறபடியே ப்ரகிருதியைக் காட்டிலும் மும்மடங்கு அதிகமாயிருக்கும்; அன்றியும் முக்தர்க்கும் நித்யர்க்கும் ஈசுவரனுக்கும் தர்ம பூத ஜ்ஞாநம் போலவே தானே ப்ரகாசிக்கும் படியாயிருக்கும். இன்னும் ஈசுவரனுடைய இச்சையாலே அவனுக்கு போகார்த்தமாக விமான மண்டப கோபுராதிகளாய்க்கொண்டு பரிணமிக்கக் கடவதாயும் நித்யவிபூதி என்றும் அயோத்யா என்றும் அபராஜிதா என்றும் பெயர்களை யுடைதாயுமிருக்கும்.

இப்படியிருந்துள்ள நித்யவிபூதியில் ஆமோ தம் முதலான வ்யூஹஸ்தானங்களும் மற்றும் நித்யர்களுடைய லோகங்களும் எண்ணிறந் தனவாயிருக்கும். இந்த விஷயம் கௌஷீதகீ முதலான உப நிஷத்துக்களிலும் பாஞ்ச ராத்ர இதிஹாஸ புராணாதிகளிலும் ஸ்பஷ்டமாக விளங்கும். இங்கு விரித்துரைப்பின் மிகப் பெருகுமென் றஞ்சி விடப்பட்டன.

## கால தத்வ நிரூபணம்

இனி காலமாவது: ஸத்வம் ரஜஸ் தமஸ் இந்த மூன்று குணங்களும் இல்லாததாயும் சேதனனுடைய கர்மாநுகுணமான பகவத் ஸங்கல்பத்தாலே க்ஷண லவ காஷ்டாதி ரூபமாகப் பரிணமிக்கக் கடவதாயுமிருக்கும். இப்படிப்பட்ட கால பரிணாமம் நித்ய விபூதியில் இல்லை.

## ஈச்வர தத்வ நிரூபணம்

இனி ஈசுவர தத்வம் நிரூபிக்கப்படும்:— ஈசுவரனாவான்— ஸமஸ்த கல்யாண குணா கரனாயும், ஸமஸ்த வஸ்துக்களுக்கும் சேஷியா யும் ஸ்வாமியாயும் ஸர்வ கர்ம ஸமாராத்யனா யும் நிரதிசய புருஷார்த்தமான மோக்ஷத்தைக் கொடுப்பவனாயும் உபாயமாயும் உபேயமாயு முள்ள மேலான தேவதை. அந்த மேலான தேவதை ஸ்ரீமானான நாராயணனே யென்பது

சுருதி ஸ்ம்ருதி இதிஹாஸ பாஞ்சராத்ர புராணாதிகளாலும் மற்றும் ப்ரதாநர்களா யுள்ள ஸம்ஸ்கிருத த்ராவிட மஹாகவிகளின் வாக்யங்களாலும் மற்றும் உபபத்திகளாலும் நிரூபிக்கலாகும்.

சுருதியில், 'காரணந்து த்யேய:' என்ற வாக்கியத்தால் ஜகத் காரண வஸ்துவே தியானிக்கத் தக்கதென்று அறுதியிட்டு, அந்த ஜகத் காரணம் 'யதோவா இமாநி பூதாநி'' என்று தொடங்கி, ப்ரஹ்ம சப்த வாச்யமாம் என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

''ஏகோ ஹவை நாராயண ஆஸீத்'' என்ற வாக்கியத்தால், ப்ரஹ்ம ருத்ராதிகளுண்டா வதற்கு முன்னே ஜகத் காரணமாயிருந்த ப்ரஹ்ம சப்தவாச்யன் நாராயணன் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இன்னும் ''யேநாக்ஷரம் புருஷம் வேத ஸத்யம் ப்ரோவாச தாம் தத்வதோ ப்ரஹ்ம வித்யாம்'' என்பதால் எந்த ஜ்ஞானத்தாலே அக்ஷரனான புருஷனை அறிவனே அந்த ப்ரஹ்ம வித்யையைச் சொல்லக்கடவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் ப்ரஹ்ம சப்தவாச்யன் புருஷன் என்று பெறப்படு கிறது.

ஆனந்த வல்லியில் ''ஆத்மந ஆகாச: ஸம்பூத:'' என்று தொடங்கி, ஆத்மாவே ஜகத் காரணபூதனென்றும் அந்த ஆத்மா ஆனந்த மயனென்றும், அந்த ஆனந்தமயனான பரமாத் மா ''யச்சா ஸாவாதித்யே'' என்று ஆதித்ய மண்டலாந்தர்வர்த்தி யென்றும் சொல்லப் பட்டது.

சாந்தோக்யத்தில் அந்தராதித்ய வித்யை யில் ''ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகம் ஏவமக்ஷிணீ'' என்பதனால் ஆதித்ய மண்டலாந்தர்வர்த்தி புருஷன் என்றும் அவன் ''புண்டரீகாக்ஷன்'' என்றும் சொல்லி யிருக்கிறது. இந்த புண்டரீகாக்ஷனான புருஷன் நாராயணன் என்பது நிரூபிக்கப்படும். சைவ புராணத்தில், நாராயணன் தினந்தோறும் ஆயிரம் தாமரை மலர்களாலே சிவனை அர்ச் சித்து வந்ததாகவும், ஒருநாள் பக்தியை சோதிக்கவேண்டி ஒரு தாமரை மலரை சிவன் காணாமற் செய்ததாகவும், அப்போது அர்ச் சிக்கும் நாராயணன் புண்டரீகாக்ஷனாகையால் தன்னுடைய கண்மலரால் அர்ச்சித்ததாகவும் அதனால் மகிழ்வுற்று சக்ரம் கொடுத்ததாக வும் சொல்லியிருப்பதால் புண்டரீகாக்ஷன் நாராயணன் என்பது இந்த கட்டுக்கதை யாலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

இன்னும்பிற்காலத்தவர் களான சைவ கவிகளில் ஒருவர் சிவஸ்துதியில் ''கஞ்சலோசந பூஜ்யாய கஸ்மைசிந் மஹஸே நம:'' என்று நாராயணனை புண்டரீகாக்ஷனாகச் சொல்லி யிருக்கிறார்.

தமிழருள் பொது நோக்குடையரான திரு வள்ளுவரும், தாம் செய்த திருக்குறள் என்னும் நூலினுள்ளே ''தாழ் வீழ்வார் மென் றோட்டுயிலினிது கொல் தாமரைக்கண்ணா னுலகு'' என்பதால், நிரதிசயானந்த போக ப்ரதமான மோக்ஷ லோகத்தை புண்டரீகாக்ஷ னுடையதென்று சொல்லியிருக்கிறார். கல்வி யிற் பெரிய கம்பநாடரும், ''தயரதன் மதலை யென்பார் தாமரைக்கண்ணன் என்பார்'' என்பதால் வெளியிட்டிருக்கிறார்.

புருஷ ஸூக்தம் நாராயண பரமென்பது ஸ்பஷ்டம்; போதாயந ஸ்ம்ருதியில் புருஷ ஸூக்தத்தை விஷ்ணு பூஜையில் உபயோகிக்க வேண்டியதென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த புருஷ ஸூக்தத்தில், 'ஸஹஸ்ர சீர்ஷா புருஷ:'' என்று தொடங்கி, ''தமேவம், வித்வா அம்ருத இஹ பவதி'' — 

தமேவம், விதித் வா அதிம்ருத்யுமேதி'' என்பதனால், அந்த புருஷனுடைய ஜ்ஞானமே மோக்ஷத்துக்கு ஸாதனமென்றும், ''நாராயண பரம் ப்ரஹ்ம'' என்பதனால் அந்த புருஷன் நாராயணன் என்றும், 'தஸ்யா: சிகாய மத்யே' என்கிற வாக்யத்தால் தஹர வித்யைக்கு நாராயணன் உபாஸ்யன் என்றும் சொல்லியிருப்பதால், மற்ற ப்ரஹ்ம வித்யைகளுக்கும் நாரா யணனே உபாஸ்யனென்று ஸித்தித்திருக் கிறது.

கீதையில் ''புருஷஸ் ஸ பர: பார்த்த, பக்த்யா லப்யஸ் த்வநந்யயா'' என்பதனால் புருஷ சப்தவாச்யன் நாராயணனென்று சொல்லப்பட்டது. காளிதாஸ மஹாகவியும் ''ஸ்ரீவத்ஸ லக்ஷ்மா புருஷச்ச ஸாக்ஷாத்'' என்பதாகக் குமார ஸம்பவத்தில் சொல்லி யிருக்கிறார். இப்படியே புருஷ சப்தம் நாரா யணபரம் என்பதற்கு அநேக ப்ரமாணங்கள் காட்டத்தகும்; அவையெல்லாமிங்கே காட் டினால் மிக விரியுமென்று விடப்பட்டன.

இப்படியே ஸுபாலோபநிஷத்திலும் மஹோபநிஷத்திலும் கடவல்லி முதலான உபநிஷத்துக்களிலும் நாராயணனே பரதத்வ மென்பது வெளிப்படை.

## ஸ்ம்ருதி நிரூபணம்

இனி ஸ்ம்ருதி விஷயம் நிருபிக்கலாகும். 'யத்வை கிஞ்ச மநுரவதத் தத் பேஷஜம்'' என்று சுருதியாலே ஆப்த தமராகச் சொல்லப் பட்ட வைவஸ்வத மநு தன்னுடைய ஸ்ம்ருதியில் ஆதியில் ''ஆஸீதிதம் தமோபூதம்'' என்று தொடங்கி, ''ஆபோ நாரா இதி ப்ரோக்தா: ஆபோவை நரஸூநவ:, தாய தஸ்யாயநம் ப்ரோக்தம் தேந நாராயண: ஸ்ம்ருத:'' என்பதனால், ஜலமானது நரனை ஈசுவரனிடத்தில் நின்றும் உண்டானதாகையாலே நாரம் என்று சொல்லப்படும்; அந்த நாரத்தை ஸ்தானமாக உடையவனாகையாலே, நாராயணனென்று சொல்லப்படுவன் என்றும் ''ஸோபித்யாய சரீராத் ஸ்வாத் ஸிஸ்ருக்ஷுர் விவிதா: ப்ரஜா:, மஹாபூதாதி வ்ருத்தௌஜா: ப்ராதுராஸீத் தமோநுத:'' என்பதனால் தான் ஸங்கல்பித்து தன்னுடைய சரீரமாயுள்ள ப்ரக்ருதியைக் கொண்டு, நானா விதங்களான ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்க வேணுமென்கிற இச்சையுடையவனாய் மஹாபூதங்களுக்கெல்லாம் ஆதியான அஹங்கார தத்வத்தில் வ்யாபித்த ஸங்கல்பத்தையுடையவனாய் ப்ரக்ருதியினுடைய தமஸ்த்வா வஸ்தையைப் போக்குகிறவனாய்க் கொண்டு, கார்யோன் முகனாக ஆனான் என்று சொல்லியிருப்பதால், நாராயணனே பரதத்வமென்றும், அவனே சேதனா சேதன சரீரியாய் கொண்டு ஸ்ருஷ்டிப்பதால் விசிஷ்டாத்வைதமே ஸித்தாந்தமென்றும் ஏற்படுகிறது. இந்த ஸ்ம்ருதிக்கு வ்யாக்யாதாவான குல்லூக பட்டர் அத்வைதியாயிருந்தபோதிலும், இந்த சுலோக வ்யாக்யானவஸரத்தில், 'அநேந க்ரந்த காரேண த்ரிதண்டி வேதாந்தி மதமேவ ஆத்ருதம் பவதி'' என்ற வாக்கியத்தால், இந்த க்ரந்த காரரான மநுவாலே த்ரிதண்டி வேதாந்தி மதமான விசிஷ்டாத்வைதமே ஆதரிக்கப் பட்டதென்று சொல்லியிருக்கிறார்.

இப்படியே யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி. சாண்டில்ய ஸ்ம்ருதி முதலானவைகளில் நாராயணனே பரதத்வமென்றும், அவனே மோக்ஷப்ரதனென்றும் அவனையே பக்தி, ப்ரபத்திகளால் உபாஸிக்க வேணுமென்றும் அப்படி உபாஸிக்குமவர்கள், பஞ்சகால பராயணர்களாயிருக்கவேணுமென்றும் சொல்லி, அந்த பஞ்சகாலங்களுடைய ஸ்வரூபத்தையும் நிருபித்திருக்கிறது. இந்தவிஷயம் மேலே ஸ்பஷ்டமாக நிருபிக்கப்படும்.

## ஸ்ரீராமாயணத்தைக்கொண்டு நாராயண பாரம்ய நிருபணம்

இனி இதிஹாஸங்களில் ப்ரதானமான ஸ்ரீராமாயணத்தில் ''அதிகம் மேநிரே விஷ்ணு: தேவாஸ் ஸர்ஷிகணாஸ் ததா'' என்பதனால் ருத்ரனுக்கும் விஷ்ணுவுக்கும் நடந்த யுத்தத்தில் ருத்ரனுடைய தோல்வியைக் கண்ட தேவர்களும் ரிஷி கணங்களும் விஷ்ணுவை அதிகனாக நினைத்தார் களென்றும் அயோத்யா காண்டத்தில் ''அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:'' என்பதனால், தேவதைகளாலே ராவண வதத்துக்காக ப்ராதிக்கப்பட்ட விஷ்ணுவானவர், சக்ரவர்த்தி திருமகனாக அவதரித்தார் என்றும் ''ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயண முபாகமத்'' என்பதனால், அப்படிப்பட்ட சக்ரவர்த்திதிருமகனுக்கு நாராயணனே ஆராத்யனென்றும், ஆரண்ய காண்டத்தில், கரவதமானதும் அகம்பனன், வாக்கில் நாராயணனே ராமனாக அவதரித்தானென்பதை ஸூசிப்பித்திருப்பதாலும், கிஷ்கிந்தா காண்டத்தில, ''நிவாஸ வ்ருக்ஷஸ் ஸாதூநாம்'' ''த்வம் அப்ரமேயச்ச'' என்கிற சுலோகங்களாலும், ஸுந்தர காண்டத்தில் ''ப்ரஹ்மா ஸ்வயம்பூ:'' என்கிற சுலோகத்தாலும் பகவத்பாரம்யம் சொல்லப்பட்டிருக்கிறது. யுத்தகாண்டத்தில் ராவணவதத்துக்குப்பின்''தமஸ: பரமோதாதா சங்க சக்ரகதாதர:''என்று மந்தோதரி வார்த்தைகளாலும் ''பவாந் நாராயணோ தேவ:'' என்பது முதலான ப்ரஹ்மாவினுடைய வாக்யங்களாலும் உத்தரகாண்டத்தில் மாலிஸுமாலி மால்யவான் இவர்கள் யுத்தத்தில் அவர்கள் ஏவிய பாணங்கள் விஷ்ணுவினிடத்தில் லயமடைந்ததைப்பற்றிச் சொல்லும்போது அந்த விஷ்ணுவினிடத்தில் ப்ரளய காலத்தில் ப்ரஜைகள் லயமடைந்ததுபோல என்று த்ருஷ்டாந்தங் காட்டியிருப்பதாலும் கால புருஷன் ப்ரஹ்மாவாலே நியமிக்கப்பட்டவனாய்க் கொண்டு, சக்ரவர்த்தி திருமகனைத் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருள வேணுமென்று

ப்ராரத்திக்கிற காலத்தில், "நாப்யா முத் பாத்ய மாமபி" "ப்ராஜாபத்யம் த்வயா கர்ம மயி ஸர்வம் நிவேசிதம்" என்பதனால் தேவரீருடைய திருநாபீகமலத்தில் என்னை யுண்டாக்கி ப்ராஜாபத்யமாகிற வ்யாபாரம் என்னிடத்தில் தேவரீரால் வைக்கப்பட்டதென்று ப்ரஹ்மாவின் வார்த்தையாகச் சொல்லப்பட்டிருப்பதாலும், நாராயணனே பர தத்வமென்பது ஸ்பஷ்டம்.

### மஹாபாரதாதிகளைக் கொண்டு நாராயண பாரம்ய நிரூபணம்

இனி பாரதத்துக்குப் பஞ்சரத்னமாகச் சொல்லப்பட்ட பகவத் கீதாதிகளில், நாராயணனே பரதத்வமென்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இது நிற்க, "ஆலோட்ய ஸர்வ சாஸ்த்ராணி விசார்யச புந: புந:; இதமேகம் ஸுநிஷ்பந்நம் த்யேயோ நாராயண: ஸதா" என்று சாந்திபர்வத்தில் ஸ்ரீ பிஷ்மராலே மோக்ஷ தர்மத்தில் தர்மபுத்ரருக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் அர்த்தம் ஸர்வ சாஸ்திரங்களையும் நன்றாக ஆராய்ந்து, அடிக்கடி யுக்தி விசாரமும் பண்ணி, நாராயணனே த்யேயமான பர தத்வமென்று தெளியப்பட்டதென்கை.

இப்படியே ஸாத்விக புராணங்களிலும் தலையான விஷ்ணு புராணத்தில் மைத்ரேயர், "யந்மயம்ச ஜகத் ஸர்வம்" என்று தொடங்கி எவனிடத்தில் நின்றும் ஜகத்து உண்டாகிறதோ, எவனால் ரக்ஷிக்கப்படுகிறதோ, எவனிடத்தில் ப்ரளய காலத்தில் லயமடைகிறதோ அவனைச் சொல்லவேணுமென்று ஸ்ரீ பராசர பகவானைப் பொதுவாகக் கேட்க, புலஸ்தியருடைய வர ப்ரஸாதத்தாலே தேவதா பாரமார்த்தியத்தை உள்ளபடி அறிந்தவராகச் சொல்லப்படுகிற ஸ்ரீ பராசர பகவான், "விஷ்ணோஸ் ஸகாசா துத்பூதம் ஜகத் தத்ரைவ ச ஸ்திதம் ஸ்திதி ஸம்யம கர்த்தாஸௌ ஜகதோஸ்ய ஜகச்ச ஸ:" என்று விஷ்ணுவே ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைப் பண்ணுகிறவர் என்று அறுதியிட்டிருக்கிறார். இங்கே பொதுவாக ப்ரச்நம் பண்ணியிருக்கச்செய்தே, கோல் விழுக்காடாகவே வ்யக்தி விசேஷத்தைக் குறிப்பிட்டுச் சொல்லுகிறபடியால், இதுவே உண்மையான பரதத்வ விசார நிச்சயமாமென் றறியத்தக்கது. இப்படியன்றிக்கே கேட்போர் தமக்கு அபிமதமானதொரு வஸ்துவைப்பற்றிச் சிறப்பித்துக் கவிபாடித் தரச் சொல்லுவாரைப் போலே ஒரு வ்யக்தியைக் குறித்துச் சொல்லி, அந்த வ்யக்திக்கு உத்கர்ஷத்தைச் சொல்லுகிற ஸம்ஹிதைகளைச் சொல்லவேணுமென்று கேட்க, அப்படியே அந்த வ்யக்திக்கு உத்கர்ஷத்தைச் சொல்லுகிற ராஜஸ, தாமஸ புராணங்கள் ப்ரஸ்துத ப்ரசம்ஸாபரமாகையால், பரதத்வ நிச்சய விஷயத்தில் ப்ரமாணமாகாட்டாதென்பதும், கீழே சொல்லிய விஷயங்களை விரோதிக்க மாட்டாதென்பதும் அறியத்தக்கது.

இப்படியே பாஞ்சராத்ரத்திலும் நாராயணனே பர தத்வமென்று சொல்லி, அந்த நாராயணனுடைய ஆராதனார்த்தமாகவே ஆலய நிர்மாணம் ப்ரதிஷ்டை, பூஜாவிதி, உத்ஸவாதிகள் இவற்றை விசேஷித்துச் சொல்லியிருப்பதாலும் ஸ்பஷ்டமா யறியலாம்.

ஸ்ரீ பாஞ்சராத்ரம் மற்ற ஆகமங்கள் போலன்றியே முக்கியமான ப்ரமாண சாஸ்திரமென்று முன்னமே நிரூபிக்கப்பட்டது. அன்றியும் ஸுத்ரகாரரான வ்யாஸரே சாந்தி பர்வத்தில் பாஞ்சராத்ர ப்ராமாண்யத்தை பஹுமுகமாக உபபாதித்திருக்கிறார்.

### மஹாகவி வாக் ப்ரதர்சனம்

இனி மத்யஸ்தரான ஸம்ஸ்கிருத கவிகளில் சிறந்த காளிதாஸ மஹாகவியும். ரகுவம்சம் பதின்மூன்றும் ஸர்க்கத்தில் "தாம் தாம வஸ்தாம் ப்ரதிபத்யமாநம்" என்கிற சுலோகத்திலும் "நாபிப்ரரூடாம்புருஹாஸநேந" என்கிற சுலோகத்திலும் "விஷ்வக்ஸேநஸ்ஸ்வதநு மவிசத் ஸர்வலோக ப்ரதிஷ்டாம்" என்கிற சுலோகத்திலும் நாராயணனே பரதத்வமென்றும் நிரூபித்திருக்கிறார். இந்த சுலோகங்கள் ராவணவதாநந்தரம் பிராட்டியைக் குறித்து, சக்ரவர்த்தி திருமகன் சொல்லுகிற வார்த்தைகளாம். இவற்றின் அர்த்தம்—இந்த ஸமுத்ரமானது தன்னுடைய பெருமையாலே விஷ்ணுவினுடைய ரூபம் போலே இப்படிப் பட்டதென்றும் இவ்வளவுடையதென்றும் அறிய முடியாதபடி பலபடியாக எங்கும் வியாபித்திருக்கிறது என்பதும் ஸமுத்ரத்தில் தன்னுடைய நாபியில் உண்டான பிரம்மாவாலே ஸ்தோத்ரம் பண்ணப்படுமவராய்க் கொண்டு, புருஷனான நாராயணன் லோகங்களை ஸம்ஹரித்து சயனித்திருக்கிறார் என்பதும்

விஷ்வக்ஸேநனை, நாராயணன் ஸமஸ்த லோகங்களுக்கும் ஆதாரமான தன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தில் அந்தர்ப்பவித்தான் என்பதுமாம்.

இனி மாக கவியும் "ச்ரிய:பதி: ஸ்ரீமதி சாஸிதும் ஜகத் ஜகந் நிவாஸ:" என்பதால் ச்ரிய:பதியான நாராயணனே ஜகத்துக்கெல்லாம் ஆதாரனென்றும், ஜகத் ரக்ஷகனென்றும் சொல்லியிருக்கிறார். இன்னும் மூன்றாவது ஸர்க்கத்தில் "ப்ரஜா இவாங்காதர விந்த நாபே;": என்பதால் பத்மநாபனான நாராயணனுடைய அங்கத்தில் நின்றும் ப்ரஜைகள் வெளிப்பட்டதென்று திருஷ்டாந்தம் காட்டியிருக்கிறார்.

இனி நைஷத காவ்யத்தில் ஸ்ரீஹர்ஷ கவியும் "அதிகத்ய ஜகத் யதீச்வராத்" என்கிற சுலோகத்தில், புருஷோத்தமனான நாராயணனே, மோக்ஷ ப்ரதனென்றும் "ச்ரியஸ் ததாலிங்கன பூ:" என்கிற சுலோகத்தில் நாராயணன் ஸமஸ்தமான ஜீவர்களுக்கும் அந்தர்யாமியாயிருக்கிறானென்றும் சொல்லியிருக்கிறார்.

இப்படியே த்ராவிட கவிகளிலும் சிறப்புற்ற கம்பநாடர் விராத வதைப் படலத்தில் "வேதங்கள் அறைகின்ற" என்கிற பாட்டு முதல் "ஒப்பிறையும் பெறலரிய" என்கிற பாட்டு வரை சக்ரவர்த்தி திருமகனாயவதரித்த நாராயணனே பரதத்வமென்பதை வெளியிட்டார்.

அப்படியே கபந்த வதைப் படலத்திலும் "விண்ணி னின்றவன்" என்ற பாட்டுத் தொடங்கி, "மாயப் பிறவி மயல் நீக்கி" என்கிற பாட்டு வரையில், இந்த விஷயத்தை வெளிப்படையாகச் சொல்லியிருக்கிறார்; இப்படியே இன்னும் பலவிடங்களிலும் இந்த விஷயத்தை நிரூபித்திருக்கிறார். அவைகளையும் கண்டு கொள்ளலாம்.

இன்னும் இதற்கு அநுகுணமான உபபத்திகளும் சில உண்டு. ஸர்வரும் அக்ஷராரம்ப காலத்தில், அஷ்டாக்ஷரத்தை முன்னிட்டுச் சொல்லுகையும், ஸந்தியாவந்தன முதலான நித்ய கர்மாநுஷ்டானங்களில், அச்யுதாநந்த கோவிந்தாதி மந்த்ரங்களை யநுஸந்திப்பதும் கண்டுகொள்ளலாம். இப்படியாக நாராயணனே பரதத்வமென்பது நிரூபிக்கப்பட்டது.

## லக்ஷ்மீ ஸ்வரூப சோதனம்

அந்த நாராயணன் ச்ரிய: பதியென்பது "ஹ்ரீச்ச தே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ" என்கிற சுருதியால் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஸ்ரீ சப்தத்தாற் சொல்லப்பட்ட லக்ஷ்மியும் ஈசுவர தத்வத்தில் அந்தர்ப் பூதையென்றும், அவளுக்கு ஜகத்காரணத்வம், மோக்ஷப்ரதத்வம், உபாஸ்யத்வம். ஸர்வாந்தர்யாமித்வம் இவைகளுண்டென்றும் வடவாரியர்கள் நிருபித்திருக்கிறார்கள். தென்னாசாரியர்கள் ஸம்ப்ரதாயத்தில் அவள் சேதன கோடியிலே அந்தர்பூதை யென்றும், ஈசுவரன் ஜகத்காரணமாமிடத்தில் இவள் ஸஹகாரிணியாயிருப்பவள். என்றும், மோக்ஷ ப்ரதாந விஷயத்தில் புருஷகாரபூதையாயிருப்பவள் என்றும் சொல்லுவர்கள். இதில் தென்னாசாரிய ஸம்ப்ரதாயஸ்தர் சொல்லும் விஷயங்களுக்கு உபபத்திகள் இவையென்று அறிந்து கொள்ளும்படி இங்கு விவரிக்கப்படுகின்றன.

"காரணந்து த்யேய:" என்பது கொண்டு, ஜகத் காரண வஸ்துவே த்யேயம் என்றும் அந்த ஜகத்காரண வஸ்துவும் ப்ரஹ்ம சப்த வாச்யமென்றும், அந்த ப்ரஹ்ம சப்த வாச்யன் புருஷோத்தமனென்றும், அவனே மோக்ஷப்ரதனென்றும் சுருதிகளால் ஸ்ரீ பாஷ்யத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

ஆக ஜகத்காரணத்வம் ப்ரஹ்ம சப்த வாச்யத்வம், மோக்ஷ ப்ரதத்வம் இவைகள் ஒன்றைவிட்டொன்று பிரியாதவைகளாம். அவற்றுள் ஜகத்காரணத்வம் உபாதாந நிமித்த ஸஹகாரி காரணத்வ ரூபமாக மூன்று வகையாயிருக்கும். இவற்றுள் ஈசுவரன் உபாதாந காரணமாயிருக்கையாவது, ஸூக்ஷ்மாவஸ்தங்களான சேதநாசேதனங்களை சரீரமாகவுடைய ஸர்வேசுரன் தானே ஸ்தூலா வஸ்தங்களான சேதநாசேதனங்களை சரீரமாக வுடையவனாயிருக்கை. ஆகையாலே கார்யரூபமாகவுமிருக்கும் உபாதனமாகிறான். புதிதாகத் தோன்றத்தக்கதாயும், தன்னைவிட்டுப் பிரியாததாயுமிருக்கிற தர்மமாகிய அவஸ்தையை யுடைத்தாயிருப்பது உபாதானமாகையால்—இந்த அவஸ்தைகள் சரீரங்களான சேதநாசேதனங்களின் வழியாக ஈசுவரனுக்கு வருவதால், உபாதாநத்வமும் கூடுகிறது.

இப்படியிருந்துள்ள உபாதாநத்வம் லக்ஷ்மிக்கு இல்லை என்பதை பட்டர் ஸ்ரீரங்க

ராஜஸ்தவத்தில், "ப்ரளய ஸமய ஸுப்தம்" என்கிற சுலோகத்தில் வெளியிட்டிருர். அந்த சுலோகம்—

"ப்ரளய ஸமய ஸுப்தம் ஸ்வம் சரீரைக தேசம்
வரத சிதசிதாக்யம் ஸ்வேச்சயா விஸ்த்ருணுந:
கசிதமிவ கலாபம் சித்ரமாதத்ய நூந்வந்
அநுசிகிநி சிகீவ க்ரீடஸி ஸ்ரீஸமக்ஷம்..."
என்பதாம்.

(இதன் அர்த்தம்) ப்ரளய காலத்தில் தன்னுடைய சரீரத்தின் ஏகதேசமா யுள்ளொடுங்கியிருந்த சேதநு சேதனங்களை ஸ்வேச்சையாலே விஸ்தரித்துக்கொண்டு, ஆண் மயிலானது தன்னுளொடுங்கிய தோகையை விரித்துக் கொண்டு, பெண்மயிலின் முன்னே விளையாடுவதுபோல லக்ஷ்மியினுடைய ஸந்நிதியில் விளையாடுகிறீர் என்பதாகும்.

இதனுல் ஈசுவரனுக்கே சேதனுசேதனங்கள் சரீரமென்றும் லக்ஷ்மிக்கு சேதனுசேதனங்கள் சரீரமன்றென்றும் த்ருஷ்டாந்த ஸ்வாரஸ்யத்தால் தெளிவாயிற்று. ஆண்மயிலுக்கே தோகையிருப்பதும் பெண்மயிலுக்குத் தோகை யில்லாமையும் ப்ரத்யக்ஷமா யறியலாம்.

நிமித்த காரணத்வமும் "யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கித பராதீநோ விதத்தே கிலம்" என்கிற ஆழ்வான் ஸ்ரீஸூக்தியிலும் "ச்ரியை ஸமஸ்த சிதசித் விதாந வ்யஸநம் ஹரே:, அங்கீகாரிபிராலோகை: ஸார்த்தயந்த்யை க்ருதோஞ்ஜலி; என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியிலும், இவளுடைய இங்கித பராதீனனுய்க் கொண்டு, ஈசுவரனே ஜகத் ஸ்ருஷ்டியைப் பண்ணுகிருனென்று சொல்லப்படுவதால், இவளுக் கில்லையென்றேற்படுகிறது. மேலும் அஜ்ஞாத நிக்ரஹையாகையாலே, நிக்ரஹ கார்யமாகிய நாரகிய சரீரசிருஷ்டியில் கர்த்ருத்வம் கூடாதாதாயிற்று. இந்த விஷயத்தை நியாய ஸித்தாஞ்ஜன வியாக்யானத்தில் திருப்புட்குழி ஸ்வாமி வெளியிட்டிருக்கிருர். அப்படியே மோக்ஷ ப்ரதத்வமும் சேதனன் பண்ணின அபராதங்களாலுண்டான, நிக்ரஹத்தை அவனுடைய உபாஸநத்தால் போக்கி, மோக்ஷத்தைக் கொடுக்கையாகையாலே அந்த அபராதத்தாலுண்டான நிக்ரம் லக்ஷ்மிக்குக் கீழ்ச்சொன்ன ஹேதுவாலே ஸம்பவிக்கிறதில்லை.

மேலும் சேதனன் பண்ணுகிற உபாயாநுஷ்டானம் நிக்ரஹ நிவ்ருத்திக்கு மட்டும் ஸாதனமாவதல்லது, ஸ்வாபாவிக ஜ்ஞான விகாஸ ரூபமான மோக்ஷத்துக்கு ஸாதனமல்லாமையாலே, உபாஸ்யத்வமும் ஸம்பவியாது. இதற்கு அநுபந்தமுள்ள ப்ரஹ்ம சப்தவாச்யத்வமும், 'ப்ரஹ்ம சப்தேந புருஷோத்தமோ பிதீயதே" என்கிற ஸ்ரீபாஷ்ய ஸூக்தியால் புருஷோத்தமனுன நாராயணனுக்கேயுள்ளதாவதன்றி நாரீணு முத்தமையான லக்ஷ்மிக்குக் கூடாதென்பது ஸ்பஷ்டமாம்.

இந்த விஷயத்தை தத்வ டீகையில் "ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே" என்பதன் வ்யாக்யானுவஸரத்தில், "ப்ரஹ்மணீதி லக்ஷ்ம்ய நிர்தேச:" என்கிற வாக்யத்தால் ப்ரஹ்ம சப்த வாச்யத்வம் லக்ஷ்மிக்கு இல்லையென்பதை தேசிகன் ஸாதித்திருக்கிருர். இப்படியே ஸ்ரீதத்வ ஸித்தாஞ்ஜனத்திலும், நியாய ஸித்தாஞ்ஜன வ்யாக்யானத்திலும் வ்யக்தமாகக் காணலாம்.

இனி, ஸர்வாந்தர்யாமித்வமும் "யதா ஸர்வகதோ விஷ்ணு: ததைவேயம் த்விஜோத்தம" என்கிற ஸ்ரீ விஷ்ணுபுராண சுலோக வ்யாக்யானுவஸரத்தில், எங்களாழ்வான் "இயம்ச சக்தி வசாத்" என்றும், ஸ்வரூபதோ வ்யாப்தியில்லை யென்றும் ஸாதித்திருப்பதால், ஸ்வரூபத்தாலே ஸம்பவிக்க மாட்டாதென்பதாம்.

மேலும் ஒருவனே ஜகத்துக்குக் காரணம்; அவன் நிஸ்ஸமாப்யதிகன்; என்று சுருதி சொல்லியிருப்பதால், லக்ஷ்மிக்கு பரத்வம் சொல்லுகிற பக்ஷத்தில் ஈசுவரனுக்கு ஏகத்வம் ஸம்பவியாது; ஈசுவர த்வித்வம் ஏற்படும். ஈசுவர த்வித்வம் அநுபபந்நமாகையால், இவளும் சேதன கோடியில் சேர்ந்தவளாம்.

இவளுக்கு புருஷகாரத்வம் அஸாதாரண தர்மம். புருஷகாரத்வமாவது—ஸர்வேசுவரன் சேதனனுடைய அபராதத்தால் சீற்றம் கொண்டு, சேதனனை நிக்ரஹிக்கும் காலத்தில் இவள் தன்னுடைய வால்லப்யத்தாலே நிக்ரஹத்தைப் போக்கி, அவன் திருவுள்ள முகந்து சேதனனை யங்கீகரித்தருளும்படி பண்ணுகை. ஈசுவரனுக்கு சேதனனுடைய அபராத தர்சனத்தாலே, அபிபூதங்களான க்ஷமா வாத்ஸல்யங்களை உத்புத்தமாக்குகை புருஷகார கிருத்யம். இப்படியுள்ள புருஷகாரத்வம் ப்ர

பத்தி வித்யையில் மட்டும் உண்டு. பக்தி ஸ்தலத்தில் அந்த நிக்ரஹ நிவ்ருத்திக்கு பக்தியே ஸாதனமாகையால், அங்கு புருஷகார அபேக்ஷையில்லை. ப்ராப்தி தசையில் இருவரு மான சேர்த்தியில் கைங்கர்யம் ரஸிக்குமாகை யால், கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தித்வ ரூபமான சேஷித்வம் இருவரிடத்திலும் வ்யாப்தமா யிருக்கும். இவ்விஷயத்தை, "உபயாதிஷ் டானஞ்சைகம் சேஷித்வம்" என்கிற பூர்வா சார்யர்கள் வாக்கியத்தாற் கண்டுகொள்வது.

இப்படியன்றிக்கே ஈசுவரத்வம், காரண த்வம் முதலானவைகள் உபய வ்யாப்தங்கள் என்று சொல்லும் பக்ஷத்தில் ஈசுவரனுக்கு தனித்து ஈசுவரத்வாதிகளில்லை. அப்படியே லக்ஷ்மிக்கும் இல்லை. "த்வைராஜ்யஸ்ய ஈச்வரா பிமதத்வாந் ந தோஷ:" என்கிற கீதா பாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகா வாக்கியத்துக்கு வ்யாப்த மென்று சொல்லுவது விருத்தம்.

இப்படி உபாயாநுஷ்டான தசையில் புருஷ காரபூதையாயும் ப்ராப்தி தசையில் ப்ராப்யை யாயும் இருக்கும் என்கிற விஷயத்தை பட்டர் அஷ்ட சுலோகியில்,

"ஈசாநாம் ஜகதாமதீச தயிதாம் நித்யா நபாயாம் ச்ரியம்
ஸம்ச்ரித்யாச்ரயணோசிதா கில குணஸ் யாங்க்ரீ ஹரே ராச்ரயே
இஷ்டோபாயதயா ச்ரியாச ஸஹிதாயாத் மேச்வரா யார்த்தயே
கர்த்தும் தாஸ்ய மசேஷ மப்ரதிஹதம் நித்யந் த்வஹம் நிர்மம:"

என்கிற சுலோகத்தால், ஸர்வேசுவரனுக்கு தயிதையாயும், அத்தால் வந்த ஈசுவரத்வத்தை யுடையவளாயுமிருக்கிற லக்ஷ்மியை புருஷகார மாக ஆச்ரயித்து, ஈசுவரனுடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன். அப்படியிருந்துள்ள லக்ஷ்மியோடே கூடின ஸர்வேசுவரன் விஷயத் தில், ஸமஸ்த கைங்கர்யங்களும் செய்யக்கட வேன் என்று ஸாதித்தருளினர்.

த்வயத்தின் பூர்வகண்டத்தில், "ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம்" என்னுமிடத் தில், சரணசப்தார்த்தம் விசேஷணமான திருவடியில் அந்வயிப்பதுபோல், விசேஷணமா யுள்ள லக்ஷ்மியிடத்திலும் அந்வயிக்கும் என்பது அபாதிதமாயிருந்தால் பொருந்தும். கீழே சொல்லியபடி உபாயத்வாதிகள் பாதிதங்களா கையால் இங்கேபொருந்தாது. அது எப்படி யென்றால், குடம் ப்ரமேயம் என்னுமிடத்தில் விசேஷணமான ப்ரமேயத்வம் கடத்துக்கு விசேஷணமான கடத்வத்தில் எப்படி அந்வயிக் கமாட்டாதோ அப்படியே இங்கும் அந்வயிக்க மாட்டாதிருக்கிறது.

ஈசுவரனுக்கு திவ்ய மங்கள விக்ரஹங்களும் குணங்களும் விசேஷணமா யிருந்தபோதிலும் உபாயமாகாமல் ஆச்ரித கார்யாபாதகங் களாயும், ஆச்ரயண ஸௌகர்யா பாதகங்களா யும், ஆச்ரயண ருசி ஜனகங்களாயும் ஏற்படு கின்றதுபோல, பிராட்டியும் தனக்கு அஸா தாரண தர்மமாக ஏற்பட்ட புருஷகாரத் வத்தை அடைந்தவளாய்க்கொண்டு விசேஷண மாக அந்வயிக்கலாம். இப்படியாக பிராட்டி உபாயமாகாமல் புருஷகாரமாகிறபடியால், அநந்யோபாயத்வத்துக்கு விரோதம் வாராது. இப்படியிருக்கும் பக்ஷத்தில் ப்ராப்தி தசையில் பிராட்டி ப்ராப்யையாயிருப்பாள் என்று சொல்லுவதால், அநந்யோபேயத்வத்துக்கு விரோதம் வாராதோ வென்னில், ப்ராப்திக்கு உத்தேச்யமாயிருக்கையாகிய உபேயத்வம் ஈசுவரனுக்கேயுள்ளது; பிராட்டிக்கு இல்லை. ஆதலால் அநந்யோபேயத்துக்கு விரோத மில்லை.

ஆனல், த்வயத்தில் உத்தரகண்டத்தில் சொல்லுகிற ப்ராப்யத்வம் இவன் பண்ணுகிற கிங்கர வ்ருத்திக்கு உத்தேச்யமாயிருக்கையா கையாலே, அப்படியுள்ள ப்ராப்யத்வம் பிராட் டிக்கு உண்டு. எப்படியென்றால், சித்ரகூடத்தில் "பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா" என்கிற சுலோகத்தின்படி இருவருமான சேர்த்தியிலே, செய்கிற கிங்கர வ்ருத்தி ரஸிப்பது போல பிராட்டியை விட்டுப் பிரிந்து பம்பா பரிஸரத் தில் செய்கிற கிங்கர வ்ருத்தி ரஸிக்கமாட்டா தன்றே! கிங்கர வ்ருத்திக்கு உத்தேச்யமா யிருக்கையாகிற ப்ராப்யத்வம் பிராட்டிக்கு உபபந்நமே. இந்த விஷயம் லோகத்திலும் கண்டு கொள்ளலாம்.

ஒரு பர்த்ரு பார்யா விஷயத்தில் கிங்கர வ்ருத்தி செய்கிற அடிமையாளனுக்கு ப்ரதான னை உத்தேச்யன் பர்த்தாவா யிருந்த போதி லும், கிங்கர வ்ருத்தி செய்வது இருவருக்குமே ஆவதுபோல, இதுவும் உபபந்நம். இந்த விஷ யத்தை லோகதேசிகன் முமுக்ஷுப்படியில், "ஒருவன் ஆவண வோலை யெழுதும்போது, க்ருஹிணிக்கென்றன்றே எழுதுவது; ஆகிலும் பணிசெய்வது க்ருஹிணிக்கிறே" என்றருளிச்

செய்திருக்கிறார்.

இப்படியிருப்பதால், ஸ்ரீ பாகவதத்தில் நாலாவது ஸ்கந்தத்தில் ப்ருது சக்ரவர்த்தி "அப்யாவயோரேக பதி:" என்கிற சுலோகத்தில் தன்னோடுகூட பிராட்டியையும் சேர்த்து இருவருக்கும் ஈசுவரனே பதி என்று சொல்லியிருக்கிறார். இந்த விஷயங்களை அநுஸரித்து பத்தாவது ஸ்கந்தத்தில் 10-60-34 ருக்மிணிக்கும் கிருஷ்ணனுக்கும் நடந்த நர்மோக்தி ஸமயத்தில் "க்வாஹம் குணப்ரக்ருதி ரஜ்ஞ க்ருஹீதபாதா" என்ற ருக்மிணீ வாக்கியமான சுலோகத்துக்கு, வ்யாக்யானம் பண்ணின வீரராகவாசார்யர், ஜ்ஞானமில்லாதவர்கள் என்னை ஸ்வதந்த்ரையாகவும், உபாயமாகவும் ஆச்ரயிக்கிறார்கள் என்று ஸாதித்திருக்கிறார். இவர் வடவாரியர்களில் ஒருவரென்பது வெளிப்படை.

ஆனால், லக்ஷ்மீ தந்த்ரம் முதலான ஸம்ஹிதைகளில் பிராட்டியை ஜகத் காரணமாகவும் மோக்ஷப்ரதையாகவும் சொல்லுகிற விஷயங்கள் "ஏகாத் விச்சாத்மிகா சக்திஸ் ஸர்வலோக குடும்பினீ" என்கிற சுலோகத்தின்படி ஈசுவரனுடைய இச்சைக்கு அபிமானி தேவதையாயிருக்கையாலும், ஈசுவரனோடு தனக்குண்டான ஐகரஸ்யத்தாலும் உபபந்நம். அஹிர்ப்புத்ந்ய ஸம்ஹிதையில் ஈசுவரனுடைய ஸங்கல்பத்துக்கு அபிமானி தேவதையாகச் சொல்லப்பட்ட ஸுதர்சனாழ்வானுக்கு ஜகத் காரணத்வம் முதலானவைகள் போல இதுவும் கூடும்.

இப்படியிருக்க, தேசிகன் பிராட்டிக்கு உபாயத்வம், மோக்ஷ ப்ரதத்வம் முதலியவற்றை ரஹஸ்யத்ரய ஸாரம் முதலான க்ரந்தங்களில் அருளிச்செய்திருப்பது கூடும்படி எங்ஙனேயென்னில்? சது:சுலோகி வியாக்யானத்தில், "பஞ்சஸ்வேதேஷு பக்ஷேஷு கச்சிதேக: ப்ரமாணவாந்" என்று கீழ் நிரூபித்த பக்ஷத்தையும் அங்கீகரித்தருளியிருப்பதால் உபபந்நமாம். அஹோபில மடாதிபதியான ஒரு ஸ்வாமி 'புருஷகார மீமாம்ஸா' என்கிற க்ரந்தத்தில் தேசிகன் திருவுள்ளம் பிராட்டிக்கு புருஷகாரத்வமேயுள்ளது; உபாயத்வமில்லை என்பது தான் உண்மையாயுள்ளதென்பதை, தேசிகனுடைய ஸூக்திகளைக் கொண்டே, நிரூபித்திருக்கிறார். ஆனாலும் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸ்பஷ்டமாகப் பிராட்டிக்கு உபாயத்வம் முதலானவைகளுண்டு என்று உபபாதித்திருப்பதற்கு மூலம் இப்படியும் ஒரு நிர்வாஹமிருக்கலாம் என்கிற திருவுள்ளமே.

தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தில் ஏற்பட்ட இந்த விஷயத்துக்கு உபபத்தியை மட்டும் நிரூபித்ததே யொழிய, மற்ற ஸம்ப்ரதாய விஷயத்தில் தோஷோத்காடனம் பண்ணவரவில்லை. ஸர்வஜ்ஞர்களான ஆசார்யர்களுடைய திருவுள்ளத்தில், அநேக நிர்வாஹ பேதங்கள் தோற்றியிருக்கலாம். கிஞ்சித் ஜ்ஞனான அடியேன் இந்த விஷயத்தை ப்ரஸ்தாவிக்க அர்ஹனல்லன். இந்த ஸம்ப்ரதாயத்தில் ஏற்பட்ட அர்த்தங்கள் ஸமீசீனங்களல்லவென்று சிலர் நினைக்கவுங்கூடும். அந்த விஷயத்தை மாற்ற வேண்டியதற்காகவே இவ்வளவு நிரூபிக்கும்படி நேர்ந்தது.

இனி அந்த ஸம்ப்ரதாயத்திலும் இந்த விஷயத்தில் சில உபபத்திகள் அந்வாருஹ்ய நிரூபிக்கப்படும். அதாவது சுருதியில் ஸ்ரீ ஸூக்தத்தில் மோக்ஷ ப்ரதத்வம் லக்ஷ்மிக்கு உண்டென்று, சொல்லப் பட்டிருக்கிறது. திருவாய்மொழியில் "வேரி மாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே", "பண்டை நாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் கொண்டு" என்கிற ஸூக்திகளால் பிராட்டிக்கு மோக்ஷ ப்ரதத்வமுண்டென்று தெரிகிறது. ஈசுவர த்வித்வ தோஷ பரிஹாரமும் ஈசுவரனுக்குத் தான் பரதந்த்ரையாயிருந்து கொண்டே ஈசுவர கிருத்யத்தை நிர்வஹிப்பதால் ஏற்படுகிறது. ஈசுவரனையே சொல்லுகிற ப்ரகரணங்களிலும் இவள் ஈசவரனுக்கு ஸ்வரூப நிரூபகையாயிருப்பதால்,இவளையும் சொல்லியதாகக் கொள்ளலாம். காரணத்வம் உபாயத்வம் முதலானவைகள் இருவரிடத்திலும் பர்யாப்தங்களென்று அவர்களில் சில ஆசார்யருடைய அபிப்பிராயம். பிராட்டிக்கு ப்ரஹ்ம சப்தவாச்யத்வமுண்டென்பதும் சிலர் அபிப்பிராயம். அங்ஙனன்றிக்கே காரணத்வம் முதலானவைகள் விசிஷ்ட நிஷ்டமென்பர். விசிஷ்டமாவது விசேஷண விசேஷ்யங்களைக் காட்டிலும் வேறுபட்டதாகாது. ஆகையால்விசேஷணமான பிராட்டிக்கும் காரணத்வம் முதலானவை உண்டென்பது சிலர் அபிப்பிராயம். காரணத்வம் ஸ்வரூப யோக்யதா ரூபமாயும் பலோபதாநரூபமாயுமிருக்கும். அல்லது

''பதி மாத்ர கோசரம்'' என்கிற தேசிகன் ஸூக்திப்படி பிராட்டிக்கு காரணத்வமில்லை யென்பது சிலர் அபிப்பிராயம். யதா ஸம்ப்ர தாயம் கண்டுகொள்வது. இன்னும் இந்த விஷயத்தில் நிரூபிக்க வேண்டிய விஷயங்கள் பலவுண்டு: அவற்றை யெல்லாம் விஸ்தர பயத்தால் நிறுத்திவிட்டேன். இனி ஈசுவர குணங்கள் நிரூபிக்கப்படும்.

### பகவத்குண சோதநம்

ஸமஸ்த கல்யாண குணாத்மக னுகையா வது:—ஸமஸ்தங்களாயும், கல்யாணங்களாயு முள்ள குணங்களையுடைய ஸ்வரூபத்தை யுடையவனாயிருக்கை; கல்யாணங்களாகை யாவது:— அநுகூலங்களாயிருக்கை. இப்படி யுள்ள குணங்கள் ஸ்வரூப நிரூபகங்களென்றும், நிரூபித ஸ்வரூப விசேஷணங்களென்றும் இரண்டு வகையாயிருக்கும்.

அவற்றுள் ஸ்வரூப நிரூபகமாவது:-தனக்கு ஆசிரயமான தர்மி ஜ்ஞானத்துக்கு விஷய மாம்போது தானும் தோன்றிக் கொண்டே அந்த தர்மியிடத்துள்ள இதர வ்யாவ்ருத் தியைத் தெரிவிப்பதாயிருக்கும்; அது எது போலவென்னில்? குடம் ஜ்ஞானத்துக்கு விஷய மாம்போதெல்லாம் தானும் விஷயமாகி அக் குடத்திலுள்ள இதர வ்யாவ்ருத்தியை (பிறி தின் வேறுபாட்டை)த் தெரிவிப்பதாயுள்ள குவிந்த கழுத்துடைமை முதலான உறுப்பமைதி போலவேயுள்ளதாம்.

இப்படிப்பட்ட ஸ்வரூப நிரூபக குணங் களால், பிறிதின் வேறென்று தெரிவிக்கப் பட்டிருந்துள்ள வஸ்துவைப்பற்றியிருக்கிற ஸாதாரண குணங்கள் நிரூபித ஸ்வரூப விசேஷணங்களாம். அவை குவிந்த கழுத்துடை மையான உறுப்பமைதியாலே தெரிவிக்கப் பட்ட குடத்தைப்பற்றியிருக்கிற ரூப, பரி மாணாதி ஸாதாரண குணங்கள் போலவே தர்மியை ஆசிரயித்திருக்கும் குணங்களாம்.

இவற்றுள், ஈசுவர ஸ்வரூப நிரூபகங்கள்:— ஜ்ஞானம் ஆனந்தம், அமலத்வம், அநந்தத்வம், உபயத்வம் முதலானவைகளாம். இப்படியே பிராட்டியும் ஸ்வரூப நிரூபகபூதையாயிருக் கள்; க்ருபா, வாத்ஸல்ய, ஸௌசீல்ய, ஸௌலப்யாதிகள் நிரூபித ஸ்வரூப விசேஷ ணங்கள்.

இவற்றுள் ''தவாநந்த குணஸ்யாபி ஷடேதே ப்ரதமே குணா:'' என்றும், ''ப்ரக் ருஷ்டம் விஜ்ஞானம்'' என்று தொடங்கி, ''குணாநாம் நிஸ்ஸீம்நாம் கணன விகுணாநாம் ப்ரஸவபூ:'' என்றும், ''நிர்லேப மங்கள குணௌகக துகாஷ் ஷடேதா:'' என்றும் சொல்லுகிறபடியே மற்ற குணங்களுக்கு காரணங்களாயுள்ள ஜ்ஞான, சக்தி பல, ஐசுவர்ய, வீர்ய தேஜஸ்ஸுக்களாகிற ஆறு குணங்கள் ப்ரதானங்களாம்.

அவற்றுள் ஜ்ஞானமாவது:—ஏக காலத்தில் எல்லா வஸ்துக்களையும் இந்திரிய நியமமில்லா மல் ஸாக்ஷாத்கரிக்கைக்கு உறுப்பாயிருக்கும் ஸ்வயம் ப்ரகாசமான தர்மபூத ஜ்ஞானமாம்.

சக்தியாவது:—ஸமஸ்த காரியங்களுக்கும் தானே உபாதான காரணமாயிருக்கை. பல மாவது:—ஜகத்ஸ்ருஷ்டி முதலியன பண்ணும் போதெல்லாம் சிரமமில்லாமை.

ஐசுவர்யமாவது;— தனக்கு நியந்தா ஒரு வருமின்றித் தானே ஸ்வதந்த்ரனாய்க் கொண்டு சேதனருடைய கர்மாநுகுணமாக ஜகத் ஸ்ருஷ்டியாதிகளைச் செய்கை.

வீர்யமாவது;— தான் உபாதான காரண மாமிடத்தில் லோகத்தில் காணப்படுகிற ம்ருத் பிண்டாதிகள் போல் விகரிக்கையன் றிக்கே, கார்யங்களுக்கு விகாரங்களை யுண்டு பண்ணுகை. அதாவது, கஸ்தூரி வாஸனை யானது தான் விகரிக்காமல் தன்னோடு ஸம்பந் தித்த வஸ்துக்களுக்கு விகாரத்தையுண்டு, பண்ணுவது போலும் என்று சொல்லுவார் கள். (அல்லது எள்ளுத்துவையலாகும் போது, அதிலுள்ள எண்ணெய் தான் விகரியாமலே எள்ளுள்ளிருந்து கொண்டு, எள்ளைத் துவைய லாக விகரிப்பிப்பது போலும் என்றும் சொல்ல லாம்.)

தேஜஸ்ஸாவது:— ஸ்ருஷ்டியாதி வ்யா பாரங்களில் ஸ்வதந்த்ரங்களாயுள்ள வேறு ஸஹகாரிகளை அபேக்ஷியாதிருக்கை; இதற்கு ப்ரமாணங்கள் ஸ்ரீ விஷ்ணு புராணத்திலும். அஹிர்புத்ந்யஸம்ஹிதையிலும், பட்டர் அருளிச் செய்த ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவத்திலும் காணலாம். விஸ்தர பயத்தாலே இவ்விடத்தில் நிரூபிக்கப்படவில்லை.

இனி, இவைகளில் ஜ்ஞானத்தினுடைய அவஸ்தா விசேஷங்களான க்ருபை முதலிய குணங்களின்ஸ்வரூபம் நிரூபிக்கப்படும். க்ருபையாவது— ஸ்ரீ பாஷ்யத்திலும் சுருத

ப்ரகாசிகையிலும் நிரூபிக்கப்பட்டிருக்கிறபடி ஸ்வார்த்த நிரபேக்ஷயான பரது:க்காஸஹிஷ்ணுதையாம்; அதாவது—தனக்கொரு பிரயோஜனத்தை யபேக்ஷியாமல் ப்ராதிகூல்ய மில்லாதவர்களுடைய துக்கத்தைப் பார்த்து ஸஹியாதிருக்கை. ஸஹியாதிருக்கையாவது—அவர்களுடைய துக்கத்தை ப்ரதிகூலமாக நினைத்திருக்கை. நம்முடைய ஸித்தாந்தத்தில் ப்ரதிகூலத்வ ஜ்ஞானமே துக்க பதார்த்தமாகையால், பரது:க்க துக்கித்வமே க்ருபையென்று ஏற்படுகிறது.

இதற்கு ப்ரமாணங்கள்:—ஸ்ரீ ராமாயணத்தின் அயோத்யா காண்டத்தில் பெருமாளுடைய குணங்களைச் சொல்லுகிற ப்ரகரணத்தில் "வ்யஸநேஷு மநுஷ்யாணாம், ப்ருசம் பவதி து:க்கித:" என்பதனால், மனுஷ்யர்களுக்கு து:க்கங்கள் ஸம்பவிப்பதால், தான் மிகவும் து:க்கத்தை யடைகிறான் என்றும், கிஷ்கிந்தா காண்டத்தில் வாலி வதமானபின் ஸுக்ரீவருடைய வ்யஸநத்தைப் பார்த்து "ஸஞ்ஜாத பாஷ்ப; பரவீர ஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ" என்பதனால், சத்துருக்களின் வீரதையை அழிக்கவல்ல ராமனும் கண்களினின்றும் சோக பாஷ்பங்களை வடித்துக் கொண்டு, வ்யஸனத்தால் ஒரு முஹூர்த்த காலம், ப்ரஜ்ஞையற்றிருந்தான் என்றும், ஸுந்தர காண்டத்தில் "ஸ்த்ரீ ப்ரநஷ்டேதி காருண்யாத்" என்கிற சுலோகத்தில், காருண்யத்தாலே, தாபத்தை அடைகிறான் என்றும் சொல்லப்பட்டன. பாலகாண்டத்திலும் கிரௌஞ்ச இணையின் ஆண் பறவை வேடனால் அடிபட்டதைப் பார்த்து, வால்மீகிக்கு, உண்டான துக்கமானது, "ருஷே: தர்மாத்மநஸ் தஸ்ய காருண்யம் ஸமபத்யத" என்று காருண்யமென்று சொல்லப்பட்டது, சுருதியிலும் பிரளய காலத்தில் ஜகத்து உபஸம்ஹ்ருதமாய் ஒடுங்கிய அளவில் தான் தனித்து இருப்பதால் மகிழ்வில்லாமலிருக்கிறான் என்பது பற்றி "ஸ ஏகாகீ நரமேத" என்று சொல்லப்பட்டிருக்கிறது; அதாவது— அப்பொழுதில் அவனுக்கிருந்த கிருபையைச் சொல்லியபடியாயிற்று. மக்கண ஸம்ஹிதையில், "த்ரஷ்டும் ந ஸஹதே தேவி க்லிஷ்டாந் ஸ்வாந் பரிசாரகாந்" என்பதனால், கிலேசத்தையடைந்த தன்னுடைய பரிசாரகர்களை பிராட்டி, பார்க்க ஸஹிக்கமாட்டாள் என்று சொல்லப்படுகிறது. அந்த ஸம்ஹிதையிலேயே "கருணா விலமுகீ" என்பதால், கிருபையால் கண்ணீர்களுடனிருக்கிறாள் என்று சொல்லப்படுகிறது. அதுவுமன்றி, "பகவத்குண தர்ப்பண"த்தில் "கரணம் காரணம் கர்த்தா விகர்த்தா" என்கிற சுலோக வ்யாக்யானத்தில் "கதம் அந்யதா பரது:க து:கித்வாதயோ ந குண:ஸ்யு:" என்பதால்—பிறர்பொருட்டான சோக ஹர்ஷங்கள் குணமாகலாமென்று சொல்லப்பட்டிருக்கிறது. நம்மாழ்வாரும் "ஆவாவென்று அருள்செய்து அடியேனொடு மானன்" என்பதானல், ஐயோவென்று கிருபை செய்துதருளினன் என அருளிச் செய்தார். திருமங்கையாழ்வாரும் "ஆவா வென்றடியேற் கிறை யிரங்காய்" என்றருளிச் செய்திருக்கிறார்.

ஆதலால் அவதாரங்களில் உண்டான யுத்தத்தில் சொல்லப்படுகிற சோக ஹர்ஷங்கள் அபிநயமென்று சொல்லுவது போல் இதுவும் அபிநயமென்று சொல்லுவது கீழ்க்குறித்த ப்ரமாணங்களுக்குச் சேராது. ஹேய ப்ரத்யநீகனும் ஆனந்தமயனுமிருக்கிற ஸர்வேசுவரனுக்கு ஹேயமான து:க்கம் கூடாதென்பது ஸ்வார்த்தமாயும், கர்மக்ருதமாயும் உள்ளவற்றைப் பற்றியதாம். அப்படிக்கில்லாமல் இதையும் அபிநயமாகச் சொல்லும் பக்ஷத்தில் வஞ்சனை கார்யமான அபிநயமும் லோக ரீதியாய் ஹேயமாயிருப்பதால், அதுவும் கூடாது.

க்ருபை து:க்காபிநய மாத்ரமாயிருக்கும் பக்ஷத்தில் இப்படியிருந்துள்ள க்ருபை ஆச்ரயணோபயோகியா யிருக்கும்படி யெங்ஙனே கூடும்? ஆனால், தேசிகன் "பரது:க்க நிராசிகீர்ஷா தயா" என்று அருளிச்செயதிருப்பது சக்தனயிருக்குமவனுக்கு, சக்யமான து:க்க நிராகரணத்தில் கீழ்நிரூபிக்கப்பட்ட க்ருபையின் காரணமாக உபசரித்தருளிச் செய்தபடி. இப்படிக்கில்லாமல் பரது:க்க நிராசிகீர்ஷையே தயையென்று சொல்லும் பக்ஷத்தில், அந்த நிராசிகீர்ஷை அபிநிவேச கார்யமாகையால், அதுவும் ஹேயதயா அநுபபந்நமாம். இத்தை அனுஸரித்தே ஆளவந்தார், "க்ஷணேபி தே யத்விரஹோபி துஸ்ஸஹ:" என்று அருளிச் செய்தார். பட்டரும் "தயாந்யேஷாம் து:க்கா ப்ரஸஹநம் அநந்யோஸ்ஸி ஸகலே:" என்று அருளிச்செய்தார்.

### க்ருபையின் ஸஹேதுகத்வ நிர்ஹேதுகத்வ நிரூபணம்

இனி, இப்படியிருந்துள்ள க்ருபையினுடைய நிர்ஹேதுகத்வ ஸஹேதுகத்வங்கள் நிரூபிக்கப்படுவனவாம்.

"அசிதவிசேஷிதாந்" இத்யாதி சுலோகத்தின்படி ஜகத் ஸ்ருஷ்டியில் ஏககாலத்தில் ஜீவர்களுக்குக் கரண களேபர ப்ரதானம் பண்ணுகைக்கடியான கிருபை நிர்ஹேதுகை. "நாஸௌ புருஷகாரேண" இத்யாதி சுலோகத்தின்படி, நிரங்குச ஸ்வாதந்த்ரியத்தாலே ஆழ்வார்போல்வாரிடத்தில் பண்ணும் கிருபையும் நிர்ஹேதுகை.

அப்படியன்றிக்கே ஈசுவரனிடத்தில் பண்ணும் ப்ரபத்தி அதிகாரி விசேஷணமாயிருப்பதாலும், அன்றிக்கே ஈசுவரனுடைய உபாயாந்தர ஸ்தான நிவேசத்துக்கு ஹேதுவாயிருப்பதாலும், ஈசுவரனே உபாயமாகையாலும், புருஷகாரபூதையான பிராட்டி ஸ்வாதந்த்ரியாபி பூதமான க்ருபா குணத்துக்கு உத்தம்பனம் பண்ணுகையாலும், வ்யாஜஸாபேக்ஷமாயிருக்கும். பக்தி ஸ்தலத்திலும் "ப்ராதிகூல்ய நிவ்ருத்தி மாத்ரேண அநந்த அபராதநநாத்ருத்ய ஸ்வப்ராப்தி ஹேதுஷு ருசிம் ஜநயதி" என்கிற ஸ்ரீபாஷ்ய ஸூக்தியின்படி ப்ராதிகூல்ய நிவ்ருத்தி ஸூசகமான உபாஸநாரம்பத்தாலே ப்ரீதனான ஸர்வேசுவரனே, "ததாமி புத்தியோகம் தம்" என்கிறபடியே, உபாய நிஷ்பத்தியைப் பண்ணிக் கொடுப்பதால், அங்கும் ப்ராதிகூல்ய நிவ்ருத்தி ரூப வ்யாஜ ஸாபேக்ஷமாயிருக்கும். குமார வேதாந்தாசார்யரும், "ஸ்வரூப ஸம்ஸ்தவௌ யஸ்யா: நிர்ஹேதுக ஸஹேதுகௌ" என்று அருளிச் செய்தார். இதன் அர்த்தம் ஸாமாந்யமாய் எல்லோருக்கும், பல ப்ரதானத்தில் உபயுக்தையான க்ருபையினுடைய ஸ்வரூபம் நிர்ஹேதுகம்; அந்த க்ருபை பலோபதாநம் செய்யுமிடத்தில், ஸஹகாரிகளான உபாயங்களை அபேக்ஷித்திருக்கு மென்பதாம். ஆகிலும் சில வியக்தி விசேஷங்களில் ஸஹகாரிகளையும் அபேக்ஷியாமல், பலத்தைக் கொடுக்குமென்பது கீழ்க்குறிக்கப்பட்ட ப்ரமாணங்களாலே வ்யக்தம்.

மேலும் திருமந்த்ரத்தில் அகாரத்தில் (அவரக்ஷணே) என்கிற தாதுவினுடைய அர்த்தமான ரக்ஷணம், காலாதிகளைக் குறிப்பிடாமையாலே ஸர்வ காலங்களிலும் ஸர்வ ப்ரகாரங்களாலும் ஒரு ஹேதுவையும் அபேக்ஷியாமல் நிகழ்வதென்று ஏற்படுகிறது. எல்லாவிடங்களிலும் ரக்ஷணம் ஸஹேதுகமாகவேயிருக்கும் என்னும் பக்ஷத்தில் நிர்ஹேதுகமான ரக்ஷணம் அப்ரஸித்தமாக வேண்டும். பசு, பக்ஷிகளும் தத்தம் குழகன்று குஞ்சுகளை நிர்ஹேதுமாகவே ரக்ஷிக்கக் காண்கையாலே, நிர்ஹேதுக ரக்ஷணம் ப்ரஸித்தமாயிருக்கிறது. மேலும் ப்ரஹ்ம சப்தார்த்த நிருபணத்தில் "ப்ருஹதி ப்ரும்ஹயதி தஸ்மா துச்யதே பரம் ப்ரஹ்ம" என்று சொல்லுகிறவிடத்தில் "ப்ரும்ஹயதி" என்கிற வித்தால் சேதந நிஷ்டமான ஜ்ஞான விகாஸ ரூப மோக்ஷத்துக்குக் காரணம் என்று ஏற்படுகிறது. இவ்விடத்திலும் ஹேதுவைச் சொல்லாமையால், அந்த மோக்ஷ காரணமும் நிர்ஹேதுகமென்றே ஸித்திக்கிறது. ப்ரஹ்ம சப்தத்துக்கு ஆர்த்தமாக ஏற்படுகிற ஹேய ப்ரத்யநீகத்வமும் ஆச்ரித விஷயத்தில், ஹேய நிவர்த்தகத்வ ரூபமாகையால், அதிலும் ஹேது ச்ரவணமில்லாமையாலே, அநிஷ்ட நிவர்த்தக ரூபமான அதுவும் நிர்ஹேதுகமாயிருக்கிறது.

அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை, லக்ஷ்மீ தந்த்ரம் இவைகளில் அநுக்ரஹ சக்தியாகிற க்ருபை, சேதனன் விஷயத்திலுண்டாகிற காலம் தெரியாமையால், நிர்ஹேதுகமென்று சொல்லப்படுகிறது. மேலும் திருவாய்மொழியில், "இன்றென்னைப் பொருளாக்கி" என்கிற பாட்டினுடைய வ்யாக்யானத்தில், திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருப்பேர் நகரான் இன்று என்னை ஸ்விஷய திவ்ய ஜ்ஞானவானாக்கித் தன்னை என்னுள்ளே வைக்கைக்கு ஹேது வென்? இதற்கு முன்பு இப்படிச் செய்யாதொழிகைக்கு ஹேதுவென்? என்று அவனை நான் கேட்கிறேன்; இதற்கு ஒரு உத்தரம் சொல்ல வல்லவனாகில் சொல்லுவான் என்கிறார்" என்று அருளிச்செய்திருப்பதாலும், நிர்ஹேதுகமென்றேற் படுகிறது. இன்னும் இதில் வக்தவ்யங்களான விஷயங்களை விஸ்தர பயத்தால் நிறுத்திவிட்டேன்.

### வாத்ஸல்யகுண நிரூபணம்

இனி வாத்ஸல்ய குணம் நிரூபிக்கலாகும். வாத்ஸல்ய மென்பது:-வத்ஸஸ்ய இதம்—வாத்ஸம்; தத் லாதீதி—வாத்ஸலா; தஸ்யா: கர்ம—வாத்ஸல்யம் என்கிற வ்யுத்பத்தியால் அன்றீன்ற கன்றினுடைய தோஷத்தை போக்கியமாகக் கொள்ளுகிற பசுவின் வியாபாரம் என்ற அர்த்தமுடையதாயிருக்கிறது. அதா

வது—அந்தக் கன்றினுடைய தோஷம் பசுவுக்கு போக்கியமாயிருப்பதுபோலே, ஆச்ரிதருடைய பூர்வாகங்களிலும் ப்ராமாதிகங்களான உத்த ர ா க ங் க ளி லு ம்அவர்ஜநீயங்களான சாரீர தோஷங்களிலும் ஈசுவரனுக்குள்ள போக்யதா புத்தியே, வாத்ஸல்யம் என்று சொல்லப்படு கிறது. அன்றியும், வத்ஸம் லாதீதி—வத்ஸலா: வத்ஸலாயா: கர்ம—வாத்ஸல்யம் என்ற வ்யுத்பத்தியாலும் இந்த அர்த்தம் ஸித்திக் கிறது.

இந்த வாத்ஸல்யத்தினுடைய ப்ரதமா வஸ்தை, தோஷாநாதர ஹேதுவான ஸ்நேஹ மாகவும்; உத்கடாவஸ்தை, தோஷங்களில் குண்த்வபுத்திபண்ணுகையுமாயிருக்கும், இப் படியே சுருத ப்ரகாசிகையில், "ஸம்பந்த விசேஷாந் விதேஷு ப்ரீத:- ஸ்நேஹ யஸ்ய விபாகா:- அஸ்தாநபய சங்கித்வம், தோஷோந வபாஸ: தோஷேஷு குணத்வ புத்திர்:" என்றும், இப்படியே ஸமந்வயாதிகரணத்தில், "தோஷேஷு குணத்வ புத்திர் வாத்ஸல்யம்; யதா மாதுர் வத்ஸே" என்றும், சரணாகதி கத்ய சுருதப் காசிகையில் "யதா தேநோர் வத்ஸே" என்றும் சொல்லப்படுகிறது. இதற்கு அர்த்தம்:—ஸம்பந்தமுள்ள இடங்களில் பிரீதி பண்ணுகை ஸ்நேஹம்; அதினுடைய விபாகங் கள்:— அஸ்தாநேபய சங்கை, தோஷம் தோன் றுமை, தோஷங்களில் குணத்வபுத்தி என்னுமி வையே. எப்படி தாயான பசு தன் கன்றினி டத்தில்; பிரீதியுடையதாயிருக்குமோ அப் படியே ஈசுவரன் ஆச்ரிதரிடத்தில் இருக்கு மிருப்பு வாத்ஸல்யமென்று சொல்லப்படும் என்பதாம். இப்படியே ஜ்ஞானமில்லாத தேநுவை வாத்ஸல்யத்துக்கு த்ருஷ்டாந்த மாகச் சொல்லியபடியால், ஜ்ஞானமுள்ளவர் களுக்கும் ப்ரேமத்தினால் உண்டாகிற அஜ்ஞா னத்தால், தோஷங்களில் குணத்வபுத்தி யுண்டாகுமென்பது பெறப்படுகிறது. இப் படியே "அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்சு:" என்கிற ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலும், "யதோ தோஷாந் பக்தேஷ்விஹ வரத நைவா கலயஸி" என்பதிலும் வாத்ஸல்யத்தினுடைய ப்ரதமாவஸ்தையான தோஷா தர்சனம் சொல்லுகிறது.

இப்படியே ஆழ்வார்களும், "என்னடி யராது செய்யார் செய்தாரேல் செய்தார்" என்றும், "குன்றனைய குற்றம் செயினும் குணங்கொள்ளும்" என்றும், "செய்த குற்றம் நற்றமாகவே கொள்" என்றும் அருளிச்செய் திருக்கிறார்கள்.

ஸ்ரீராமாயணத்திலும் "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்" என்கிற சுலோகத்தில் 'யத்யபி' என்றதனால், தோஷாதர்சநமும் 'ஸ்யாத் என்றதனால் தோஷபோக்யத்வமும் சொல்லப் பட்டன.

தேசிகனும் "ஔத்ஸுக்ய பூர்வ முபஹ்ருத்ய மஹாபராதாந்" என்கிற சுலோகத்தில் "ஆலிஹ்ய தாந் நிரவசேஷ மலப்த த்ருப்தி:" என்பதிலும் "பரந்யாஸச்சந்த" என்கிற ஸ்லோகத்திலும் தோஷ போக்யத்வமே வாத் ஸல்யமென்று அருளிச்செய்திருக்கிறார். ரங்கரா மாநுஜ ஜீயரும், உபநிஷத் பாஷ்யத்தில் "அங்குஷ்ட மாத்ர: புருஷ:... ததோ ந விஜுகுப்ஸதே" என்கிறவிடத்தில் "ஆச்ரித தோஷாந் வாத்ஸல்யேந போக்யத்வேந ஸ்வீக ரோதி" என்றருளிச் செய்திருக்கிறார். சுருதி யிலும் "ஸம்யா ததே ப்ரஹ்மணேஷ: ரமதே தஸ்மிந்நுத ஜீர்ணே சயாநே" என்று சொல்லப் பட்டிருக்கிறது. இதன் அர்த்தம்—அவிவாதம் என்றும், ஸந்தி என்றும் சொல்லப்படுகிற ப்ரபத்தியை அநுஷ்டித்தவனுடைய ஜீர்ண மான சரீரத்தில் ரமிக்கிறான் என்பதாம். இந்த அர்த்தம் "திருமாலிருஞ்சோலை மலையே" என் கிற பாட்டிலும், "மங்கவொட்டு உன்" என் கிற பாட்டிலும் கண்டுகொள்ளலாம்.

இப்படியே பகவத்குணதர்ப்பணத்தில் "ஸஹி சிரபரிசீயமாநேஷ்வபி சரணாகதேஷு கஸ்யாபி ஹேதோ: ஸத்ய: ப்ரஸூதேஷ் விவ வத்ஸேஷு ஸஹுங்காரா: ஸபயஸ் ஸம்ஸ்நுத ஸ்தந வேதநா கிங்கர்த்தவ்யதாகுலா: தேநவ இவ ஸம்ப்ராம்யதி" என்று சொல்லப்பட்டிருக் கிறது. இதன் அர்த்தம்-சிர பரிசிதர்களாயிருந் தபோதிலும் சரணாகதர்களிடத்தில் அன்றீன்ற கன்றுகளிடத்தில் ஹும்காரத் தோடே கிட்டி யும் முலைக்கடுப்போடே கூடியும், இன்னது செய்கிறது என்று தெரியாமல் கலங்கியிருக் கிற பசுக்கள் போலவே ப்ரமிக்கிறான் என்ப தாம். இதற்கு உதாரணமாக "அத்ய ஜாதந்து மலிநம் வத்ஸம் கௌரிவ தாவதி" என்கிற சுலோகத்தைக் கண்டுகொள்வது.

அப்படியே வாத்ஸல்யத்தாலே கஜேந்தி ராழ்வான் விஷயத்தில் தன்னுடைய சக்தியை மறந்து அரை குலையத் தலைகுலைய ஸரஸ்ஸி

னுடைய கரையில் ஈசுவரன் எழுந்தருளினதை ப்ரதிபாதிக்கிற "தேவீ ஹஸ்தாம்பு ஜேப்ய:" என்று துடங்கி பட்டர் அருளிச்செய்த சுலோ கங்களிலும் காணலாம்.

மேலும், "யதிதமகணயித்வா துர்வஹம் ச்ரோணிபாரம், மதவிசரணலோபாத் ப்ரஸ் திதம் பத்மதாம்ரம்; அயமஹமபி வாஞ் சாம்ய ப்ரம்ருஜ்யேவ பாம்ஸூம், ஸூமுகி பததலம்தே சூடிதும் சும்பிதும் வா" என்றும் "ரதி ஸமயே தருணீநாம் பூஷாஹாநிரபி பூஷணீபவதி" என்றும் சொல்லுகிற வாக்கி யங்களிலும் கண்டுகொள்ளலாம். இதன் அர்த்தம்—என்னிடத்தில் வர விரும்பிற ஆசை யால் வஹிக்கக் கூடாதிருக்கிற நிதம்ப பாரத் தையும் எண்ணமல் பிரயாணம் புறப்பட்டு வருவதால், செந்தாமரை மலர்போற் சிவந்தி ருக்கிற உன் பாத தலத்தை நடந்து வரும் போது படிந்து கிடக்கிறதூளிகளைத் துடைக் காமலே சிரோபூஷணமாயணியவும் முத்த மிட்டுக் கொள்ளவும் இச்சிக்கிறேன் என்ப தும், ரதிகாலத்தில் ஸ்த்ரீகள் ஆபரணமில்லா மலிருப்பதே அழகாகுமென்பதும் ஆம்.

இப்படி க்ஷுத்ரனை சேதனனுக்கும் ஜ்ஞாமில்லாத தேநுவுக்கும் இருந்தால், பரம சேதனனும் பரமரஸிகனுமுள்ள ஸர்வேசு வரனுக்கு "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்" என்றும், "ப்ரியோஹி ஜ்ஞாநிநோத்யர்த்தம்" என்றும், "அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞானினம் லப்த்வா" என்றும் சொல்லுகிறபடியே அத்ய ந்தா பிமதனை ஜ்ஞானி விஷயத்தில் இப்படி யிருப்பது கிம்புனர் ந்யாய ஸித்தம். இப்படி யிருக்க, "நிகரில் புகழா" யென்று ஒப்பில்லாத குணமாகச் சொல்லப்பட்ட தோஷேஷு குணத்வபுத்தி ரூபமான வாத்ஸல்யத்தைத் தோஷமென்று சொல்வது, குணேஷு தோ ஷத்வ புத்தி கார்யம். ஆனுல், தேசிகன் ரஹஸ் யத்ரய ஸாரத்திலும் சரணுகதிகத்ய பாஷ்யத் திலும் "யதா தேநோர் வத்ஸே" என்கிற சுருத ப்ரகாசிகாகாரர் வாக்யத்தை யெடுத்துக் காட்டி, "கேஷாஞ்சித் அதிவாத:" என்பதால், தோஷேஷு குணத்வபுத்தியாக வாத்ஸல்யத் தைச் சொல்லக்கூடாது என்று அருளிச்செய் திருப்பதுகூடும்படி எங்ஙனே யென்னில், அவரே தயாசதகத்தில், "வாத்ஸல்யம் தோஷ போக்யத்வம்" என்று அருளிச்செய்திருப்ப தாலும், அதை அநுஸரித்தே தத்ஸம்ப்ர தாயஸ்தரான ரங்க ராமாநுஜ ஜீயரும் உப நிஷத் பாஷ்யத்தில் அருளிச்செய்திருப்ப தாலும் இப்படியிருந்துள்ள வாத்ஸல்யத்துக்கே அனேக ப்ரமாண உபபத்திகளிருப்பதாலும், அந்த பக்ஷத்தில் நைர்ப்பர்யமில்லாமையாலும் ப்ரௌடவாதமா மித்தனை.

தோஷ போக்யத்வம் வாத்ஸல்யமென்று சொல்லும் பக்ஷத்தில் போக்யமான தோஷத் தையே பண்ணும்படி நேரிடும் என்கிற தூஷணம் தோஷாதர்சனம் வாத்ஸல்யம் என்று சொல்லுகிற பக்ஷத்திலும் ஸமானம். பூர்வாக விஷயத்திலும் ப்ராமாதிகமான உத்தராகத்திலும் அவர்ஜநீயமான சாரீர தோஷத்திலும் ஏற்படுகிற குணத்வபுத்தி அதிப்ரேம கார்யமாகையால் தோஷமாகாது. "திருமாலிருஞ் சோலைமலையே" என்கிற பாட்டில் உகந்தருளின நிலங்களில் பண்ணும் விருப்பத்தை ப்ராக்ருதமாயும் ஹேயமாயு மிருந்துள்ள ஆழ்வாருடைய விக்ரஹ ஏக தேசத்தில் பண்ணுகிறுன் என்று இருப்பது கண்டுகொள்வது. இப்படியிருப்பதால் ஆழ் வாருடைய சரம விக்ரஹத்தை, பொலிந்து நின்றபிரான் ஸந்நிதியிலேயே, திருப்பள்ளிப் படுத்தியிருப்பதும், கோயிலில் ஸ்ரீ பாஷ்யகார ருடைய சரம விக்ரஹத்தை, பெருமாளுடைய வஸந்த மண்டபத்தில் திருப்பள்ளிப்படுத்தி யிருப்பதும், திருமழிசைப்பிரானுடைய சமர விக்ரஹத்தை ஆராவமுதாழ்வான் ஸந்நிதிக்கு ஸமீபத்தில் திருப்பள்ளிப்படுத்தியிருப்பதும் கண்டுகொள்ளலாம். அப்படியே திருமலை யிலும் அனந்தாழ்வான், சமர விக்ரஹத்தைத் திருப்பள்ளிப்படுத்தின இடத்துக்கு திருவேங் கடமுடையான் ஸம்வத்ஸரம் தோறும் எழுந் தருளி ஸ்ரீசடாரி ஸாதித்து வருவதும் கண்டு கொள்ளலாம்.

இப்படியாக ப்ரமாணங்களாலும் அநுஷ் டானத்தாலும் உபபத்தியாலும் ஸ்நேஹத்தி னுடைய உத்கடாவஸ்தையான வாத்ஸல்யம் நிரூபிக்கப்பட்டது.

### பகவத் ஸௌசீல்ய நிருபணம்

இனி, ஸௌசீல்யாவது;— உயர்ந்தவன் இழிந்தவனேடே கலக்கும்போது, புரை யற்றி ருக்கை. புரை யற்றிருக்கையாவது;—தன்னு டைய உயர்த்தியும் தன்னை யடைந்தவ னுடைய தாழ்வும் பாராட்டமை. ஸ்ரீராமா யணத்தில் ராவண வதத்துக்குப்பின் ப்ரஹ் மாதிகள், "பவாந் நாராயணோ தேவ:" என்று பெருமாளுடைய உயர்த்தியைச்சொல்ல பெரு

மான் அதை விரும்பமால், "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்" என்பதால், தன்னை தசரதகுமாரனை ஒரு மனுஷ்யன் என்று எண்ணுகிறேன் என்று அருளிச் செய்கையாலும், ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் கோவர்த்தன உத்தாரணனந்தரம், "தேவோவா" இத்யாதி சங்கித்துச் சொல்லியவற்றை விரும்பாமல், "நாஹம் தேவோ ந கந்தர்வ:" அஹம்வோ பாந்தவோ ஜாத:" என்பவற்றால், நான் தேவனுமல்லன்; கந்தர்வனுமல்லன்; உங்களுக்கு பந்துவாக வந்து பிறந்தவன் என்று கண்ணன் அருளிச் செய்தமையாலும் இந்த ஸௌசீல்ய குணம் விளங்கும்.

### ஸௌலப்ய நிரூபணம்

இனி, 'ஸௌலப்யமாவது:—கண்ணுக்கு விஷயமாகாத தன்னை ஸம்ஸாரிகள் கண்ணுக்கு விஷயமாக்குகை. இந்த குணம் விபவத்திலும், அர்ச்சாவதாரத்திலும் காணலாம். விக்ரஹ குணங்கள் காந்தி ஸௌகுமார்யாதிகள். ஈசு; வரனுக்கு விக்ரஹம் உண்டென்பதற்குப் பிரமாணம் "ய ஏஷோந்த ராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவ மக்ஷிணீ" என்றும், 'நீலதோயத மத்யஸ்தா" என்றும், "ஆதித்ய வர்ணம் தமஸஸ்து பாரே" என்றும் சொல்லுகிற சுருதிகளும் ஸ்மிருதி இதிஹாஸ புராணங்களுமாம். ஈசுவரனுக்கு சரீரமில்லை என்று சுருதிகள் சொல்லியது கர்ம நிபந்தனமான சரீரம் இல்லை யென்பதை உபபாதித்தபடி. இன்னும் இவைகளுடைய நிரூபணம் மேலே வரும்.

### ஸர்வ சேஷித்வாதி நிரூபணம்

ஸர்வ சேஷியாயிருக்கையாவது:—ஸமஸ்தங்களான சேதனா சேதனங்களையும் தன்னுடைய அதிசயாதானத்துக்கு உறுப்பாக விநியோகிக்கைக்கு ஹேதுவான ஸம்பந்த விசேஷம்.

(ஸ்வாமித்வமாவது;—சேதனர்கள் விமுகர்களான தசையிலும் அவர்களுடைய ஸத்தா ஸ்தித்யாதிகளைத் தான் அவர்களுக்கு அந்தர்யாமியாயிருந்தும், மற்றும் அவர்கள் தாய் தந்தையர்க்கு அந்தர்யாமியாயிருந்தும் நிர்வஹிக்கைக்கு உறுப்பான ஸம்பந்த விசேஷம்; இந்த விஷயமும் மேலே நிரூபிக்கப்படும்.)

### ஸர்வகர்ம ஸமாராத்யத்வ நிரூபணம்

இனி, ஸர்வ கர்ம ஸமாராத்யனாகையாவது:— சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் விதிக்கப்பட்டிருக்கிற நித்ய நைமித்திக காம்ய கர்மங்களுக்குத் தானே ஆராத்யனாயிருக்கை. ஆனால் அக்னீந்த்ராதி தேவர்களை உத்தேசித்துப் பண்ணுகிற கர்ம ஸ்வரூபம் ஈசுவரனுக்கு ஆராதனமாம்படி எங்ஙனேயென்னில்? அக்நி இந்திராதி தேவதைகள் ஈசுவரனுக்கு சரீர பூதர்களாகையாலும், தான் சரீரியாகையாலும் சரீரத்தைப்பற்றி ஏற்படுகிற ஆராதனங்கள் சரீரிக்கே யாகையாலே ஈசுவரனுக்கு ஆராதனமாகலாம். சேதனர்கள் அந்தர்யாமியான ஈசுவரனுக்கு, கர்மம் ஆராதனமென்றறியாமல், அக்னி இந்திராதி தேவர்களுக்கே ஆராதனமாகச் செய்த போதிலும் முடிவிலே ஈசுவரனுக்குச் செய்த ஆராதனமாகவே இருக்கிறது. எப்படியெனில்? தேஹமே ஆத்மாவென்று நினைத்திருக்கிற மனிதன் தேஹத்துக்குப் பண்ணும் உபலாளனாதிகளால் உண்டான ஸுகம் அந்த தேஹாபிமானியான ஆத்மாவினிடத்தில் பர்யவஸிப்பதுபோல சென்று சேரும் என்று அறியத்தக்கதாம். இந்த விஷயத்தை, "யே யஜந்தி பித்ரூந் தேவாந் ப்ராஹ்மணாந் ஸஹுதாசநாந், தேபி மாமேவ கௌந்தேய யஜந்த்ய விதி பூர்வகம்" என்று கீதாசார்யன் அருளிச்செய்தான். இதனர்த்தம்;—யார் யார் பித்ருக்களையும் தேவர்களையும் அக்னியோடே கூடிய பிராமணர்களையும் என்னை யுத்தேசியாமலே ஆராதிக்கிறார்களோ, அவர்களும் அங்கங்கு அந்தர்யாமியாய் நின்ற என்னையே ஆராதித்தவராகிறார்கள் என்பதாம்.

### மோக்ஷ ப்ரதத்வ உபாயத்வாதி நிரூபணம்

இனி, நிரதிசய புருஷார்த்த ரூப மோக்ஷ ப்ரதனாகையாவது:— எல்லாவற்றிற்கும் மேலான புருஷார்த்தமான மோக்ஷத்தை ஈசுவரனே கொடுப்பதாக ப்ரமாணங்கள் இருப்பதால், ஈசுவரனே மோக்ஷ ப்ரதனாகிறான். ப்ரமாணங்கள் "நாந்ய: பந்தா அயநாய வித்யதே" "மோக்ஷ மிச்சேத் ஜநார்த்தநாத்" இத்யாதி வாக்யங்களாம். நைஷதத்தில் ஸ்ரீ ஹர்ஷகவி. "அதிகத்ய ஜகத்யதீச்வராத் அத முக்திம் புருஷோத்தமாத் தத:" என்பதால், புருஷோத்தமனை நாராயணனே மோக்ஷ ப்ரதனென்பதைச் சொல்லியிருக்கிறார். இந்த

விஷயம் புருஷார்த்த நிரூபணத்தில் விசதமாக நிரூபிக்கப்படும்.

இனி, உபாயமாகையாவது:- ஈசுவரன் மோக்ஷத்தைக் கொடுப்பவனும் மோக்ஷரூப பலத்துக்கு ஸாதநமும் தானுயிருக்கை. அதில். உபாயத்வமாவது ஈசுவரனுக்கும் பக்தியாத்யுபாயங்களுக்கும் ஸாதாரணமாயிருக்கும். அது எப்படியென்னில் உபாயத்வம் பல ஸாதநத்வ ரூபம்; பக்த்யாதிகள் பலத்துக்குக் கரணமாயிருந்து ஸாதனமாகின்றன. ஈசுவரன் பலனை கொடுக்கையாலே பல ஸாதனமாகிறுன். அங்ஙனமன்றிக்கே ஈசுவரனே பலப்ரதனுயும், பலகரணமாயுமிருக்கிறுன். அதற்கு ப்ரமாணங்கள்:- "மாதா பிதா ப்ராதா நிவாஸ: சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" என்கிற இதில், சரண சப்தம் "உபாயே க்ருஹ ரக்ஷித்ரோ:" என்கிறபடி பல ப்ரதத்வத்தைக் காட்டிலும் வேறுபட்டிருக்கிற பல கரணத்வ பரமாயிருக்கிறது: இப்படியே த்வயத்திலும் சரம சுலோகத்திலும் இருக்கிற சரண சப்தம் கீழ்க்குறித்த சுலோகத்தின்படி பலகரணத்வ பரமாயிருக்கிறது; நாராயண சப்தத்தில் அயன சப்தமானது கரணேல்யுடந்த மாகையால் "ஈயதே" இதி-அயனம்" என்கிற வ்யுத்பத்தியைக்கொண்டு, ப்ராப்தி கரணத்வத்தைச் சொல்லுகிறது; ஸ்ரீராமாயணத்தில், "சரண்யம் சரணஞ்ச த்வாம் ஆஹுர் திவ்யா மஹர்ஷய:" என்று சரண்ய சப்தத்தாலே பல ப்ரதத்வத்தையும், சரண சப்தத்தாலே பலகரணத்வத்தையும் சொல்லியிருக்கிறது. ஸஹஸ்ர நாமத்தில் "யோகோ யோகவிதாம் நேதா" என்கிற "யோக:" என்கிற சப்தத்தால் "யுஜ்யத இதி-யோக:" என்கிற வ்யுத்பதித்யைக்கொண்டு, ப்ராப்தி கரணத்வம் சொல்லப்பட்டதாக பட்டர் வியாக்யானம் செய்தருளியிருக்கிறுர். அப்படியே "கரணம் காரணம் கர்த்தா" என்னுமிடத்திலும் கண்டுகொள்ளத் தக்கது. ஸூத்ரகாரரும் "உபபத்தேச்ச" என்கிற ஸூத்ரத்தால், பல கரணத்வத்தையும் "பல மத உப பத்தே:" என்கிற ஸூத்ரத்தால் பல ப்ரதத்வத்தையும் தனித்து நிரூபித்திருக்கிறுர். "உத தமாதேச மப்ராக்ஷ்ய:" என்கிற சுருதி வாக்கியத்தின் ஆதேச சப்தார்த்த விசாரத்தில், "கஞ் ப்ரத்யயமானது, காரணந்தரங்களை அபேக்ஷியாமையாகிற கரணத்துக்குள்ள ஸாதக தமத்வம் கர்த்தாவுக்கு மிருப்பதால், கர்த்தாவைக் கரணமாக விவக்ஷித்துச் சொல்லியபடி" என்று வேதார்த்த ஸங்க்ரகத்திலும், சாந்தோக்யே கேசிதாஹு:" என்கிற நடாதூர் அம்மாள் அருளிச்செய்த சுலோகத்திலும் சொல்லியிருப்பதால், ப்ரஸாதந கரணத்வம் ஈசுவரனுக்கு உண்டென்று ஏற்படுகிறது.

ப்ரஸாதநமாவது:— ஹிதப்ரவர்த்தனமாகையால் அதுவும்அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வக இஷ்டப்ராபகத்வ ரூபமாகையால், அது பல கரணத்வ பர்யவஸிதமாம். திருவாய்மொழியிலும், "சரணமாகுந் தனதாளடைந்தார்க்கெல்லாம், மரணமானுல் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்று பல ப்ரத்வத்தையும், பல கரணத்வத்தையும் பிரித்து அருளிச்செய்திருக்கிறுர். தேசிகனும் "தேவ: ஸ்ரீமாந் ஸ்வவஸித்தே: கரணம்" என்று பல கரணத்வத்தை யருளிச் செய்திருக்கிறுர். ஸ்ரீ பாகவதத்திலும் "த்வ மகரண ஸ்வராடகில காரக சக்தி தர:" என்று கரண காரக சக்தி ஈசுவரனுக்கு உண்டென்று சொல்லப்பட்டிருக்கிறது இப்படியாக பலத்துக்குக் கரணமும் பலன் அருளுமவனும் ஈசுவரனே ஆகிறுன்.

**ஈச்வரனுடைய பலகரணத்வ ஸமர்த்தநம்**

ஆனுல், ஈசுவரன் பலத்துக்குக் கரணமாகும் பக்ஷத்தில் பக்தி ப்ரபத்திகளை சாஸ்த்ரங்களில் பலத்துக்குக் கரணங்களாக விதித்திருப்பது கூடும்படி எங்ஙனே யென்னில், ப்ரபத்தி ஸ்தலத்தில் ப்ரபத்தி ப்ரதிபந்தகாபாவ ரூபமாயும், அதிகாரி விசேஷணமாயும் இருப்பதால், ஈசுவரனே பலகரணமாகிறுன். பக்தி ஸ்தலத்திலும் ப்ராதிகூல்ய நிவ்ருத்தி மாத்ரத்தைக்கொண்டே, ப்ரீதனுன ஸர்வேசுவரன் "ததாமி புத்தியோகம் தம்" என்கிற வசனப்படி, பக்தி நிஷ்பத்தியைப் பண்ணிக் கொடுக்கிறுன் என்று ஏற்படுவதால் அவனுடைய க்ருபா பலமான பக்தி க்ருபா ஜனிகையாக மாட்டாது: ஆனுல் "உபாஸீத" ,"த்யாயீத" என்கிற விதிக்கு அர்த்தம் என்னென்னில் விதிக்கு க்ருபாதி ஸாத்யத்வமே அர்த்தமாகையாலும், இஷ்ட ஸாதநத்வம் பாதகமில்லாத விடத்தில் ஆக்ஷேப லப்யமாகையாலும், கேவல க்ருதி ஸாத்யத்வத்தையே சொல்லுவதாம். அங்ஙனமன்றிக்கே, ஸ்வயம் ப்ரயோஜனமான ஈசுவர முகோல்லாஸமாகிற

இஷ்டத்துக்கு ஸாதனமென்றும் சொல்லலாம். இந்த விஷயத்தை சுருத ப்ரகாசிகையில் ரக்ஷணைந்முகனான ஈசுவரனுக்கு பக்த்யுத்கம ரூபமென்று அருளிச் செய்திருக்கிறார். அப்படி யன்றிக்கே பக்திக்கு உபாயத்வமே விஹிதமா யிருந்ததேயாகிலும், "த்ரைகுண்ய விஷயா வேதா:" என்கிற கீதா சுலோகத்தின் படி சேதனனுடைய ருசிக்கு அநுகுணமாக பக்தி யும் உபாயமாக இருக்கிறது.

ஆனால், சுருதிக்கு பரமதாத்பர்யம் ஈசுவர னுடைய பலகரணத்வத்திலேயாம். அதுவரை யில் இவன் வருவதற்காக வழியேற்படுத் தினபடி. அது எப்படி போலென்றால், தேஹா த்மாபிமானியிருக்கிறவனுக்கு ஐஹிக பல மான மழை முதலியவற்றை ஸாதித்துக் கொடுக்கிற யாகத்தை விதித்தாற்போலேயும், தேஹாதிரிக்தன் ஆத்மா ஒருவன் உளன்; அவன் ஸ்வதந்த்ரன் என்று இருப்பார்களுக்கு ஸ்வர்க்காதி ஸாதனமான யாகத்தை விதித் தாற்போலேயும், ஸ்வாதந்த்ரியத்தை விட்டு, தேவதாந்தர சேஷத்வத்துக்கு இசைந்தவர் களுக்கு தேவதாந்தர ஸாயுஜ்ய ஸாதனமான உபாயத்தை விதித்தாற் போலேயும், பகவத் சேஷத்வ பாரதந்த்ரியங்களே ஸ்வரூபமென் றும், மோக்ஷமே புருஷார்த்த மென்றும் அறிந் தவனுக்கு அந்த சேஷத்வ பாரதந்த்ரியா நுகுணமாக தத் ஸாதநமான பக்தியை விதித் தது. தான் சரீரபூதனாகையாலே தன்னுடைய ரக்ஷணத்தில் தனக்கு யோக்யதை இல்லாமை யாகிற அத்யந்த பாரதந்த்ர்யத்தை அறிந்தவ னுக்கு அதற்குத் தன்னை யுபாயமாக ஸ்வீகரிக் கையாகிற ப்ரபத்தியை விதித்தது.

### தர்ம ஜிஜ்ஞாஸா என்றதில் தர்ம சப்தார்த்த நிரூபணம்

அது நிற்க, பூர்வ மீமாம்ஸையில், "அதா தோ தர்ம ஜிஜ்ஞாஸா" என்கிற ஸூத்ரத்தில் சொல்லப்பட்ட, தர்மபதம் "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" என்கிறபடியே, ப்ரஹ்ம பரமாகையாலும், பூர்வ மீமாம்ஸையும் உத்தர மீமாம்ஸையும் ஏக சாஸ்த்ரமாகை யாலும், உத்தர மீமாம்ஸையில் ஏற்படும் ப்ரஹ்ம விசாரத்துக்கும், ஸாதாரண ப்ரதிஜ் ஞாபரமென்று சுருத ப்ரகாசிகையில் நிரூபித் திருக்கிறபடியால், அந்த தர்ம சப்தார்த்த மான உபாயம் ஸர்வேசுவரன் என்று ஸித்திக் கிறது. ஆனால், சுருத ப்ரகாசிகையில் த்ரவ்ய தேசங்கள் பல கரணமன்றியிருந்தாலும் உப காரணமாயும் அதிகரணமாயுமிருப்பதால், தர்ம சப்தார்த்த மாவனபோல, ஈசுவரனும் பல ப்ரதனாகையாலே, தர்ம சப்தார்த்த மாகலாமென்று நிருபித்திருப்பதால், பல கரணத்வம் ஸித்திக்க மாட்டாதென்னில், கீழ் நிருபித்தபடி கரணத்வம் ஸித்தித்திருப்ப தால், அந்த கரணத்வத்தோடே கூட பலப்ரத த்வமடியாக ஏற்படுகிற தர்மத்வமும் உண் டென்று ஸித்திப்பதல்லது கரணத்வ நிஷேதத் தில் தாத்பர்யம் கொள்ள இடமில்லை. இப்படிச் சொல்லாத பக்ஷத்தில், மற்ற இடங்களில் கரணத்வத்தை உபபாதிக்கிற வாக்கியத்தோடு விரோதிக்கும்.

### இல்லறமில்லேல் பாசுரப் பொருள் விளக்கம்

மேலும் திருமழிசைப்பிரான் நான்முகன் திருவந்தாதியில், "இல்லற மில்லேல் துறவற மில்" என்கிற பாசுரத்தில் ப்ரவ்ருத்தி தர்ம மன்றாகில் நிவ்ருத்தி தர்மமாகச் சொல்லப்படு வதும் தர்மமில்லை, நல்லறமாவதும், நாலு வேதங்களாலும் சொல்லப்படுகிற தபஸ்ஸாம் நாராயணனேயாம். இம்முடிவை அன்றென்று மறுப்பவர் ஒருவருமில்லை; ப்ராமாணிகரெல் லாராலும் அங்கிகரிக்கப்பட்டது என்று அறுதி யிட்டிருப்பதாலும் பலகரணத்வ ரூபமான உபாயத்வம் ஈசுவரனுக்கே யுள்ளதென்பது ஸித்தம்.

### ஸர்வேச்வரனே உபாயமென்பதன் நிகமநம்

இங்ஙனமன்றிக்கே, உபாயமென்பது அநிஷ்ட நிவ்ருத்திக்கும் இஷ்ட ப்ராப்திக்கும் கரணமாயிருப்பதைச் சொல்லுமதாகையால், அநிஷ்ட நிவ்ருத்திக்குக் கரணம் பக்தியாதிகள்; இஷ்ட ப்ராப்திக்குக் கரணம் ஸர்வேசுவரன், ஆதலால் பக்தியாதிகள் கரணமென்பதற்கும் ஈசுவரன் கரணமென்பதற்கும் விரோதமில்லை. ஆனால், ஸ்ரீ பாஷ்யத்தில் "அவித்யா நிவ்ருத்தி ரேவ மோக்ஷ:" என்றும், இஷ்டப்ராப்தி யென்பது "பாவாந்தர மபாவ:" என்கிற ந்யா யத்தாலே அவித்யா நிவ்ருத்தியே யாகையால், தனித்து இஷ்டப்ராப்தி யென்பது இல்லை என்றிருப்பதால், இந்த வ்யவஸ்தை கூடா தென்னில், அப்படியிருந்தாலும் அவித்யா நிவ் ருத்திக்கு அநந்தரபாவியாய் வருகிற அநுபவம் "பாவாந்தர மபாவ:" என்கிற ந்யாயத்தாலே, அவித்யா நிவ்ருத்தியாகச் சொன்னாலும்,

அதற்கு அநந்தரம் வருகிற அனுபவ கைங்கர்யங்கள் அவித்யா நிவ்ருத்தி யாகாமையாலும், அவைகள் ஸ்வாபாவிகங்களாயிருந்த போதிலும், "இச்சாத ஏவ தவ விச்வ பதார்த்த ஸத்தா" என்கிறபடியே, ஸர்வேசுவரனுடைய இச்சையாலே ஸித்தங்களாகையால் ஸர்வேசுவரன் கரணமென்று சொல்லலாமென்னில், அநிஷ்ட நிவ்ருத்திபோல் ஆகந்துகமன்றியே ஸ்வாபாவிகங்களாகையால், ஸர்வேசுவரனுக்கு ஸத்தையை நிர்வஹிக்கையாகிற ப்ரயோஜகத்வ மொழிய கரணத்வம் ஏற்படாது.

அப்படி கரணமாகச் சொன்னாலும், கீழ் உதாஹரிக்கப்பட்ட ப்ரமாணங்களில் சரண சப்தம் "ச்ரு ஹிம்ஸாயாம்" என்கிற தாது பாடத்தின்படி அநிஷ்ட நிவ்ருத்தியிலும் சரணமென்று ஏற்படுமாகையால் அப்படிச்சொல்வது ப்ராமண விருத்தம்.

ஆனால் ஸாரஸ்வாதிநியில் இப்படி நிரூபிக்கப்படுகிறது. இவைகளில் ஏற்படுகிற ஸ்வாரஸ்யாஸ்வாரஸ்யத்தை ப்ராஜ்ஞர்கள் நிரூபித்துக் கொள்க.

உபேயமாகையாவது — ஸர்வேசுவரனே ப்ராப்த்யுத்தேச்யனும் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாயுமிருக்கை; ப்ராப்தியுத்தேச்யத்வம் ஸர்வேச்வர மாத்ர நிஷ்டம். கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வம் ஸர்வேசுவரனிடத்திலும் பிராட்டியிடத்திலும் பர்யாப்தம். இந்த விஷயம் கீழே நிரூபிக்கப்பட்டது.

## ஸர்வேச்வரனுடைய பர வ்யூஹாதி விவரணோபக்ரமம்

இப்படியிருந்துள்ள ஸர்வேசுவரன் பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சாவதாரம் என்கிற ஐந்து ப்ரகாரங்களை யுடையவனாயிருப்பன்.

அவற்றுள் பரனாயிருக்கையாவது—அப்ராக்ருதமான நித்ய விபூதியில் சுத்த ஸத்வ மயமான விக்ரஹத்தை யுடையவனாயும், ஷாட்குண்ய பரிபூர்ணனாயும் லக்ஷ்மீ பூமீ நீளாதி மஹிஷீ ஜன ஸமேதனாயும், அனந்த கருட விஷ்வக்ஸேநாதி நித்யர்களாலும் முக்தர்களாலும் பரிசரித சரணயுகளனாயும், அனந்த போக பர்யங்கத்தில் எழுந்தருளியிருக்குமிருப்பு.

## வ்யூஹ ஸ்திதி நிரூபணம்

வ்யூஹமாவது — அந்த விக்ரஹத்தில் நின்றும் உத்பந்நங்களான வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்த ரூபங்களை யுடையவனாய்க்கொண்டு, ஆமோதாதி லோகங்களிலும் க்ஷீராப்தியிலும் எழுந்தருளியிருக்குமிருப்பு. இவற்றுள் வ்யூஹ வாஸுதேவ ஸ்வரூபர் ஷாட்குண்ய பரிபூர்ணராயிருப்பர். மற்ற மூவர்களிடத்திலும் இரண்டிரண்டு குணங்களே ப்ரகாசிக்கும்.

## விபவாவதார நிரூபணம்

விபவமாவது—வ்யூஹத்தில் அநிருத்தனிடத்தில் நின்றும் உண்டான ராமகிருஷ்ணாதி ரூபங்களையுடையவனாயிருக்குமிருப்பு. இவைகள் பூர்வணாவதாரமென்றும் ஆவேசவதாரமென்றும் இரண்டு வகையாயிருக்கும். அவற்றுள் பூர்வணாவதாரமாவது—அவதார விக்ரஹங்களில் ஜீவத்வாரா அதிஷ்டாதாவாயிருக்கை யன்றிக்கே, தானே அதிஷ்டாதாவாயிருக்கை. ஆவேசாவதாரமாவது—விக்ரஹத்துக்கு அதிஷ்டாதாவான ஜீவனிடத்தில், விக்ரஹ வசிஷ்ட ஸ்வருபத்தாலும் கேவல சக்தியாலும் ஆவேசித்துக் கொண்டு எழுந்தருளியிருக்கு மிருப்பு. பூர்ணாவதாரம் ராம கிருஷ்ணாத்யவதாரங்கள்; ஆவேசாவதாரங்கள் பரசுராம, பலராமாத் யவதாரங்கள். சக்தியாவேச ரூபங்கள் ப்ரஹ்ம ருத்ராதிகள் வ்யாஸார்ஜுநாதிகள். இவைகளில் பூர்ணாவதாரமான ராமகிருஷ்ணாதி விக்ரஹங்கள் அப்ராகிருதங்கள்.

## அந்தர்யாமி நிரூபணம்

அந்தர்யாமியாயிருக்கை யாவது-ஸமஸ்த சேதனர்களுடைய ஸ்வரூபங்களிலும் அசேதனங்களிலும் சேதனத் வாராவும், ஸாக்ஷாத்தாகவும் பிரத்தியேகம் பரிஸமாப்ய வர்த்தியாய் எழுந்தருளியிருக்கும் இருப்பு. இது எதுபோலென்னில், ஜாதி பதார்த்தம் ஒன்றுகவே யிருந்தாலும், வ்யக்திகள் தோறும் பிரத்யேகம் பரிஸமாப்யவர்த்தியா யிருக்குமாப்போல யென்க. இந்த விஷயம் "ச்ருதேஸ்து சப்த மூலத்வாத்" என்கிற ஸூத்ர வ்யாக்யாநாவஸரத்தில் வேதாந்த தீபத்தில் ஸ்ரீ பாஷ்யகாரரால் ஸ்பஷ்டமா யருளிச் செய்யப்பட்டிருக்கிறது. அந்தர்யாம் யதிகரண சுருத ப்ரகாசிகையில் "ய: ப்ருதிவ்யாம் திஷ்டந் ய: ஆத்மநி திஷ்டந்" என்று ப்ரதிபர்யாயம் யத் சப்தத்தைப் பிரயோகித்திருப்பது, பகவத் ஸ்வரூபம் வஸ்துக்கள் தோறும் பூர்ணமாயிருக்கு மென்பதை ஜ்ஞாபி (அறிவி)க்

கைக்காக என்றும், இப்படியே வேதார்த்த ஸங்க்ரஹ சுருத ப்ரகாசிகையிலும், சொல்லப் பட்டதென்றும் அறியலாம். ந்யாய ஸித்தாஞ் ஜநத்தில், அத்ரவ்ய பரிச்சேதத்தில் ஜ்ஞானம் நிரவயவ த்ரவ்ய மாகையால் ப்ரத்யேகம் த்ரவ்யங்களில் பூர்ணமாக ஸம்பந்திதித்ருக்கு மென்றும், இப்படியே ஈசுவர ஸ்வரூபமும் வஸ் துக்கள் தோறும் ஜாதிபோல் பூர்ணமாக வர்த்திக்கு மென்றும், இப்படியே பாஷ்ய காரர் வேதாந்த தீபத்தில் அருளிச்செய்திருக் கிறுர் என்றும் தேசிகன் அருளிச் செய்திருக் கிறுர். அன்றியும் க்ருத்ஸ்ந ப்ரஸக்தி அதி கரண ச்ருதப்ராசிகையிலும், "சரீரம்சஸ்ய ப்ரதிவஸ்து பரிஸமாப்ய வர்த்தித்வாத்" என்றே நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

### ரஹஸ்ய த்ரய ஸாரோக்தி நிர்வாஹம்

இப்படியிருக்க, ரஹஸ்ய த்ரய ஸாரத்தில் "ஈசுவர ஸ்வரூபம் வஸ்துக்கள் தோறும் பூர்ண மாக வர்த்திக்குமென்றுல் பேதாபேத வாதம் போல் விருத்த ஸமுச்சய மேற்படும். ஆகை யால், அது அநுப பந்நம்" என்று தேசிகன் அருளிச்செய்திருப்பது அந்வாருஹ்ய வாத மாகக் கொள்ளத்தக்கது. சாஸ்த்ரத்தாலேயே அறிய வேண்டிய அர்த்தங்களில் யுக்தி விரோதம் கூடாதென்பது, "சுருதேஸ்து சப்த மூலத்வாத்" என்கிற ஸூத்ரத்திலும், ஸ்ரீ பாஷ்யத்திலும் பலவிடங்களிலும் காணலாம். இப்படியே நிரவயவ த்ரவ்யங்களில் அந்த:ப்ர தேசமில்லாமையால் அந்தர் வ்யாப்தியில்லை யென்றும், விபுத்ரவ்யங்களில் பஹி:ப்ரதேச மில்லாமையால் பஹிர்வ்யாப்தி கூடாதென்றும் சொல்லுவது, "அந்தர் பஹிச்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:" "ய ஆத்மநி திஷ்டந் ய ஆத்மநோ அந்தர:" என்கிற சுருதி வாக்கியங்களால் ப்ரமாண விருத்தமாம். ப்ர மாண பலத்தால் ஈசுவர வ்யா பநத்துக்கு யோக்யமான அந்த:ப்ரதேசமும் பஹி:ப்ர தேசமும் உண்டென்றே கொள்ளவேணும். இந்த விஷயத்தை ச்ருத ப்ரகாசிகையில் "ய ஆத்மநி திஷ்டந்" என்கிற வித்தால் "வேத் யாம் அக்நிஸ் திஷ்டதி" என்னுமாப்போலே பஹிர் வ்யாப்தியைச் சொல்லுகிற தென்றும், "ஆத்மநோந்தர:"என்கிற வித்தால், "திலே தைலம் திஷ்டதி" என்னுமாப்போலே அந்தர் வ்யாப்தியைச் சொல்லுகிற தென்றும்,அருளிச் செய்திருக்கிறுர். இங்ஙனமன்றிக்கே "அங் குஷ்ட மாத்ர: புருஷ:" என்கிற சுருதியின்படி உபாஸக அநுக்ரஹார்த்தமாக ஹ்ருதய கம் லத்தில் விக்ரஹ விசிஷ்டனுக இருக்குமிருப்பும் அந்தர்யாம்யவஸ்தையில், ப்ரகாரபேதமா யிருக்கும். இந்த விஷயம், 'ஹ்ருத்யபேக்ஷயா துமநுஷ்யாதிகாரத்வாத்" என்கிற ஸூத்ரத் திலும், "நிறைந்த வன்பழி" "வெள்ளைச்சுரிசங் கொடு ஆழி யேந்தி" என்கிற பாசுரங்களு டைய வ்யாக்யானங்களிலும் கண்டு கொள் வது.

### அர்ச்சாவதார ப்ரஸ்தாவம்

இனி அர்ச்சாவதாரம் பிரஸ்தாவிக்கப் படும். அர்ச்சையாவது, "அர்ச்சா பூஜா ப்ரதிமயோ:" என்கிறபடி பிரதிமையென்று சொல்லப்படும். பிரதிமையாவது—தான் ஆரா திக்க வேண்டியதற்காகவும், அந்நியர்களு டைய உஜ்ஜீவனத்துக்காகவும் ஸ்வர்ண ரஜதாதி திரவ்யங்களைக்கொண்டு, தனக்கு அபின்னமாயுள்ள விக்ரஹ ஸஜாதீயங்களாக, ஏறியருளப் பண்ணியிருக்கிற விக்ரஹங்களில் ப்ரதிஷ்டா விசேஷங்களாலும் ஸ்வ ஸங்கல்பத் தாலும் ஆச்ரிதோஜ்ஜீவநார்த்தம் ஸமஸ்த கல்யாண குண விசிஷ்டனுய்க்கொண்டு எழுந் தருளியிருக்கு மிருப்பு. இந்த விக்ரஹங்கள் ப்ராகிருத த்ரவ்யங்களால் ஏற்பட்டிருந்த போதிலும், "தமருகந்ததெவ்வுருவம் அவ் வுருவம்தானே" என்கிற படியாலும், "ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்தி:" என்கிறபடி யாலும், "ந பூத ஸங்க ஸம்ஸ்தாந:" என்கிற படியாலும், ஈசுவரனுடைய ஸங்கல்பத்தாலே அப்ராகிருதங்களாகவே யிருக்கும். எப்படி விபவத்தில் விக்ரஹங்கள் ப்ராகிருத ஸஜா தீயங்களாயிருக்கச் செய்தேயும், அப்ராகிரு தங்களென்று ப்ரமாண பலத்தால், கொள்கி றேமோ அப்படி இந்த அர்ச்சா விக்ரஹங்களும் அப்ராகிருதங்கள் என்று கொள்ளத்தட்டில்லை.

இங்ஙனன்றிக்கே, "பிம்பா கிருத் பாத்ம நா பிம்பே ஸமாகத் யாவதிஷ்டதே" என்கிற படியே அந்த விக்ரஹங்களில் தத் ஸஜாதீயங் களான அப்ராக்ருத விக்ரஹங்களுடன், பாலும் நீரும் கலந்தாற்போல் எழுந்தருளியிருக்கு மென்பது தேசிகன் திருவுள்ளம். எப்படி யிருந்த போதிலும், இந்த அர்ச்சா விக்ரஹங் களில் ஸர்வஜன ஸாதாரணமாகவே ஸேவை ஸாதிக்கிற கிரமமில்லாமல், சில ஜ்ஞானுதிகர் களுக்கும், அவர்களுடைய கடாக்ஷத்துக்கு விஷயமாயிருக்கிற சிலர்களுக்கும், இப் பொழுது ஸேவை ஸாதிக்கிற ப்ரகாரத்தைக்

காட்டிலும், விலக்ஷண ஸௌந்தர்யனாய்க் கொண்டு ப்ரத்யக்ஷ விஷயமாகிறான். இந்த விஷயத்தை மணவாள மாமுனிகள், "சிலர்க்கு அழகாலே பிறக்கும்" என்கிற ஸ்ரீ வசன பூஷண ஸூத்ர வ்யாக்நாவஸரத்தில் அர்ச்சையில் காதாசித்மாக விக்ரஹ ஸாக்ஷாத்கார முடையவர்களென்று அருளிச்செய்திருக்கிறார்; இதில் அர்ச்சையில் என்றும் காதாசித்க மென்றும் இருப்பதால் விலக்ஷண ஸௌந்தர்யாவிஷ்காரம் உண்டென்றே கொள்ள வேணும். இந்த விஷயம் பிள்ளையுறங்காவில்லி தாஸர் பூர்வாவஸ்தையில் தன்னுடைய பார்யை வெய்யிலில் வருகிறபோது, அவளுக்குத் தாம் நடை பாவடை விரித்துக்கொண்டுவாரா நிற்க, எம்பெருமானார் கண்டருளி இப்படிச் செய்வதேன்? என்று கேட்க, இவளுடைய கண்ணழகுக்கு வெய்யிலின் தாபத்தால் வாட்டம் வருமென்று செய்தேன் என்று சொல்ல, அப்படியானால் இது தன்னிலும் விலக்ஷணமான கண்ணழகைப் பார்ப்பீர் வாரும் என்று அவரை அழைத்துக் கொண்டு போய்ப் பெரிய பெருமாளுடைய திருக்கண்ணழகை ஸேவிக்கப் பண்ணுவிக்க, அதுமுதல் அவர் விஷயாந்தர வைராக்யமுள்ளவராய் பகவத் விஷயத்தில் விசேஷமான பரிவுடையவராயிருந்துகொண்டு எப்பொழுதும் பெருமாளுடைய திருமேனி ரக்ஷகராகவே யெழுந்தருளியிருந்தார் என்று ஐதிஹ்ய மேற்பட்டிருக்கிறது.

ஆகையால் இப்போது ஸேவை ஸாதிக்கிற ப்ரகாரமில்லாமல் விலக்ஷண ஸாக்ஷாத்காரம் உண்டென்று ஏற்படுகிறது. இப்படியே தொண்டரடிப்பொடியாழ்வார் ஸ்ரீஸூக்தியில் 'போதரேயென்று சொல்லிப் புந்தியிற் புகுந்து, தன்பால் ஆதரம் பெருக வைத்த அழகன்' என்பதாலும் இந்த விஷயம் ஸ்பஷ்டம். பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்திலும் ஆழ்வான் வரதராஜ ஸ்தவத்திலும் மற்றுள்ள ஸூக்திகளிலும் பெருமாளுடைய விக்ரஹ ஸௌந்தர்ய வர்ணனம் செய்திருப்பதற்கு நிபந்தனம் விலக்ஷண ஸௌந்தர்யஸாக்ஷாத்காரமே தவிர வேறில்லை அதிசயோக்தியென்று சொல்லுமது பகவத் விஷயத்தில் அநுபபந்நம்.

### அர்ச்சாவதார ப்ரபேதங்கள்

இந்த அர்ச்சாவதாரங்கள் ஸ்வயம் வ்யக்தமென்றும், ஆர்ஷமென்றும், தைவமென்றும், ஸைத்தமென்றும், மாநுஷமென்றும் பல ப்ரகாரபேதங்களை உடைத்தாயிருக்கும். இது பரார்த்தம்.

இங்ஙனன்றிக்கே தங்கள் தங்கள் கிருஹங்களிலும் ஸ்வார்த்தமாக ப்ரதிஷ்டிதங்களாயிருக்கும்.

இப்படியான அர்ச்சாவதாரங்கள் கீழே நிரூபித்த பரவ்யூஹாதிகள் போலன்றிக்கே, ஆச்ரயணத்துக்கு அத்யந்தோபயுக்தமான ஸௌலப்ய பூர்த்தியிருப்பதால், ஆழ்வார்களும் ஆசார்யர்களும் இவற்றைப் போர விரும்பியிருப்பர்கள். பாஞ்சராத்ரத்திலும் "ஜ்யாயாம்சவைவோத்தரோத்தர:" என்று மிக மேலானதாகச் சொல்லப்பட்டது. இப்படி இந்த அர்ச்சாவதார வைபவம் பல ப்ரமாணங்களாலும் ஸித்திக்கும். ஸ்ரீராமாயணத்தில், இக்ஷ்வாகு குல ராஜாக்களுக்கு ஆராதநீயமான மூர்த்திவிசேஷம் அர்ச்சாவதாரம் என்றறியலாம்படி, "ஸஹ பத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயண முபாகமத்; அலங்கார விதிம் க்ருத்ஸ்நம் காரயாமாஸ வேச்மநி:" என்றும், "ஸ்ரீமத்யாயதநே விஷ்ணோ: சிச்யே நரவராத்மஜ:" என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீபாகவதத்திலும் பலராமனுடைய தீர்த்த யாத்திரையில், "ஸ்ரீரங்காக்யம் மஹாபுண்யம்" என்றும், ஏகாதச ஸ்கந்தத்தில் அர்ச்சா விக்ரஹ ப்ரதிஷ்டை முதலானதும், வ்யக்தமாகச் சொல்லியிருக்கிறது. இன்னும் ப்ரமாணோபந்யாஸங்கள் பண்ணுவதை விஸ்தர பயத்தால் நிறுத்திவிட்டேன. இப்படி ஈசுவர தத்வம் நிரூபிக்கப்பட்டது.

### இனி ஹிதம் என்று சொல்லப்படும் உபாயஸ் ஸ்வரூப நிரூபணம்

உபாயமாவது—தான் அடைய வேண்டிய நிரதிசய புருஷார்த்தமான மோக்ஷத்துக்கு ஸாதனமாக அநுஷ்டிக்கப்படுமவையான கர்ம யோகம், ஜ்ஞான யோகம், பக்தி யோகம், ப்ரபத்தி, தேச வாஸம், திருநாம ஸங்கீர்த்தனம், அவதார ரஹஸ்ய ஜ்ஞாநம் முதலானவைகள்.

இவை மோக்ஷத்துக்கு ஸாதநமாகையாவது—மோக்ஷ ப்ரதனான ஈசுவரனுக்கு இவனுடைய அபராதத்தால் உண்டான நிக்ரஹத்தைமாற்றி, ப்ரஸன்னனாம்படி செய்து, பல ப்ரதானத்துக்கு உபயுக்தமான ஸங்கல்பத்தை உண்டாக்குகை.

இப்படியாக ஈசுவர ப்ரஸாதத்துக்கு ஹேதுவாகையாலே, இவ்வுபாயங்கள் கரண

மென்று வ்யவஹாரிக்கப்படும். கீழ் நிரூபித்த படி ஈசுவரனே காரணமாகிறபடியால் இவை களைக் காரணமென்பது ஔபசாரிகமாகையால் வ்யாஜோபாயங்களாம்.

வ்யாஜமாகையாவது — அந்யார்த்தமாக அநுஷ்டிக்கப்படுமது ப்ரஸங்காத் உத்தேச்ய விஷயத்துக்கு உபகாரமாயிருக்கு யிருப்பு. இங்கு "மாதா பிதா ப்ராதா" என்கிற ப்ரமாணத்தின்படி ஸர்வ வித பந்துவாயிருக்கிற ஸர்வேசுவரன் விஷயத்தில் ஸ்வதஸ் ஸித்தமாய் ஸ்வயம் ப்ரயோஜனமாய்ச் செய்யப்படுமிவை நிக்ரஹ நிவ்ருத்திக்கு ப்ரயோஜனமாகின்றன. அதாவது "நெற் செய்யப் புல்தேயுமாப் போலே" தன்னடையே கழியச் செய்வது.

இப்படியிருக்க, வஸ்து ஸ்திதியை அறியாமல் உபாய புத்த்யா அநுஷ்டித்தாலும் கார்ய கரமாகத் தட்டில்லை; அப்படிச் செய்கிறவன் ஈசுவரனுக்கு அத்யந்தாபிமதனல்லன். இந்த விஷயம் ஸ்ரீ பாஷ்யத்தில் சுருதப்ரகாசிகை லகு ஸித்தாந்தத்தில் "ப்ரியதம ஏவஹி வரணீயோபவதி" என்கிற இடத்தில், "ஸ்வயமுபஸ்திதஸ்ய ஸ்வீகார ஏவ" என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இந்த விஷயம் மேல் விசதமாய் நிரூபிக்கப்படும்.

இப்படியிருந்துள்ள கர்ம யோகாதிகள் ஸ்வயம் ப்ரயோஜன ப்ரீதி ஸாதனங்களான கைங்கர்யங்கள். இவைகளை பல ஸாதநமாக புத்தி பண்ணாமல் பலமாகவே நினைக்கவேணும். அப்படியன்றிக்கே ஸாதனபுத்தி பண்ணுவது பார்யையானவள் பர்த்ரு சுச்ரூஷைக்குப் பலத்தை யபேக்ஷித்தாற் போலேயும், புத்ரன் மாத்ரு சுச்ரூஷைக்குப் பலத்தை அபேக்ஷித்தாற் போலேயும் இருக்குமாகையால், ஈசுவரனுக்கும் தனக்கும் உண்டான நிருபாதிக ஸம்பந்தத்துக்குக் கொத்தையா மித்தனை.

## கர்மயோக நிரூபணம்

இனி கர்மயோகம் நிரூபிக்கப்படும். கர்ம யோகமாவது— நித்யங்களாயும், நைமித்திகங்களாயும் உள்ள கர்மங்களை பலத்தை அபேக்ஷியாமல் கேவல பகவதாராதனமாக அநுஷ்டிக்கை.

## ஜ்ஞானயோக நிரூபணம்

இனி ஜ்ஞாந யோகமாவது— இப்படியிருந்துள்ள கர்மயோக அநுஷ்டானத்தாலே ரஜஸ் தமஸ்ஸுக்கள் நிவ்ருத்தங்களாய் ஸத்வம் தலையெடுத்து, நிர்மலமான அந்த: கரணத்தை உடையவனுக்கு ஆத்மாவலோகன ஸாதனமாக ஏற்படுகிற ஜ்ஞாந விசேஷம். இப்படியிருந்துள்ள கர்மயோக ஜ்ஞானயோகங்கள் பக்திக்கு அங்கங்களாகவே நிரூபிக்கப்படுகின்றன. கீதையில், இவை ஸ்வதந்த்ரோபாயங்களாகச் சொல்லப்பட்டுள்ளன. ஸ்ரீபாஷ்யத்தில் கர்மயோக ஜ்ஞானயோகங்களுக்கு ஸ்வாதந்திரிய நிஷேதம் சொல்லவில்லை. ஆதலால் இரண்டு பக்ஷங்களும் உபபந்நங்கள்.

## பக்தி யோக நிரூபணம்

இனி பக்தியாவது—கர்மயோக ஜ்ஞாந யோகங்களை அங்கங்களாகவுடையதாய் "அநு வித்ய விஜாநாதி; விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத" என்கிற ப்ரமாணத்தின்படி அத்யயனத்தாற் போந்த ஸம்ஸ்கிருத வேதார்த்த ஜ்ஞானமடியாக வருகிற தைலதாராவத் அவிச்சிந்ந ஸ்மிருதி ஸந்ததி ரூபமாய் தர்சன ஸமானாகாரமாய் ப்ரீதி ரூபமா யிருப்பதொரு ஜ்ஞான விசேஷம்.

இந்த பக்தி ஸ்மிருதி ஸந்ததி ரூபமாயிருந்தாலும், பாவநா ப்ரகர்ஷத்தாலே ப்ரத்யக்ஷ ஸமானாகாரமாகப் பரிணமிக்கிறது, பக்திக்கு விஷயமான பகவத் ஸ்வரூப ரூப குணங்கள் நிரதிசயா நுகூலங்களாயிருப்பதால் ப்ரீதி ரூபாபந்நமாகும்.

## பக்தியோகாதிகாரி நிரூபணம்

இப்படியிருந்துள்ள பக்தியில் த்ரைவர்ணிகர்களுக்கே அதிகாரமுண்டு. அப்படியன்றிக்கே ஆசார்யருடைய அநுக்ரஹ விசேஷத்தாலே, நாரதருடைய உபதேசத்தால், த்ருவனுக்குக் கிடைத்தாற் போலே வருகிற பக்தி ஸர்வாதிகாரையாம். இந்த பக்திக்கு அவரவர் வர்ணங்களுக்கு உசிதங்களான தர்மங்கள் அங்கங்கள். இந்த விஷயம் கீதா பாஷ்ய தாத்பர்ய சந்திரிகையில், "ஸ்த்ரியோ வைச்யாஸ் ததா சூத்ரா:' என்கிற சுலோக வ்யாக்யான முடிவிலும், தத்வ முக்தா கலாபத்தில், "பும்பிஸ் ஸித்தாதிகாரை:" என்கிற சுலோகத்திலும், தேசிகரால் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. உபநிஷத் பாஷ்யத்தில் நாரதருக்கு பூர்வம் சூத்ர ஜன்மாவிலே ருஷிகள் அநுக்ரஹத்தாலே, பக்தி யோகம் ஏற்பட்டிருப்பதால், பக்தி ஸர்வாதிகாரை யென்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

இங்ஙனமன்றிக்கே ஸர்வேசுவரனுடைய நிர்ஹேதுக கடாக்ஷ விசேஷத்தாலே "மயர்வற மதிநல மருளினன்" என்கிறபடியே ஆழ்

வார்களுக்குக் கிடைத்திருக்கிற பக்தியுமொன்றுண்டு.

ப்ரபந்நர்களுக்கு "பகவந் பக்திமபி ப்ரயச்சமே" "ஸ்தாந த்ரயோதித பரபக்தி யுக்தம் மாம் குருஷ்வ" என்கிறபடியே, உண்ணுகைக்குப் பசிபோலே, அநுபவ உபகரணமாய் வருகிற பக்தியும் ஒன்றுண்டு—இந்த பக்திக்கு பரபக்தி, பரஜ்ஞான, பரம பக்திகளாகிற அவஸ்தாபேதங்கள் உண்டாகும்.

**பரபக்தி பரஜ்ஞான பரமபக்தி நிரூபணம்**

இவற்றுள் பரபக்தியாவது—தர்சன ஸமானாகாரமான ஜ்ஞான விசேஷம். பரஜ்ஞானமாவது—இதிலும் விசதமான ஸங்கமாவஸ்தா பந்நமான ஜ்ஞான விசேஷம். பரமபக்தியாவது—இப்படி மானஸாநுபவம் செல்லாநிற்கச் செய்தே பாஹ்ய ஸம்ச்லேஷத்தில், அபேக்ஷை பிறந்து, அது பெறுவிடில் தரிக்க அரிதான அவஸ்தா விசேஷம்.

இப்படியான பக்தி நம்வாழ்வாருக்குத் திருவிருத்தம் முதல், "திருமாலிருஞ்சோலை மலை" என்கிற திருவாய்மொழியளவும் பரஜ்ஞான கர்ப்ப பரபக்தியாயிருக்கும். "சூழ்விசும் பணி முகில்" பரஜ்ஞான தசாபந்நமாயிருக்கும்: "முனியே நான்முகனில்" பரமபக்தி தசையை அடைந்திருக்கும்.

உபாஸகர்களுக்கு சரம சரீராவஸானத்தில் இப்படியான தசைகள் பிறக்கும். ப்ரபந்நர்களுக்கும் அப்படியே. இப்படியன்றிக்கே, "பக்த்யா சாஸ்த்ராத் வேத்மி ஜநார்த்தனம்" என்கிறபடியே யதாவஸ்திதமான, சாஸ்த்ர ஜ்ஞானத்துக்கு, ஸாதனமான விசுவா ஸாதிகையான பக்தியுமுண்டு. இந்த விஷயம் "மந்த்ரே தத் தேவதா யாஞ்ச ததா மந்த்ரப்ரதே குரௌ, த்ரிஷு பக்திஸ் ஸதா கார்யா ஸாஹி ப்ரதம ஸாதநம்" என்கிற சுலோகத்திலும் கண்டு கொள்க, "ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ்ச தத்தேந ப்ரவேஷ்டுஞ்ச பரந்தப" என்கிற கீதா சுலோகத்திலும் ஸ்பஷ்டம்.

இந்த பக்தி, "உத்தர பூர்வாகயோ ரச்லேஷ விநாசௌ" என்கிற ஸூத்ரத்தின்படி உபாஸனத்துக்கு முன்பு பலோன்முகமாகாமலிருந்துள்ள, பூர்வாகங்களையும், ப்ராமாதிகங்களாய் வருகிற உத்தரா கங்களையும் [போய பிழை, புகுதருவானின்றன] நிவர்த்திப்பிக்கும். அப்படியல்லாமல் புத்திபூர்வகமாக உத்தராகங்கள் நேர்ந்தால், அது ப்ராயச்சித்த விநாச்யமாகும்; அதுவும் பக்தியாலாம். பலோன்முகமான ப்ராரப்த கர்மாவின் அவஸானத்தில் மோக்ஷத்தைப் பண்ணிக் கொடுக்கும்.

மோக்ஷதசையில் இந்த பக்தியே போஜனத்துக்கு க்ஷுத்துப் (பசி)போலே, பரமபக்திகளாகிற அவஸ்தைகளையுடையதாய்க் கொண்டு, அனுபவோபகரணமாயும், பல பூதையாயுமிருக்கும்.

இங்ஙனமன்றிக்கே, அவதார ரஹஸ்ய ஜ்ஞானத்தை அங்கமாகவுடைய பக்தியோகம், "த்யக்த்வா தேஹம் புநர்ஜன்ம நைதிமாமேதி ஸோர்ஜுந" என்கிற கீதையின்படி ப்ராரப்த சரீராவஸானத்தில் ப்ரபத்தியைப்போல் பலத்தைக் கொடுக்கும். இந்த பக்தி ஸர்வ பாபங்களுக்கும் நிவர்த்தகையாயிருந்தபோதிலும் ப்ரஹ்மவிதபசாரம் நேர்ந்தால், பலப்ரதாநோபயுக்தமாகமாட்டாது. இந்த விஷயமும் ஸ்ரீபாஷ்யாதிகளில் ஸ்பஷ்டம்.

இந்த பக்திக்கு விஷயமாயிருக்கிற பகவத் ஸ்வரூப ரூப குண விபூதிகள் நிரதியானுகூலங்களாக விருக்கிறபடியால் இதுவும் ப்ரீதி ரூபையாகவும் பல ரூபையாகவுமிருக்கும். இந்த விஷயம் "ஸ்மர்யமாணத்யர்த்த ப்ரியத்வேந ஸ்வயமப்யத்யர்த்த ப்ரிய:" என்று ஸ்ரீ பாஷ்யத்தில் அநுக்ரஹிக்கப்பட்டது.

ஸ்ரீ பாஷ்யத்தில் பலாத்யாயத்தில் பக்தியை நிரூபித்திருக்கிறதும் இதைப்பற்றியதாம். இந்த விஷயம் சுருத ப்ரகாசிகையில் வ்யக்தம். ஆதலால், சேமுஷீ பக்தி ரூபா" என்று ப்ரார்த்திக்கப்பட்டது. விஷ்ணு புராணத்திலும், "யா ப்ரீதி ரவிவேகாநாம் விஷ்யேஷ் வநபாயிநீ, த்வா மநுஸ்மர தஸ் ஸாமே ஹ்ருதயாந் மாபஸர்ப்பது' என்று ப்ரஹ்லாதனால், ப்ரார்த்திக்கப்பட்டிருக்கிறது அப்படியே ஆழ்வார்களும் பலவிடங்களில் ப்ரார்த்திக்கிறார்கள். இத்தை ஸாதனமாக்குவது பசிக்குண்ணும் பாலையே மருந்தாக்குவதுபோலுமிருப்பதொன்று. அந்த ஸாதனத்வமும் ஸ்வயம் ப்ரயோஜன ப்ரீதி ஸாதனத்வ ரூபம். அதவா, ஜாநாதி, இச்சதி, யததே, கரோதி என்கிற கிரமத்தில் பகவததிசயாதாயக கிருதி ஸந்ததி ரூபமான பலத்தில் இச்சாபர பர்யாய ரூபமான அபிநிவேசமாய்க்கொண்டு திருஷ்டவிதயா ஸாதனமாயிருக்கும்.

இப்படியன்றிக்கே அதிருஷ்டதயா மோக்ஷ ஸாதனமாக்குவது பர்த்ருபோகத்தை பார்யை வயிறு வளர்க்கைக்கு உறுப்பாக்கு மாப் போலே யிருப்பதொன்று. ஆதலால் இந்த பக்திக்குப் பலத்வாகாரமே ஸ்வாபாவிகம். ஸாதநத்வாகாரம் சேதனனுடைய புத்தியால் ஆரோபிதம். ஸ்ரீபாஷ்யத்தில் இதை ஸாதன மாக நிருபித்திருப்பது அத்வைத மத நிராஸ தாத்பர்யத்தாலே. அதாவது— அத்வைதி காளால் வாக்யார்த்த ஜ்ஞானமானது மோக்ஷ ஸாதனமாக ப்ரதிபாதிக்கப்பட்டிருப்பதால், அந்த வாக்யார்த்த ஜ்ஞானத்தைக் காட்டிலும் வேறுபட்டிருக்கிற பக்தி ரூபாபந்ந ஜ்ஞானமே மோக்ஷ ஸாதனமாமென்று பிரதிபாதித்தபடி; பக்திக்கு ஸாதனத்வ ஸ்தாபனத்தில் தாத்பர்யமில்லை. ஸ்ரீபாஷ்யம் ஸாத்ய பக்தி பர மென்றே சுட்டில், "வீடுமின் முற்றவும்" பிர வேசத்தில் வ்யவஹரிக்கப் பட்டிருக்கிறது. ஸாதந பக்தி பரமாக நிருபிப்பது சரமசுலோகத் துக்கு அங்கப்ரபத்தி பர நிர்வாஹம் போலே.

இந்த பக்திக்கு ப்ரபத்தி அங்கமாயிருக்கும். கர்ம யோகாசக்தனுக்கு கர்ம யோக ஸ்தானத்தில் ப்ரபத்தி அநுஷ்டிப்பதும் ஒன்றுண்டு. அப்படியே ஜ்ஞான யோகாசக்தனுக்கு ஜ்ஞானயோக ஸ்தானத்தில் ப்ரபத்தி யனுஷ்டிப்பது மொன்றுண்டு. இந்த விஷயத்தை "மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்திதே." "தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யேத்" என்று கீதாசார்யன் அருளிச்செய்தான். "ப்ரபந்நா தந்யேஷாம் நதிசதி முகுந்தோ நிஜபதம் ப்ரபந்நச்ச த்வேதா" என்று தேசிகனும் அளிச்செய்தார்.

இப்படியிருந்துள்ள பக்தி யோகத்தை அநுஷ்டிக்கிறவன் நித்யங்களாயும் நைமித்திகங்களாயுமுள்ள கர்மாக்களை பக்திக்கு அங்கங்களாகவே அநுஷ்டிக்கக்கடவன். அந்தக் கர்மாக்களை "விஹிதத்வாத்......." என்கிற ஸூத்ரத்தின்படி விஹித புத்தியால் அநுஷ்டிக்கக் கடவனல்லன். அப்படி விஹிதத்வ புத்தியால் அநுஷ்டிக்கிறவன் முமுக்ஷுவல்லாத புபுக்ஷுவான சேதனனே, பக்தியோக நிஷ்டனுக்கு கர்மாக்களை பக்திக்கு அங்கமாகவே அநுஷ்டிக்க வேணுமென்பதற்கு ப்ரமாணம், "ஸஹகாரித்வேந ச", "அக்நிஹோத்ராதிது தத்கார்யாயைவ தத் தர்சநாத்" என்ற ஸூத்ரங்களாம். இவற்றின் அர்த்தம். பக்தியோக நிஷ்டன் பக்தியோகங்களுக்கு ஸஹகாரியாக நித்ய நைமித்திக கர்மாக்களை அநுஷ்டிக்கக் கடவன்: அக்நிஹோத்ரம் முதலான நித்ய நைமித்திக கர்மாக்கள் பக்தியோக நிஷ்பத்திக்காகவே ஏற்பட்டவைகள் என்பதாம்.

அப்படி ப்ரமாணமிருப்பதால் பக்தியோக நிஷ்டன், விஹிதத்வ புத்தியால் அநுஷ்டிக்கும் பக்ஷத்தில் யோக தசையில் நித்ய நைமித்திகங்களுக்கு லோபம் வருவதால் ப்ரத்யவாயம் ஏற்படும். அப்படி ப்ரத்யவாயம் ஏற்படும் பக்ஷத்தில் "ஸந்த்யா ஹீநோ அசுசிர் நித்யம்" என்கிறபடியே பக்தி யோகாநுஷ்டானத்துக்கு அநர்ஹனுகவே ஆவன். அங்க புத்த்யா அநுஷ்டிக்கும் பக்ஷத்தில், அங்கியான பக்தி யோகத்தினுடைய அநுஷ்டானத்துக்கு விரோதமில்லாமலிருக்கிற காலத்தில் அநுஷ்டிக்கப் படவேண்டியதாகையால், இந்த தோஷம் வாராது. இந்த விஷயத்தை சுருத ப்ரகாசிகையில் "அங்க்யவிரோ தேந அங்கமநுஷ்டேயம்" என்றும், யோக தசையிலேற்படுகிற நித்ய, நைமித்திக கர்ம லோபத்தால், ப்ரத்யவாயம் ஏற்படாதென்றும் நிருபிக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் விஹிதத்வ புத்த்யா அநுஷ்டித்தாலும் யோக தசையில் ஏற்படுகிற நித்ய நைமித்திக கர்ம லோபத்துக்கு "யோகமேவ நிஷேவேத" என்கிற ப்ரமாணத்தின்படி மேல் அநுஷ்டிக்கப்படுகிற பக்தியோகமே ப்ராயசித்தமாகுமென்றுல், அந்தபக்தியோகம் அபுத்திபூர்வமாக ஏற்படுகிற பாபத்துக்கு ப்ராயசித்தமாகுமே யல்லது, யோகதசையில் புத்திபூர்வமாக செய்யப்படுகிற கர்ம லோபங்களுக்கு ப்ராயசித்தமாக மாட்டாது. இதையும் அபுத்தி பூர்வகம் என்று சொல்லும் பக்ஷத்தில், இந்த கர்மலோபத்துக்கு ஹேதுவான பக்தியோகத்தைத் திரும்பவும் அநுஷ்டிக்கவே கூடாது.

ஆதலால் பக்தியோக நிஷ்டன் நித்ய நைமித்திக கர்மாக்களை அங்கங்களாகவே அநுஷ்டிக்கக்கடவன். விஹித புத்த்யா அநுஷ்டிக்காமையால் யோக தசையி லேற்படுகிற நித்ய நைமித்திக கர்மலோபத்தால் ப்ரத்யவாயம் ஏற்படமாட்டாது.

ப்ரபன்னன் இந்த கர்மாக்களை கைங்கர்ய புத்த்யா அநுஷ்டிக்கடவன் இதன் நிருபணம் பிரபத்தி நிருபணத்தில் விசதீகரிக்கப்படும். பக்தியோக நிஷ்டனுக்கு விஹிதத்வாகாரம்

த்யாஜ்யம். அங்கத்வாகாராம் உபாதேயம். ப்ரபன்னனுக்கு விஹிதத்வாகாரமும் அங்கத் வாகாரமும் த்யாஜ்யம்: கைங்கர்யத்வாகாரமே உபாதேயம்.

## பக்தியோக ப்ரபே நிதருபணம்

இப்படி பக்தி ஸ்வரூபம் நிரூபிக்கப் பட்டது. இந்த பக்தி, சாந்தோக்யம் முதலான உபநிஷத்துக்களில் அந்தந்த ப்ரகரணங்களில் சொல்லப்படுகிற அந்தந்த குணங்களோடு கூடிய ப்ரஹ்ம ஸ்வரூப விஷய பேதத்தாலே யும், ஸத்வித்யை முதலாகவுள்ள அநேக வித்யா பேதத்தாலேயும் வேறுபட்டிருக்கும். இப்படி பஹுப்ரகாரமான பக்திக்கு விஷய பேதமிருந்த போதிலும் "விகல்போ விசிஷ்ட பலத்வாத்" என்கிற ஸூத்ரத்தின்படி அபரிச் சின்ன ப்ரஹ்ம விஷயக அநுபவ ரூபமான மோக்ஷபலம் ஏகரூபமாயிருப்பதால், பல பேத மில்லே. இப்படி ஏகரூபமாயிருந்துள்ள பலத் துக்கு ஸத்வித்யை முதலான வித்யைகள் அக்நியைக் குறித்து அரணிக்கட்டையும், நெருப்புக் கல்லும்போலே தனித்தனி கார ணங்களாம். குடத்துக்கு தண்ட சக்கரங்கள் போலே இரண்டும் சேர்ந்து ஒன்றுபட்டகார ணங்களாகா.

இப்படி வித்யைகளுக்கு ப்ரத்யேகம் காரணத்வ மிருக்கையாலே அவை வேறுபட்ட பலவாக வழங்கப்படும். இப்படி அபரிச்சின்ன ப்ரஹ்ம விஷயக அநுபவரூபமான பலம் ஒரே படியாயிருப்பதால், நித்யர்களுக்கும், முக்தர் களுக்கும், ஈசுவரனுக்கும் பிராட்டிமார் களுக்கும் ஆனந்தத்தில் தாரதம்யமில்லே. ஆனாலும் இந்தந்த வித்யைகளில் உபாஸ்ய தயா விஹிதங்களான குணங்களே அநுபாவ் யங்களாம். அப்படி உபாஸனத்தில் விஷயமல் லாத குணங்கள் அநுபாவ்யமாகாவாம். இந்த விஷயம் "யதா க்ரது ரஸ்மிந் லோகே புருஷோ பவதி" "தம் யதா யதோபாஸதே ததைவ பவதி" என்கிற சுருதிகளில் விளங்கும். இவற்றின் அர்த்தம். யாவனொருவன் எப்படிப் பட்ட குணத்தோடு கூடிய ப்ரஹ்மோபாஸ நத்தைப் பண்ணுகிறானோ, அவன் அப்படிப் பட்ட குணத்தோடு கூடிய ப்ரஹ்ம விஷயக மான அநுபவத்தை அடைகிறான் என்பதும் ப்ரஹ்மத்தை எந்த ப்ரகாரமுடையதாக உபா ஸிக்கிறானோ? அந்தப்ரகாரமுடையதாகவே அநுபவிக்கிறான் என்பதுமாம்.

இப்படியே ஸ்ரீ பாஷ்யத்திலும் சுருத ப்ரகாசிகையிலும் திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச்செய்த ஆறாயிரப்படியிலும் விளங்கும். ஸ்ரீபாஷ்யத்தில் மூன்றாவது அத் யாயம் மூன்றாவது பாதத்தில் "ஏக ஆத்மந: சரீரே பாவாத்" 'வ்யதிரேகஸ் தத்பாவ பாவித் வாத்" என்கிற ஸூத்ரங்களில் சேதனன், ப்ரஹ்ம ஸ்வரூபத்தை உபாஸிக்கும் போதும், அந்த ஸ்வரூபத்துக்கு விசேஷணமான தன்னை யுபாஸிக்கும்போதும், தன்னுடைய அபஹத பாப்மத்வாதி குணங்களோடு கூடிய ஸ்வரூபத் தையே உபாஸிக்கக்கடவன். அந்த அபஹத பாப்மத்வாதி விசிஷ்ட ஸ்வரூபமே அநுபாவ்ய மாயிருப்பதால், என்று அநுபாவ்யமா யிருப்பதே உபாஸ்யமாகச் சொல்லப்பட்டிருக் கிறது. அப்படியே கார்யாதிகரணத்தில் "அப்ர தீகாலம்ப நாந்யதீதி" என்கிற ஸூத்ரத்தில் பஞ்சாக்நி வித்யா நிஷ்டனுக்கு ப்ரஹ்ம ப்ராப் தியும் அபுநராவ்ருத்தியும் சொல்லப்பட்டிருப்ப தால், ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸநமே ஏற்படவேண்டுமென்று ப்ராப்யாநுகுணமாக உபாஸநம் விதிக்கப்பட்டிருக்கிறது. அப்படியே வேதாந்த தீபத்திலும், சொல்லப்பட்டிருக் கிறது. அப்படியே ஐந்மாத்யதிகரண சுருதப்ர காசிகையில், "விபூதே:ச ஜிஜ்ஞாஸ்யாந்தர் பாவ உபாஸா த்ரைவித்ய தத் க்ரது ந்யாயாப் யாம் ஸேத்ஸ்யதி" என்று சொல்லப்பட்டிருக் கிறது. இதற்கு அர்த்தம், உபய விபூதி விசிஷ்ட ப்ரஹ்மத்தையே அடையவேண்டுமாகையால், அதுவே உபாஸ்யமாகவேணும் என்று தத் க்ரது ந்யாயத்தாலேயும், "உபாஸாத்ரைவித் யாத்" என்கிற ஸூத்ரத்தாலேயும் ஸித்திக் கிறது என்பதாம். அப்படி "ஈக்ஷதி கர்ம வ்யப தேசாத் ஸ:" என்கிற ஸூத்ரத்தில் த்யாநமும் ஈக்ஷணமும் ஏக விஷயகமென்று நிரூபிக்கப்பட் டிருக்கிறது. அப்படியே ஆறாயிரப் படியில் நாலாவது பத்து இரண்டாந் திருவாய்மொழி யில் "கோதில வண்புகழ் கொண்டு சமயிகள். பேதங்கள் சொல்லிப் பிதற்றும் பிரான் பரன்" என்கிற பாட்டின் வியாக்யானவஸரத்தில், ஓரோர் குணவிசேஷத்தை அனுபவித்தால், இந்த குணமல்லது மற்றொன்றறியேன் என்று அந்த குணத்துக்குத் தோற்று அடிமையா யிருக்கும் திவ்ய புருஷர்களாலே இதரா நுபூத குணங்களைக் காட்டிலும் ஸ்வாநுபூத குணத் துக்கு வைலக்ஷண்யத்தைவிவசராய்க்கொண்டு,

பரஸ்பரம் சொல்லிப் பிதற்றப்படுகிற என்று பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

இப்படி அநேக ப்ரமாணங்களால், உபாஸ்ய குணங்களே அநுபாவ்யங்களென்றறியத் தகும். இப்படிச் சொல்லும் பக்ஷத்தில், "ஸர்வம்ஹ பச்ய:பச்யதி ஸர்வமாப்நோதி ஸர்வச:" என்கிற சுருதியில் சேதனன் முக்தி தசையில் ஸர்வ குணங்களையும் ஸாக்ஷாத்கரிக்கிறான் என்றும் அனுபவிக்கிறானென்றும் சொல்லுகிறபடியால் இது கூடும்படி யெங்ஙனேயென்னில், இந்த ஸர்வ சப்தம் 'ஸர்வேப்யோ தர்சபூர்ண மாஸௌ" என்னுமாப்போலே, உபாஸ்ய குண ஸமுதாய பரமாம். அல்லது ஸர்வ வித்யாநுயாயியான அநந்தத்வத்தில் ஸாமாந்ய ரூபேண ஸர்வ குணங்களும் விஷயமாகையால், ஸர்வகுணங்களும் உபாஸ்யங்களாயும் அநுபாவ்யங்களாயு மிருக்கலாம். அங்ஙனமன்றிக்கே, எந்த உபாஸனத்தில் எந்த குணங்கள் ப்ரகாரங்களாயும் விசேஷ்யங்களாயுமிருக்கும். அந்தகுணங்கள் உபாஸந ரூபமான அநுபவ தசையில், ப்ரகாரங்களாயும் விசேஷ்யங்களாயுமிருக்கும் என்றும் சொல்லலாம். இந்த விஷயம் வேதாந்த தீபத்தில் "ஏக ஆத்மநா சரீரே பாவாத்" என்கிற ஸூத்ர வ்யாக்யாநாவஸரத்தில் "அந்யதா ப்ராப்ய உபாஸ்யயோ: ப்ரகார பேதாத் யதாக்ரது ரஸ்மிந்நிதி விருத்யதே" என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது

மேலும் அனந்த கருட விஷ்வக்ஸேநாதிகளுக்கு வ்யவஸ்தி தங்களாயுள்ள கைங்கர்யங்களில் மற்ற நித்யர்களுக்கும் முக்தர்களுக்கும் ஸகல கைங்கர்யங்களு செய்ய யோக்யதையிருப்பதால், அதிகாரமிருந்தபோதிலும், பகவத் ஸங்கல்ப விசேஷத்தாலே ருசியில்லாமலிருந்த போதிலும் எல்லாருக்கும் ஸ்வாமியான பகவத் விஷயத்தில், அந்தந்த அதிகாரிகளால் செய்யப்படும் கைங்கர்யங்களாலுண்டான பகவந்முகோல்லாஸாநுபவ ஜனிதாநந்தம் ஐகரஸ்யத்தாலே, எல்லாருக்கும் ஸமமாயிருப்பதால் ஆனந்த ஸாம்யம் ஏற்படுவது போலே அநுபவ விஷயத்திலும் அந்தந்த குணவிசிஷ்ட ப்ரஹ்மோபாஸந ஜந்ய பகவத் ஸங்கல்பத்தாலே அந்தந்த குணவிசிஷ்ட ப்ரஹ்மாநுபவம் ஏற்பட்டாலும், கீழ் நிரூபித்தபடி பல தாரதம்யம் இராது.

அநுபாவ்ய குணங்கள் ப்ரத்யேகம் அபரிச்சிந்நங்களாகையாலே, மற்ற குணங்களில் நெஞ்சு செல்ல ப்ரஸக்தியில்லாமையால், உபாஸ்ய குணங்களே அநுபாவ்யங்களாகலாம். ஆதலால் ஸர்வஜ்ஞதைக்கும் குறைவில்லை. இப்படியான ப்ரகாரத்தாலேதான் பெரியாழ்வார் முகப்பில் ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களில் திருவுள்ளம் செல்ல, ஜ்ஞான சக்திகளில் அறிவு செல்லாது, மங்களாசாஸநத்தில் ப்ரவர்த்தித்திருப்பதாலும், அப்படியே நித்ய விபூதியில் திருவனந்தாழ்வான், "ஆங்காரவாரமது கேட்டழலுமிழும்" என்கிற பாட்டின் படி ஈசுவரனுடைய ஜ்ஞான சக்திகளில் அறிவு செல்லாமல், அஸ்தானே பய சங்கையைப் பண்ணுகிறாரென்று சொல்லப்பட்டிருப்பதாலும், இதை அனுஸரித்தே பட்டரும் "ஸ்நேஹா தஸ்தாந ரக்ஷா வ்யஸநிபிரபயம் சங்கசக்ரா பிமுக்யை:" என்று அருளிச் செய்திருப்பதாலும், அந்தந்த வித்யைகளில் உபாஸ்யங்களாக ஏற்பட்ட குணங்களே அநுபாவ்யம் என்னுமிது உபபன்னமாம்.

ஆனால், தேசிகன் "உபாஸித குணாதேர்யா ப்ராப்தாவப்ய பஹிஷ்க்ரியா, ஸா தத் க்ரது நயக்ராஹ்யா நாகாராந்தர வர்ஜநம்" என்று அருளிச்செய்திருப்பது, கீழ் நிரூபித்தபடி ஸாமாந்யரூபமாகவாவது, ப்ரதி ஸ்வீகார ரூபமாகவாவது எல்லா குணங்களும் அநுபாவ்யங்களாயிருப்பதால் விரோதமில்லை.

இப்படியிருந்துள்ள பக்தி ஈசுவரனுக்கு அத்யந்த பரதந்த்ரமான ஸ்வரூபத்துக்கு விருத்தையன்று. (ஆகையால் ஜ்ஞானமுள்ளவர்களுக்கும் அரிதிலடையத் தக்க பக்தியுள்ளவர்களுக்கும், ப்ரபத்தியில் அதிகாரம் உண்டாகத் தடையில்லை.) ஈசுவரனுக்கு அத்யந்த பரதந்த்ரமாயிருக்கையாவது "யஸ்யாத்மா சரீரம்" என்கிற சுருதி ப்ரகாரம் சேதந ஸ்வரூபம் ஈசுவரனுக்கு சாரீரமாகையால், அந்த சரீரரக்ஷணம் சாரீரியான ஈசுவரனுக்கே ப்ராப்தமாயிருக்கையாலே, ஸ்வரக்ஷணே ஸ்வாந்வய ஸூசகமான உபாயாநுஷ்டானத்தில், ப்ராப்தியில்லாமை. அப்படியன்றிக்கே கேவல பரதந்த்ரமாயிருக்கையாக வைத்து அவன் விதித்த உபாயத்தை அவன் கொடுத்த, கர்த்ருத்வ சக்தியைக்கொண்டு அநுஷ்டிக்கை எனினுமாம்.

இவற்றுள் கீழ் நிரூபித்த அத்யந்த பாரதந்த்ரியமே சேதனனுக்கு நிஷ்க்ருஷ்ட ஸ்வரூபம். இந்த விஷயத்தைத் திருக்குருகைப்

பிரான்பிள்ளான் "தன்ஞல் வரும் நன்மை விலேப்பால் போலே; அவஞல் வரும் நன்மை முலேப்பால் போலே" என்று அருளிச்செய்திருக்கிருர். இங்ஙனமன்றிக்கே ஸ்வதந்த்ராய்க் கொண்டு, செய்யும் உபாயாந்தரங்களே "மதிராபிந்து மிச்ரமான சாத கும்ப மய கும்ப கத தீர்த்த ஸலிலம்போலே அஹங்கார மிச்ர மான உபாயாந்தரம்" என்று தியாஜ்ய கோடியில் அருளிச்செய்திருக்கிருர். உபாயாந்தர நிஷ்டனுக்கு உபாயந்தர ப்ரவ்ருத்தி பராதீந கர்த்ருத்வ ஜ்ஞானமடியாகவே வந்திருப்பதால், அஹங்கார மிச்ரமான என்கிற இடத்தில், ஆஞல் என்று கூட்டி யத்யர்த்தமாகச் சொல்வது பொருந்தாது.

இந்த அத்யந்த பாரதந்த்ரியம் திருமந்த்ரத்தில் நம: சப்தத்தால், ஏற்படுகிற அநந்ய சரணத்வ ரூபம். அந்த அநந்ய சரணத்வமும் கீழ் நிரூபித்தபடி உபாயாந்தரா நுஷ்டானத்துக்கு, யோக்யதையில்லாமை. இப்படியிருந்துள்ள அநந்ய சரணவத்தை ப்ரபத்திக்கு அதிகாரமாக "அநந்ய சரணத்வாதே: அதிகாரஸ்ய ஸித்தயே, தாரஸ்ய நமஸ: சோபௌஸாரௌ தேசிக தர்சிதௌ" என்று தேசிகன் அருளிச்செய்தார்.

இந்த அர்த்தத்தை நம்மாழ்வாரும் பெரிய திருவந்தாதியில் "நெறிகாட்டி நீக்குதியோ, நின்பால் கருமா முறிமேனி காட்டுதியோ" என்றருளிச்செய்தார். இதன் அர்த்தம். நளன் தமயந்திக்கு வழி காட்டினுற்போல் உபாயாந்தரங்களேக்காட்டி, உன்னேவிட்டு நீங்கும்படி செய்கிருயோ? என்பது "யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" என்று சுருதியிலும் வ்யக்தமாகச் சொல்லப்பட்டது. இந்த சுருதி ஈசுவரனுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்துக்கு ப்ரமாணம் என்பது மிகத் தெளிவு. "உப பத்தேச்ச" என்கிற ஸுத்ர வ்யாக்யானத்தில் பாஷ்யகாரர் "யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" என்றும், "அநந்யோபாயத்வ ச்ரவணுத்" என்றும் அருளிச்செய்திருக்கிருர். திருமந்த்ரத்தில் இருக்கும் நம: சப்தத்திற்கு அஹிர்ப்புத்ந்ய ஸம்ஹிதையில் "பாதோ நகார உத்திஷ்ட:" என்கிற சுலோகத்தாலே, ஈசுவரனே உபாயமென்று வ்யக்தமாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

இப்படியே ப்ரபத்திக்கு அதிகாரிகளே விதக்கிற, "இதம் சரண மஜ்ஞாநாம்" என்கிற சுலோகத்தில், "இதமேவ விஜாநதாம்" என்று விஜாநத் சப்தத்தாலே, ஈசுவரனுக்கு அத்யந்த பரதந்த்ரம் சேதன ஸ்வரூபவம் என்கிற ஜ்ஞானமுடையவனுக்கு என்று அர்த்தம் விவக்ஷிதமாகையால், பாரதந்த்ரிய ரூபஸ்வரூப ஜ்ஞாநமுடையவர்களுக்கு ப்ரபத்தியில் அதிகாரம் என்று ஏற்படுகிறது. ஆஞல் "விஜாநதாம்" என்கிற இடத்தில், உபாயாந்தர விஷயத்தில், ஜ்ஞானவான்களாயிருந்தும் அதை அனுஷ்டிக்க சக்தியில்லாதவர்கள் என்று அர்த்தம் சொல்லவேணும். அப்படி அர்த்தத்தை விவக்ஷிக்காமலிருந்தால், விசேஷ ஜ்ஞானமுள்ள, வ்யாஸாதிகள் பக்தியோக நிஷ்டர்களாகவேயிருப்பதால், அந்த அர்த்தம் அநுபபந்நமாகும் என்னில், "விஜாந தாம்" என்கிற இடத்தில், அசக்தியைச் சொல்லும் பக்ஷத்தில் அது லக்ஷ்யார்த்தமாகும். வாச்யார்த்தம் உபபந்நமாமிடத்தில், லக்ஷணே கூடாதாகையால், அந்த லக்ஷ்யார்த்தம் அநுபபந்நமாம். வ்யாஸாதிகள் அதிகாரி புருஷர்களாகையால், அந்த அதிகாராரம்பக ப்ராரப்த கர்மாவினுடைய ப்ராபல்யத்தாலே ப்ரபத்தி லியிழிந்தார்களில்லே. ஆதலால் ப்ரபத்யுபதேசத்துக்கு உபயுக்தமான ஜ்ஞாநாதிக்யம் இருந்தபோதிலும், அநுஷ்டான உபயோகமான ஜ்ஞான பூர்த்தி இல்லேயென்பதை அவசியம் அங்கீகரிக்கவேணும். அங்ஙனமன்றிக்கே, பக்த்யாத்ய நுஷ்டான ஜ்ஞானசக்தி பரிபூர்ணர்களான அர்ஜுனன், நாதமுனிகள் போல்வார்கள் ப்ரபத்தியை அனுஷ்டிக்க ப்ரஸக்தியில்லே.

ஆஞல் விளம்பாக்ஷமதையாலே ப்ரபத்தியில் இழிந்தார்களோ வென்னில் அவதார ரஹஸ்ய ஜ்ஞாநாங்க பக்தியோக அனுஷ்டானத்தால், அந்தசரீரத்தின்முடிவிலேயே "த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந" என்கிற ப்ரமாணத்தின்படி பயன் ஏற்படுகிற படியால், ப்ரபத்தியில் இழிய ப்ரஸக்தியில்லே. ஆஞல், அசக்தர்களுக்கு அதிகாரம் இந்த சுலோகத்தில் எந்த பதத்தால் ஏற்படுகிறதென்னில், "இதம் சரண மஜ்ஞாநாம்" என்கிறவிடத்தில் "அவித்யாத:" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியின்படி வித்யாபாவ வான்களேச் சொல்லுகையாலே, "த்வே வித்யே வேதிதவ்யே" என்கிற சுருதியின்படி சாஸ்த்ர ஜந்ய ஜ்ஞானத்தையும் பக்திரூபாபந்ந ஜ்ஞானத்

தையும் வித்யா சப்தம் சொல்லுகையாலே அசக்தியாலும், சாஸ்த்ர பர்யுதாஸத்தா (விலக்கா)லும் ஏற்படுகிற வித்யாபாவத்தைச் சொல்லுகிறபடியால், சக்தியாலேயே இந்த அஜ்ஞ பதமானது அசக்தர்களேயும் சாஸ்த்ர பர்யுதஸ்தர்களேயும் சொல்லுமாகையாலும் "விஜாநதாம்" என்கிற இடத்தில் லாக்ஷணிக மாக, அசக்தியைச் சொல்லுமதிற் காட்டில் இவ்விடத்தில் அசக்தியைச்சொல்லுவதே ஸ்வரஸமாகையாலும், விஜாநதாமென்கிற பதம் அத்யந்த பாரதந்த்ரிய ஜ்ஞானமுடைய வர்களேயே சொல்லுவதென்பது உசிதம். இந்த சுலோகத்துக்கு வ்யாக்யான ரூபமாக, நடா தூரம்மாள் அருளிச்செய்த, "ஸத்ருசோபாய வைதுர்யம் ஸாக்ஷாத் பகவதோ விதந், ஸர்வஜ்ஞ: சரணம் யாதி யோகமார்க்க பராங்முக:" என்கிற சுலோகத்தில் விஜாநதாம் என்கிற பதத்திற்கு அர்த்தமாக, பகவானுடைய ஸத்ருசோபாய வைதுர்யத்தை அறிந்த ஸர்வஜ்ஞனுயிருக்கிறவன், யோக மார்க்கத்தில் பராங்முகனுய்க்கொண்டு, ஈசுவரனேயே சரண மாக அடைகிருனென்று திருவுள்ளம் பற்றிய படியாலும் "யோக மார்க்க பராங்முக:" என்று சொல்லுகையாலே பக்த்யநுஷ்டானத்தில் சக்தியிருக்கச் செய்தேயும் அந்த அநுஷ்டானத்தில் அநாதரம் தோற்றுகையாலும், ஸத்ருசோபாய வைதுர்ய மென்கிறவிடத்தில் ஈசுவரனுக்கு ஸத்ருசமான உபாய மில்லே, ஈசுவரனே உபாயம்; அந்த உபாய ஸ்வீகாரத்தைத் தவிர வேறு உபாயத்தை அநுஷ்டிக்கக்கடவனல்லன் என்று அர்த்தம் ஏற்படுவதால் 'விஜாநதாம்" என்கிற பதமானது ஸ்வரூப விருந்தத்வ ஜ்ஞானமுடையவர்களேயே சொல்லுகிறது.

இப்படியே பட்டர் ஸ்ரீஸூக்தியிலும் 'அவித்யாதோ தேவே பரிப்ருடதயா வா விதிதயா" என்கிறவிடத்தில், "பரிப்ருடதயா விதிதயா" என்கிற இது விஜாநத் பதத்துக்கு அர்த்தமாக ஏற்படுகிறபடியால், அந்த விஜ்ஞானம் ஸர்வேசுவரன் பரிப்ருடன் (மேலானவன்) என்கிற ஜ்ஞானமாகிறது. அந்த பரிப்ருடத்வமும் ஸர்வப்ரகாரத்தாலும் மேன்மை சொல்லுகிறபடியால், அதில் அநந்ய ஸாத்யத்வமும் உத்கர்ஷமாகையால் அந்த அநந்ய ஸாத்யத்வ ஜ்ஞானமுள்ளவனுக்கு இதரோபாய ப்ரவ்ருத்தி கூடாமையால், அந்த விஜாநத் பதத்தில் ஏற்படுகிற ஜ்ஞானமும் இதனுடைய பலிதார்த்தமான ஸ்வரூப விருத்தத்வ ஜ்ஞானமாகவே இருக்கிறது.

மேலும் ப்ரதமாசார்யையான பிராட்டி ஸர்வ சக்தையாயிருக்கச்செய்தேயும், பெருமாளுக்கு அத்யந்த பாரதந்த்ரிய ரூபமான ஸ்வரூப ஜ்ஞானமுடைய வளாகையாலே, "நத்வா குர்மி தசக்ரீவ பஸ்ம பஸ்மார்ஹ தேஜஸா என்கிற சுலோகத்தின்படி, ராவண நிரஸநத்தில் ப்ரவர்த்தித்தாளில்லே; மேலும் "நரஸ்ய புத்தி தௌர்பல்யாத் உபாயாந்தர மிஷ்யதே" என்கிற சுலோகத்தில், உபாயாந்தர ஸ்வீகாரத்துக்குக் காரணம் புத்தி தௌர்ப்பல்யமென்று சொல்லப்படுகிறது. இந்த புத்தி தௌர்ப்பல்யமென்று புத்தியினுடைய, சாஞ்சல்யம்; அதாவது—சேதன ஸ்வரூபம் பகவதத்யந்த பாரதந்த்ரிய மென்கிற ஜ்ஞானம் அப்ராமாண்ய சங்காக்ரஸ்தமாயிருக்கை. இப்படிச் சொல்லாமல் ஒருவன் அசக்தனுயிருந்தபோதிலும், துராசார வசத்தால், உபாயாந்தரத்தில் அதிகாரமுண்டு என்று சொல்லும் பக்ஷத்தில் தௌர்ப்பல்ய சப்தம் ப்ரம பரவென்று சொல்லுவது அநுபபந்நமாகையாலும், அசக்தன் துராசையால் உபாயாந்தரத்தில், ப்ரவர்த்தித்தால் அசக்தியாலேயே உபாயாந்தரத்தில் நின்றும் நிவ்ருத்தனுய் விடுவதாலும் விதிக்கு ப்ரயோஜனமுமில்லே; அசக்த சப்தாத்யாஹார தோஷமும் ஏற்படும். விசேஷஜ்ஞர்களான வ்யாஸாதிகளுக்கு ஜ்ஞாந மாந்த்யத்தைச் சொல்லுமதிற்காட்டிலும், அத்யாஹார தோஷம் ஸஹ்யம் என்று சொல்லில், அதற்கு உத்தரம் கீழே சொல்லப்பட்டது. மேலும் அவர்கள் சாஸ்த்ர ப்ரதாநாதிகளால், ஜ்ஞானமுள்ளவர்களாயிருந்த போதிலும், உபகாரகரா வர்களேயன்றி, உத்தாரகர்களாகார். ஆகையாலேதான் நம்முடைய குருபரம்பரையிற் சேர்ந்தார்களில்லே. ஆழ்வாரசார்யர்கள் போலே விசேஷித்து கௌரவ்ய ராகவுமில்லே. "தஸ்மை நமோ முநிவராய, பராசராய" என்று ஆளவந்தார் அருளிச் செய்ததும் கேவலோபகாரகத்வ ப்ரயுக்தம்.

அஹிர்ப்புத்ந்ய ஸம்ஹிதையில் "அநைச்வர்யாத் ஸ்வபாவ ஜாத்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விடத்தில் அநைச்வர்யமென்பது ஈச்ரத்வாபாவம். அதாவது ஸ்வாதந்த்ரியாபாவ ரூபமான பாரதந்த்ரியம். ஸ்வபா

வஜம் என்கையாலே அது ஸ்வரூப ப்ரயுக்த மென்று பெறப்படுகிறது. தேசிகனும் "ஸ்ரீ ரங்கேசுவர யாவதாத்ம நியதத்வத் பாரதந்த்ரியோசிதா" என்று ப்ரபத்தி யாவதாத்ம நியதமான பாரதந்த்ரியத்துக்கு உசிதை என்று அருளிச்செய்தார். உபாயாந்தர அநுஷ்டான யோக்யதையில்லாமையாகிற பாரதந்த்ரியம் அசக்தியாலே யேற்படலாமே யென்னில், அப்போது, 'யாவதாத்ம நியத' என்றருளிச் செய்யவேண்டுவதில்லை. இந்த சுலோகத்தினுடைய வ்யாக்யானத்தில், அவர் குமாரரான நயனாராசார்யர் "பக்திஸ்து கேவல பாரதந்த்ரியோசிதா, ப்ரபத்திஸ்து குரூபாயா சக்தே: அத்யந்த பாரதந்த்ரியோசிதா" என்று அருளிச் செய்திருக்கிறார்.

குரூபாயாசக்திக்குக் காரணம் கீழ் நிரூபிக்கப்பட்ட, அத்யந்த பாரதந்த்ரிய ஜ்ஞானமுமாகலாம். தேசிகன், ஸ்வாதிகார விருத்தமென்று, பக்தியை அருளிச்செய்திருக்கிறார்: அந்த அதிகாரமும் "அநந்ய சரணத்வாதேரதிகாரஸ்ய ஸித்தயே" என்கிற சுலோகத்தின்படி, திருமந்த்ரைகதேசமான நம: சப்தத்தின் அர்த்தமாயுள்ள அநந்ய சரணத்வரூபமான உபாய பாரதந்த்ரியம் என்று ஏற்படுகிறது. ஸ்வரூப பரமான திருமந்த்ரத்தில் நம: சப்தார்த்தமாயிருக்கிற அநந்ய சரணத்வமும் ஸ்வரூபமாகையால், அந்த அநந்ய சரணத்வம் ஜ்ஞாயமானமாய்க்கொண்டு ப்ரபத்திக்கு அதிகாரமாகிறது.

அப்படியன்றிக்கே, அசக்த்யா ப்ராப்தமான அநந்ய சரணத்வத்தைச் சொல்லுகிறதென்பது அநுபபந்நம். ஆகவே பக்தி கீழ்க் குறிக்கப்பட்ட ஸ்வரூபத்துக்கு விருத்தையென்றும், ப்ரபத்தி ஸ்வரூபத்துக்கு அநுரூபையென்றும், ஏற்படுகிறது. இதைப்பற்றியே "நார்ஹந்தி சரணஸ்த் தஸ்ய கலாம் கோடி தமீமபி" என்று சரணாகதி நிஷ்டனை உத்கிருஷ்டனாகச் சொல்லியிருக்கிறது.

அப்படியல்லாமல், பக்தி சக்தாதிகாரரை, ப்ரபத்தி அசக்தாதிகாரரை என்று சொல்லும் பக்ஷத்தில், ப்ரபத்தி கௌணோபாயமாக ஏற்படுவதால், முக்யமான வாருண ஸ்நானத்தில் அசக்தனாயிருக்கிறவனுக்குக் கௌணமான மந்த்ர ஸ்நானமும் உத்கிருஷ்டமென்று ஏற்படும். மேலும் முக்யோபாயத்தில் அசக்தனாயிருக்குமவன் கௌணோபாயத்தை அநுஷ்டித்த பின்பு சக்தியுண்டாகில் முக்கியோபாயத்தை அநுஷ்டித்தால் ப்ரத்யவாய மில்லையென்பது சாஸ்த்ர ஸித்தமாயிருக்க, கௌணோபாயமான ப்ரபத்தியை அநுஷ்டித்த பின்பு சக்தியுண்டாகி, பக்தியை அநுஷ்டிக்கும் பக்ஷத்தில், "நிஷ்டயா ஹீயதே நயா" என்கிற சுலோகத்தின்படி ப்ரத்யவாயம் ஏற்படுவதாகச் சொல்லுவதும் விருத்தமாம்.

ஆனால், உபாயாந்தர அநுஷ்டானத்தில் அசக்தனாயிருக்குமவன் உபாயாந்தரமான பக்தியை அநுஷ்டிக்க எனக்கு சக்தியில்லை, நீயே அந்த பக்தி ஸ்தானத்தில் நின்று எனக்குப் பலத்தைக் கொடுக்க வேணுமென்று குரூபாய பர ஸமர்ப்பணத்தைப் பண்ணினபடியால், ஈசுவரன் பக்தி ஸ்தானத்தில் நின்று பலத்தைக் கொடுக்கிறான்; ஆதலால் இவன் குரூபாய பர ஸமர்ப்பணம் பண்ணினபின்பு, உபாயாந்தர ஸ்தானாபத்தியாகிற அதிசயம் ஈசுவரனுக்கு ஏற்படுகிறது. இவனுக்கு சக்தியுண்டாகிற பக்தியை அநுஷ்டிக்கும் பக்ஷத்தில் ஈசுவரனுக்கு ஏற்பட்ட உபாயாந்தர ஸ்தாநாபத்தியாகிற அதிசயம் போய்விடுகிறபடியால், ஈசுவரனுக்கு அதிசயத்தைப் பண்ணுகையாகிற சேஷத்வரூபமான ஸ்வரூபத்துக்கு ஹாநி ஏற்படுகிறபடியால், ப்ரபத்தி யநுஷ்டித்தபிறகு, சக்தியுண்டானாலும் பக்தியை அநுஷ்டிக்கக் கடவனல்லன். அப்படி யநுஷ்டித்தானாகில், அவனுக்கு ப்ராயச்சித்தம் விதிக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லும் பக்ஷத்தில் பல கரணத்வரூபமான உபாயத்வம் அசேதனத்துக்கேயுள்ளதாகையால், அந்த அசேதன தர்மமான உபாயத்வத்தை ஈசுவரனுக்குச் சொல்லும் பக்ஷத்தில் அபசாரமாம் என்று சொல்லுகிறவர்களுக்கு, உபாயாந்தர ஸ்தாநாபத்தியை அதிசயமாக்குவது எங்ஙனே?

ஆனாலும், உபாயாந்தர ஸ்தாநாபத்தி என்பதற்கு அர்த்தம், சேதனன் குரூபாய பரத்தை ஸமர்ப்பித்த பிறகு, அந்த குரூபாய பரத்தை அங்கீகரித்து, தான் ரக்ஷிக்கிறேன் என்கிற ஸங்கல்பத்துக்கு, ஈசுவரன் ஆச்ரயமாகவே இது ஈசுவரனுக்குஅதிசயமாகையால், சேதனன் பக்தியை அநுஷ்டித்தால், அந்த ஸங்கல்பத்துக்கு ஹாநியுண்டாவதால் சேதனனுடைய சேஷத்வ ரூபமான ஸ்வரூபத்துக்கு ஹாநி ஏற்படும். ஆகையால்தான் பக்தியநுஷ்டானத்தில் ப்ராயச்சித்தவிதி யேற்பட்

டிருக்கிறது என்று சொல்லுவதும் உபபந்நமன்று.

குருபாய பர ஸமர்ப்பணம் என்பது குருபாயத்தை யநுஷ்டிக்க சக்தனல்லேன் என்கிற ஜ்ஞான விசேஷமன்றி வேறு பரம் தனித்திருப்பதாகவும், அந்த பரத்தில் தன்னுடைய ஸ்வத்வம் நிவ்ருத்தமாகி ஈசுவரனுக்கு ஸ்வத்வத்தை யுண்டாக்குகையாகிற ஸமர்ப்பணமாகாது; தான் அசக்தியாலேயாதல், ஸ்வரூப விருத்த ஜ்ஞானத்தாலேயாதல் பக்தியநுஷ்டானத்தில் ஏற்படுகிற யோக்யதையில்லாமையை அறிந்து, அறிவை முன்னிட்டு தன்னுடைய ரக்ஷணத்தில் தான் அநர்ஹனுயிருப்பதை ஜ்ஞாபித்து, நீயே ரக்ஷகனுகவேணுமென்கிற ப்ரார்த்தனையே குருபாய பரஸமர்ப்பண மென்னப்படும். இந்த குருபாய பர ஸமர்ப்பணமும் இவனுக்கு அதிகாரமாகவே யமைகிறது. அல்லாமல் உபாயமாகும் பக்ஷத்தில் இதுவே ரக்ஷாபரமாகும். அப்பொழுது ரக்ஷாபர ஸமர்ப்பண ஸ்வரூபத்திற்கு ஹாநி ஏற்படும். ஆகையால் தான் அத்யந்த பரதந்த்ரனுன தன்னுடைய ரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாமல் அவனே நிரபேக்ஷ ரக்ஷகனுக அத்யவஸித்து, அப்படியே ப்ரார்த்திப்பது ப்ரபத்தியென்று சொல்லவேணும். எப்படியிருந்தாலும் உபாயாந்தரா ஸ்தாநாபத்தியாகிற அதிசயத்திற்கு உபாயாந்தர அநுஷ்டானம் பஞ்ஜகமென்று சொன்னுலும், பக்திய நுஷ்டானம் சேஷத்வ ஸ்வரூபத்துக்கு விருத்தமென்றே ஏற்படுகிறது. அதிகாரவிருத்தமென்று சொன்னபோதிலும், அநந்ய சரணத்வ ரூபமான உபாய பாரதந்த்ரியம் ஜ்ஞாயமானமாய்க்கொண்டு, அதிகாரமாக ஏற்படுகிறபடியால், அந்த அநந்ய சரணத்வ ரூபமான பாரதந்த்ரியமும், ஸ்வரூப பாமான திருமந்த்ரத்தில் மத்தியம பதமான நம: சப்தத்துக்கு அர்த்தமாகையால், அந்த அநந்ய சரணத்வமும் ஸ்வரூபமே, ஆதலால் ஸ்வஞ்ச தத்ரூபஞ்ச ஸ்வரூபம் என்று ஸ்வ அஸாதாரண தர்மமான அநந்ய சரணத்வத்திற்கு, உபாயாந்தரம் விருத்தமாகையால், உபாயாந்தரம் ஸ்வரூப விருத்தமென்னத் தட்டில்லை.

இதை யனுசரித்தே தேசிகனும், "ஆர்த்தேஷ்வாசுபலா" என்கிற சுலோகத்தில் பக்திக்கும் ப்ரபத்திக்கும் வ்யாவ்ருத்தி சொல்லுகிறவிடத்தில், "ஸ்ரீரங்கேச்வர யாவதாத்ம நியதத்வத் பாரதந்த்ரியோசிதா" என்பதில், "யாவதாத்ம நியத" என்று பாரதந்த்ரியத்தையருளிச்செய்து, அந்த பாரதந்த்ரியத்துக்கு ப்ரபத்தி உசிதையென்றும், பக்தி அநுசிதையென்றும், அருளிச்செய்திருக்கிறுர். இனி இவற்றின் வக்தவ்ய விசேஷங்கள் பலவாயிருப்பதால் விஸ்தர பயத்தால் நிறுத்திவிட்டேன்.

இனி, பக்தி ஸ்வரூப விருத்தை யென்னுமிடத்தில், அநந்ய சரணத்வ ரூபமான உபாய பாரதந்த்ரியமாகிற ஸ்வ அஸாதாரண தர்மத்திற்கு விருத்தையென்று ஏற்படுகிறபடியால் அந்த விரோதமானது இப்படிப்பட்டதென்று நிரூபிக்கப்படுகிறது. "நஸ்த்ரீ ஸ்வாதந்த்ரியமர்ஹதி" என்று ஸ்த்ரீக்கு உள்ள பாரதந்த்ரியமானது அவளுக்கு பும்வத்பாவ மேற்பட்டால், அது நிவ்ருத்தமாமாப்போலேயும், அக்நிக்குள்ள தாஹக சக்தியானது மணிமந்த்ரங்களுடைய ஸாந்நித்யத்தில் நிவ்ருத்தமாமாப்போலேயும், உபாயாந்தர ப்ரவ்ருத்தியும் நிவ்ருத்தமாம். பாரதந்த்ரியம் ஸ்வரூபாநுபந்தியானுலும், அதனுடைய பலோபதாந சக்தியானது ஸ்வாதந்த்ரிய மேற்படும் பக்ஷத்தில் நிவ்ருத்தையாகலாம். அன்றிக்கே தான் ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயத்திற்கு அநர்ஹன் என்கிற ஜ்ஞானமுண்டானுல் ஸ்வரக்ஷணே ஸ்வாந்வய ஸூசகமான உபாயாந்தர ப்ரவ்ருத்தி ஸம்பவியாதாகையால், அதைப்பற்றியும் ஸ்வரூப விருத்தை என்றும் சொல்லலாம். அதன்றி நித்யமான ஆத்ம ஸ்வரூபத்துக்கு, விருத்தையென்பது அர்த்தமன்று, ஆனுல் பக்தியை உபாயமாக விதிக்கும் சாஸ்த்ரங்களுக்கு ப்ராமாண்யம் எங்ஙனேயென்னில், ஸ்வரூப விருத்தத்வ ஜ்ஞானமில்லாத அதிகாரிகளைக் குறித்து, பக்தி விதி ஏற்பட்டபடியால் அவர்கள் விஷயத்தில் ப்ரமாணமாகலாம். "த்ரை குண்யவிஷயா வேதா:" என்கிற ப்ரமாணத்தின்படி குணனுகுணமாக புபுக்ஷுக்களுக்கும், முமுக்ஷுக்களுக்கும் உபாயத்தையும் பலத்தையும் விதிக்கிறதாகையாலே ப்ராமாண்ய ஹாநியில்லை.

உபாயாந்தர த்யாக பூர்வகமான ஸித்தோபாய ஸ்வீகாரத்துக்கு ஹேதுவான ஸ்வரூப யாதாம்ய ஜ்ஞாநவத் விஷயத்தில் ஈசுவரனுக்கு அத்யந்தாபிமதியிருப்பதாலே, அவர்களும் மீண்டு உபாயாந்தரத்தில் ப்ரவர்த்தித்தால், ஈசுவரனுடைய அத்யந்தாபிமதிக்கு நாசமேற்படுவதாலே, தாத்ருசாபிமிதி கடிதமான ஸ்வ

ரூப நாசமேற்படுவதால் நாச்யநாசக பாவ ரூப மான விரோதம் உபபந்நம்.

இப்படியாக பக்தி ஸ்வரூப விருத்தையா கையாலே திருமந்த்ரத்தால்,சிக்ஷிதமான ஸ்வரூ பத்தை யுடையவனுக்கு அந்த ஸ்வரூபத்துக்கு அநுரூபமாக ஈசுவரனையே உபாயமாக வரிக் கையே ப்ராப்தமாகும். நாட்டார் ஊர்வசீ ஸாலோக்யத்துக்காக ஸாதநாநுஷ்டானம் பண்ணு நிற்கச் செய்தேயும், தானுகவே மேல் விழுந்த ஊர்வசியைப் பார்த்து, அர்ஜுனன் வ்ருத்த ப்ரபிதாமஹியென்று, நமஸ்கரித்த ஜிதேந்த்ரியனுயிருக்க, பக்தியநுஷ்டானத்தில் அசக்தனென்று சொல்லுமது அநுபபந்ந மாகையால், அவனுடைய ப்ரபத்தி அதிகார மாக ஏற்பட்ட ஸ்வரூப விருத்தத்வ ஜ்ஞானமே யன்றி வேறில்லை. இனி ப்ரபத்தியின் ஸ்வரூபம் நிரூபிக்கப்படும்.

### ப்ரபத்தி ஸ்வரூப நிரூபணம்

இனி ப்ரபத்தியின் ஸ்வரூபம் நிரூபிக்கத் தொடங்கி முதலில் அது சுருதி, பாஞ்சராத்ரம், இதிஹாஸம் புராணங்கள் ஸ்மிருதிகள், ஆழ்வார்களுடைய திவ்ய ஸூக்திகள், உபபத்தி, அநுஷ்டானம் என்னுமிவற்றுல் ஸித்திக்கிற தென்று நிரூபிக்கலாகும்.

சுருதியில், கடவல்லியிலுள்ள த்வயோப நிஷத்தில் த்வயமென்னும் மந்த்ர சேஷத்தை விசதமாக ப்ரதிபாதிக்கிறபடியால், அதில் சொல்லப்பட்டிருக்கிற "சரணம் ப்ரபத்யே" என்ற வாக்யத்தால் சரண வரண ரூபமான ப்ர பத்தி சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படியே சுவேதாசுவதரோபநிஷத்தில் 'யோ ப்ரஹ்மாணம் விதாதி பூர்வம்" என்று, தொடங்கி, "முமுக்ஷுர்வை சரண மஹம் ப்ர பத்யே" என்னுமளவாக, யாவனொருவன் ப்ர ஹ்மாவை முதலில் சிருஷ்டித்தானே? யாவனொ ருவன் ப்ரஹ்மாவுக்கு வேதங்களை யுபதேசித் தானே? அப்படிப்பட்ட ஸர்வேசுரனை, மோக்ஷ த்தில் இச்சையுடைய நான் சரணமாக அடை கிறேன் என்று சரணமடைதலாகிய பிரபத்தி சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றுள் சரணம டைய வேண்டும் என்று விதிக்கப்படாமலிருந்த போதிலும், மோக்ஷத்தில் இச்சையுடை யவனுக்கு ஈசுவரனையே சரணமடைதலாகிய ப்ரபத்தி அநுஷ்டிக்கத் தக்கதாகச் சொல்ல பட்டிருக்கிறபடியால், மோக்ஷத்தில் இச்சை யுடையவன் அதற்கு ஸாதனமான ப்ரபத் தியை அநுஷ்டிக்க வேண்டும் என்னும் விதி யானது அர்த்தத்தாலே ஸித்தித்திருக்கிறது.

இப்படியே அர்த்தவாதங்களிலும் மந்த்ரங் களிலும் விதிவாசகமான ஏவல் வினை முதலிய கட்டளையிடும். சொற்களில்லாதிருந்த போதி லும், விதி அர்த்தத்தால், ஸித்திக்குமென்பது பூர்விக சாஸ்த்ரங்களால் அங்கீகரிக்கப்பட்டி ருக்கிறது. இப்படியே "தஸ்மாதபிவத்யம் ப்ர பந்நம் நப்ரதி ப்ரயச்சந்தி" என்கிற சுருதி யிலும், ஸித்தவந் நிர்த்தேசத்தால் (சித்தித் ததுபோல் வைத்துப் பேசும் பேச்சால்) விதி யில்லாதிருக்கச் செய்தேயும், அது அர்த்தத் தால் ஸித்தித்திருக்கிறது.

இன்னும் இவ்வளவிலமையாமல், "ஓம் இத்யாத்மாநம் யுஞ்ஜீத" என்பதில் 'யுஞ்ஜீத' என்னும் ஏவல் வினையான கட்டளைச் சொல் லாலே வெளிப்படையாகவும் விதிக்கப்பட்டி ருக்கிறது.

ஆனல் 'யுஞ்ஜீத' என்று யோகத்தைச் சொல்லுகிற விது ப்ரபத்தியை எவ்வாறு சொல்லுமெனில்? மேல் "தஸ்மாத் ந்யாஸ மேஷாம்" என்று யோக பர்யாயமாக ந்யாஸத் தைச் சொல்லியிருப்பதால், ந்யாஸமென்பது பரந்யாஸமாகிய ப்ரபத்தியாகையால், இந்த யுஞ்ஜீத என்ற யோக சப்தமும் ப்ரபத்தியைச் சொல்லியதே யாம்.

இப்படியே "த்ர்யம்பகம் யஜாமஹே" என்கிற மந்த்ரமும் ப்ரபத்தி பரமாக ஸர்வஜ்ஞ ஸம்ஹிதையிற் சொல்லப் பட்டிருக்கிறது. எப்படியென்றுல், 'இச்சை' என்றும் 'ஜ்ஞப்தி' என்றும் 'க்ரியை' என்றும் சொல்லப்படுகிற மூன்றும் லோகத்துக்கு மாதாக்கள். இந்த மாதாக்களையுடைய ஜகத்துக்குப் ப்ரியனுயுள்ள ஸர்வேசுவரனிடத்தில், ஆத்ம ஹவிஸ் த்யாக மாகிற யாகத்தைச் செய்கிறோம். அந்த யாகத்தைச் செய்தபடியால், உர்வாருகத்தின் பழமானது தன்னுடைய கட்டில் நின்றும் எப்படி எளிதாக விடுபடுகிறதோ, அப்படியே நாமும் மிருத்யுவில் நின்றும் எளிதாக விடுபடு கிறோம் என்ற பொருளுடையதாக ஆத்ம ஹவிஸ் த்யாகம் சொல்லப்பட்டிருப்பதால் அறியலாம்.

இப்படியே "அக்நே நய ஸுபதாராயே" என்கிற மந்த்ரத்தாலும் சொல்லப்பட்டிருக் கிறது. இதன் அர்த்தம் — உத்க்ருஷ்டமான ஸ்தானத்தை அடைவிக்கிற ஸர்வேசுவர!

உன்பொருட்டு, உன்னுடைய புத்தியாலே மிகையாக நினைக்கப்படுகிற 'நம:' என்கிற உக்தியையுடைய ப்ரபத்தியைப் பண்ணு கிறேம். அப்படி ப்ரபத்தி பண்ணிய எங்களை அர்ச்சிராதி மார்க்கத்தாலே, மோக்ஷ சுவர் யத்தின் பொருட்டு, நித்யவிபூதியிற் சேர்க்க வேணும்; இதற்குத் தடையாயிருந்துள்ள பாபத்தைப் போக்கவேணும் என்பதாம். இங்கு 'நம:' என்று ப்ரபத்தி ப்ரதிபாதிக்கப் பட்டிருப்பதும் அறியலாம். இப்படியே "யஜ்ஞேந யஜ்ஞ மயஜந்த தேவா: தாநி தர்மாணி ப்ரதமா ந்யாஸந்" என்கிற சுருதியால், யஜ்ஞ ஸாதனமான ஆத்மாவாலே யஜ்ஞ ரூபியான ஈசுவரனை தேவர்கள் பஜித்தார்கள்: அந்த தர்மங்களே முதன்மையான தர்மங்களாயின. என்று சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு "அய ஜந்த" என்று கிரியையாகச் சொல்லப்பட்ட யாகமும் ப்ரபத்தியாமென்றறியத்தக்கது.

இப்படியே "அம்ருதஸ்யைஷ ஸேது:" "யஸ்மிந்த்யௌ:" என்று சொல்லிக் கொண்டு போய், "தமேவைகம் ஜாநத ஆத்மாநம்" "அந்யாவாசோ விமுஞ்சத" என்று சொல்லப் பட்டிருக்கிறது. அதன் அர்த்தம்—கீழ் ஸர்வா தாரனுகச் சொல்லப்பட்ட பரமாத்மா ஒரு வனையே மோக்ஷத்துக்கு உபாயமென்று அறியுங்கள்; வேறு உபாயாந்தரங்களான வாக்குகளை விட்டுவிடுங்கள் என்பதாம். இதனுல் உபாயாந்தரங்களைவிட்டு, ஈசுவர னையே உபாயமாகப் பற்றுகையாகிற சரணு கதி சொல்லப்பட்டதாயிற்று.

இப்படியே "கோர்ஹதி ஸ்பர்த்திதும் ப்ரஹ்மணு" என்பதால், ஸர்வேசுவரனேடே அவிவாத ரூபமாயுள்ள ப்ரபத்தியை யாவ னெருவன் பண்ணுவானே, என்று வினவிக் கொண்டு அவனுக்கு பலம் சொல்லப்பட்டிருக் கிறது.

இவ்வாருக ப்ரபத்தியைப்பற்றிச் சொல்லும் சுருதிகள், இன்னும் பலவுள்ளன. அவைகளையெல்லாம் இங்கு எடுத்துக் காட் டினுல், மிக விரியுமாகையால், இம்மட்டோடு நிறுத்திக்கொண்டு, மற்றவற்றை ஆராய் வோம்.

இனி ஸ்ரீ பாஞ்சராத்ரத்தில் லக்ஷ்மீ தந்த்ரம் அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை முதலிய வற்றுள் நன்ருக விரித்துச் சொல்லப்பட்டிருப் பதால், அவைகளில் விளங்கக் காணலாம்.

அப்படியே ருக்வேதத்தில் நின்றும் பிரிந்த தான ஜிதந்தே ஸ்தோத்ரத்திலும் ப்ரபத்தி விஷயமான நிருபணங்கள் கண்டுகொள்ள லாம்.

"வேத வேத்யே பரே பும்ஸி" என்கிற சுலோகத்தின்படி, வேதத்தின் ப்ராதுர்ப்பாவ விசேஷமான ஸ்ரீ ராமாயணத்தில் ஆதி முதல் அந்தமளவும் ப்ரபத்தி நிருபிக்கப்பட்டிருக் கிறது. அதில் முதலாவது பாலகாண்டத்தில் தேவதைகள் ராவண வதத்தின் பொருட்டு, ஸர்வேசுவரன் விஷயத்தில் ப்ரபத்தி பண்ணின தாகச் சொல்லப்பட்டது. அடுத்த அயோத்யா காண்டத்தில் சித்ர கூடத்தில் பரதாழ்வான் "சேஷ்யே புரஸ்தாச்சாலாயா:" என்று பெருமாள் அயோத்தியைக்கு எழுந்தருள வேண்டுமென்று ப்ரபத்தி பண்ணியிருப்பது காணலாம்.

அடுத்த ஆரண்ய காண்டத்தில்"தே வயம் பவதா ரக்ஷ்யா: கர்ப்பபூதாஸ் தபோதநா:" என்கிற இடத்தில் "கர்ப்ப பூதா:" என்ப தினுல் தம்முடைய ரக்ஷணத்தில் தங்களுக்கு யோக்யதையில்லையென்பதையும் தெரிவித்துக் கொண்டு, எங்களை ரக்ஷிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறபடியால், ஆகிஞ்சந்யத்தைமுன் னிட்டு, ருஷிகள் ரக்ஷாபர ஸமர்ப்பணம் பண் ணியிருக்கிறபடியாலும் அடுத்த கிஷ்கிந்தா காண்டத்தில், "க்ருதாபராதஸ்ய ஹி தே" என்கிற சுலோகத்தில் மஹாராஜரைப் பார்த் துத் திருவடி, தீரக்கழிய அபராதம் பண்ணின உமக்கு இளையபெருமாள் விஷயத்தில் அஞ்சலி ரூபமான ப்ரபத்தி பண்ணினுலொழிய, வேறு வ்யாபாரமில்லையென்று சொல்லியிருப்பதா லும், ஸுந்தரகாண்டத்தில் பிராட்டி திருவடி யினிடத்தில்அருளிச்செய்த காகவ்ருத்தாந்தத் தாலும், த்ரிஜடை பிராட்டி விஷயத்தில் ராக்ஷஸிகளை சரணுகதி பண்ணும்படி உபதே சித்திருப்பதாலும், யுத்தகாண்டத்தில் விபீஷ ணுழ்வான், பெருமாளிடத்தில் பண்ணின சரணுகதியை விஸ்தரித்து ப்ரதிபாதித்திருப்ப தாலும், ஸ்ரீராமாயண முழுவதும் சரணுகதி ப்ரதிபாதகமாயிருப்பது கண்டு கொள்ளத் தக்கது.

இவ்விடத்தில் விபீஷண சரணுகதியில் சரணுகதிக்கு உரிய சில விஷயங்கள் தோன்று கின்றன. அவை:—சரணுகதிக்கு வேண்டிய ஆனுகூல்ய ஸங்கல்பம், ப்ராதிகூல்யவர்ஜநம்,

ஆகிஞ்சந்யம், அநந்யகதித்வம் என்னுமிவை களாம். இவற்றுள் விபீஷணன் ராவண னுக்கு ஹிதோபதேசம் பண்ணினபடியாலும், ராமதூதனை திருவடியை ராவணன்கொல்லா திருக்கும்படி விடுவித்தபடியாலும், "ராக்ஷஸா நாம் வதே ஸாஹ்யம் கரிஷ்யாமி" (ராக்ஷஸர் களை வதித்தற்கு உதவி செய்கிறேன்) என்று சொல்லியபடியாலும், ஆநுகூல்ய ஸங்கல்பம் ஏற்பட்டிருக்கிறது. "பரித்யக்தா மயா லங்கா" என்றும், "தேநசாப்யவமாநித:" என்றும், சொல்லியிருக்கிறபடியால், ப்ராதி கூல்ய வர்ஜநம் ஏற்பட்டிருக்கிறது. "ராவணோ நாம துர்வ்ருத்த:" என்று தனக்குள்ள நைச் யத்தை அனுஸந்திப்பதாலே ஆகிஞ்சந்யமும் "சரண்யம் சரணம்கத:" என்பதாலே, அநந்ய கதித்வமும் சரணாகதியும் தோற்றுகின்றன.

ஆனால், "ராஜ்யகாங்க்ஷீ விபீஷண:" என்றும், "ராஜ்யம் ப்ரார்த்தயமாநஸ்து" என்றும் சொல்லுகிறபடியால் விபீஷணாழ் வானுடைய சரணாகதி ராஜயமடைதற்கன்றோ பண்ணபட்டதென்று விவாதிக்கலாகாது. ஏனெனில்,அவன் சரணாகதி பண்ணுகிற காலத் தில் "பரித்யக்தா மயா லங்கா மித்ராணி ச தநாநிச, பவத்கதம்மே ராஜ்யஞ்ச என்றதான நிஜோக்தியாலே ராஜ்யத்தை யபேக்ஷித்ததா யில்லை; ப்ரேம பரவசரான மஹாராஜருடைய பயத்தைப் போக்குகைக்காக, "ராஜ்யகாங்க்ஷீ விபீஷண:" என்று பெருமாள் சொல்லியது ராஜநீதியைக் காட்டியபடி. ஆனால் பெருமாள் விபீஷணனுக்கு லங்கா ராஜ்யத்தைக் கொடுத் தது ஆநுஷங்கிகமேயாம். பரதாழ்வானுக்கு ப்ரஜா பரிபாலனத்தை நியமித்தருளியது போலே ராக்ஷஸர்களை பரிபாலிக்கும் பொருட் டே, பெருமாள் விபீஷணாழ்வானுக்கு ராஜ்யத் தைக் கொடுத்தருளினார். இதை "சாபிதஸ்த் வம் ஸகித்வேந கார்யந்தே மம சாஸநம், ப்ரஜாஸ் ஸம்ரக்ஷ தர்மேண நோத்தரம் வக்து மர்ஹஸி" என்று பெருமாள் நிர்ப்பந்தித்து நியமித்தபடியா லறியலாம். அந்த நியமன த்தை மேற்கொண்டு ராஜ்யத்தைப் பெற்றுக் கொண்டது பகவதா ஜ்ஞாநுவர்த்தன ரூப மான கைங்கர்யமேயாம். இப்படியே பாரதத் திலும் "த்ரௌபத்யா ஸஹிதாஸ் ஸர்வே நமச்சக்ருர் ஜநார்த்தநம்" என்றும், "சங்க சக்ரகதா பாணே" என்கிற சுலோகத்தில் "ரக்ஷமாம் சரணாகதாம்" என்றும் சொல்லப் பட்டிருப்பதால், பாண்டவர்களும் த்ரௌபதி யும் சரணாகதி பண்ணியிருப்பது விளங்கு கிறது.

மேலும், கீதையில், "ஸர்வதர்மாந் பரித் யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ" என்று நேரே சரணாகதியை விதி வாசகமான வினைச்சொல் லால் ஸ்பஷ்டமாக விதித்திருப்பதும் கண்டு கொள்ளலாம்.

ஆனால் ஸ்ரீ பாஷ்யகாரர் கீதாபாஷ்யத் தில் ஸ்வதந்த்ர ப்ரபத்திபரமாக அருளிச் செய்யாமல், அங்க ப்ரபத்திபரமாக அருளிச் செய்திருப்பது கூடும்படி யெங்ஙனேயென் னில்; அவரே கத்யத்தில் பெரிய பெருமாள் ஸந்நிதியில், ஸ்வதந்த்ரப்ரபத்தியை அநுஷ்டித் திருப்பதாலும்; அதற்கு ப்ரமாணமாக 'ஸர்வ தர்மாந்' என்கிற சுலோகத்தை உதாஹரிப்ப தாலும், கீதாபாஷ்யத்தில் அருளிச் செய் திருப்பது யோஜநா பேத பரமாகையால இதுவும் உபபந்நமாம்.

ஸ்ரீ பாகவதத்திலும் ஏகாதச ஸ்கந்தத்தில் ஸ்ரீ க்ருஷ்ணனுக்கும் உத்தவருக்கும் நடந்த ஸம்பாஷணத்தில், "தஸ்மாத் த்வம் உத்த வோத்ஸ்ருஜ்ய சோதநாம் ப்ரதிசோதநாம்" என்று உபாயாந்தரங்களை விட்டுத் தன்னையே உபாயமாகப் பற்றவேணுமென்று சொல்லப் பட்டிருக்கிறது.

அப்படியே மநு ஸ்ம்ருதியில், "யமோ வைவஸ்வதோ ராஜா யஸ்தவைஷ ஹ்ருதிஸ் தித:, தேந சேத் அவிவாதஸ்தே, மா கங்காம் மாகுரூந் கம:" என்று அவிவாத ரூபமான ப்ர பத்தியைச் சொல்லியிருப்பதும் கண்டுகொள்ள லாம். இப்படியே மற்றுமுள்ள ஸ்ம்ருதிகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது. மேல் நிரூபணத்தில் அந்த ஸ்ம்ருதி வசனங்கள் உதாஹரிக்கப்படும்.

ஆழ்வார்களும் பலவிடங்களில் தாங்கள் ப்ரபத்தியை அநுஷ்டித்திருப்பதும், பிறருக்கு உபதேசித்திருப்பதும் கண்டு கொள்ளலாம். ஆசார்யர்களில் ஆளவந்தார் ஸ்தோத்ர ரத் நத்தில் "ந தர்ம நிஷ்டோஸ்மி நசாத்ம வேதீ", "அபராத ஸஹஸ்ரபாஜநம்" என்னுந் தொடக்கமான சுலோகங்களாலும் தான் ப்ர பத்தியை அநுஷ்டித்திருப்பதைக் கண்டு கொள்ளலாம். அப்படியே எம்பெருமானாரும் 'கத்யத்தில்' ப்ரபத்தியை அருளிச்செய்திருக் கிறார். ஆழ்வான் 'வரதராஜ ஸ்தவத்தில்' ப்ர பத்தி விஷயமாக ப்ரஸ்தாவித்திருப்பதையும் அறியலாம். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்

''உபாதத்தே ஸத்தா ஸ்திதி'' என்கிற சுலோகத்திலும், ''தவபரோஹம்'' என்கிற சுலோகத்திலும் ப்ரபத்தியை அருளிச் செய்திருக்கிறார். தேசிகன் ஸாதித்தருளிய 'நிக்ஷேப ரக்ஷையில்' ப்ரபத்தி உபாயமென்பது, நிரூபித்திருப்பதும், 'ந்யாஸ திலகம்' 'ந்யாஸ விம்சதி' முதலான கிரந்தங்களிலும் நிரூபித்திருப்பதும் பிரஸித்தம்.

தேசிகன் அருளிச்செய்த, ''ஆர்த்தேஷ்வாசுபலா'' என்கிற சுலோகத்தாலும், ப்ரபத்தி நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அந்த சுலோகமாவது:— ''ஆர்த்தேஷ்வாசுபலா ததந்ய விஷயேப்யுச்சிந்நதேஹாந்தரா, வந்ஹ்யாதே ரநபேக்ஷணாத் தநுப்ருதாம் ஸத்யாதிவத் வ்யாபிநீ, ஸ்ரீரங்கேச்வர யாவதாத்ம நியத த்வத் பாரதந்த்ர்யோசிதா த்வய்யேவ த்வது பாயதி: அபிஹித ஸ்வோபாய பாவாஸ்துமே'' என்பதாம்.

இதன் அர்த்தம்:— பக்தியானது ஆர்த்தியுள்ளவர்களுக்கும் த்ருப்தராயிருப்பவர்களுக்கும், ப்ராரப்த கர்மாவஸாநமான போது மோக்ஷ ப்ரதாநத்துக்கு உபயுக்தமானது. ப்ரபத்தி, ஆர்த்த விஷயத்தில் உடனே பலத்தைக் கொடுப்பதாயும், த்ருப்த விஷயத்தில் ப்ராரப்த தேஹாவஸாநத்திலேயே பலத்தைக் கொடுப்பதாயுமிருப்பதால், அதிலும் சிறந்தது. அன்றியும் பக்தியானது அக்நி வித்யாங்கமாகையாலே த்ரைவர்ணிகாதிகாரமுள்ளது. ப்ரபத்தி ஸத்யவசனாதிகள் போலே ஸர்வாதிகாரமாயுள்ளது. பக்தியானது எல்லா சேதனர்களுக்கும் நியதமாயுள்ள அநந்யசரணத்வ ரூபமான உபாய பாரதந்த்ர்யத்துக்கு அநுசிதையாகும். ப்ரபத்தி ஈசுவரனையே உபாயமாகப் பற்றுகையாகிற படியால், அந்த உபாய பாரதந்த்ர்யத்துக்கு உசிதையாயிருக்கும். பக்தி ஈசுவரனுடைய உபாய பாவத்தை விஷயீகரிக்க மாட்டாது. ப்ரபத்தியோ ஈசுவரனையே உபாயமாகப் பற்றுகையாலும், ''இயம் கேவல லக்ஷ்மீச'' என்பது முதலிய சுலோகங்களின் படி, உபாய வரண ரூபமாயிருக்கையாலும், அநுபாயமாயிருக்கும் என்று சொல்லப் பட்டிருக்கிறது.

இப்படியே லோகதேசிகன், மணவாளமா முனிகள் முதலான ஆசார்யர்களும் ப்ரபத்தி நிரூபணத்தில் சிறந்தவர்களாயிருந்தார்களென்பது, அவர்களுடைய ஸ்ரீ ஸூக்திகளால் விளங்கும். இன்னும் உபபத்தியாலும் நிரூபிக்கலாகும்.

ஒருவன் அசக்தனாயும், அஜ்ஞனாயும் ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாதவனாயுமிருந்தால், அவன் ஸமர்த்தனாயும் ப்ராப்தனாயும் உள்ள ஒருவனையடைந்து என்னை நீயே ரக்ஷிக்கவேணுமென்று ப்ரார்த்தித்தால், அவன் அப்படியே ரக்ஷிக்கிறான் என்பது லோக ஸித்தம். இப்படி கபோத(புறு)பாக்கியானத்திலும், ஸ்ரீ கஜேந்த்ராழ்வான் வ்ருத்தாந்தத்திலும் நிகழ்ந்திருப்பதைக் கண்டுகொள்ளலாம். கபோதத்துக்கு சரணாகதி பரமதர்மமென்கிற ஞானமுமில்லை; சரணாகத ரக்ஷணம் பண்ணாவிடில் மிகுந்த பாதகமுண்டாகு மென்பதும் தெரியாது. அப்படியிருக்க, தன்னுடைய ப்ராணனை விட்டாவது தனக்கு சத்துருவான வேடனை ரக்ஷித்ததென்றால், ஜ்ஞானவான்கள், அநுஷ்டிப்பது சொல்ல வேண்டாதாயிற்று. இந்த விஷயத்தை ''கபோதோ வாநர ச்ரேஷ்ட கிம்புநர் மத் விதோ ஜந:'' என்று பெருமா அருளிச் செய்தார்.

இது நிற்க, பட்டர் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளும் போது, நடுவே ஒருவேடன் குடிசையில் தங்கியிருந்தவளவிலே, காட்டிலிருந்து வந்த வேடனைக் கண்டு, நீ காட்டிற் கண்ட விசேஷம் ஏதேனுமுண்டோவென்று கேட்டருள, அதற்கு அவன் காட்டில் ஒரு ஆண் முயலைக்கண்டு அடிக்கப் புகுந்தேன்; அவ்வளவில் அதன் அன்புள்ள பெட்டை முயல் என் முன்பாக வந்து கும்பிட்டுக் கிடந்தது. அதுகண்டு இரங்கி, அந்த முயலை அடிக்காமல் வந்தேன் என்று சொல்ல, இதைக்கேட்டு பட்டர், அந்த முயலுக்கு சரணாகதி பரம தர்மமென்கிற ஜ்ஞானமில்லை; அந்த வேடனுக்கும் சரணாகத ரக்ஷணம் பரமதர்மமென்று தெரியாது. அப்படியிருக்க, சரணாகதி தர்மத்தினுடைய ப்ரபாவம் இப்படிச் செய்வித்தது: ஆதலால் பரம சேதனனான ஸர்வேசுவரனிடத்தில், சேதனர்கள் பண்ணுகிற சரணாகதி பலியாதிராதென்பது கிம்புநர் ந்யாய ஸித்தம் என்றருளிச் செய்தார் என்பது ப்ரஸித்தம்.

இந்த ப்ரபத்தி, பக்தியைக் காட்டிலும் மேலானது. எப்படியென்றால், பக்தி அதிகிருதாதிகாரையாயிருக்கும். ப்ரபத்தி ஸர்வாதிகாரையாயிருப்பது. அந்த பக்திக்குப் பலம் ப்ராரப்த கர்மாவஸாநத்தில் மோக்ஷமடைதல்.

ப்ரபத்தியில் ஆர்த்தருக்கு உடனே மோக்ஷ பலம் ஸித்திக்கிறது. த்ருப்தருக்கு ப்ராரப்த சரீராவஸாநத்திலேயே, மோக்ஷ பலம் ஸித்திக் கிறது. ப்ரபத்தியானது தன்னை யநுஷ் டிக்கிறவர்களுடைய, ஸம்பந்தி ஸம்பந்தி களுக்கும் பலோபயோகியாயிருக்கும். பக்தி தன்னை அநுஷ்டிக்கிறவர்களுக்கு மட்டுமே பலத்தைக் கொடுக்கும்.

ஆனால், "தமேவம் விதித்வா அதிம்ருத்யு மேதி" என்கிற சுருதியின்படி ஜ்ஞானமுள்ள வனுக்கே மோக்ஷம் என்று சொல்லப்பட்டிருப் பதால் ஜ்ஞானமில்லாமலிருக்கிற தத் ஸம்பந் திகளுக்கும் இது பல ஸாதனமாம்படி கூடுமோ வென்னில். "தமேவம் விதித்வா" என்கிற சுருதியில் "நாந்ய: பந்தா வித்யதே அயநாய" என்று சொல்லுகிற இடத்தில், 'தமேவம்' என்பதிலுள்ள தத்சப்தார்த்தமான ஈசுவரனைக் காட்டிலும், அந்யமாயிருப்பதற்கு உபாயத்வ மில்லை என்பதே தாத்பர்யமாகையால் ப்ரபத் திஸ்தலத்தில் ததந்யமான ஜ்ஞானம் உபாய மாகாமையாலே, ஆசார்யனுடைய ப்ரபத்தி யாலேயே தத் ஸம்பதிகளுக்கு மோக்ஷமுண் டாகு மென்பதில் விரோதமில்லை என்று 'ஸார ப்ரகாசிகை' யிலும், 'நிக்ஷேப ரக்ஷை' யிலும் நிருபிக்கப்பட்டிருப்பதால், ப்ரபத்தி ஸ்தலத் தில் ஜ்ஞானத்துக்கும் பலத்துக்கும் ஸாமாநாதி கரண்யம் வேண்டியதில்லை. இப்படியே 'ந்யாய ஸித்தாஞ்ஜந' வியாக்கியானத்தில், திருப்புட் குழி ஸ்வாமி, 'அந்யஸ்ய ஜ்ஞாநாத் அந்யஸ்ய முக்தி" கூடாதென்பது ப்ரபத்தி யொழிந்த விடத்திலென்று நிருபித்திருக்கிறார்.

அன்றியும், "அந்வயா தபிசைகஸ்ய ஸௌஜந்யா தாத்மநோஹரௌ, ஸர்வ ஏவ ப்ரமுச்யந்தே நரா: பூர்வே அபரே ததா" என்று பாரத்வாஜ ஸம்ஹிதையிலும், "பசுர் மநுஷ்ய: பக்ஷீவா" என்கிற சுலோகத்திலும், இந்த விஷயம் வ்யக்தமாயுள்ளது. இதை அநு ஸரித்து சுருதப்ரகாசிகையில், "விநத விவித பூத வ்ராத ரக்ஷைக தீக்ஷே" என்பதன் வ்யாக் யானத்தில் "தத் ஸம்பந்திநோபி தத ஏவ ரக்ஷ்யா:" என்று சாதித்து, "ஆஸ்போடயந்தி பிதர: ப்ரந்ருத்யந்தி, பிதாமஹா:, வைஷ் ணவோ ந: குலேஜாத: ஸநஸ் ஸந்தாரயிஷ் யதி" என்று இந்த ப்ரமாணமும் காட்டப்பட் டிருக்கிறது. இங்குக் காட்டிய ப்ரமாணங் களின் அர்த்தம்—ஒருவன் ஸர்வேசுவரனிடத் தில் ஆத்மாத்மீய பரந்யாஸம் பண்ணியிருந் தானேயானால், அவனுடைய ஸம்பந்தத்தாலே அவனுக்கு முன்புள்ளவர்களும், பின்புள்ளவர் களும் முக்தராவார்கள். பசு. மநுஷ்யன், பக்ஷி இவர்களும் வைஷ்ணவ ஸமச்ரயமுள்ளவர் களாயிருந்தால், அந்த வைஷ்ணவ ஸம்ச்ரயத் தாலே முக்தி அடைகிறார்கள். ஒரு குலத்தில் வைஷ்ணவனான ஒருவன் பிறந்தானேயானால், அவனுடைய பித்ரு பிதாமஹ ப்ரபிதா மஹர் கள் நம்முடைய குலத்தில் ஒரு வைஷ்ணவன் பிறந்திருப்பதால், அவன் நம்மை ஸம்ஸாரத் தில் நின்று கரையேற்றி விடுவன் என்று ஸந் தோஷத்தாலே கூத்தாடுகிறார்கள் என்பதாம். இப்படி ப்ரமாணங்களிருப்பதால், ப்ரபத்தி யானது தன்னை அநுஷ்டிக்கிறவர்களுடைய ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும், பல ஸாதனமா மென்பது ஸித்தம். இது நிற்க.

பக்தி நிஷ்டனுக்கு மரண காலத்தில் அந் திம ஸ்ம்ருதி வேணும்: அதுஇல்லாத பக்ஷத்தில் அவனுக்குப் பலமில்லை. ப்ரபத்திக்கு, மரண காலத்தில் அந்திம ஸ்ம்ருதி இல்லாமலிருந்த போதிலும் பலத்துக்குக் கண்ணழிவில்லை. ஆனால் மரண காலத்தில் "வாக் மநஸி ஸம்பத் யதே" என்கிறபடியே வாகிந்த்ரியமானது மனஸ்ஸில் ஸம்பந்திக்க, அந்த மனஸ்ஸானது ப்ராணன்களில் ஸம்பதிக்கும் என்று ஏற்படுவ தால், பிராணன்களில் ஸம்பந்திக்கிறதற்கு முந்தி மனஸ்ஸுக்கு உபாதியில்லாமையால் எந்த விஷயத்திலாவது ஸ்ம்ருதி (நினைவு) அவ யம் இருக்கும். அப்போது "யம்யம்வாபி ஸ்மரன்" என்கிற ப்ரமாணப்படி எதை விஷயீ கரித்து நினைவு உண்டாகிறதோ அந்த ஜன் மாவே இவனுக்கு ஏற்படுகிறதென்றிருப்ப தால், ப்ரபந்நனுக்கும் அப்படியான அந்திம ஸ்ம்ருதி அவசியம் வேண்டியிருப்பதால் அதில்லாதபோது மோக்ஷம் ஏற்படாதென் னில், அது ஸாமான்ய விஷயமாகையால், ப்ரபந்ந விஷயத்தில் பொருந்தாது. ஏனெனில் இவனுக்கு ப்ரவ்ருத்தியின் நிவ்ருத்தியுண்டா யிருப்பதாலும், ஸித்தமே உபாயமாக முன் னிற்பதாலும், இதர விஷய ஸ்ம்ருதி யுண்டாக மாட்டாது. த்வயாநுஸந்தான வாஸனையால் பகவத் விஷயமான ஸ்ம்ருதி யுண்டாகலாம். ஆனால் அது பலரூபமாயிருப்பதல்லது, ஸாதன கோடியிற் சேராதாகையால், அந்திம ஸ்ம்ருதி ஸாதநத்வேந அவசியம் வேணுமென்கிற நிர்ப் பந்தமில்லை. "மாதவாங்க்ரி த்வயோபாயோ மாதவாங்க்ரி ப்ரயோஜந:, ஸ உத்தமாதிகாரீ

ஸ்யாத்'' என்பதனுல், எம்பெருமானுடைய திருவடிகளை உபாயமாகவும், உபேயமாகவும் நினைத்திருப்பவன், உத்தமாதிகாரி என்று சொல்லியிருப்பதாலும், ''அஸ்மிந் நிவர்த்த மாநாநாம் விதௌ விப்ர நிஷேவிதே பூர்வேத்ரய உபாயாஸ்தே பவேயுரமநோஹரா:'' என்கிற சுலோகத்தில் விசேஷஜ்ஞர்களால் ஸேவிக்கப்பட்டிருக்கிற ப்ரபத்தி நிஷ்டையில் இருக்கிறவர்களுக்கு, முந்தின கர்ம ஜ்ஞான பக்திகள் மூன்றும் அமநோஹரங்கள் என்று சொல்லியிருப்பாலும், ''ஸத் கர்ம நிரதா: சுத்தா: ஸ்வ யத்ந க்ருத புத்தய:, நார்ஹந்தி சரணஸ் தஸ்ய கலாம் கோடி தமீமபி'' என்பதனுல் மற்ற உபாயாந்தர நிஷ்டர்கள் சரணுகதனுடைய, கோடியில் ஓர் அம்சத்துக்கும் அர்ஹராகார் என்று சொல்லப்பட்டிருப்பதனுலும் ப்ரபத்தி மேலானதே.

மேலும் ''நரஸ்ய புத்தி தௌர்ப்பல்யாத் உபாயாந்தர மிஷ்யதே'' என்கிற சுலோகத்தால், புத்தி தௌர்ப்பல்யமுள்ளவனுக்கு உபாயாந்தரத்தில் அதிகாரம் உண்டாகிறதென்று இருப்பதாலும், விசேஷஜ்ஞர்களுக்கே அதிகாரமுள்ள ப்ரபத்தி மேலானது. ஆனுல் பக்தி யோக நிஷ்டர்களான வ்யாஸாதிகளுக்கும், புத்தி தௌர்ப்பல்யம் சொல்ல வேண்டியிருக்கிறபடியால், அந்த அர்த்தம் பொருந்தாது. ஆகையாலேதான் அசக்தனுயிருந்த போதிலும் உபாயாந்தரங்களில் துராசை வலுத்து தனக்கு அதிகாரமிருப்பதாக ப்ரமித்தவனுக்கு உபாயாந்தரங்களில் அதிகாரம் என்று அர்த்தம் சொல்லவேணுமென்னில், அப்போது தௌர்ப்பல்ய சப்தத்துக்கு லக்ஷணையும் அசக்த பதாத்யாஹாரமும் ஏற்படும். வ்யாஸாதிகளுக்கு புத்தி தௌர்ல்பல்ய கல்பனத்தை யபேக்ஷித்து, லக்ஷணையும் அத்யாஹாரமும் ஸஹ்யமென்று சொல்லில் ரதகாராதிகரணத்திலும் நிஷாதஸ்த பத்யதிகரணத்திலும், சப்தஸ்வாரஸ்யத்தை அவலம்பித்து ரதகாரதிகளுக்கு வித்யையைக் கல்பித்திருப்பதுபோல், இங்கும் சப்தஸ்வாரஸ்யத்தை அவலம்பித்து வ்யாஸாதிகளுக்கும் அதிகாராரம்பக கர்ம விசேஷத்தைக் கற்பித்து, உபசேத்துக் குறுப்பான ஜ்ஞானமிருந்த போதிலும், அநுஷ்டானுபயோகியான ஜ்ஞானமில்லை யென்றே கொள்ள வேணும்.

அப்படியிருந்ததால்தான், ஆழ்வார்களுக்கு ஏற்பட்ட கௌரவ்யதை அவர்களுக்கில்லை. ''தஸ்மை நமோ முநிவராய பராசராய'' என்று ஆளவந்தார், அருளிச்செய்தது உபகராக புத்தி நிபந்தனம்: உத்தாரக புத்திக்ருதமன்று.

இத்தை அநுஸரித்து வேதாந்தாசார்யர், ''ப்ரபந்நா தந்யேஷாம் ந திசதி முகுந்தோ ''நிஜபதம்'' என்று அருளிச்செய்தார். இப்படி ப்ரமாணங்களும் உபபத்திகளுமிருப்பதால், ''பக்தி முக்யோபாயம், ப்ரபத்தி கௌணோபாயம், ப்ரபத்தி மேலானதென்று சொல்லியிருப்பது ப்ரரோசநார்த்தம்'' என்று சொல்லுமது அநுபபந்நம்.

இனி, ப்ரபத்தியாவது—த்வமேவோபாய பூதோ மே பவேதி ப்ரார்த்தனுமதி: சரணுகதிரித்யுக்தா'' என்றும், ''அநந்ய ஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிச்வாஸ பூர்வகம், ததேகோபாயதா யாச்நா ப்ரபத்தி: சரணுகதி:, ''மாமேகம் சரணம் வ்ரஜ'' இத்யாதி, ப்ரமாணங்களினுலே, நீயே எனக்கு உபாயமாக வேணுமென்று ப்ரார்த்திக்கை சரணுகதி என்றும், ஈசுவரனைத் தவிர, மற்ருென்ருல் ஸாதிக்க முடியாததாயும், தனக்கு இஷ்டமாயுள்ள மோக்ஷத்திற்கு அவனையே உபாயமாக ப்ராத்திக்கை சரணுகதி என்றும், மற்ற உபாயங்களை விட்டு, என்னை ஒருவனையே உபாயமாகப் பற்றவேணும் என்றும் சொல்லப்பட்டிருப்பதால், அவனே உபாயமென்கிற அத்யவஸாயத்தோடு கூடின உபாயத்வ ப்ராத்தனையே சரணுகதியென்று ஏற்படுகிறது. இந்த ப்ரமாணங்களில் ஏக சப்தம் ஏவகாரம் இவைகளால் ஈசுவரன் உபாயமாமிடத்தில், வேறு உபாயங்களை அபேக்ஷியாமே உபாயமாகிறுன் என்று ஏற்படுகிறபடியாலும், ''ஸர்வதர்மாந்பரித்யஜ்ய'' என்பதால், மற்ற உபாயங்களை விட்டே பற்றவேணும் என்றிருப்பதாலும் இவ்வதிகாரிக்கு ஈசுவரனைத் தவிர வேறு உபாயமில்லை.

ஆனுல் நீயே உபாயமாக வேணுமென்று இவன் ப்ரார்த்திப்பதால் அந்த ப்ரார்த்தனையாகிற ஹேதுவினுலே ஈசுவரன் பலப்ரதானம் பண்ணுமிடத்தில், அந்த ப்ரார்த்தனையே உபாயமாகிறபடியால், ஈசுவரனுக்கே உபாயந்தர நைரபேக்ஷ்மாகிற ஏக சப்தார்த்தம் அநுபபந்நமாமே என்னில்? ''ஜ்யோதிஷ்டோமேந

ஸ்வர்க்க காமோ யஜேத'' என்கிற இடத்தில், ஸ்வர்க்க காமனையானது ஸ்வர்க்கத்துக்கு ஸாதன மின்றியே, அதிகாரி விசேஷண மாகிருப்போலே நீயே உபாயமாக வேணு மென்கிற ப்ரார்த்தனையும் ஸித்தோபாய அதிகாரிக்கு விசேஷணமாயிருக்கும்.

ஆனால் அந்வய வ்யதிரேகங்களினால், ப்ரபத்திக்கு ஸாதநத்வம் ஏற்படமாட்டதோ வென்னில்; ஸாதநமாவது—அநந்யதாஸித்த மாயிருப்பதாகையால் (அதாவது, தன்னை யொழிய வேறொன்றால் பெறப்படாத பலஸித்திக்குத் தவறாமல் முன் நிற்பதாகையால்) ஈசுவரனே உபாயமென்கிற ப்ரமாணத்தாலே, ஈசுவரனைத் தவிர இது உபாயமல்லாமையாலே தன்னையொழிய ஈசுவரனால் பெறப்படும் பலஸித்தியாலே அந்யதா ஸித்தமாயிருக்கையால், அநந்யதாஸித்தமாய்க்கொண்டு நியத பூர்வ விருத்தியா யிருக்கவேண்டிய ஸாதந லக்ஷணமில்லாமையாலே ப்ரபத்தி ஸாதனமாக மாட்டாது.

'எப்படி ஜ்யோதிஷ்டோமாதி ஸ்தலங்களில் ஸ்வர்க்க காமனையானது நியத பூர்வ விருத்தியா யிருந்தபோதிலும், யஜன கர்த்தா வான அதிகாரிக்கு விசேஷணமாயிருப்பதால், அந்த ஸ்வர்க்க காமனைக்கு ஸாதநத்வம் ஏற்படவில்லையோ; அப்படியே இங்கும் சரண வரணம், அதிகாரி விசேஷணமாயிருப்பதால், அதற்கு ஸாதநத்வ மில்லாமையால் அது ஹேதுவாக மாட்டாதென்று கண்டுகொள்வது.

அப்படி அதிகாரி விசேஷணமாகச் சொல்லும் பக்ஷத்தில் 'ஸித்தமேவஹி ஸர்வத்ர நியோஜ்யஸ்ய விசேஷணம்'' என்பதால், அதிகாரி விசேஷணமாயிருப்பது, ஸித்த மாகவே யிருக்கவேணுமென்று ஏற்படுவதால் ''மாமேகம் சரணம் வ்ரஜ'' என்று விதேய மாகச் சொல்வது கூடாதேயென்னில், அந்த நியமம் ஸாத்யோபாய விஷயமாகையால், ஸித்தோபாய விஷயத்தில் விரோதிக்காது.

அல்லாமல் ஸித்தோபாய விஷயத்திலும் அதிகாரி விசேஷணம் ஸித்தமாகவே யிருக்க வேணுமென்னில்; உபாயமும் ஸித்தமாய் அதிகாரமும், ஸித்தமாயிருக்கும் பக்ஷத்தில் ஸர்வமுக்தி ப்ரஸங்கம் ஏற்படும். ஆதலால் அது கூடாது. அங்ஙனமன்றிக்கே, வேறு வாக்கியங்களினாலே விதிக்கப்பட்டதொரு விஷயமானது மற்றொரு வாக்கியத்தில் ஸித்தமாய்க்கொண்டு அதிகாரி விசேஷணமாகலாம். எப்படி யென்னில், ''அக்நீநாததீத'' என்றும், ''ஸ்வாத்யாயோ அத்யே தவ்ய: ' என்றும் வாக்கியாந்தரங்களால் விதிக்கப்பட்ட 'அக்ந்யா தானம்' 'அத்யயநம்' இவைகள்யாகாதிகாரிக்கும் ஸித்த விசேஷண மாவதுபோலே, இங்கும் 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' என்று பூர்வ வாக்கியத்தால் விதிக்கப்பட்ட சரணவரணம் உத்திரத்தில் 'த்வா' என்பதனால், சரணவரணம் செய்த உன்னை என்று அநுவதிக்கப்பட்டிருப்பதால், மோக்ஷாதிகாரிக்கு ஸித்த விசேஷணமாகலாம்.

ஆனால் 'சரணம் வ்ரஜ' என்று சரண வரணம் விதி விஷயமாயிருப்பதால், அந்தவிதியாலே கிருதிஸாத்யத்வமும், அதனால் ஆக்ஷிப்த மான இஷ்ட ஸாதநத்வமும் ஏற்படுகிறபடியால், சரணவரணம் உபாயமன்றென்று சொல்லுமது அநுபபந்ந மென்னில்; விதிக்கு கேவல கிருதி ஸாத்யத்வமே அர்த்தமாகக் கொள்வது. பாதகமில்லாத ஸ்தலத்தில்; அங்கு இஷ்ட ஸாதநத்வம் அர்த்தாத் ஸித்திக்கும். இங்கு சரணம் வ்ரஜ என்பதில் சரணாகதி உபாய வரண ரூபமாக ஏற்படுகிறபடியால் உபாய வரணத்துக்கு உபாயத்வமில்லாமையாலே சரணம் வ்ரஜஎன்கிற விதியால் சரண வரணத்துக்கு இஷ்ட ஸாதநத்வம் ஏற்பட மாட்டாது,

மேலும் இஷ்ட ஸாதனமென்பது இஷ்ட மான ப்ரயோஜனத்தை அடையச்செய்து என்று ந்யாய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது: சரண வரணம் இஷ்ட ப்ரயோஜன மாகையால், விதிக்கும் விஷயமாகலாம். அறிநியும் இந்த சரணவரணத்திற்குப் பலம் ஈசுவரன் தனக்கு உபாயமாயிருக்கையாகையால், அந்த உபாயமாயிருக்கையாகிற இஷ்டத்துக்கு ஸாதனமாயிருப்பதால் இஷ்ட ஸாதநத்வமும் ஏற்படலாம். இப்படியே ஸாராஸ்வாதினியில் ''ப்ரபத்தி ஈசுவரனுடைய உபாயாந்தர ஸ்தாந நிவேசத்துக்கு ஸாதனமாவதல்லது பக்தியைப்போலே ஸாக்ஷாத்தாய் மோக்ஷ ஸாதனமன்று'' என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அப்படியே இங்கும் தன் விஷயத்தில் ஈசுவரன் உபாயமாகையாகிற, பலத்திற்கு ஸாதனமாயிருக்கத் தட்டில்லை. ஆனால் ஈசுவரனுக்கு, உபாயத்வம் ஸ்வாபாவிகமா யிருந்த போதிலும், தனக்கு ஈசுவரன் பல ப்ரதனாயிருக்கை ப்ரார்த்திக்கப் படலாம். இங்ஙன

மன்றிக்கே இவன் பாசுரம் கேட்டவாறே திருவுள்ளமுகக்கும் என்பதுபோல் ஸ்வயம் ப்ரயோஜனமான பகவந் முகோல்லாஸத்துக்கு ஸாதனமாகையாலும் இஷ்ட ஸாதநத்வம் ஏற்படும்.

இப்படியிருக்கையாலே வேறொன்றுக்காக அநுஷ்டிக்கப்படுவதாய்க் கொண்டு ப்ரஸங்காத் உபகாரகமாயிருக்கையால், ப்ரபத்தி வ்யாஜமாக ஏற்படுகிறது. இதை யனுசரித்தே தேசிகனும் "ப்ரபத்தே: வ்யாஜ மாத்ரத்வம்" என்பதால், ப்ரபத்தியை வ்யாஜோபாயம் என்று அருளிச்செய்திருக்கிறார். இப்படியுள்ள ப்ரபத்தி அநுபாயமென்பதும், தேசிகன் ந்யாயஸித்தாஞ்ஜநத்தில், அருளிச்செய்த "இயம் கேவல லக்ஷ்மீச" என்கிற சுலோகத்தால் வ்யக்தமாம். அதன் அர்த்தம். ச்ரிய:பதியான ஈசுவரனிடத்திலிருப்பதாயும், மற்றவர்களிடத்திலில்லாததாயும் இருக்கிற உபாயத்வத்தை விஷயீகரிக்கிற ஜ்ஞானமாயுள்ள ப்ரபத்தியானது தான் உபாயமென்கிற புத்தியைத் தடுக்கிறது என்பதாம். இத்தால் ஈசுவரனைக் காட்டிலும் அந்யமாயுள்ளதொரு உபாயமில்லையென்றும், ப்ரபத்தியும் ஈசுவரனைக் காட்டிலும் வேறாகையாலே, இதுவும் உபாயமாக மாட்டாதென்றும் ஏற்படுகிறபடியால்' ப்ரபத்தி, அநுபாயமென்பது ஸித்தம்.

ஆனால் அந்த உபாயத்வம் பலப்ரதத்வ ரூபமாகக் கொள்ளில் அது, ப்ரபத்தியில் ப்ரஸக்தமாகாமையாலே, ப்ரஸக்தத்துக்கே ப்ரதிஷேதம் உசிதமாகையால், நிஷேதம் அநுபபந்நமாம். நிக்ஷேப சிந்தாமணியில் கீழ்ச்சொன்ன சுலோகத்துக்கு, அர்த்த நிருபணம் பண்ணுகையில், "ப்ரபத்திக்கு உபாயத்வம் அந்வய வ்யதிரேகங்களினால் ஏற்பட்டிருந்தபோதிலும், விசார தசையில் அந்த ப்ரபத்தி உபாயத்வ ஜ்ஞான ரூபமாகையாலே, உபாயத்வ மேற்படாது" என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இப்படியே 'நியாய ஸித்தாஞ்ஜன வ்யாக்யானமான ரத்நபேடிகையில் திருப்புட்குழி ஸ்வாமியும் நிரூபித்திருக்கிறார்.

அங்ஙனமன்றிக்கே அஹிர்புர்த்ந்ய ஸம்ஹிதையில், "உபேக்ஷகோ யதாகர்ம பல தாயீதி யாமதி:" என்கிற சுலோகத்தில் கர்மானு குணமாக ஈசுவரன் பல ப்ரதானம் பண்ணுகிறவனாகையால், உபேக்ஷகன் என்கிற ஜ்ஞானமானது, ஈசுவரன் ரக்ஷிக்கக்கடவன் என்கிற விசுவாஸத்துக்கு ப்ரதிபந்தகம் என்று சொல்லியிருப்பதால், ப்ரபத்தி உபாயமாகும் பக்ஷத்தில், அந்த உபாயத்தை அநுஷ்டிக்கிறவனிடத்தில் அந்த ப்ரபத்தி ரூப கர்மாநுகுணமாக பலப்ரதானம் ஈசுவரன் பண்ணுகிறவன் என்றேற்படுவதால், ஈசுவரன் உபேக்ஷகன் என்கிற புத்தியானது அவசியம் உண்டாகக் கூடுமாகையால், ப்ரபத்திக்கு அங்கமாயுள்ள விசுவாஸம் ஏற்படமாட்டாதென்று ஆக்ஷேபித்து ப்ரபந்ந விஷயத்தில், மோக்ஷ பலம் தாயத்வ ஸம்பந்த ப்ரயுக்தம் 'ப்ரபத்தி ப்ரயுக்தமன்று' என்று நிக்ஷேப சிந்தாமணி' யில், நிரூபித்திருப்பதையும் கண்டுகொள்க.

மேலும் நம: சப்தார்த்த விசாரத்தில், நம: சப்தார்த்தம் அநந்ய சரணத்வமானால், ப்ரபத்தியை உபாயமாக அநுஷ்டிக்கும் பக்ஷத்தில் அநந்ய சரணத்வம் ஏற்படாதாகையால், ப்ரபத்தி உபாயமன்று: வ்யாஜம் என்று 'ஸாராஸ்வாதிநி' யிலும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அந்த வ்யாஜத்வம் பலகரணத்வ ரூப உபாயத்தைக் காட்டிலும் வேறுபட்டது. அப்படியன்றிக்கே வ்யாஜ்த்வம் பலகாரணத்வ ரூபமாகச் சொல்லும். பக்ஷத்தில் ஜ்யோதிஷ், டோமாதிகளும் ஸ்வர்க்கத் துக்கு வ்யாஜங்களாகவே ஏற்படும். அது பூர்வ தந்த்ர விருத்தம்.

அதுநிற்க," "பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி: ப்ரபத்தி:" என்கிற பூர்வாசார்யர்களுடைய வாக்யத்தால் ஈசுவரன் உபாயாந்தரங்களை, அநுஷ்டிக்கிறவன் விஷயத்தில் தான் நிருபாதிக ரக்ஷகனாகிறதில்லை என்றறியலாம். ஆகையால் உபாயாந்தர ப்ரவ்ருத்தியானது ஈசுரனுடைய ரக்ஷணப் ரவ்ருத்திக்குத் தடையாகையால், அந்த உபாயாந்தரங்களை விட்டு, ஈசுவரனை உபாயமாகப், பற்றுகையாகிற ப்ரபத்தி ஸ்வப்ரவ்ருத்தி விசிஷ்டையாகையாலே அந்த ப்ரபத்தி ஈசுவரனுடைய ரக்ஷணத்துக்கு ப்ரதிபந்தகமான உபாயந்தர ப்ரவருத்தி நிவ்ருத்தியோடு கூடினதாகையால் ப்ரதி பந்தகாபாவ ரூபையாக ஏற்படுகிறது. நம்முடைய ஸித்தாந்தத்தில்ப்ரதிபந்தகாபாவத்துக்குகாரணத்வமில்லை. அத்தாலும் ப்ரபத்தி உபாயமாக மாட்டது.

ஆனால் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி தூக்க காலத்தில் உண்டாயிருப்பதால், அப்பொழுதும் இவன் ப்ரபந்நனாகக்கூடும் என்கிற ஒரு சங்கை

வரக்கூடாதோவென்னில், ஜ்ஞான கார்ய மான நிவ்ருத்யாக்ய யத்நமே இவ்விடத்தில் விவக்ஷிதமாகையால் அது வரமாட்டாது.

ஆனால், ஸர்வசக்தனான ஸர்வேசுவரன் ரக்ஷணத்தில் ப்ரவ்ருத்தனானால், அந்த ப்ரவ்ருத்திக்கு இவனுடைய ப்ரவ்ருத்தி ப்ரதிபந்தகமாகும் பக்ஷத்தில் அவனுடைய ஸர்வசக்தத்வத்திற்குக் குறைவுண்டாகாதோ வென்னில், ஈசுவரன் உபாயாந்தர ப்ரவ்ருத்தன், விஷயத்தில் தான், நிருபாதிகமாக ரக்ஷிக்கிறதில்லை என்று ஸங்கல்பித்திருப்பதால், அந்த ஸங்கல்பத்தை அநுஸரித்து அவன் விஷயத்தில் ரக்ஷண ப்ரவிருத்தியில்லாமை ஸர்வசக்தத்வத்துக்குக் குறைவாக மாட்டாது. இப்படியே இது பூர்வாசார்யர்களுடைய வாக்யமென்று ரஹஸ்ய த்ரய ஸாரத்தில் தேசிகன் அருளிச் செய்திருக்கிறார்.

ஆனால் ப்ரபத்தியை உபாயமாக அநுஷ்டித்த பின்பு உபாயாந்தர ப்ரவ்ருத்தி கூடாதென்பது அந்த வாக்யத்தின் அர்த்தமாகச் சொல்லுவது வாக்ய ஸ்வாரஸ்ய விருத்தமாம்.

இப்படியிருப்பதாலே பிராட்டி "சீதோ பவ ஹநூமத:" என்று தன்னுடைய வாக்யத்தாலே திருவடி விஷயத்தில், அக்நியைச் சுடாமலிருக்கும்படி பண்ணினதுபோல, ராவணனையும் தன்னுடைய வாக்யத்தாலே 'ந த்வா, குர்மி' என்கிற சுலோகத்தின்படி பஸ்மமாக்க வல்ல சக்தி யிருக்கச்செய்தேயும், அந்த ப்ரவ்ருத்தி பெருமாளுடைய ரக்ஷணத்துக்குத் தடையென் றேற்படுகிறபடியால், மேற்கொள்ளப்படவில்லை.

ஆனால் இது ப்ரபத்தியநுஷ்டாநாநந்தரம் ஏற்படுகிற ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியென்று சொல்லவொண்ணாதோ வென்னில், ராவணனாலே ஏற்பட்ட ஆபத்தைப் போக்குகைக்காக, பெருமாள் விஷயத்தில் தன்னுடைய உபாயாந்தர ப்ரவ்ருத்தியை விட்டே சரணம் புகுந்தவ ளாகையால், அது அநுபபந்நம். மேலும், "ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி: ப்ரபத்தி:" என்கிற வாக்யத்தில், "பாவாந்தரம் அபாவ:" என்கிற ந்யாயத்தால், அந்த ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியே ப்ரபத்திக்கு விசேஷணமாக ஏற்படுவதாலும், அப்படிச் சொல்வது அநுபபந்நம்.

அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையிலும் நம: சப்தார்த்த நிருபணத்தில் நம: சப்தத்துக்கு ஸ்தூல யோஜனை ஸூக்ஷ்ம யோஜனை, பர யோஜனை என்று மூன்று யோஜனைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த மூன்று யோஜனைகளிலும் ப்ரபத்திக்கு உபாயத்வமில்லை என்று ஏற்படுவதில்லை.

அவைகளில் முதல் யோஜனையில், நம: சப்தம் ணமு-ப்ருஹ்வீ பாவே என்கிற தாதுவால் நிஷ்பந்நமானதால், அது ஸ்வரூபாந்தர்கதமாய் ஸ்வயம் ப்ரயோஜமான சேஷவ்ருத்தியைச் சொல்லுகிறது; அதாவது—ஜ்ஞானவான் தன்னைக்காட்டிலும், ஸர்வப்ரகாரத்தாலும் உத்கிருஷ்டனைக் குறித்து, ஸ்வபாவஸித்தமாய் வணங்குகை நம: சப்தார்த்தமென்பதாம்.

லோகத்தில் சேதனர்கள், உத்கிருஷ்டர், அபக்ருஷ்டர்களென்று இரண்டு வகையாயிருப்பர்கள். ஸர்வ ப்ரகராத்தாலும் உத்கர்ஷம் எவனிடத்திலிருக்கிறதோ அவன் உத்கிருஷ்ட சப்தத்துக்கு முக்யார்த்தம்; அவனைக்காட்டிலும் வேறு யிருக்கிறவர்கள் அபகிருஷ்டர்கள்; சேஷபூதர்கள் இவர்களில் சேஷிகளாயுள்ளவர்களை சேஷ பூதர்கள் ப்ரயோஜனந்தை அபேக்ஷியாமல் வணங்குகை ஸ்வாபாவிகம். ஆதலால் ஸர்வ ப்ரகாரத்தாலும் உத்கர்ஷமுள்ளவன் ஸர்வேசுரனாகையாலும், அவனைக் காட்டிலும் மற்றவர்கள் அபகிருஷ்டர்களாகையாலும் ஸர்வேசுவரவிஷயத்தில் மற்ற சேதனர்கள் வணங்குகை ஸ்வயம்ப் ரயோஜன சேஷவ்ருத்தி ரூபம். இது மாநஸமாயும், வாசிகமாயும், காயிகமாயுமிருக்கும்.

அவைகளில் மானஸமாவது:—ஸர்வேசுரன் உத்கிருஷ்டன்; நான் அவனிற்காட்டில் அபகிருஷ்டன் என்கிற எண்ண முடைமை. வாசிகமாவது;—இந்த எண்ண முடைமையே காரணமாக 'நம:' என்று உச்சரிக்கை. காயிகமாவது:—அவ்வெண்ணத்தோடு கூடியே உத்கிருஷ்டனை வணங்குகையாம். 'நமதி அநேந' என்ற கரணவ்யுத்பத்தியில் காயிகமான நமஸ்காரத்துக் காரணம் கீழ்நிரூபிக்கப் பட்ட எண்ணமேயாகையால், அந்த தன் தாழ்வை நினையுருமண்ணமும் நம; சப்தார்த்தமாகிறது. இப்படியாக இவன் தன்னுடைய நைச்யத்தைத் தெரிவிப்பதான நமஸ்காரத்தைப் பார்த்து, ஸர்வேசுரன் "ஸுக்ரீவம் சரணங்கத:" என்கிறபடியே இவனை வணங்கு

கிறபடியால் 'பரம் நாமயதி' என்கிற வ்யுத்பத்தியைக் கொண்டும் 'நம:' சப்தம் நிஷ்பந்நமாகிறது. இப்படி உத்க்ருஷ்டனைக் குறித்து அபக்ருஷ்டன் த்ரிவித கரணங்களாலும் செய்யும் நமஸ்காரமானது தன்னுடைய அபகர்ஷ ஸூசகமாயும் ஸ்வாபாவிகமாயுமுள்ள வ்யாபார விசேஷமாகையால், இந்த நமஸ்காரம் உபாயமாக மாட்டாது.

இப்படி மூன்று கரணங்களாலும் செய்யப்படும் நமஸ்காரம் பூர்ண சேஷவ்ருத்தி ரூபமாம். இவைகளில் ஒன்று குறைந்தாலும் பூர்ணமாகமாட்டாது. எப்படியென்றால், ஸர்வேசுவரன் தன் விஷயத்தில் கைங்கர்யத்தைச் செய்யும்படியாகவே காரணங்களைக் கொடுத்திருக்கிறபடியால், அவைகளில் ஒரு கரணங் குறைந்தாலும் அவன் திருவுள்ளத்துக்குக் குறைவுண்டாவதால் கைங்கர்ய பூர்த்தியில்லை. ஆதலால், மூன்று கரணங்களாலும் செய்யப்படும் நமஸ்காரமே பூர்ண சேஷ வ்ருத்தி ரூபமாகக் கொள்ளத்தக்கது. இப்படியிருந்துள்ள 'நம:' சப்தார்த்தமான நமஸ்காரத்தினுடைய, அவஸ்தா விசேஷங்களே தன்னடையே வரக்கூடிய ஸ்வபாவங்களாயுள்ள அங்கங்களாகையால் அவை இனி நிருபிக்கப்படும்.

அவற்றுள் முதலாவது அங்கம்:— நான் பரனை புருஷனை உத்தேசித்து, வணங்குகை எனக்கு சாசுவதமான ப்ரயோஜனம்; இதைத் தவிர வேறு ப்ரயோஜனமில்லை என்கிற புத்தி விசேஷம். இந்த புத்தி விசேஷத்துக்கு விரோதி பலத்தை அபேக்ஷிக்கை— என்றிப்படிச் சொல்லியிருப்பதால், இது உபாயமன்று என்று ஸித்திக்கிறது.

மேல் கார்ப்பண்ய ரூபமான இரண்டாவது அங்கம் நிருபிக்கப்படும். அதாவது:—இப்படி ஸ்வயம் ப்ரயோஜனமாயிருந்துள்ள நம: சப்தார்த்தை யுடையவர்களுக்கு 'பொய்ந்நின்ற ஞானமும்' இந்தியாதிப்படியே அநாதியான விபரீத வாஸனு விசேஷத்தாலும் 'மாயும் வகையறியேன் வல்வினையேன் பெண்பிறந்தே' என்கிற படியே ஸ்வாபாவிகமான பாரதந்த்ரியத்தாலும், ஹேயமான சரீரத்தினுடைய ஸம்பந்தத்தாலும் 'என் நான் செய்கேன்' என்கிறபடி ஜ்ஞான கர்மாக்களுடைய ஹாநியாலே ''நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்' என்கிறபடியே அநுஸந்திக்கை:- இந்த அநுஸந்தானம் ஸ்வாபாவிக பாரதந்த்ரியாநுஸந்தான கர்ப்பமாகையாலே, 'அஸந்தேசாத்து ராமஸ்ய' 'மமைவம் துஷ்க்ருதம் கிஞ்சித்' 'ஏஷா விபத்யாமஹமல்ப பாக்யா' என்கிறபடியே தான் சக்தையாயிருக்கச் செய்தேயும் ஸ்வரக்ஷணத்தில் ப்ரவ்ருத்தியில்லாத பிராட்டியினுடைய ஆசாரத்தாலே, சிக்ஷிக்கப்பட்ட அத்யந்த பாரதந்த்ரிய நிஷ்டையாகையால், இதற்கு விரோதி ஸ்வரக்ஷணத்தில் ப்ரவர்த்திக்கைக் குறுப்பான ஸ்வஸ்வாதந்த்ரிய ப்ரமமென்று, சொல்லப்பட்டிருப்பதால், ஸ்வரக்ஷண ப்ரவ்ருத்தி ரூபமான உபாயாநுஷ்டானம் கூடாதென்று ஸித்திக்கிறது.

இனி விசுவாஸ ரூபமான மூன்றாவது அங்கம் நிரூபிக்கப்படும். அதாவது:—ஸர்வேசுவரன் பரனுயிருக்கச்செய்தேயும், ஸர்வபூதங்களிடத்திலும் கிருபையுள்ளவனுகையால், அநுக்கிரஹத்தில் ஒன்றிலுமே புத்தியுள்ளவனென்கிற த்ருட அத்தியவஸாயம்; முந்தி நிரூபிக்கப்பட்ட கார்ப்பண்யாநுஸந்தானத்தாலுண்டான பயத்தைப் போக்குமதான பகவத் குணாநுஸந்தான ரூபமான விசுவாஸம். இதற்கு விரோதி அவரவர்களால் அநுஷ்டிக்கப்படுகிற உபாயங்களுக்கு அநுகுணமான பலத்தைக் கொடுக்கிறவனுய்க்கொண்டு உபேக்ஷகனுயிருப்பன் என்கிற ஞானவிசேஷம். இந்த ஜ்ஞானம் ப்ரபத்தி உபாயமாகும் பக்ஷத்தில் அந்த உபாயத்துக்கு அநுகுணமான பலத்தைக் கொடுக்கிறவனுய்க்கொண்டு, உபேக்ஷகனுயிருப்பன் என்பதை விஷயீகரிப்பதால், ப்ரபத்திக்கு முக்கிய அங்கமான விசுவாஸம் தடைபடுவதால் ப்ரபத்திக்கு உபாயமாக மாட்டாது.

இனி, நாலாவது அங்கம் நிருபிக்கப்படுகிறது:— அதாவது ஸர்வேசுவரன் நம்முடைய கார்யத்தை நிர்வஹிக்க சக்தியுடையவன் என்கிற பகவத் சக்த்யநுஸந்தான ரூபமான கோப்த்ரு சக்தி நிரூபணம். இது 'சரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா' இத்யாதிப்படியே 'களைவாய் துன்பம் களையாதொழிவாய், களைகண் மற்றிலேன்' என்று தன்னுடைய அபிப்ராயத்தைத் தெரிவிக்கையாகிற கோப்த்ருத்வ வரணத்துக்குக் காரணமாயிருக்கும். இதற்கு விரோதி, 'சங்கே மத்பாக்ய ஸம்க்ஷயாத்' என்கிறபடியே, தன்னுடைய பாக்கிய ஹானியாலே, ப்ரஹ்மாஸ்த்ரம்போல வேறு ஸஹாயத்தை அபேக்ஷியாமல் கார்யத்தைச்செய்ய சக்தனுன ஸர்வேசுவரனிடத்தில் குணபாவத்தை சங்கிக்கை.

இனி, ஐந்தாவது அங்கம் நிரூபிக்கப் படும்:— அதாவது கிழ்ச் சொல்லப்பட்ட அங்கங்களோடே கூடின நம: சப்தார்த்தத்தை அநுஷ்டிக்கு மவர்களுக்குத் தன்னடையே வரக் கடவதான 'கிற்பன் கில்லேன் என்றிலன்' என்றும், 'யாதானும் பற்றி நீங்கும் விரதம்' என்றும் சொல்லப்படுகிற ப்ராதிகூல்ய வர்ஜ நம். இதற்கு விரோதி ப்ரயோஜனாந்தர ப்ரவ் ருத்தி, ஸாதநாந்தர ப்ரவ்ருத்தி இவைகள்.

இனி, ஆறுவது அங்கம் நிரூபிக்கப்படும்– அதாவது ஸமஸ்தமான ஸ்தாவர ஜங்கம' களும் ஸர்வேசுரனுக்கு சரீரங்கள்; அவை களுக்கு அநுகூலனாயிருக்கக் கடவேன் என்கிற அத்யவஸாய விசேஷ ரூபமான ஆந்ருசம்ஸ்யம். இதுக்கு விரோதி லௌகிக மர்யாதா நிராக ரணம். இப்படி ஸ்வயம் ப்ரயோஜனமாயுள்ள நம: சப்தார்த்தமும் இத்தை அநுஷ்டிக்கு மவனுக்கு ஸம்பாவித ஸ்வபாவ விசேஷங் களான அங்கங்கள் ஆறும், அவைகளுக்கு விரோதிகளாயுள்ளவை களுடைய நிவ்ருத்தி ரூபங்களான உபாயங்களும் நிரூபிக்கப்பட் டன. கீழ் நிருபித்தபடி, ப்ரபத்திக்கு உபாயத் வம் ஏற்படவில்லை. இந்த அர்த்தங்களை, யெல் லாம் பிரதிபாதிக்கிற அஹிர்ப்புத்ந்ய ஸம் ஹிதா சுலோகங்கள் இங்கே காட்டப்படு கின்றன.

அவை:—

'ப்ரேக்ஷாவத: ப்ரவ்ருத்திர்யா ப்ரஹ்வீ பாவாத்மிகா ஸ்வத:
உத்க்ருஷ்டம் பரமுத்திச்ய தந்நம: பரிகீயதே
லோகே சேதந வர்க்கஸ்து த்விதைவ பரிகீர்த்தித:
ஜ்யாயாந் சதைவாஜ்யாயாந் நைவாப்யாம் வித்யதே பர:
காலதோ குணத: சைவ ப்ரகர்ஷோ யத்ர திஷ்டதி
சப்தஸ்தம் முக்யயா வ்ருத்த்யா ஜ்யாயாநித்ய வலம்பதே
அத:சேதந வர்க்கோந்ய: ஸ்ம்ருத: ப்ரத்ய வரோ புதை;
அஜ்யாயாந் சாநயோர்யோக: சேஷசேஷி தயேஷ்யதே
அஜ்யாயாம் லோ(அ)பரே ஸர்வே ஜ்யாநே கோமத: பர:
நந்த்ரு நந்தவ்ய பாவேந தேஷாம் தேந ஸமந்வய:
நந்தவ்ய: பரமச்சேஷீ சேஷாநந்தார: ஈரிதா:
நந்த்ரு நந்தவ்ய பாவோயம் ந ப்ரயோஜந பூர்வக:
நீசோச்சயோஸ் ஸ்வபாவோயம் நந்த்ரு நந்தவ்ய தாத்மக:
உபாதிரஹிதே நாயம் யேந பாவேந சேதந:
நமதிஜ்யாயஸே தஸ்மை தத்வா நமநமுச்யதே
பகவாந் மேபரோ நித்யம் அஹம் ப்ரத்யவர: ஸதா
இதி பாவோ நம: ப்ரோக்த: நமஸ: காரணம் ஹி ஸ:
நாம யத்யபிவா தேவம் ப்ரஹ்வீ பாவயதி த்ருவம்
ப்ரஹ்வீ பவதி நீசோஹி பரோநைச்யம் விலோகயந்
அதோவா நமஉத்திஷ்டம் யத்தந்நாமயதி ஸ்வயம்
வாசா நமஇதி ப்ரோச்ய மநஸா வபுஷாசயத்
தந்நம: பூர்ணமுத்திஷ்டம் அதோந்யத் ந்யூந முச்யதே
இயம் கரண பூர்த்திஸ்ஸ்யாத் அங்கபூர்த்தி மிமாம்ச்ருணு
சாச்வதீ மம ஸம்ஸித்தி: இயம் ப்ரஹ்வீ பவாமியத்
புருஷம் பரமுத்திச்ய நமேஸித்தி ரதோந்யதா
இத்யங்க முதிதம் ச்ரேஷ்டம் பலேப்ஸா தத் விரோதிநீ
அநாதி வாஸநா யோகாத் அநைச்வர்யாத் ஸ்வபாவஜாத்
மலாவகுண்டிதத்வாச்ச த்ரிக்ரியா விஹதிர்த் தியா
தத் கார்ப்பண்யம் ததுத்போதம் த்விதீயம் ஹ்யங்க மீத்ருசம்
ஸ்வஸ்வாதந்தர்யா வபோதஸ்து தத்வ்யா காத: உதீர்யதே
பரத்வே ஸதிதேவோயம் ஸர்வபூதாநு கம்பந:
அநுக்ரஹைகதீர் நித்யம் இத்யே தத்துத்ரு தீயகம்
உபேக்ஷகோ யதாகர்ம பலதாயீதியாமதி:
விச்வாஸாத்மக மேதத்துத்ருதீயம் ஹந்திவை ஸதா
ஏவம் பூ தோப்யசக்தஸ்ஸந் மத்ராணம் பவிதும் க்ஷம:
இதி புத்யாஸ்ய தேவஸ்ய கோப்த்ரு சக்தி நிரூபணம்
சதுர்த்த மங்கமுத்திஷ்டம் அமுஷ்ய வ்யாஹதி புந:

உதாஸீநோ குணபாவா நித்யுத்ப்ரே க்ஷா நிமித்தஜா
ஸ்வஸ்ய ஸ்வாமி நிவ்ருத்திர்யா ப்ராதி கூல்யஸ்ய வர்ஜநம்
ததங்கம் பஞ்சமம் ப்ரோக்தம் ஆஜ்ஞா வ்யா காத வர்ஜநம்
அசாஸ்த்ரீயோவ ஸேவாது தத் வ்யாகாத உதீரித:
சராசராணி பூதாநி தாநி ஸர்வாணி தத்வபு:
அதஸ்ததா நுகூல்யம் மேகார்ய மித்யேவ நிச்சயம்
ஷஷ்டமாங்கம் ஸமுத்திஷ்டம் தத்வ்யாகதோ நிராக்ருதி:
பூர்ணமங்கை ரூபாங்கை: ச நமநம் தே ப்ர கீர்த்திதம்
ஸ்தூலோயம் நவஸ:சார்த்த: ஸூக்ஷ்மமந்யந் நிசாமய''

என்பனவாம். இப்படியாக ஸ்தூல யோஜனை நிருபிக்கப்பட்டது. இதில் உபாயாந்தர ப்ரஸங் காஸஹமாய்க் கீழ் நிருபிக்கப்பட்ட அங்கோ பாங்கங்களோடே கூடினதாயும் ஸ்வயம் ப்ர யோஜனமாயுமுள்ள, ப்ரஹ்வீ பாவ வணக்க ரூபமான ஸித்தோபாயபூதனை ஸர்வேசுவர னுடைய ஸ்ருஷ்ட்யவதாராதி ரூபாநேக க்ருஷி பரம்பரையால் பலித்திருக்கிற சேஷத்வ ஜ்ஞா நமே நம: சப்தார்த்தமென்று நிர்ணயிக்கப் பட்டது.

## ஸூக்ஷ்ம யோஜனை

இனி ஸூக்ஷ்மயோஜனை நிர்ணயிக்கப் படும்.

சேதநஸ்ய யதாமம்யம் ஸ்வஸ்மிந் ஸ்வீயேச வஸ்துநி
மமஇத்யக்ஷர த்வந்த்வம் ததாமம்யஸ்ய வாசகம்
அநாதி வாஸநா ரூடமித்யா ஜ்ஞாந நிபந்தநா
ஆத்மாத்மீய பதார்த்தஸ்தா யாஸ்வாதந்த்ர்ய ஸ்வதாமதி:
மேநேத்யேவ ஸமீசீந புத்யா ஸாத்ர நிவார் யதே

என்கிற ப்ரமாணத்தின்படி திருமந்த்ரத்தில் மத்யம பதமான நம: பதத்தில் 'ம:' என்கிற பதம் அஸ்மத் சப்த பர்யாயமான 'ம்' என்னும் பதத்தின் ஷஷ்ட் யந்த (ஆறும் வேற்றுமை உருபு) பதமா யுள்ளது.

அஜ்ஞனை சேதனனுல் ப்ரயோகிக்கப்படு கிற அந்த ஷஷ்ட்யந்த பதம் தன்னிடத்திலும், தன்னுடையதான வஸ்துவினிடத்திலும் உண் டான மமகார ஸாமாந்யத்தைச் சொல்லு கிறது.

அந்த மமதா புத்தியானது, அநாதி வாஸ நாரூடமான தேவோஹம், மநுஷ்யோஹம் என்கிற மித்யாபூதமான தேஹாத்ம ப்ரமத் தாலுண்டானது. அந்த புத்தியானது நிஷேத வாசகமான 'ந' என்னும் சப்தார்த்தமாகிற (எனக்கு இல்லை என்னும் ஸமீசீந ஜ்ஞானத் தாலே தடுக்கப்படுகிறது என்பதாம். இது
'நாஹம் மம ஸ்வதந்த்ரோஹம் நாஸ்மீத்யஸ் யார்த்த உச்யதே
நமே தேஹாதிகம் வஸ்து ஸசேஷ:பரமாத்மந:
இதிபுத்யாநிவர்த்தந்தே தாஸ்தா ஸ்வீயா மநீஷிகா:''

என்பதனுல், நான் எனக்கு ஸ்வதந்த்ரனல்லன், என்னுடைய தேஹாதிகளும் எனக்கு சேஷ மாயுள்ள வஸ்துவோடே கூடின நான் பரமாத் மாவுக்கு, சேஷபூதன் என்று விவரிக்கப்பட் டிருக்கிறது.

'ஸ்வதந்த்ர:' என்கிற விது, 'ஸ்வ: தந்த்ர:— ப்ரதாந: யஸ்ய' என்கிற வ்யுத்பத்தி யால், தான் ப்ரதாநனுயிருக்கும்ருப்பைச் சொல்லுகிறது. இந்த ப்ராதாந்யம் மூன்று வகைப்பட்டிருக்கும்; அவை:— ஸ்வரூபாம் சத்தில் ப்ராதாந்யமும், உபாயம்சத்தில் ப்ரா தான்யமும், பலாம்சத்தில் ப்ராதாந்யமுமாம்.

ஸ்வரூபாம்சத்தில் ப்ராதாந்யமாவது:— அந்த விஷயத்தில் சேஷவ்ருத்தி பண்ணியும் தனக்கு போக ரூபமான அதிசயத்தை புண் டாக்குகைக்கு யோக்கியனுயிருக்கை. அதா வது:— விஷயாந்தரங்களில் ஆசை மிக்க காமுகன் விஷயாந்தரத்தில், சேஷவ்ருத்தி பண்ணி, தனக்கு போகத்தை ஸம்பாதிப்பது போல, தான் பகவத் விஷயத்தில் சேஷவ்ருத் தியைப் பண்ணித் தனக்கு போகத்தை ஸம் பாதிக்க யோக்யனுயிருக்கை.

உபாயாம்சத்தில் ஸ்வாதந்த்ரியமாவது:— ஸர்வேசுவரனுடைய அநுமதிமாத்ரத்தைக் கொண்டு, தன்னுடைய இச்சையாலே ஸாத நங்களில் ப்ரவர்த்திக்க யோக்யனுயிருக்கை.

ஸர்வேசுவரன் சேதனனுடைய ஸாதநா நுஷ்டானத்தில், அநுமந்தாவாகையாலே தான்

அப்ரதானனுகைவே, சேதனன் ப்ரதானனு கிறுன். எப்படியென்னில்? ஸாதநாந்தர விதாயக சாஸ்த்ரங்கள் அநுஜ்ஞா ரூபங்களா கையாலே, 'யதேச்சஸி ததா குரு' என்கிற படியே ஸர்வேசுவரன் கொடுத்த ஸ்வாதந்த்ரிய சக்தியைக்கொண்டு, தன்னுடைய இச்சை யாலே, ப்ரவர்த்திக்கிறவனுகையாலும், பல போக்தாவாகையாலும் இவனே ப்ரதானனு வன்; அப்படியன்றிக்கே 'ஸாது கர்ம காரயதி' என்கிறபடியே அநுபாய பூத ப்ரபத்தி விஷயத்தில் ஸர்வேசுவரன் ப்ரதம ப்ரவ்ருத்தனு கையாலும், சேதனன் அநுமந்தாவாகை யாலும், சேதனன் அப்ரதானனுவன்.

'உருகுமால்' என்கிற திருவாய்மொழி ப்ரகாரம் ஸர்வேசுவரனே பலபோக்தாவாகை யாலே, அவனே ப்ரதானன். ஆதலால் தன்னு டைய பலத்தை உத்தேசித்து, தான் ஸாதநா நுஷ்டானம் பண்ணுகைக்கு யோக்யனுயிருக்கு மிருப்பு உபாயாம்சத்தில் ஸ்வாதந்த்ரியம்.

பலாம்சத்தில் ஸ்வாதந்த்ரியமாவது:- 'சாஸ்த்ர பலம் ப்ரயோக்தரி' என்கிறபடியே தன்னுடைய ப்ரவ்ருத்திக்கு உத்தேச்யமான போகத்தை யுடையனுயிருக்கை. ஸாதநாந்தர விஷயத்தில் ஸர்வேசுவரன் ஸர்வ சேஷியா யிருப்பதால், ஏற்படுகிற பலித்வத்தை உடைய வனுயிருந்தபோதிலும், அந்த பலம் சிருஷ்டி முதலான ஸர்வ கார்யங்களுக்கும் பொது வாகையாலே அப்ரதானமாகும்.

அங்ஙனன்றிக்கே உபாயாந்தரங்களை சேத னன் அநுஷ்டிப்பதால் ப்ரதானபலம் சேதன னுக்கேயுரியது. இப்படி மூன்று பிரகாரமா யிருந்துள்ள ஸ்வாதந்த்ரியம் தனக்கில்லை யென்று நம:சப்தத்தால் ஏற்படுகிறது. நம: சப்த கடகமான ம: என்கிற பதத்தில் வெளிப் பட்டுத் தோன்றிய ஷஷ்டீ விபக்தி, ஸம்பந்த ஸாமாந்யத்தைச் சொல்லுகிறபடியால், ஸ்வ சேஷத்வ ஸ்வரக்ஷகத்வ, போக்ருத்வ ரூப ஸ்வா தந்திரிய நிவ்ருத்தி நம: சப்தத்தால் சொல் லப்படுகிறது.

இத்தால் ஏற்படுகிற ஸம்பந்த ஸாமாந்ய நிவ்ருத்தி 'பாவாந்தரமபாவ:' என்கிற ந்யா யத்தாலே ஸர்வேசுவரனுக்கே ஸ்வம்மாயிருக் கையும், அவனுக்கே ரக்ஷ்யமாயிருக்கையும், அவனுக்கே போக்யமாயிருக்கையுமாக ஏற்படு கிறபடியால், இவைகளே நம: சப்தத்தால் அறியப்படுமவைகளாம்.

## ஸ்வாதந்த்ரிய நிவ்ருத்தி

ஆனுல் ஸுஷுப்தி ப்ரளயங்களில் இந்த ஸ்வாதந்த்ரிய நிவ்ருத்தியேற்படுகிறபடியால் எல்லாருக்கும் முக்திவரக்கூடுமென்கிற அநுப பத்தியினுல் இதனை,

இதி புத்யா நிவர்த்தந்தே ஸர்வா ஸ்வீயா மநீஷிகா:
அநாதி வாஸநாஜாதை: தை: தை: போதை: விகல்ப்பிதை:
ரூஷிதம் யத்ருடம் சித்தம் ஸ்வஸ்வாதந்த்ர்ய ஸ்வதாமயம்
தத்தத் வைஷ்ணவ ஸார்வாத்ம்ய ப்ரதிபோத ஸம்ருத்தயா
நமஇத்ய நயாவாசா நந்த்ரா ஸ்வஸ்மா தபோஹ்யதே

என்று சொல்லிருப்பதாலறிக. இப்படியாக நம: சப்தத்தாலுண்டான ஜ்ஞானத்தாலே, ஸ்வ யத்நத்தாலுண்டான ப்ரவ்ருத்திகள், 'தன் ஞல் வரும் நன்மை விலைப்பால் போலே' என் கிறபடியே த்யாஜ்யங்களாகையால், நிவ்ருத்தங் களாம்.

அநாதிகளாயுள்ள, ஸ்வசேஷத்வ வாஸநை, ஸ்வயத்ந வாஸநை, ஸ்வபோக வாஸநைகளா லுண்டான விருத்தங்களாகக் கல்பிக்கப்பட்ட நான் கர்த்தா, போக்தா' (என்னுடைய இஷ் டத்துக்கு ஸாதகங்களாயிருக்கையாலே) என் னுடைய கிருதிகள் என்கிற ஜ்ஞானங்களாலே த்ருடமாயிருக்கும்படி வ்யாப்த்தமான அஹங் கார மமகார ப்ரசுரமான மானஸ ஜ்ஞாந மானது, ஸர்வேசுவரன் எனக்கு ஆதாரன், நியந்தா, சேஷி; நான் ஆதேயன், விதேயன், சேஷன் ஆகையால், அவன் சரீரியாயும் நான் சரீரமாயுமிருப்பதால், ('என்னுடம்பிலழுக்கை நானே போக்கிக் கொள்ளேனே') என்கிற பகவத் வாக்யாநுகாரமான லோகதேசிகன் ஸூக்திப்படி, ஸர்வேசுவரன் தானே திருத்திப் பணிகொள்ளக் கடவனுயிருக்கச்செய்தே, என் னுடைய ரக்ஷணத்தில் எனக்கு ப்ராப்தியில்லை யென்கிற பாரதந்த்ரிய ஜ்ஞானத்தை யுண் டாக்குகிற (ஆசார்யோபதேசமாயுள்ள) நம: சப்த ரூபையான வாக்காலே, நமஸ்காரத்தைச் செய்யும் சேதனனுலே தன்னிடத்தில் நின்றும் போக்கப்படுகிறது. ஆகவே, ''எனதாவி யார் யானுர்'' என்றும், ''அதவா கிந்து ஸ்மர்ப்ப யாமி தே'' என்றும் சொல்லுகிற ப்ரமாணத் தின்படியே, ஸ்வ ஸ்வாதந்த்ரிய கர்ப்பமா யுள்ள, உபாயபுத்யா அநுஷ்டிக்கப்படுகிற

பக்தி ப்ரபத்திரூப மாநஸ ஜ்ஞானம் போய் விடுகிறதென்று நம: சப்தத்தின் பலிதார்த்த மாயிற்று.

நம: சப்தம் ஸர்வ ப்ரகாரத்தாலும் ஸ்வா தந்த்ரிய நிவ்ருத்திப் பிரதிபாதக மாகையால், ஸர்வேசுவரனுக்கு ஸர்வ ப்ரகாரங்களாலும் அத்யந்த பரதந்த்ரனுகையாகிற சரீர பாவம் சேதனனுக்கு ஏற்படுகிறபடியால், நம:சப்தம் ஸர்வேசுவரனுக்கும் இவனுக்குமுள்ள சரீராத்ம பாவத்தை ப்ரதிபாதிக்கிறபடியால்., ''வைஷ்ணவ ஸார்வாத்ம்ய ப்ரதிபோதஸம் ருத்தயா'' என்று வைஷ்ணவஸார்வாத்ம்யம் நம: சப்தார்த்தமாகச் சொல்லப்பட்டது. ஆகையால் ஸூக்ஷ்மயோஜனையில், ப்ரபத்திக்கு உபாயத்வ மில்லையென்று நிரூபிக்கப்பட்டது.

### பரயோஜனை

இனி பரயோஜனை நிரூபிக்கப்படும்:—
இதிதே ஸூக்ஷ்ம உத்திஷ்ட: பரமந்யங் நிசாமய
பந்தாநகார உத்திஷ்ட:ம:ப்ரதாநஉதீரித:
விஸர்க்க: பரமேசஸ்து தத்ரார்த்தோயம் நிருப்யதே
அநாதி: பரமேசோய: சக்திமாந் புருஷோத்தம:
தத்ப்ராப்தயே ப்ரதாநோயம் பந்தா நமந நாமவாந்

என்று ப்ரமாணமிருப்பதால், அநாதியாயும் பரமேசனுயும் புருஷோத்தமனுயுமுள்ள ஸர்வேசுரன் விஸர்க்க சப்தவாச்யனென்றும், அவனை யடையும் பொருட்டு, உபாயமும் அவனே, பல ப்ரதனும் அவனே என்றும், நமன ரூபமான ப்ரபதநம், உக்தி இவைகளுக்கு எவை நாமாக்களோ அவைகளைத் தனக்கு நாமக்களாக வுடையவன் என்றும் அறியத் தகும்.

இதனுல் 'ஸர்வேசுவரனே ப்ராப்யனும், ப்ராப்யனுயுள்ள தன்னை அடைவதற்கு உபாய மும், தன்னுடைய ப்ராப்தியாகிற பலத்தைக் கொடுப்பவனும் என்று ஏற்படுகிறது. 'நமநமே பந்தா: ப்ரதாந:' என்று சொல்லும் பக்ஷத்தில் நாமவான் என்பது வ்யர்த்தமாம். நமநத்துக்கு, ப்ராதாந்யமும் பாதிதம்; பலப்ரதனே ப்ரதாநனுகையால், மேலும் ப்ரபத்தி அநுகல்ப உபாயமாயிருக்கும் பக்ஷத்தில், ப்ராதாந்யமும் பாதிதமாகும்.

ஆக, இப்படி மூன்று யோஜனையிலும் ப்ரபத்திக்கு உபாயத்வமில்லையென்பது வ்யக்தம். ஆனுல் 'பக்த்யா ப்ரபத்யா வா' என்கிற விகல்ப்பம் கூடும்படி யெங்ஙனே யென்னில்? கீழ் நிருபித்தபடி பக்தியும் வ்யாஜமாகையால் வ்யாஜ விகல்ப்பமேயாம்.

இப்படியிருக்க தேசிகன், ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் ப்ரபத்திக்கு பக்தி துல் யோபாயத்வத்தை ஸாதித்திருப்பது கூடும் படி யெங்ஙனே யென்னில்? ந்யாய, ஸித்தாஞ்ஜனத்தில், 'இயம் கேவல லக்ஷ்மீச'இத்யாதி சுலோகத்திலும், 'அபிஹிதஸ்வோபாய பாவாஸ்துமே' என்கிற சுலோகத்திலும், 'அவ்யாஜ ஸித்தமநபாய முபாயமாஹு:' என்கிற சுலோகத்திலும் ப்ரபத்திக்கு உபாயத்வமில்லையென்று ஸ்பஷ்டமா யருளிச் செய்திருப்பதால், அப்படியும் ஒரு யோஜனையிருக்கலாமென்பது திருவுள்ளம். ஸாராஸ்வாதிநியில், ப்ரபத்தி உபாயாந்தர ஸ்தாநாபத்திக்கு ஹேதுவே தவிர மோக்ஷத்துக்கு ஹேதுவன்று. 'பக்த்யா ப்ரபத்யாவா' என்கிற விகல்ப்பம் பக்த்யநுஷ்டானந்தரம்,கர்த்தவ்யாம்சம் இல்லாமைபோல், ப்ரபத்யநுஷ்டானந்தரமும் கர்த்தவ்யாம்ச மில்லை யென்கிற பாகத்தில் தாத்பர்யம் என்று நிரூபித்திருப்பதையும் கண்டுகொள்க.

### பிரபத்தியில் அவாந்தரபேதம்

பல ப்ரமாணங்களைக் கொண்டும், உபபத்திகளைக் கொண்டும் இனி, இந்த ப்ரபத்தியில் அவாந்தரபேதம் நிரூபிக்கப்படுகிறது. 'த்வமேவ உபாய பூதோமே பவேதி ப்ரார்த்தநா மதி:' 'ததேகோபாயதா யாச்நா ப்ரபத்தி: சரணுகதி:' 'மாம் ஏகம் சரணம் வ்ரஜ' 'சரணம் ப்ரபத்யே' என்கிற ப்ரமாணங்களின்படி அது பாயமுள்ள உபாயத்வ ப்ரார்த்தநை 'ஷட்விதா சரணுகதி:' என்கிற சுலோகத்தின்படி ஆநுகூல்யாதிகள் ஸம்பாவித ஸ்வபாவங்கள். இந்த உபாயத்வ ப்ரார்த்தநை புக்க விடத்தில் தானே வரக்கடவதாயிருப்பதால், அங்கங்க ளென்று வ்யவஹரிக்கப்படும்.

'ப்ரபத்தே: க்வசிதப்யேவம் பராபேக்ஷா நவித்யதே' என்கிறபடி வேறு ஸஹாயத்தை யபேக்ஷியாமையாலே, இவைகள் அங்கமாக மாட்டாது. தனக்கு ஏற்படுகிற அங்கங்களைத் தவிர வேறொன்றும் அபேக்ஷிதமன்று என்று சொல்லும் பக்ஷத்தில், அது பக்தி ஸ்தலத்

திலும் உள்ளதாகையால், ப்ரபத்திக்கு வ்யா வர்த்தாகா காரமாக மாட்டாது.

மேலும் ப்ரபத்தி ஸ்தலத்தில் ஸர்வேசு வரனே உபாயமாகையாலும், இது அநுபாய மாகையாலும், இவைகள் அங்கங்களாக மாட் டாது. அப்படி இவைகளை அங்கங்களாகச் சொல்லும் பக்ஷத்தில், ப்ரபத்தி அநுபாயமென் பதற்கு விரோதமேற்படும். இப்படி இவைகளை அங்கங்களென்று சொல்லும் பக்ஷத்தில் அங்கங் களுக்குச் சொன்ன லக்ஷணம் இவைகளுக்கு ஏற்படாது. இந்த விஷயம் மேலே நிரூபிக்கப் படும்.

இந்த ப்ரபத்திக்கு த்வயம் மந்த்ரம். வேத் யன் புருஷகார விசிஷ்டனும், ததுத்பாவித வாத் ஸல்யாதி குணவிசிஷ்டனுன ஸர்வேசுவரன். பலம் பரார்த்த கைங்கர்யம். ''ஸர்வதர்மாந் பரித்யஜ்ய'' ''ஸர்வதர்மாந்: ச ஸந்த்யஜ்ய'' தஸ்யமாத்வதமுத்தவோத்ஸ்ருஜ்ய சோதநாம் ப்ரதிசோதநாம் நிவ்ருத்யாந்ய ஸமாரம்போ நாராயண பரோபவ'' இத்யாதி ப்ரமாணப் படியே, மோக்ஷ ஸாதநங்களாக விதிக்கப்பட் டுள்ள கர்மயோக ஜ்ஞானயோக பக்தியோகங் கள், நாம ஸங்கீர்த்தனம், அவதார ரஹஸ்ய ஜ்ஞானம், புருஷோத்தம வித்யை, தேசவா ஸம்— இவைகளுடைய த்யாகம் அங்கம்.

இது அங்கமென்று சொல்லும் பக்ஷத்தில், ப்ரபத்திக்கு; 'யத்யத் ஸாங்கம் தத்தத் ஸாத நம்' என்கிறபடி உபாயத்வம் ஏற்படுமே யென்னில்! அந்த நியமம் ப்ரவ்ருத்தி ரூப மானவை அங்கமாயிருக்கு மிடத்திலுள்ளது; இவ்விடத்தில் நிவ்ருத்தி அங்கமாகையால் விரோதமில்லை. 'மாமேகம் சரணம் வ்ரஜ' என்கிறவிடத்தில் ஸர்வ தர்ம த்யாகத்தோடே கூடிய சரண வரணம் ஸித்திக்கப்படுகிறது.

ஆனல்' த்யாகம் ஸ்வரூப விருத்தத்வ ஜ்ஞானத்தாலும், அசக்தியாலும் ப்ராப்தமா கையால் ''அப்ராப்தே சாஸ்த்ரம் அர்த்தவத்'' என்றிருப்பதால், விதி கூடுமோ வென்னில், ''ஸ்நாத்வா புஞ்ஜீத' என்கிறவிடத்தில் ஸ்நா நமும், போஜநமும் ப்ராப்தமாயிருக்கச் செய் தேயும், ஸ்நாநோத்தரகாலீநத்வத்தில் எப்படி விதிக்கு தாத்பர்யமோ அப்படியே த்யாகோத் தரகாலீநத்வத்தில் விதிக்குத்தாத்பர்யம். அதா வது ஸர்வேசுவரனை, யுபாயமாக வரிக்கும் போது, உபாயாந்தரங்களை விட்டே வரிக்க வேணுமென்பதாகும்.

அப்படியன்றிக்கே, 'அநித்யம சுகம் லோக மிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் புக்த்வா சாந்த் ராயணம்' என்கிறவிடத்திற்போலே, அசக்தி யாலே த்யாகம் ஏற்படுமானல் என்று சொல்ல லாமோ வென்னில், சரமசுலோகார்த்த விவரணமாயுள்ள, ''பிதரம் மாதரம் தாரான்'' என்கிற சுலோகத்திலும், 'த்ஸ்மாத்வ முத்த வோத் ஸ்ருஜ்ய சோதநாம்ப்ரதிதசோநாம்' என்கிற சுலோகத்திலும், 'த்யஜதர்ம மதர் மஞ்ச' என்கிற சுலோகத்திலும், தியாகத்தில் விதி ஏற்படுவதால், அப்படிச் சொல்வது அநுபபந்நம்.

அந்த சுலோகங்களில் விதி எப்படி ஏற்படு கிறதென்னில்? 'பிதரம் மாதரம்' என்கிற சுலோகத்தில் ஸ்வஸ்ய தர்மாந்; ச ஸந்த்யஜ்ப ஸர்வகாமாந் ச ஸாக்ஷராந்' என்று பிதா முதலானவைகளுடைய தியாகத்தைச் சொல்லி யிருப்பதால், அவைகளுடையதியாகத்தில் அநு வாதம் ஏற்படாததுபோல, அவைகளோடே சேர்த்துச் சொல்லப்படுகிற தர்மத் தியா கத்திலும் அநுவாதம் ஏற்பட ப்ரஸக்தி யில்லை. அப்படியே 'தஸ்மாத்வ—முத்தவோத் ஸ்ருஜ்ய' என்கிற சுலோகத்திலும், 'சோதநாம் பிரதி சோதநாம், என்று, நிஷித்த கர்மங்களை விட்டு என்பதோடு கூட விஹிதங்களை விட வேணுமென்றிருப்பதாலும், 'த்யஜதர்மமதர் மஞ்ச' என்கிற சுலோகத்திலும் அப்படியே யிருப்பதாலும், அநுவாதம் என்று சொல்வது அநுபபந்நமாகையால், விதியாகவே கொள்ள வேணும்.

மேலும், 'பகவத் ப்ரவ்ருத்தி விரோதி, ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி: ப்ரபத்தி: என்கிற பூர்வாசார்ய வாக்யப்படி ப்ரபத்திக்கு உபா யாந்தர ப்ரவ்ருத்தி விருத்தையாகையால், விருத்த த்யாகத்தில் அசக்தியா ப்ராப்தி சொல்லுவது அநுசிதம். அப்படி அசக்தியாலே விட்ட உபாயாந்தரங்களை, சக்தி ஏற்படுங் காலத்தில் அநுஷ்டித்தால் பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி ஏற்படுவதால் அதினு டைய நிவ்ருத்தியாகிய ப்ரபத்தியேற்படாது. ப்ருஹ்மாஸ்த்ரம் எப்படி வேறென்றை ஸஹிக்க மாட்டாதோ, அப்படியே ஸித்தோ பாய ஸ்வீகார ரூபையான ப்ரபத்தியும் வேறொன்றன உபாயாந்தரத்தை ஸஹிக்க்

மாட்டாது. இது 'ராக்ஷஸா நாம விஸ்ரும்பா' என்கிற சுலோகத்தில் வ்யக்தம்.

திருவடியின் பேரில், இந்திரஜித்தாலே ப்ரயோகிக்கப்பட்ட ப்ருஹ்மாஸ்திரமானது ராக்ஷஸர்களுடைய சணவல்க்கல ப்ரயுக்தமான பந்தத்தை ஸஹியாமல் நழுவிப் போனது போல், ப்ரபத்தியும் உபாயாந்தர ப்ரவ்ருத்தி யேற்பட்டால், அத்தை ஸஹியாமல் நழுவி விடுமென்று கண்டுகொள்க. இந்த விஷயம், 'ததேக சரண வ்ரஜ்யா ஹி கதிதரோபாய க்ரு ஹணே விருத்த்யதே' என்கிற நிக்ஷேப ரக்ஷா வாக்யத்தாலும் தேசிகனுல் அருளிச் செய்யப் பட்டது.

## அநுவாத பக்ஷம்

அங்ஙனமன்றிக்கே, அர்ஜுநன் முதலான வர்கள் ஜிதேந்திரியாக்கிரேஸரர்களாய், பக்தி யனுஷ்டானத்தில் சக்தர்களாயிருக்க சோகம் ஏற்படுவதற்குக் காரணம் துஷ்கரத்வ புத்தி மாத்ர மன்று. "பூமிராபோநலோவாயு:" என்று ஸமஸ்த சேதநாசேதங்களும் தனக்கு சரீரமென்று கண்ணனருளிச் செய்த வார்த் தையைக்கேட்டுத் தானும் சரீரபூதனுகை யாலே சரீரம்போலே அத்தியந்த பரதந்த் ரனுன தனக்கு ஸ்வரக்ஷணேஸ் வாந்வயம், கூடா தாகையால், ஸ்வரூப விருத்தத்வ ஜ்ஞானமே சோகத்துக்கு முக்கிய காரண மென்று ஏற்படுகிறது. ஆதலால் அசக்த்யா ஏற்பட்ட த்யாகத்தினுடைய அநுவாதமென்று சொல்வது அநுசிதம். இப்படியாக த்யாகத்தில் விதியென்பது நிருபிக்கப்பட்டது.

அங்ஙனன்றிக்கே ஸ்வரூபவிருத்தத்வ ஜ்ஞானத்தாலுண்டான ஸ்வாபாவிக அசக்தி யாலுண்டான ஸர்வதர்ம த்யாகத்தில் அநு வாதமென்றும், அப்படியே 'சரணம் வ்ரஜ' என்கிறவிடத்திலும், 'அம்ருதஸ்யைஷ ஸேது:' என்றும் 'க்ருஷ்ணம் தர்மம் ஸனாதனம்' என்றும் சொல்லுகிற ப்ரமாணங்களைக் கொண் டும், கிருஷ்ணனுடைய அதிமாநுஷ சேஷ்டி தங்களைக் கொண்டும், கிருஷ்ணனே நிரபே க்ஷோபாயமென்று அர்ஜுநனுக்கு நிச்சயமுண் டாயிருப்பதால், அநுவாதமே. 'இமமர்த்தம் ஜாநீஹி தத்விஜிஜ்ஞாஸஸ்வ' என்கிறவிடங் களில்போலே இவ்விடத்திலும் 'வ்ரஜ' என்று சொல்லியிருக்கிறது. விதியில் தாத்பரியமில்லை யென்று சில ஆசார்யர் களபிப்பிராயம்.

## த்யாக சப்தார்த்தம்

இனி, த்யாக சப்தார்த்தம் விசாரிக்கப் படுகிறது—'ஸர்வ தர்மாந்' என்கிற பஹு வசனம் கர்மயோகம் முதலான உபாய பாஹுள்யத்தைச் சொல்லுகிறது; ஸர்வ சப்தம் அவைகளுடைய அங்கங்களைச் சொல்லு கிறது. ஆகவே அங்கங்களோடு கூடின உபா யங்களைவிட்டு என்று ஏற்படுகிறது.

விடுகையாவது:- உபாயத்வ புத்தியை விட்டு என்று சில ஆசார்யர்களுடைய அபிப் பிராயம். அப்படியன்றிக்கே ஸர்வ ப்ரகாரத் தாலும் அநுஷ்டிக்காமலிருக்கை என்று சில ஆசார்யரபிப்ராயம். அப்படிச் சொல்லும் பக்ஷத்தில், 'ஸந்த்யாஹீநோ அசுசிர் நித்யம் ஆஜ்ஞாச்சேதி மமத்ரோஹி மத்பக்தோபி ந வைஷ்ணவ:' என்கிற ப்ரமாணங்களிருப்ப தாலும், பூர்வாசார்யர்கள் அவஹிதர்களாய்க் கொண்டு, நித்திய கர்மங்களை அநுஷ்டித்துக் கொண்டிருந்தபடியாலும், இப்போதும் அப்ப படியே அநுஷ்டானமிருப்பதாலும், அவை களுக்கு விரோதம் ஏற்படாதோவென்னில், அவைகளுக்கும் பரிஹாரம் சொல்லப்படும்.

சரணுகதர்கள் புபுக்ஷுக்களும், முமுக்ஷுக் களுமாவர். அவர்களுள்ளும் பக்தியோகநிஷ்டர் களும், ப்ரபத்தி நிஷ்டர்களு முண்டு. இவர் களெல்லோருக்கும் நித்ய நைமித்திக கர்மங்கள் அநுஷ்டேயங்களாயிருக்கும். புபுக்ஷுக்களுக்கு இந்த காமங்கள் விஹித புத்யா அநுஷ்டேயங் கள். உபாஸர்களுக்கு உபாஸநத்துக்கு அங்க தயா அநுஷ்டேயங்கள். இவை, 'விஹிதத்வாச் சாச்ரம கர்மாபி ஸஹகாரித்வேநச அக்நி ஹோத்ராதிது தத்கார்யாயைவ தத்தர்ஸநாத் என்கிற ஸூத்ரங்களில் வ்யக்தம். உபாஸகர் களுக்கு விஹிதத்வாகாரம் த்யாஜ்யம். இந்த விஷயம், யோகதசையில் ஏற்படுகிற நித்ய கர்மலோபத்தால், 'ஸந்த்யா ஹீநோ அசுசிர் நித்யம்' என்கிறபடி கர்மாநர்ஹதை யேற் படாமையால், அங்கியான உபாஸநத்துக்கு அங்கமாகவே அநுஷ்டிக்கவேண்டியது என்பது ஸித்தம். அப்படியே ப்ரபந்நர்களுக்கும், விஹி தத்வாகாரம் த்யாஜ்யம்; கைங்கர்ய புத்யா அநுஷ்டிக்க வேண்டியதுதான் முக்யம்:

## கைங்கர்யமாவது

கைங்கர்யமாவது: கைங்கர்யம் ஸ்வாமி யான ஸர்வேசுவரனுடைய ஆஜ்ஞா பரி பலான ரூபம். இத்தால் ஏற்படுகிற ஸர்வேசு

வரனுடைய முகோல்லாஸமே ப்ரயோஜனம். எப்படி ராஜாவுக்கு வல்லபனாயிருக்குமவன் தான் ராஜாவினுடைய ஆஜ்ஞையை அதிக்ர மித்தாலும், ராஜ்நிக்ரஹமேற்படாமலிருந்த போதிலும், தான் ஆஜ்ஞா ப்ரகாரத்தை அநுஷ்டிக்காமலிருந்தால் மற்றவர்களும் அந்த ஆஜ்ஞையை அநுஷ்டிக்காமலிருப்பார்களா கையால், ஆஜ்ஞைக்குக் குறைவு ஏற்படுவது மன்றி, ஆஜ்ஞாதிக்ரமத்தால், ஏற்படுகிற ராஜநிக்ரஹத்துக்கு, அவர்களிலக்கா வார்களாகையால், அதனாலுண்டாகக்கூடிய அவர்கள் துக்கத்தைப்பார்த்து ஸஹியாமையும் ஏற்படுவதால் அவசியம் அநுஷ்டிக்கும்படியா யிருக்கும். இத்தால் ஆஜ்ஞா பரிபாலனம் ஏற் படுவதுமன்றி பரோஜ்ஜீவநமும் ஏற்படும். இவை இரண்டாலும் எப்படி ராஜாவுக்கு முகோல்லாஸம் ஏற்படுமோ அப்படி ஸர்வேசு வரனுக்கு முகோல்லாஸம் ஏற்படுமாகையால், அவனுக்கு அத்தியந்தாபிமதநாயிருக்குமவன், பகவதாஜ்ஞையை அநுஷ்டிக்காமலிருப்பது பற்றி பகவந் நிக்ரஹ மேற்படாதிருந்தாலும் ஆஜ்ஞா-பரிபாலநம் பகவந் முகோல்லாஸதயா முக்யமாகையால் அவசியம் அநுஷ்டிக்கும்படி யாயிருக்கும். இந்த விஷயம் லக்ஷ்மீதந்த்ரத்தில் 'யதாஹீவல்லபோராஜ்ஞய:' என்று துடங்கி, பிராட்டியார் அருளிச்செய்திருப்பதால் கண்டு கொள்க.

அன்றிக்கே, 'நிஜ கர்மாதி பக்த்யாந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:' என்கிற கீதார்த்த ஸங்கிரஹ சுலோக வ்யாக்யானுவஸரத்தில் கீதார்த்த ஸங்கிரஹ ரக்ஷையில், தேசிகனரு ளிச் செய்திருப்பதுங் கண்டுகொள்ளத்தக்கது. அது வருமாறு:- 'சுத்ருடஸித்தோபாயஸ்யாபி ப்ரியதம ஸுஹ்ருத் பித்ராத்யுபலாளனவத் விதிபராமர்ச மந்தரேண ஸ்வாம்யாஜ்ஞா ப்ரவர்த்தனேராகத: ப்ரவ்ருத்யுபபத்தே:' என்பதாம். இதன் அர்த்தம்:— ஸித்தோபா யத்தில் த்ருடமான அத்தியவஸாயம் உள்ள வனுக்கும், ஸுஹ்ருத்துக்கள், பிதா முதலான வர்களை லாளனம் பண்ணுவது போல ஸ்வாமி யுடைய ஆஜ்ஞாப்ரவர்த்தனத்தில், ராகத் தாலே ப்ரவ்ருத்தி உபபந்நமாம் என்பதாம்.

இப்படி, விஹிதமென்கிற புத்தியால் அநுஷ்டிக்கப்படுகிற நித்திய நைமித்திகங் களுக்கும், கைங்கர்ய புத்தியா அநுஷ்டிக்கப் படுகிற அவற்றிற்கும் ஸங்கல்ப்பம் வேறுபட் டிருப்பதால்,' அக்கர்மாக்களும் வேறுபட்டிருக் கும். பலாபிஸந்தியுடன் பண்ணுகிற கர்மம் ப்ரவ்ருத்தி தர்மமாகவும், பலாபிஸந்தி யில்லா மற் பண்ணுகிற, அந்தக் கர்மமே நிவ்ருத்தி தர்மமாகவும் வேறுபட்டிருப்பதுபோல, அந்த தர்மமே கைங்கர்யபுத்யா அநுஷ்டிக்கப் பட்டால் அதுவும் வேறாகவேயிருக்கும். இதற்கு ப்ரமாணம். "பாஹ்யஸ் ஸதஸதாம்பேத: நாஸ்திப்ராயேண கர்மஸு, ஸங்கல்பா தேவ பிந்நாநி ஸ்ஹேநு:ர்பந்த மோக்ஷயோ: அந் யதா லிங்கதே காந்தா அந்யதாலிங்கதே ஸுதா" என்பதாம். இதன் அர்த்தம் நல்ல கர்மாக்களுக்கும், கெட்ட கர்மாக்களுக்கும் வெளிப்படையான வேறுபாடு பெரும் பாலு மில்லை. ஆகிலும் ஸங்கல்ப்பம் வேறுபட்டிருப் பதால், அந்த இரண்டு கர்மாக்களும் பின்னங் களாம். ஸங்கல்ப்ப பேதமே பலபேதத்துக்குக் காரணம். தன்னுடைய காந்தையினுடைய ஆலிங்கனமும், தன்னுடைய புத்திரியினுடைய ஆலிங்கனமும் ஒன்றேடொன்று வேறுபட்ட தாய்ப் பலமும் வேறுபட்டிருப்பது இதற்கு திருஷ்டாந்தம் என்பதாம்.

அப்படியிருப்பதால் கீழ் நிருபிக்கப்பட்ட கர்மாக்களின் வேறுபாட்டால் 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' என்கிறவிடத்தில், விஹிதத்வ புத்தியா அநுஷ்டிக்கப்படுகிற கர்மாக்கள் பின்னங்களாகையால், அந்த தர்மங்களுடைய ஸ்வரூப த்யாகமே பரித்யஜ்ய என்பதன் அர்த்தமாகும். இத்தையே புத்தி த்யாக மாகவும் சொல்லலாம்.

அங்ஙனமன்றிக்கே ஸாமாந்ய தர்மமென் றும், விசேஷ தர்மமென்றும் தர்மங்கள் இரண்டு ப்ரகாரமுண்டு. ஸாமாந்ய தர்மமா வதுப்ராஹ்மண ஸாமாந்யத்தாலே அநுஷ்டிக் கப்படுமவையான நித்ய நைமித்திக கர்மங் கள். விசேஷ தர்மமாவது ஸ்ரீவைஷ்ணவர் களால் அநுஷ்டிக்கப்படுமவையான பகவத் பாகவத விஷயங்களிற்பண்ணும் கைங்கர்யங் கள். ஸாமாந்யதர்மமும் கைங்கரியமாயிருந் தாலும், அது பஹிரங்க கைங்கர்யம். இது அந்தரங்க கைங்கர்யம். இவைகளில் உபாஸ கன் யோகத்துக்கு அவிருத்த காலத்தில் நித்திய நைமித்திகங்களை அநுஷ்டிப்பதுபோல இன்னும் விசேஷ தர்மாநுஷ்டானத்துக்கு அவிருத்தகாலத்தில் ஸாமாந்ய தர்மத்தை அநுஷ்டிக்கக்கடவன். விசேஷ தர்மத்தில் ஊற் றத்தாலே ஏற்பட்ட பாரவச்யத்தாலே தன்னு

டையே உறங்குவான் கைப்பண்டம்போல ஸாமாந்ய தர்மம் நழுவிப் போய்விடும்.

இப்படியே ஆசார்ய ஹ்ருதயத்தில், 'ஜாத்யா சிரமதீக்ஷைகளில் பேதிக்கும் தர்மங்கள் போல அத்தாணிச் சேவகத்தில் பொதுவானது நழுவும்' என்று அருளிச் செய்திருப்பதையும் கண்டு கொள்க. அதாவது ஸ்ரீ ராமாயண புருஷர்களில் விசேஷ தர்மப் பிரவர்த்தகரான இளையபெருமாள் ஸாமாந்ய தர்மமான ஆக்நிஹோத்ராதிகளை விட்டு ராமாநுவர்த்தனமான விசேஷ தர்மத்தை அநுஷ்டித்தார். ஆழ்வார், தன் அவதரித்த வர்ணத்துக் கேற்பட்ட பூர்வ வர்ண சுச்ரூஷையைவிட்டு, பரத்வகுணாநுபவ நிஷ்டராயிருந்தார்.

இப்படியே ஆழ்வான் திருத்தமப்பனூரான கூரத்தாழ்வார் பத்நீ வியோகமடைந்த பின்பு, 'நிராச்ரமீ ந திஷ்டேத என்ற ஸாமாந்ய விதியை மேற்கொண்டு விவாஹம் பண்ணிக் கொள்ளாமல், விசேஷ தர்மமான பாகவதாநுவர்த்தனத்தை மேற்கொண்டிருந்தார்.

உடையவர் கிரிமிகண்டனால் ஏற்பட்ட தர்சநோப ப்லவ பரிஹாரார்த்தமாக, தம்முடைய ஆச்ரம விருத்தமான ஆபிசாரத்தை அநுஷ்டித்தார்.

இப்போதும் உபய ஸம்ப்ரதாயத்திலும் உத்தமாச்ரமிகள், தம் ஆச்ரம விருத்தமான அக்நி கார்யமான சக்ராங்கனம், மதஸ்தாபநம் முதலான கார்யங்களைச் செய்து போருகிறார்கள்.

பட்டர், திருப்பூர உத்ஸவத்தில் ஸந்த்யா காலம் அதிக்ரமிக்கிறதென்று ஸ்ரீ வைஷ்ணவர்கள் விஜ்ஞாபிக்க இன்றைய ஸந்தியாக்ரமத்துக்கு யமன் நன்மை தண்டிக்க மாட்டான் என்றருளிச் செய்தார்.

**''மத்கர்ம குர்வதாம் பும்ஸாம் யதி கர்ம விலும்பதி
தத்கர்மதே ப்ரகுர்வந்தி திஸ்ர கோட்யோ மஹர்ஷய:''**

என்ற ப்ரமாணத்தால் பகவத் கைங்கர்ய காலத்தில் விடப்பட்ட நித்ய கர்மங்களை முப்பதுகோடி மஹரிஷிகள் செய்கிறார்கள் என்று ஏற்பட்டிருக்கிறது.

ஸ்ரீபாஷ்யத்தில் உத்பத்யஸம்பவாதிகரண ச்ருதப்பிரகாசிகையில்,

''நநுகதம் கார்த்ஸ்ந்யெ வேதாவிரோதித்வம் த்ரயீ தர்ம த்யாகஸ்ய தத்ரோக்த்வாத் கதம் மந்வாதி ஸ்ம்ருதீநாம் வேதாநுரோதித்வம் தேஷு த்ரயி சோதிதாக்நி ஹோத்ராதி பரித்யாக முகேந சதுர்த் தாச்ரம தர்மஸ்ய ப்ரதிபாத்ய மாநத்வாத் யதஹரேவ விரமேத் ததஹ ரேவ ப்ரவ்ருஜேத்; இத்யாதிபி: ப்ரத்யக்ஷ சுருதி பிரேவ தத் விதாநாத் தந்மூலத்வேந ஸ்ம்ருதீநாம் நவேத விருத்தத்வமிதிசேத் கிம் போ: த்ரயீதர்மேணா ஸம்யுக்த இதம் தர்மம் ஜிஜ்ஞாஸிதா ஓம் போஜிஜ்ஞாஸித இதி ப்ரத்யக்ஷ சுருதி ஸித்தத்வாத் த்ரயீ சோதித தர்ம விசேஷத்யாகஸ்ய தந்மூலதாய பாஞ்சராத்ரவசஸாம் நவேதவிருத்தத்வம்'' என்று இவ் வர்த்தம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

அதாவது—வேதோக்த தர்மங்களைவிடச் சொல்லியிருப்பதால், பாஞ்சராத்ரம் வேதத்துக்கு அவிருத்தமென்பது கூடாதென்னில்; மந்வாதி ஸ்மிருதிகள் வேதத்திற் சொல்லிய அக்நிஹோத்ராதிகளைவிட்டு, ஸந்யாஸத்தை அநுஷ்டிக்கச் சொல்லியிருக்கவும் அந்த ஸ்மிருதிகள் வேதத்துக்கு அவிருத்தமாவது போல, பாஞ்சராத்ரமும் வேதாவிருத்தமாம்; ஆனால், ''எப்பொழுது வைராக்யமுண்டாகிறதோ அப்பொழுதே ஸந்யாஸம் பண்ணிக் கொள்ள வேணும்'' என்ற ப்ரத்யக்ஷ சுருதியை அநுஸரித்துச் சொல்லியிருப்பதால், ஸ்மிருதிகள் வேதவிருத்தமாகாதென்றால், அப்படியே இங்கும் ''வேதத்திற் சொல்லப்பட்ட தர்மத்தைச் சாராதவனாய் இந்த தர்மத்தையறிய வேணுமென்று இச்சிக்கிறாயா'' (என்ற வினாவும் அதற்கு) ''வேதோக்த தர்மத்தைச் சாராமலே அறியவேண்டுமென்று இச்சிக்கிறேன்'' என்ற விடையுமான ப்ரத்யக்ஷ சுருதியிருப்பதால் இத்தை அநுஸரித்துச் சொல்லிய பாஞ்சராத்ரமும், வேதவிருத்தமாகாது; எப்படி ஸந்யாஸிக்கு க்ருஹஸ்த தர்மம் அநநுஷ்டேயமோ அப்படியே பாஞ்சராத்ரோக்த, 'விசேஷ தர்ம நிஷ்டனுக்கு, வேதோக்தமான ஸாமான்ய தர்மம் அநநுஷ்டேயம் என்பதாம்.

ஆனால், ஸந்யாஸி க்ருஹஸ்த தர்மத்தை லோக ஸங்க்ரஹார்த்தமாக அநுஷ்டியாதது

போல் ப்ரபத்தி நிஷ்டனும் லோக ஸங்க்ர ஹார்த்தமாக வைதிக தர்மங்களை அநுஷ்டியா திருக்கலாமோ வென்னில்; இங்கு நிஷேத மிருந்தபோதிலும் "அவிப்லவாய தர்மாணும் பாலநாய குலஸ்யச மநீஷீ வைதிகாசாரம் மந ஸாபி ந லங்கயேத்" என்கிற விசேஷ விதியிருப் பதால், ப்ரபந்நன் வைதிக தர்மங்களை அநுஷ்டிக்கும்படி, ஏற்பட்டது. அப்படி ஸந்யாஸி அநுஷ்டிக்கும்படி விசேஷ விதியில் லாமையால் அவனுக்கு அநுஷ்டானம் ஏற்பட வில்லை. நித்ய நைமித்ய கர்மங்கள் "பரித் யஜ்ய" என்று நிஷேதிக்கப்பட்டிருக்க அதற்கு அபவாதமாக (மநீஷீவைதிகா சாரம் நலங்க யேத்") என்று புந: ப்ரஸவவிதி ஏற்பட்டிருப்ப தால், விஹிதத்வ புத்யா அநுஷ்டிக்கப்படும் நித்யநைமித்திகங்கள் நிஷேதவிஷயமென்றும், லோக ஸங்க்ரஹார்த்தமாக அநுஷ்டிக்கப் படும், நித்ய நைமித்திகங்கள் ததபவாதமான புந:ப்ரஸவ விதி விஷயமென்றும் கண்டு கொள்க. ஆக, கீழ் நிரூபித்தபடி ஸங்கல்ப பேதத்தாலே கர்மபேத மேற்படுகிறபடியால், இப்படி விஷய விபாகம் பண்ணத் தட்டில்லை.

இப்படியன்றிக்கே, 'மநீஷீ வைதிகாசாரம் மநஸாபி நலங்கயேத்' என்றது: அசக்தியால் எற்படுகிற த்யாகத்தினுடைய அநுவாதம் என்று சொல்லும்பக்ஷத்தில் இப்படி விதிக்கு விபாகம் பண்ண முடியாமையால், சக்தியேற்ப டுங்காலத்தில் அநுஷ்டிக்கப் படுமவைகளான நித்ய நைமித்திகங்கள் கைங்கர்ய புத்யா அநுஷ்டேயங்கள்என்பதற்குப்ப்ரமாணமில்லை. ஆக நித்ய நைமித்திகங்கள் அநுஷ்டானத்தால் ஏகரூபமாயிருந்தபோதிலும் ஸங்கல்ப பேதத் தால், வேறுபடுதலால் ஸ்வரூபத் யாக பக்ஷம் உபபந்நமாம். இதுவே புத்தித் தியாக பர்யவ ஸந்நமமாம். விசேஷ தர்மாநுஷ்டாநத்தால் தடைபட்ட காலத்தில் ஸர்வாத்மநா அநநுஷ் டாநம் ஏற்படுவதால், ஸர்வ ப்ரகாரத்தாலும் அநுஷ்டிக்க வேண்டியதில்லை என்பதற்கும் விரோதமில்லை. இப்படி அநுஷ்டிப்பது ராக ப்ராப்தமாகையால், அங்கநாபரிஷ்வங்கனம் போலே, போகரூபமாயிருக்கும். பர்த்ரு விஷ யத்தில் பதிவ்ரதையானவளுக்கு வைதமாகப் பண்ணும் பணிவிடையிற்காட்டிலும், பரி வாலே செய்யும் பணிவிடை அடிக்கழஞ்சு பெற்றதாயும், பர்த்ரு முகோல்லாஸத்துக்குக் காரணமாயுமிருப்பதுபோல, ப்ரபந்நனுக்கு ஏற்படுகிற நித்ய நைமித்திக கர்மாநுஷ்டானம் போக ரூபமாயும் பகவந் முகோல்லாஸ ஹேது வாயுமிருக்கும்.

இந்த விஷயத்தை "குர்யாத் ப்ரீத்யைவ காரித:" என்று ஆளவந்தா ரருளிச்செய்தார். தேசிகனும் "ராகத: ப்ரவ்ருத்யுபபத்தே:" என்று அருளிச்செய்தார்.

பாஞ்சராத்ர ரக்ஷையில், ப்ரபந்நன் அநுஷ்டிக்கிற நித்திய நைமித்திகங்கள் லீலாத் யூதமென்றும், மற்றவர்கள் அநுஷ்டிக்கும் அவைகள் பணபந்த த்யூதமென்றும் அருளிச் செய்தார். இதன் தாத்பர்யமாவது:- ஒரு நதி தீரத்தில் வழிப்போக்கர் பலர்கூடி, ப்ரவாஹ மிகுதியாயிருந்தபடியால்ஓடத்தில் ஏறிப்போக வேண்டியிருந்த போது, ஓடம் வரவிளம்பிக்க அது வரும்வரையில், சூதாடத் தொடங்கினர் கள். அவருள் சிலர் பந்தயம் வைத்தாடினர்கள்; சிலர் லீலார்த்தமாகவே ஆடினர்கள். ஆட்டம் முடிவதற்குள்ளாக ஓடம்வந்துவிடவே, லீலா ரூ பமாக ஆடினவர்கள் உடனே ஆட்டத்தை நிறுத்திவிட்டு, ஓடத்திலேறி அக்கரை போய் விட்டார்கள். பந்தயம் வைத்தாடினவர்கள் ஆட்டம் முடியாமையால், ஓடமேற முடிய வில்லை. அப்படிப்போல் ப்ரபந்நர்கள் நித்ய நைமித்திக கர்மங்களை அனுஷ்டிப்பவரானாலும் இச்சானுகுணமா யநுஷ்டிக்கவும், அநுஷ்டிக் காமலிருக்கவும் கூடும். மற்றவர்கள் பந்தயம் வைத்துச் சூதாடுபவர் போலே கர்மங்களை முடித்தே கடைத்தேறவேணும் என்பதாம்.

ஆதலால் கீழ் நிரூபித்தபடி விசேஷ தர்மத்துக்கு விரோதம் ஏற்பட்டால் அப் போது நித்ய நைமிஸ்திக கர்மாநுஷ்டானம் அநாவயச்கமென்று ஏற்படுகிறது.

மேலும், பாகவதத்தில் பதினொன்றும் ஸ்கந்தத்தில் "தேவர்ஷி பூதாத்ம ந்ருணாம் பித்ரூணாம் நகிங்க்ரோநாயம் ருணீச ராஜந்" என்கிற சுலோகத்தில் ஸர்வப்ரகாரத்தாலும், ஸர்வேசுவரனிடத்தில் ப்ரபத்தி பண்ணினவன் பஞ்ச மஹாயஜ்ஞ தேவதைகளான பிறருக்கு கிங்ரகனுமன்று ருணியுமன்று என்று சொல்லி யிருப்பதால் ருண (கடன்) நிவிருத்தியர்த்த மாகவேனும், கிங்கரபாவத்தாலேனும், பஞ்ச மஹாயஜ்ஞங்களை அநுஷ்டிக்கவேண்டியதில்லை யென்றேற்படுகிறது. ஆதலால், பஞ்சமஹா யஜ்ஞங்களும் யதோசிதம் லோக ஸங்கிர ஹார்த்தமாகவே அநுஷ்டிக்கவேணு மென்பது

வ்யக்தம். இந்த விஷயம் மேலே நிரூபிக்கப் படும். இப்படி த்யாகம் நிரூபிக்கப்பட்டது.

### ந்யாஸ வித்யை

'ஓமித்மாத்பாநம்யுஞ்ஜீத' என்றும், 'ஸ்ரீமதா மூலமந்த்ரேண' என்றும் ப்ரணவம் அஷ்டாக்ஷரம் இவைகளும் மந்த்ரங்களாகச் சொல்லப் பட்டன. 'சரணம் வ்ரஜ யும்ஜீத ஸ்வாத்மாநம் மயிநிக்ஷிபேத்' என்று விதி ப்காரமும் வேறுபட்டிருக்கிறது. தைத்திரீயோபநிஷத்தில் சொல்லப்படுகிற ந்யாஸ வித்யைக்கு 'தஸ்யைவம் விதுஷ:' என்கிற சுருதியின்படி புருஷ வித்யை அங்கமாக ஏற்படுகிறது. அந்த ந்யாஸ வித்யை வைதிக மந்த்ர ரக்ஷிகைகையாகையால் த்ரைவர்ணிகாதிகாரையாயிருக்கிறது. இந்த விஷயம் நிக்ஷேபரக்ஷையில் தேசிகனுலருளிச் செய்யப்பட்டது.

த்வயத்தில் உத்தர வாக்யத்தில் நம: சப்தமிருப்பதால், பரார்த்த கைங்கர்யம், உபாயமல்லாத சரணாகதிக்குப் பலமாக ஏற்படுகிறது. மற்ற இடங்களில் நம: சப்தமில்லாமையால் ஸ்வார்த்த கைங்கர்யம் பலமாயிருக்கிறது. 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்று த்யாகம் அங்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ''ந்யாஸ: பஞ்சாங்க ஸம்யுத:'' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி, மந்த்ரபேதம், விதிபேதம், பலபேதம், ரூபபேதம், அங்க பேதம் இவைகளேற்பட்டிருப்பதால், வித்யா பேதம் கொள்ள வேணும். மேலும் அதிகாரி பேதமும் ஏற்பட்டிருப்பது பூர்வ மீமாம்ஸையில் 'உத்பத்தி சிஷ்ட குணவருத்தே குணாந்தர விதாநம் அநுபபந்நம்' என்று சொல்லயிருக்கிறது. இதன் அர்த்தம், எந்த கர்மா விதிக்கப்படுகிறதோ, அவ்விடத்தில் அதற்கு எந்த அங்கங்கள், எந்த அதிகாரிகள், எந்த பலன்கள் விதிக்கப்பட்டனவோ அவற்றைத் தவிர அந்த கர்மாவுக்கு வேறு அங்கம் முதலானவைகள் ஜிஜ்ஞாஸை (விருப்பம்) இல்லாமையால் அநபேக்ஷிதங்களாகையால் அவைகளுடைய விதாநம் அநுபபந்நம்; அப்படி அங்கங்கள் விதிக்கப்பட்டிருந்தால், அந்த கர்மா வேறு பட்டது என்பதாம்.

அப்படியே இங்கும் ஒரே வித்யையில் அநேக விதானம் சொல்ல முடியாமையால் வித்யாபேதம் செல்லவேணும். ஆதலால் உபாய ப்ரார்த்தனா ரூபையாய் அதனாலே உபாயமல்லாத ப்ரபத்தி வேறு. இதற்கு த்வயம் மந்த்ரம், ஸர்வதர்ம த்யாகம் அங்கம். 'அஹமஸ்மி அபராதாநாமாலய:' என்றும் 'தோஷோயத்யபி தஸ்யஸ்யாத்' என்றும், 'தஸ்மாதபிவர்யம் ப்ரபந்நம் ப்ரதிநப்ரயச்சதி' என்றும் சொல்லுகிறபடியே, குற்றம் மிக்கிருக்கும் சேதனன் அதிகாரி. பரந்யாஸ ஸ்தலத்தில், 'க்ருதாநுகூல்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஞ்ச வர்ஜயந்' என்கிறபடியே ப்ராதிகூல்ய வர்ஜநம் பண்ணினவன் அதிகாரி. அநுபாய ப்ரபத்தியில் ஸர்வேச்வரனுடைய பலகரணத்வ ரூப உபாயத்வம் அறியத்தக்கது. பரந்யாஸத்தில், பலப்ரதத்வரூப உபாயாத்வம் அறியத்தக்கது. சரணாகதி ஸ்தலத்தில பரகதஸ்வீகாரம் அங்கி; ஸ்வகத ஸ்வீகாரம் அங்கம். பரந்யாஸ ஸ்தலத்தில் ஸ்வகதஸ்வீகாரம் அங்கி; பரகதஸ்வீகாரம் அங்கம்.

### பரகதஸ்வீகாரம்

பரகதஸ்வீகாரமாவது: பரனான ஸர்வேச்வரன் சேதனனை ரக்ஷ்யனாக ஸ்வீகரிக்கை. ஸ்வகத ஸ்வீகாரமாவது சேதனன் ஸர்வேச்வரனை ரக்ஷகனாக அத்யவஸிக்கை. சரணாகதி ஸ்தலத்தில் ஸர்வேச்வரனே பலப்ரதனாயும் பலகரணமாயுமிருப்பதால், அவனே ஒன்றையும் அபேக்ஷியாமல் இவனுடைய ரக்ஷணத்தில் ப்ரவ்ருத்தனாகையால் அவனுடைய ஸ்வீகாரம் ப்ரதாநம். அந்த ப்ரவ்ருத்திக்கு ப்ரதிபந்தக ஸ்வப்ரவ்ருத்தியினுடைய, அபாவரூபமாயுள்ள உபாய வரணரூபமான ஸ்வகத ஸ்வீகாரம் அப்ரதானம். பரந்யாஸ ஸ்தலத்தில், அதுவே ஸ்வரக்ஷண ப்ரவ்ருத்திரூபமான உபாயமாகையால், ஸர்வேச்வரனுடைய நிரபேக்ஷ ரக்ஷண ப்ரவ்ருத்தியில்லாமையால், பரந்யாஸாநந்தரம், இதை ஹேதுவாகக் கொண்டு ஸர்வேச்வரன், இவனுடைய ரக்ஷணத்தில் ப்ரவ்ருத்தனாகையால் பரந்யாஸரூபமான ஸ்வகத ஸ்வீகாரம் ப்ரதாநம். இதன்பின் வரக்கடவதான பரகத ஸ்வீகாரம் அப்ரதாநம். சரணாகதி வித்யையில், ஆநுகூல்ய ஸங்கல்ப்ப முதலானவைகளையும், சரணாகதியையும் ஸம ப்ரதாநமாக லக்ஷ்மீதந்த்ரத்தில், நிருபித்திருப்பதால், ஆநுகூல்யம் முதலானதுகள் சரணாகதனுக்கு அதனுடைய பலமாயுள்ள ஸம்பாவித ஸ்வபாவ விசேஷங்கள். 'ந்யாஸ: பஞ்சாங்க ஸம்யுத:' என்றும், 'க்ருதாநுகூல்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஞ்ச வர்ஜயந், ஆத்மாநம் நிக்ஷிபதி' என்றும், சொல்லுகிறபடியே பரந்யாஸத்துக்கு

அவைகள் அங்கங்களானல், இப்படி சரணுகதி பரந்யாஸம், புருஷ வித்யையை அங்கமாகவு டைய 'ஓமித்யாத்மாநம் யும்ஜீத' என்று சொல்லப்படுகிற ந்யாஸ வித்யை இவைகள் பரஸ்பரம் அபிந்நங்களாயிருக்கும் பக்ஷத்தில், 'தஸ்மாத் ந்யாஸ மேஷாம் தபஸாமதிரிக் தமாஹு:' 'ஸந்யாஸஸ் த்யாக இத்யுக்த: சரணுகதி ரித்யபி' என்று அபிந்நங்களாகச் சொல்லுமது கூடும்படி எங்ஙனேயென்னில், பக்தி தனித்து உபாயமாயிருக்கச் செய்தேயும், 'பகவந் பக்தி மபி ப்ரயச்சமே', ஸ்தாந த்ர யோதித, பரபக்தி யுக்தம் மாம் குருஷ்வ, என்கிற ப்ராமணங்களின்படி, சரணுகதிக்கு பலமாயிருப்பது போல, சரணுகதியினுடைய பலமாய் வருகிற ப்ரந்யாஸ முதலானவைகள் கார்யத்தைக் காரணமாயுபசரித்துச் சொல் வதுபோல், சரணுகதியென்று வ்யவஹரிக்கப் படும். மற்ற விஷயங்கள் மேலே விவரிக்கப் படும்.

இப்படி ப்ரபத்தியில் அவாந்தரபேதம் ஆசார்ய ஹ்ருதயத்தில் இரண்டாவது ப்ரகரணத்தில், "கீழை மேலே வடக்கிலதை புறம்பாக தன் பற்று உள்ளசல்" என்கிறவிடத் தில் உள்ளசல் என்கிற வித்தால், ஸ்வகத ஸ்வீ காரமென்று சொல்லப்படுகிற உபாய ப்ரபத் தியும், நாலாவது ப்ரகரணத்தில் ஒன்பதாவது பத்தினுடைய அர்த்த விவரணமான சூர்ணை யில், "வைகல் வாழ்தலான ஸித்தோபாயம்" என்று அநுபாய ப்ரபத்தியையும், "தானடை யும் பரபத்தி" என்று ஸ்வகத ஸ்வீகாரத் தையும், திருப்பாவை ஆருயிரப்படியில் த்வய நிஷ்டர் என்று அநுபாய ப்ரபத்தியையும், மந்த்ரநிஷ்டர் என்று ஸ்வகத ஸ்வீகாரத் தையும் அருளிச்செய்தார்.

ஸ்ரீ வசன பூஷணத்தில் ஸ்வகத ஸ்வீகார மென்று உபாய ப்ரபத்தியையும், பரகத ஸ்வீ காரமென்று அநுபாய ப்ரபத்தியையும் அருளிச்செய்தார். இவைகளை அவலம்பித்து ஸ்ரீஅண்ணவப்பங்கார் ஸ்வாமி, ஸ்ரீ வசன பூஷண மீமாம்ஸா வக்தாவான வரத தேசிகன், ரஹஸ்யத்ரய மீமாம்ஸா, சரமசுலோக டிப்பணி, சரம சுலோக சந்திரிகா இந்த க்ரந்த வக்தாவான எம்பாவையங்கார் ஸ்வாமி, முமுக்ஷுப்படி வ்யாக்யானமான தாத்பர்ய தீபிகையின் வக்தாவான பால ஸரஸ்வத்யா சார்யர்- இவர்கள் ப்ரபத்தியினுடைய அவாந் தர பேதங்களை விஸ்தரித்து நிருபித்திருப்ப தையும் கண்டுகொள்க.

ஆனல் தேசிகன் வர்ண சாகாபேத ப்ரயுக் தமான மந்த்ரபேதங்களிருந்தபோதிலும், விவாஹபேதமில்லாமை போல், ப்ரபத்தி யிலும் மந்த்ரபேதமிருந்த போதிலும் வித்யா பேதமில்லையென்று அருளிச் செய்திருப்ப தால், அது கூடும்படி யெங்ஙனே யென்னில், வித்யா பேதகங்களான ரூபபேதம் பலபேதம் ஆக்யாபேதம் இவைகளிருப்பதால் வித்யா பேதம் கொள்ள வேணுமென்று நம் ஆசார்யர் களபிப்ராயம். அநுபாயமான சரணுகதிக்கு வேத்யன்-புருஷகாரத்தால் உண்டாகும் வாத் ஸல்யாதி குணவிசிஷ்டஞன அர்ச்சாரூபியான ஸர்வேசுவரன். உபாய ப்ரபத்தியில் பக்தி ஸ்தலத்திலில் புருஷகாராபேக்ஷை யில்லாமை போல, உபாய ப்ரபத்தி ஸ்தலத்திலும் புருஷ கார ஸ்தானத்தில் உபாய ப்ரபத்தியிருப்ப தால், புருஷகாரா பேக்ஷையில்லை.

ஸ்வகத ஸ்வீகாரஸ்தலத்தில், பலம் ஸ்வார்த்த கைங்கர்யம்; சரணுகதி ஸ்தலத்தில் பரார்த்த கைங்கர்யம். இதில் அவாந்தர நிருபணம் மேல் வரும். சேதநாபேதம் "ஸ்வாத்மாநம் மயி நிக்ஷிபேத்" என்று ஸ்வகத ஸ்வீகாரத்தில் விதி "ததேகோபாயதாயாச்நா ப்ரார்த்தநாமதி: சரணுகதி:" சரணுகதி விஷயத்திலும் விதி கிஞ்ச நிரபேக்ஷோபாயத் வம் சரணுகதிக்கு வேத்யாகாரம் ரக்ஷகத்வம். ந்யாஸவேத்யாகாரம். "அஹமஸ்ம்யபராதா நாமாலய:" என்கிறபடி அபராத பூயிஷ்டன் சரணுகதிக்கு அதிகாரி. "ப்ராதிகூல்யம் பரித் யக்தம்" என்கிறபடி ப்ராதிகூல்ய வர்ஜனம் பண்ணினவன் ஸ்வகத ஸ்வீகாரத்திற்கு அதி காரி. சரணுகதிநிஷ்டனுக்கு ஆநுகூல்ய ஸங் கலப்பாதிகள் ஸம்பாவித ஸ்வபாவங்கள், மற்றை உபாயத்துக்கு நியத அங்கங்கள். சரணு கதிக்கு உபாயாந்தர ஸ்வரூப விருத்தத்வ ஜ்ஞாநம் அதிகாரம். மற்றையவனுக்கு உபா யாந்தர துஷ்கரத்வஜ்ஞாநம் அதிகாரம். இப்படி திங்மாத்ரம் நிருபிக்கப்பட்டது விஸ் தரம் பூர்விகர்களுடைய க்ரந்தங்களிற் கண்டு கொள்க.

**மூவகை நிஷ்டைகள்**

இந்த ப்ரபத்தி ஸ்வநிஷ்டையென்றும், உக்திநிஷ்டையென்றும் ஆசார்ய நிஷ்டை

யென்றும் மூன்று வகையாயிருக்கும். ஒரு ஆசார்யனிடத்தில் பஞ்ச ஸம்ஸ்கார பூர்வக மாக ப்ரபத்தி சாஸ்த்ரார்த்தங்களை ஸப்ரகார மாக அறிந்து, அந்த ஆசார்யனை முன்னிட்டு, ஸர்வேசுவரனையே உபாயமாகவும், உபேய மாகவும் வரிக்கையாகிற ப்ரபத்தி ஸ்வநிஷ்டை எனப்படும்.

உக்தி நிஷ்டையாவது: ப்ரபத்தி சாஸ்திரங் களில் விசேஷ ஜ்ஞானமில்லாதவனாய் சமுதாய ஜ்ஞானத்தை யுடையவனான அதிகாரி. ப்ர பத்தி சாஸ்த்ரத்தில் பூர்ண ஜ்ஞானமுடை யனாய் தானே, ப்ரபத்தியை அநுஷ்டித்த ஆசார்யனை ஆச்ரயித்து, அவன் ப்ரபத்தி ப்ர காரங்களை உபதேசிக்க அப்படியே தான் அநுச்சாரணம் பண்ணுகையாம். இப்படி யிருந்துள்ள உக்திநிஷ்டாரூப ப்ரபத்தியை அநுஷ்டித்தவனுக்கு ஸர்வேசுவரன் இவனு டைய ஆசார்யனுடைய ஜ்ஞானத்தையே பற்று சாகக்கொண்டு பலத்தைக் கொடுக்கும். உப நீதனான மாணவகன் "பவதி பிக்ஷாம் தேஹி" என்று ஆசார்யன் சொன்ன உக்தியை அதினு டைய அர்த்த ஜ்ஞானமில்லாமலே சொன் னாலும், அதைக் கேட்டவர்கள் பிக்ஷாப்ரதா நம் பண்ணுவதுபோலே, இதுவும் கார்யகர மாகும். இந்த விஷயத்தை, "ப்ரபத்தி வாசைவ நிரீக்ஷிதும் வ்ருணேசரண வரண வாகி யம் யோதிதா" என்று ஆழ்வானும், "சரண மித்யபி வாசமுதைரயம்" என்று பட்டரும் அருளிச் செய்தார்கள். இப்படியே திருவாய் மொழியும் த்வயார்த்த மாகையாலே, விசேஷ ஜ்ஞானமில்லாதவர்களும் ஆசார்யன் உச்சரிக் கத்தாங்களும் அனுச்சாரணம் பண்ணுமதும் உக்தி நிஷ்டையாகலாம். இப்படி உச்சரிக்கு மவர்களிடத்தில், நற் கன்றுக்கிரங்கும் பசு, தோற்கன்றுக்கு மிரங்குமாப்போலே, ஸர்வேசு வரன் ஆழ்வாரை நினைத்து கிருபை பண்ணத் தட்டில்லை. இப்படியே ஆசார்யர்கள் அருளிச் செய்திருப்பதும் கண்டுகொள்க.

### ஆசார்ய நிஷ்டை

ஆசார்ய நிஷ்டையாவது, ஸ்வதந்த்ரமாக ப்ரபத்தியை அநுஷ்டித்தவனாய், விசேஷஜ்ஞா யுள்ள ஆசார்யனை ஆச்ரயித்து, அவனால் அநு ஷ்டிக்கப்பட்ட ஆத்மாத்மீய பர ஸமர்ப்பண ரூபையான ப்ரபத்தியில் தான் ஆத்மீயனாய் அந்தர்ப்பவித்து, தான் தனித்து ப்ரபத்தியை யநுஷ்டியாமல், அவனுடைய ப்ரபத்தியே தனக்கு ப்ரபத்தியா யிருக்கை. இந்த விஷயம், விபீஷணாழ்வானுடன் வந்த நால்வரிடத்திலும், கண்டாகர்ணனுடைய தம்பியிடத்திலும், ததி பாண்டனுடைய அபிமதாந்தர்ப்பூதமான தயிர்த்தாழியிடத்திலும் காணலாம்.

இந்த ஆசார்ய நிஷ்டையும், ஸ்வகத ஸ்வீ காரமென்றும், பரகத ஸ்வீகாரமென்றும் இரண்டு வகையாயிருக்கும். ஸ்வகத ஸ்வீகார மாவது தானே ஆசார்யனை அநுவர்த்தித்து அத்தாலே, ப்ரஸந்நனான ஆசார்யன் மதீய னென்று அபிமானிக்க, அத்தாலே அவனு டைய அபிமானாந்தர்ப்பூதனாய் அவனுடைய பரஸமர்ப்பணத்தில் தானும் அந்தர்ப்ப விக்கை.

பரகத ஸ்வீகாரமாவது, பரம க்ருபாளு வான ஆசார்யன் இவனுடைய துர்க்கதி கண்டு, ஸஹிக்கமாட்டாமல் இவனை அபி மாநிக்க, அந்த அபிமானமே ஹேதுவாகத் தானும், அவனுடைய ப்ரபத்தியில் அந்தர்ப் பூதனாகை. இந்த விஷயம் "குருணாயோபி" மந்யேத குரும்வாயோபிமந்யதே" என்கிற ப்ரமாணத்தாலே ஸித்திக்கிறது. இன்னும் சாண்டில்ய ஸ்மிருதியில் அபிகமந ப்ரகரணத் தில், நித்யா நுஷ்டேய ப்ரபத்தி ப்ரகரணத் தில், "புத்ரப்ரேஷ்ய: ததாசிஷ்ய: ஆத்மாநஞ்ச நிவேதயேத்" என்று சொல்லியிருக்கிறது. அப்படியே பாரத்வாஜ ஸம்ஹிதையில், "ஏகைக மபிசாங்காநாம் ப்ரபத்தி: ப்ராஜ்ஞ ஸம்ச்ரயாத்" என்றும், "அந்வயாதபி சைகஸ்ய ஸம்யக் ந்யஸ்தாத் மநோஹரெள, ஸர்வ ஏவப்ரமுச்யேரந்நரா: பூர்வேபரே ததா" என்றும் சொல்லியிருக்கிறது.

இவற்றின் அர்த்தம். ப்ராஜ்ஞனான ஆசார் யனுடைய ஸம்பந்தத்தால் ப்ரபத்தியி. னுடைய அங்கங்களில் ஒன்றிருந்தாலும், ப்ரபத்தியாகலாம் என்பதாம். ஸர்வேசுவர னிடத்தில் நன்றாக பரந்யாஸம் பண்ணின ஆசார்யனுடைய ஸம்பந்தத்தால், முன்புள்ள வர்களும், பின்புள்ளவர்களும் முக்தராவார்க ளென்பதாம்.

திருவாய்மொழியிலே, 'முடியாதென்' என்கிற பாட்டிலும், 'கேசவன் தமர்' என்கிற பாட்டிலும், 'பிடித்தார் வீற்றிருந்து பெரிய வானுள் நிலாவுவர்' என்கிற பாட்டிலும் இந்த விஷயம் வியக்தம்.

திருக்குருகைப்பிரான் பிள்ளான், 'கேச வன்தமர்' என்கிற பாட்டுக்குச் செய்தருளிய வ்யாக்யானத்தில், 'ஸர்வேசுவரனுைய் நிரதிசய சௌந்தர்யாதி குணகளுைய் அயர்வறு மமரர்க ளதிபதியாய் எனக்கு ஸ்வாமியாயிருந்த நாராயணனாலே ஏநகேநாபி ப்ரகாரேண ஸாக்ஷாத்வா பரம்பரையாவர் என்னோடு ஸம் பந்தமுடையா ரெல்லாரும் பகவதேக போக ராணுர்கள்' என்று அருளிச்செய்தார்.

இதற்கு வ்யாக்யானமான இருபத்து நாலாயிரப்படியில், வேதாந்த ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி, 'கீழ்மேலெழுரேழ்பிறப்பு' என் கிறதற்கு தாத்பர்ய மருளிச்செய்கிறார்; ஏநே த்யாதியால் யேநகேநாபி மாதாபித்ருத்வ ரூபேணவாதல், புத்ர சிஷ்யத்வாதி ரூபேண வாதல் என்றபடி; பாட்டில், 'பிறப்பு' என்கிற பதம் ஜந்மவித்யா ஸாதாரணமென்று கருத்து; பாட்டில் கீழ் மேலென்று ஸப்தபூருஷ மாத்ரத் துக்கு பகவதேக போகத்வ முண்டாயிருக்கிற தென்று சொல்லியிருக்க, ஸம்பந்தமுடையா ரெல்லாருமென்று ஸாமாந்யேந உரைப்பா னென்னென்னில், 'ஏகாஹம்பி கௌந்தேய பூமிஸ்தமுதகம் குரு' என்று ஒரு தடாக நிர்மா ணத்துக்கு இத்துனை ப்ரபாவ முண்டானால், பகவதாச்ரயண ப்ரபாவத்துக்கு பரிச்சேத மில்லை யென்பது கைமுதிக ந்யாய ஸித்தமா கையால், பாட்டில் சொன்னது உபலக்ஷண மென்று கருத்து' என்று அருளிச் செய்திருக் கிறார். அன்றியும் 'பிடித்தார் பிடித்தார்' என் கிற பாட்டின் வ்யாக்கியானமான ஈட்டில், 'இத்தால் ஆழ்வார் பண்ணின ப்ரபத்தியே நமக்கு எல்லாருக்கும் போரும்; தனித்து ப்ர பத்தி பண்ணவேண்டா; தத் ஸம்பந்தந் தோற்ற ததபிமத பகவத் குணாநுபவ கைங் கர்யங்கள் தத் ஸூக்தி பரிசீலநம், ததபிமத தேவதாந்தர ஸம்பந்தம் முதலானவைகளை விடுதல், தத் கடித குருபரம்பரா கடாசார்ய ஸமாச்ரயணம் முதலானவைகளை உடையவ னாக இருக்க வேணுமென்று அருளிச் செய்தி ருப்பதையுங் கண்டுகொள்க. கீழ் நிரூபிக்கப் பட்டுள்ள ப்ரமாணங்களுக்கு அவிருத்தமா கையாலும், இதை ப்ரமாணமாக அங்கீகரித்த அஹோபில மடத்து ஸ்வாமிகளுக்கும், இது க்ராஹ்யமாகையாலும் இது உதாஹரிக்கப் பட்டது.

இப்படியே ஸ்ரீபாஷ்யத்தில் ப்ரதம சுலோ கத்தில், "விநத :விவித பூதவ்ராத ரக்ஷைக தீக்ஷே" என்கிற சுலோக வ்யாக்கியாநாவ ஸரத்தில், சுருத ப்ரகாசிகையில், பூத ஸம்பந்தீ வ்ராத:- பூதவ்ராத:, ஸம்ச்ருத ஸம்பந்திநோபி தத ஏவ ரக்ஷ்யா:இத்யபிப்ராய: யதா "ஆஸ் போடயந்தி பிதர: ப்ரணர்த்யந்தி பிதாமஹா: வைஷ்ணவோ ந: குலேஜாத: ஸநஸ்ஸந்தார யிஷ்யதி" "பசுர்மநுஷ்ய: பக்ஷீச யேச வைஷ் ணவ ஸம்ச்ரயா: தேநைவதே ப்ரயாஸ்யந்தி தத் விஷ்ணோ: பரமம்பதம் என்று அருளிச் செய்திருப்பதையும் கண்டு கொள்க. இதன் அர்த்தம். ஒரு குலத்தில் ஒரு வைஷ்ணவன் உண்டானால், அவனுடைய பித்ருக்களும் பிதா மஹர்களும் நம்முடைய குலத்தில் ஒரு வைஷ் ணவ னுண்டாயிருக்கிறான்; அவன் நம்மைக் கரையேற்றுவன் என்று ஸந்தோஷத்தாலே, ஆஸ்போடனம் (கைதட்டல்), நர்த்தனம் இவைகளைப் பண்ணுகிறார்கள்; ஜ்ஞானமில் லாத பசுவும் பக்ஷியும் ஜ்ஞானமுள்ள மனுஷ் யனும் ஒரு வைஷ்ணவனை ஆசிரயித்தார்க ளாகில், அந்த வைஷ்ணவனுடைய சார்வி னாலேயே பரமபதத்தை அடைகிறார்கள் என் பதாம். இவ்விடத்தில், தேநைவ என்று ஏவகரமிருப்பதால், இவர்களுக்கு ஜ்ஞாநம் அநபேக்ஷிதம். மேலும் பசு, பக்ஷி இவை களோடே மநுஷ்யர்களையும் ஹைபடித்திரு பதாலும் இது ஸித்தம்.

"பூத ஸம்பந்தி வ்ராத: தாநி தத் ததீயா நிச ஷஷ்ட்யா: ஸம்பந்த ஸாமாந்யோக்தே: அந்யதா வ்ராத சப்தவையர்த்யாத் நஹ்யத்ர ஸத்ரவத் ஸம்ஹதாநாமேவ ப்ரவர்த்திர்வா பலா வாப்திர்வா ஸாகேதவாஸிவத் பல லாப ஸ்துநஸா வத்ரிக: தத்ர நாஸ்யா வரபுருஷா: க்ஷீயந்தே நாஸ்யா ப்ருஹ்மவித் குலேபவதி பசுர் மநுஷ்ய: பக்ஷீச இத்யாதி" என்று தேசிகன் அருளிச்செய்திருக்கிறார். இதன் அர்த்தம் 'பூத வ்ராத' என்கிற விடத்தில் பூ ஸத்தாயாம்' என்கிற தாது பாடத்தின்படி, பகவத் ஜ்ஞானத்தாலே ஸத்தா லாபமுடைய வர்களுடைய ஸம்பந்தமுள்ள ஸமூஹம், அதா வது ஸத்தைபெற்றவர்களும், அவர்களுடைய ஸம்பந்த முள்ளவர்களும் அர்த்தமாம்; 'பூதா நாம் வ்ராத' என்கிற விடத்தில் ஷஷ்டீ ஸம் பந்த ஸாமந்யத்தைச் சொல்லுகையாலே, இப்படி அர்த்தம் கொள்ளாதவரையில் வ்ராத சப்தம் வ்பர்த்தமாய், எப்படி அநேக யஜமா நகர்த்ருக யாகத்தில் எல்லாருக்கும் ப்ரவ்ருத் தியும் எல்லாருக்கும் பலப்ராப்தியுமுண்டோ,

அப்படி இவ்விடத்தில் இல்லாமையால், அயோத்யாவாஸிகளுக்குப்போல், எல்லாருக்கும் பல லாபம் ஸார்வத்ரிகமன்று, இதற்கு ப்ரமாணம்- "பசுர்மநுஷ்ய: பக்ஷி" என்பதாம்.

இப்படியே சரணாகதி கத்ய சுருதப்ரகாசிகையில், "அஸ்துதயைவ ஸர்வம் ஸம்பச்யதே" என்கிற விடத்தில் 'ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கும் நிஸ்தாரண மபிபவேதிதிபாவ: என்றிருப்பதையும் கண்டுகொள்க.

கத்ய பாஷ்யத்தில் ஔதார்ய சப்தார்த்த விசாரத்தில், "ஸ-ச்ருதஸ்ய ஸவிபூதிகம் ஆத்மாநம் தத்வாததநுபந்திஷு பசுமாநுஷ பக்ஷிஷ்வபி, அவிச்ராந்தத்வம் ச்ருயதே ஹி நாஸ் யாவரபுருஷா: ஸ்ரீயந்தே நாஸ்யாப்ருஹ்மவித் குலேபவதி" என்றிப்படிச் சொல்லியிருக்கிறது. இதன் அர்த்தம்:—தன்னை ஆசிரயித்தவனுக்கு, விபூதியுக்தனை தன்னைக்கொடுத்து, தத் ஸம்பந்திகளான பசுபக்ஷிகளிடத்திலும் அப்படியே குறைவில்லாம விருக்கை என்பதாம். இந்த ப்ரமாணங்களுக்கு முன்னமே அர்த்தம் விஸ்தரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

ரஹஸ்ய த்ரய ஸாரத்திலும், "ஒரு மலையில் நின்று மற்றொரு மலையில் தாவும் ஸிஹ்ம சரீரத்தைப்பற்றின ஜந்துக்கள்போலே பாஷ்யகாரருடைய, ஸம்பந்தத்தாலே நாம் உத்தீர்ணராவுதோமென்று முதலியாண்டான் பாசுரம் என்றருளிச்செய்தார். அதாவது ஸிஹ்ம சரீரத்தைப்பற்றின ஜந்துக்களுக்கு ஸிஹ்ம சரீரத்தைப் பற்றுதலைத்தவிர வேறு ப்ரவர்த்தியில்லாமலிருக்கச் செய்தேயும் அந்தப் பற்றுதலாலேயே, வேறொரு மலையின் ப்ராப்தி வருவதுபோல், பகவத் ப்ராப்த்திக்கும் ஆசார்ய ஸம்பந்தம் தவிர வேறு ப்ரவ்ருத்தி வேண்டியதில்லையென்று ஏற்படுகிறது. அப்படியே, 'துன்பற்ற மதுரகவி தோன்றக் காட்டும் தொல்வழியே நல்வழியில் துணிவார் கட்கே" என்றும் அருளிச்செய்தார். அதாவது:-ப்ரதமபர்வ நிஷ்டையாகிற துன்பம் இல்லாமலே ஆழ்வாரைத்தவிர வேறு பஜநீய தேவதையில்லை, யென்றிருக்க மதுரகவி நிஷ்டையே நல்வழியில் விசுவாஸமுடையவர்களுக்கு உபாயம் என்றும், *மம மத் பக்த பக்தேஷு ப்ரீதிரப்யதிகாபவேத் ஸித்திர்பவதி வாநேதி ஸம்சயோச்யுத ஸேவிநாம் அஸம்சயொத்ரதத் பக்தபரிசர்யா ரதாத்மநாம்" என்கிறபடியே சரம பர்வ நிஷ்டா ரூபையான ஆசார்ய நிஷ்டையே உத்கிருஷ்டையென்றும், ஆசார்ய நிஷ்டைய நிபுணகிருத்யமென்றும், மூன்று நிஷ்டைகளுக்குள்ளும் ஆசார்ய நிஷ்டையே தனக்கு அபிமதையென்றும் அருளிச்செய்தார்.

---

*மேலேகண்ட சுலோகங்களுக்கு அர்த்தம் எனக்கு என் விஷயத்தில் பக்தியுள்ளவர்களிற் காட்டிலும் அவர்களிடத்தில் பக்தியுள்ளவர்களிடத்தில் ப்ரீதி மிகுத்திருக்கும் கேவலம் பகவத் விஷயத்தில் பக்தியுள்ளவர்களுக்கு பகவத் ப்ராப்தியாகிற ஸித்தியுண்டாகுமோ இல்லையோ வென்று ஸந்தேஹமுண்டு. பகவத்பக்தர்களுடைய பரிசர்யா ஸக்தமநஸ்கர்களுக்கு ஸித்தியில் ஸந்தேஹமில்லை யென்பதாம்.

---

ப்ருஹ்மவித்யா நிஷ்டர்களுக்கு ப்ருஹ்ம விதபசாரம் நேரும் பக்ஷத்தில் அந்த வித்யை கார்யகரமாகிறதில்லை. சரம்பர்வ நிஷ்டர்களுக்கு ப்ருஹ்மவிதபசாரம் நேர ப்ரஸக்தியில்லாமையால், ஸம்சயமில்லைஎன்னத் தட்டில்லை. அன்றியும் ஸர்வேசுவரனை ஆசிரயித்தவர்களுக்கு, அவனுடைய ஸ்வாதந்த்ரியத்தாலே பலஸித்தியில் கண்ணழிவுண்டாகலாம்: சரம பர்வ நிஷ்டர்களுக்கு அந்த பயமில்லாமையால் ஸம்சயமில்லை யென்றும் சொல்லலாம்.

அப்படியே "அந்தோ நந்த க்ருஹண வசகோ யாதிரங்கே சதத்வத் பங்குர் நௌகாகுஹர நிஹிதோ நீயதே நாவிகேந புங்க்த்தே போகாநவிதி தத்ருபஸ்ஸேவகஸ் யார்ப்பகாதி" என்றும் அருளிச்செய்தார்.

இதன் அர்த்தம்:- கண்தெரியாதவர்கள் கண்தெரிந்தவனுடைய ஆதரவாலே செல்வது போலேயும், காலில்லாத முடவன் ஓடம் விடுமவனால் ஓடத்தில் வைக்கப்பட்டுச் செல்வது போலேயும், ராஜஸேவகனுடைய குழந்தைகள் ராஜாவை அறியாமலிருக்கச் செய்தேயும் ராஜஸேவை செய்யும் பிதாவினுடைய ஸம்பந்தத்தாலே, ராஜஸேவையால் பிதாவுக்குக் கிடைக்கிற பல போகங்களை அநுபவிப்பது போலேயும் ஹே ரங்கேச உம்முடைய ப்ராப்தியில் தயாளுவான ஆசார்யன் ஸமர்த்தனாகிறான் என்பதாம்.

இன்னும், திருவிருத்தத்தின் முதற்பாட்டு வ்யாக்யானத்தில் "யாமுறுமை" யென்கிற பஹுவசனத்தாலே ஸம்பந்திகளும் விவக்ஷிதர்களென்று அருளிச்செய்தார். இப்படி, தேசி

கன் ஜ்ஞானனுஷ்டான பூர்த்தியுடையவராய் ஸ்வதந்த்ரமாக ப்ரபத்தியை அநுஷ்டிக்க சக்தியிருக்கச்செய்தேயும், பலவிடங்களிலும் ஆசார்ய நிஷ்டையை, ஆதரித்துப் போந்தா ரென்பது வ்யக்தம்.

ந்யாய ஸித்தாஞ்ஜந வ்யாக்யானமான ரத்நபேடிகையில் ஆசார்ய ஸமாச்ரயணம் உபாய நிஷ்பத்தியைப் பண்ணிக்கொடுத்து உபாயாந்தரங்களுக்கு, அங்கமாவதுபோல் ஸ்வதந்த்ரமாகவும் பகவத் ப்ராப்தி ஸாதந மாகலாம். அதாவது ஆசார்யன் பண்ணும் ஆத்மாத்மீய பர ஸமர்ப்பணத்தில் தான் ஆத் மீயனுயிருந்து அந்வயிப்பதால், ஆசார்யனு டைய ப்ரபதநமே தனக்கு ஸாதனமாகத் தட்டில்லை. அந்யனுடைய ஜ்ஞானத்தலே அந்யனுக்கு முக்திபுண்டாகக் கூடுமோவென் னில், ப்ரமாண பலத்தாலே ப்ரபதநஸ்தலத்தில் அந்த நியமமில்லை யென்று திருப்புட்குழி ஸ்வாமி வ்யாக்யானித்திருப்பதையும் கண்டு கொள்க.

நிக்ஷேப ரக்ஷையில், "தாமேதம் விதித்வாதி ம்ருத்யுமேதி நாந்ய: பந்தா அயநாய வித்ய தே" என்றிருப்பதால், ஜ்ஞானமுள்ளவ னுக்கே, முக்தியேற்படுமாகையால், ஆசார்ய னுடைய ப்ரபத்தியால் பலஸித்தி கூடாதென்று சங்கித்து தமேவ நாந்ய: பந்தா என்கிற இடத் தில், தததிரிக்தா பந்தா இல்லையென்று பெதப் ரதியோகியாக தத்பதார்த்தமான ஸர்வேசுவர னுகிறுன்; விதித்வா என்கிற விடத்தில், த்வாப்ரத்யயார்த்தமான உத்தர காலீனத் வாந்விதமான வேதநம் பேதப்ரதியோகியாக மாட்டாது. ஆதலால் ஜ்ஞான முக்திகளுக்கு ஸாமாநாதிகரண்யம் அநாவசியமென்று, தேசி கன் அருளிச்செய்திருப்பதை, அநுஸரித்து ஸார ப்ரகாசிகையில் நிருபித்திருப்பதையும் கண்டுகொள்க.

ஆசார்ய ஸம்பந்தம் அவனுடைய ஸா க்ஷாத் ஸம்பந்தமும் ஸம்பந்தி ஸம்பந்த ரூப மான பரம்பரா ஸம்பந்தமுமாம். ஸாக்ஷாத் ஸம்பந்தமாவது, ஆசார்யனிடத்தில் பஞ்ச ஸம்ஸ்கார பூர்வமாக விசேஷார்த்த க்ரஹ ணம் பண்ணி, அவனுடைய அபிமாநாந்தர் பூதனுகுகை. பரம்பரா ஸம்பந்தமாவது தத் கடிதகுருபரம்பரா கடகாசார்ய ஸமாச்ரயணம் இது தத்காலீனர்களிடத்திலும், ப:சாத்காலீ னர்களிடத்திலும் காணலாம். இவ்விரண்டு ஸம்பந்தங்களும் தத்காலீன மாத்ர விச்ராந்த மென்றுசொல்லும் பக்ஷத்தில் கீழ் உதாஹரிக் கப்பட்ட ப்ரமாணங்களுக்கு விருத்தமாகும்.

மேலும் "அர்வாஞ்சோயத்பத ஸரஸிஜ த்வந்த்வ மாச்ருத்ய பூர்வே மூர்த்நாயஸ்யாந் வய முபகதாதேசிகா முக்திமாப்தா:" என்கிற பூர்வாசார்யர்களருளிச் செய்த சுலோகத்தோ டேயும், "தத்பாத கோடீரயோஸ் ஸம்பந்தேந ஸமித்யமானவிபவாந்" என்றும், "உக்த்யா தநஞ்ஜய விபீஷண லக்ஷ்யாதே ப்ரத்யாய்ய லக்ஷ்மண முநேர்ப் பவதாவிதீர்ணம் ச்ருத்வா வரந்த மநுபந்த மதாவலிப்பதே ஸ்வாமிந் ப்ரஸீத ஸததம் மயி ரங்க தாமந்' என்று தேசிகன் அருளிச் செய்த சுலோகங்களோடே யும் விரோதிக்கும். இவைகளுக்கு அர்த்தம்:— பாஷ்யகாரருக்குக் கீழ்ப்பட்டவர்கள் அவ ருடைய திருவடி ஸம்பந்தத்தால் முக்தியடைந் தார்கள். முன்புள்ளவர்கள் அவருடைய திரு முடி ஸம்பந்தத்தால் முக்தியடைந்தார்கள். பாஷ்யகாரருடைய திருமுடி ஸம்பந்தத் தாலும், திருவடிஸம்பந்தத்தாலும் விருத்தி அடைகிற விபவத்தையுடையவர்கள், ஸ்ரீவிபீ ஷணுழ்வானை யுத்தேசித்து அருளிச்செய்த "ஸக்ருதேவ ப்ரபந்நாய" என்கிற உக்தியாலே யும், அர்ஜுநனை யுத்தேசித்துச் சொன்ன "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்கிற உக்தியா லேயும் ப்ரத்யயத்தை யுண்டாக்கி, உடைய வர்க்கு தேவரீராலே கொடுக்கப்பட்ட வரத் தைக் கேட்டு, (அந்த வரமாவது உடையவர் செய்தருளின தர்சன ஸ்தாபநம் முதலான கைங்கர்யங்களாலே திருவுள்ளமுவந்து, பெரிய பெருமாள், உம்முடைய ஸம்பந்தி ஸம்பந்தி களெல்லாரும் உத்தீர்ணராவர்கள் என்றரு ளிய வரம்)' அந்த வரத்தைக் கேட்டு, அந்த பாஷ்யகாரருடைய ஸம்பந்தத்தாலுண்டான மதத்தால் த்ருப்தனுன அடியேனிடத்தில் கிருபை பண்ணி யருளவேணும் என்பதாம். இப்படி இரண்டு சுலோகத்தாலும் பின்புள் ளார்களுக்கும், உடையவருடைய ஸம்பந்தம் கார்யகரமாகத்தட்டில்லை. சுருத்வாவரம், என்பதற்கு கௌசிக ஸ்ரீநிவாஸாசார்யர் பண்ணின வ்யாக்கியானத்திலும், கீழ் நிரு பித்தபடியே சொல்லியிருப்பதால், வரம் என் பதற்கு பஹுப்ரகாரமாக ஆதுநிகர்கள் சொல் லும் அர்த்தம் அநுபபந்நம். மேலும் கீழ் உதா ஹரிக்கப்பட்ட ஆசார்ய ஸூக்திகளோடும் விரோதிக்கும்.

ஆனால், ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் கடைசியில் சேதநாசேதனங்களை சரீரமாகவுடைய ஸர்வேச்வரன் ஸமஸ்த சேதனர்களுக்கும் முக்தியைக் கொடுக்கவேணுமென்று சொல்லியிருப்பதால், பரம கிருபாளுவான ஒரு ஆசாரியன் எல்லோரையுமுத்தேசித்து, ப்ரபத்திபண்ணக் கூடுமாகையால், ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வாராதோவென்னில், கீழ்நிரூபித்தபடியே அந்த ஆசார்ய ஸம்பந்தமுடையவர்களுக்கே பலஸித்தியுண்டாக்குகையால் எல்லோரும் ஆசார்ய ஸம்பந்தத்தையடைந்து பலத்தையடையவேணுமென்றே அர்த்தம் சொல்லவேணும்.

இத்தை அநுஸரித்து, திருவாய்மொழியில், ''அவையவை தரவணையே''யென்கிற பாசுரத்தின் வியாக்யானத்தில், 'கீழ்த்திருவாய்மொழியில், ஸர்வேசுவரன் ஆழ்வாருடைய ஸம்பந்தமுள்ளவர்களுக்கு அந்த ஸம்பந்தமே ஹேதுவாக பலத்தைக்கொடுக்க உத்யுக்தனாயிருக்கிறபடியைக் கண்டு 'தன்னோடு ஸம்பந்தத்தை யுண்டாக்க வேணுமென்று பரோபபதேசம் பண்ணுகிறார்' என்று அருளிச் செய்திருப்பதைக் கண்டுகொள்க.

இப்படி ஸர்வேசுவரனிடத்தில் யதாவத்தாக ப்ரபதநத்தை அநுஷ்டித்தவனுடைய ஸாக்ஷாத் ஸம்பந்தமும், பரம்பரா ஸம்பந்தமும் தத்காலீந பச்சாத்காலீன ஸாதரணமாக ஏற்படுகிறபடியினாலேயும், அப்படிப்பட்ட பூர்ணாதிகாரிகள் இப்போதில்லாமையாலேயும், பூர்ணாதிகாரிகளான ஆழ்வார்களும், ''அவர் அடி பணிந்துய்ந்தவன்'' என்கிறபடியே அவர் திருவடிகளான உடையவருமான இதர்களுகடய ஸம்பந்தமே உத்தாரகமாகையால், நம்முடைய ஆசார்யர்கள் தனித்து ப்ரபத்திபண்ணாமல், அந்த ஸம்பந்தமே உத்தாரகமாக அத்யவஸித்து, அப்படியே தாங்களும் அநுஷ்டித்தும், உபதேசித்தும் பின்புள்ளாரும் உஜ்ஜீவிக்கும்படி கிரந்த ரூபமாகவும் வெளியிட்டிருக்கிறார்கள். ஆதலால் ஆழ்வார் உடையவர் ஸம்பந்தமே உத்தாரகமென்று அத்தியவஸித்து கர்த்தவ்யாம்ச மில்லாமலிருப்பதே ஸம்ப்ர தாயஸித்தமான அர்த்தம். ஆசார்ய ருசிபரிக்ருஹீதமான அர்த்தமும் இதுவே.

இப்படியிருக்க சிலர் ப்ரபத்தியை ஸ்வதந்த்ரமாக அநுஷ்டிக்காமல் தங்களை ஆசிரயித்தவர்களுக்காகத் தாங்கள் பரந்யாஸத்தைப் பண்ணுவது எது கருதியோ? தெரியவில்லை. முன்சொல்லியபடி பெரும்பாலோர் அநுஷ்டானமிருப்பதால், அதை அநுபபந்நமென்று சொல்ல வொண்ணாது. இவர்களுக்கு பலஸித்தியில்லை யென்றும் சிலர் இந்த ஸம்ப்ரதாயஸ்தர்களை அப்ரபந்நர்களென்றும், சொல்லுமது அஸங்கதம் என்று நிரூபிக்க வேண்டியது அவசியமாகையால் இப்படி யதாமதி நிரூபிக்கப்பட்டது.

## இருவகை ப்ரபத்திகள்

இந்த ப்ரபத்தி ஆர்த்த ப்ரபத்தி, த்ருப்த ப்ரபத்தி என்று இரண்டு ப்ரகாரமாக இருக்கும். ஆர்த்த ப்ரபத்தியாவது.— ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்பாலும், பகவதநுபவ அலாபத்தில்தரியாமையாலும், அதற்கு இடைச்சுவரான ஸம்ஸாரத்தினுடைய நிவ்ருத்தியில் உத்கட இச்சையுண்டாகி, அப்போதே ஸம்ஸார நிவ்ருத்தியைப் பண்ணி, ஸ்வாநுபவ கைங்கர்யங்களைக் கொடுக்க வேணுமென்று ஸர்வேசுவரனை ப்ரார்த்திக்கை. இந்த அதிகாரிகள் ஆழ்வார்கள் போல்வார்கள். இவர்கள் ப்ரார்த்தித்தால் உடனே அவர்கள் கோரினபடியே சில அதிகாரிகளுக்கு ஸர்வேசுவரன் பல ப்ரதானம் பண்ணுவன். அப்படி யன்றிக்கே, ஆழ்வார்கள் போல்வார்கள் சில அதிகாரிகளை இவர்களுடைய ஜ்ஞாநா நுஷ்டானங்களைக் கண்டும், இவர்கள் உபதேசிக்கும் அர்த்தங்களைக் கேட்டும் லோகம், உஜ்ஜீவிக்க வேணுமென்கிற அபிப்ராய விசேஷத்தாலும் ''ரமதேதஸ்மிந்நுத ஜீர்ணேசயாநே'' என்கிற படியே காமினியுடைய அழுக்குகக்கும் காமுகனைப்போலேயும். வேர்ச்சூடுமவர், மண்பற்றுக் கழற்றாதாப் போலேயும், சரம சரீரத்தோடே வைத்து அநுபவிக்க வேணுமென்னும் அபிப்ராய விசேஷத்தாலும், இவர்கள் அபேக்ஷித்த படியே தலைக்கட்டாமலுமிருக்கும். ஆகிலும் விதி வகையே நடத்துமவனாகையால், ''மங்க வொட்டு'', என்பதுபோல, இவர்கள் ப்ரார்த்தித்தால் ப்ரார்த்தித்தபடியே நடத்தும்.

த்ருப்த ப்ரபத்தியாவது.— வர்த்தமான சரீரத்திலும் அந்த சரீரத்தால், அநுபவிக்கக் கூடிய விஷயங்களை அநுபவிப்பதிலும், ஆசையுடையவனாய், சரீராந்தர பரிக்ரஹத்தில் விரக்தியுடைய அதிகாரி வர்த்தமான சரீராவஸானத்தில் தனக்கு முக்தியை அபேக்ஷித்து அத்தைப் பெறுகைக்காக, ஸர்வேசுவரனிடத்தில் பண்ணுகிற ப்ரபத்தி. இவனுக்கு அந்திம

காலத்தில் இவை கோரினபடியே இவன் அபேக்ஷித்ததை ஸர்வேசுவரன் தலைக்கட்டிக் கொடுக்கும். இப்படி ப்ரபத்தி ஸ்வரூபம் நிரூபிக்கப்பட்டது.

தேசவாஸம், திருநாமஸங்கீர்த்தனம், புருஷோத்தம வித்யை, திருவிளக்கெரிக்கை, திருமாலை கட்டுகை முதலானவைகளும் மோக்ஷ ஸாதநங்களாமாகில் இவைகள் பக்திக்கு அங்கமாயிருப்பதை யொழியத் தனியே மோக்ஷ ஸாதநமாவதெப்படி யெனில், ப்ர பத்தி, பக்திக்கு அங்கமாயும், தனித்து ஸாதந மாயும் எப்படியாகிறதோ, அப்படியே இவை களும் ப்ரமாண பலத்தாலே, பக்திக்கு அங்கங் களாயும், தனித்து மோக்ஷ ஸாதநமாயுமிருக் கலாம். இவை தனித்து மோக்ஷ ஸாதநமாக மாட்டாவென்கிற நிஷேத வசனமில்லை.

மேலும் பட்டர் பகவத்குண தர்ப்பணத் தில் நாமஸங்கீர்த்தநத்துக்குத்தனித்து உபாய த்வத்தை ஸாதித்திருப்பதால், அந்த ந்யாயத் தைக்கொண்டு, மற்றவைகளும் தனித்து உபாயங்களாகலாம்.

நாம ஸங்கீர்த்தனத்தைப் பற்றி பகவத் குண தர்ப்பணத்திலுள்ள வாக்கியங்கள் வரு மாறு.— "நநுகுருதீர்க்க துஷ்கர தபஸ் ஸமாதிஸாத்ய தத்வஜ்ஞா நோபக்ரமஸ் யது வாங்மாத்ர ஸாத்யத்வ வாதோப் யதிவாத. குருசாஸ்த்ர வையர்த்ய ப்ரஸ ங்கேந ப்ரமாண விருத்தஞ்ச" என்று, பூர்வ பக்ஷம் உள்ளது. இதன் அர்த்தம்;—பெரிதா யும் சிரகால ஸாத்யமாயும் அநுஷ்டிக்க முடி யாதிருக்கிற தபஸ் ஸமாதியாலே ஸாதிக்கப் படுமதான தத்வஜ்ஞாநோபக்ரமம் கேவல வாசிக மாத்ரத்தாலே, ஸாதிக்கப்படுமென்பது அதிவாதம்; குருபாயத்தை விதிக்கிற சாஸ்தி ரத்துக்கு வையர்த்யம் ப்ரஸங்கிக்கும்; பிரமா ணத்துக்கு விரோதமும் ஏற்படும் என்பதாம். இதற்கு ஸமாதாநம்.

"தநிதமவிதித பகவத் ப்ரபாவஸ்ய சாந்த
ஸஸ்ய பைசாசம் லகீயோபி
பகவத் ஸங்கீர்த்தநம் துர்வஹா மபிதுரம் தார
யதேவ நகுருசாஸ்த்ரா
நர்த்தத்வம் தஸ்ய ஸமர்த்தாதிகாரத்வாத்
அஸ்யது ஸத்யஸதிவா
ஸாமர்த்யே பகவ தஸாதாரண ருசிஸ்முசித
பாக்யவததிகாரத்வாச்ச
கரீயஸோபி பகவத் ப்ரஸாத பலஹேது: லகி
யஸி நிந்தண்டவாரித:
யதாப்ரயோக வைபுல்யாத் தேவ: ப்ரஸீததி
ததாலகீயஸ்யபி பாவ
சுத்திவிசேஷாத் ப்ரஸீதேத்" என்றருளிச்
செய்யப்பட்டது.

இதன் அர்த்தம்:—பகவத் ப்ரபாவத்தை அறியாத சாந்தஸனுடைய பிசாச கிருத்யம் நாம ஸங்கீர்த்தநம் லகுவாயிருந்தபோதிலும் குருவான சுமையும் தாங்கும்: குருபாய விதா யக சாஸ்த்ரதுக்கு வையர்த்தியமும் வாராது; குருபாயம் ஸமர்த்தாதிகாரமாகையால் அவர் களை உத்தேசித்து அந்த சாஸ்த்ரம் ஏற்பட் டது; இந்த சாஸ்த்ரமோ என்றால் ஸாமர்த் தியமிருந்தாலும், இல்லாமலிருந்தாலும் பக வத் விஷயத்தில், அஸாதாரண ருசியை உடைய வனை, உசித பாக்யவானைப்பற்றி ஏற்பட்டது. குருவான உபாயத்தை அநுஷ்டித்தவனுக்கு பல ஸாதநமான பகவத் ப்ரஸாதம் லகுவான உபாயத்தை அநுஷ்டித்தவனிடத்தில் தண்டத் தாலே தடுக்கப்பட்டதா? குருவான உபாயத் தை அநுஷ்டித்தவனிடத்தில், அநுஷ்டானத்தி னுடைய பெருமையை கடாக்ஷித்து ஸர்வேசு வரன் கிருபை பண்ணுவதுபோல், லகுவான உபாயத்தை அநுஷ்டித்தவனிடத்தில் பாவசுத் தியைப் பார்த்து கிருபைபண்ணுவ னென்ப தாம்.

ஆகவே நாம ஸங்கீர்த்தன முதலானவை கள் தனித்து உபாயமாகும் விஷயத்தில் ப்ர மாணோபபத்திகாட்டப்பட்டது. இந்த உபாயங் களில் பக்தியை அநுஷ்டித்தவனுக்கு பாஹ் யேந்த்ரியத்தினுடையவும், அந்தரிந்திரியத் தினுடையவும் நியமனம் அதிகாரம். சரணாகதி நிஷ்டனுக்கு "பரமாத்மநி யோரக்த:" என் கிற, ப்ரமாணத்தின்படியும், 'மாற்பால் மனஞ் சுழிப்ப' என்கிற ப்ரமாணத்தின்படியும் ஸித்தோபாய பலமாய் வரும்.

சில மந்தாதிகாரிகளுக்கு சரீரபாத ஸமயத் தில் ஸர்வேசுவரன் இவைகளைப் பிறப்பித்தே பலத்தைக் கொடுப்பன். ஆழ்வார்போல்வா ரான பூர்ணாதிகாரிகள் விஷயத்தில் ஸார்வ காலிகமாயிருக்கும். பக்தனுக்கு ருணத்ரய நிராகரணம் ஆவசியகமாகையால் ஸ்வதாரங் களில், ஆஸக்தி ஆவச்யகம்; நிஷித்த விஷய நிவ்ருத்திவேணும். ப்ரபந்நனுக்கு "தேவர்ஷி பூதாப்த ந்ருணாம்" என்கிற ப்ரமாணத்தின் படி ருணநிவ்ருத்தி அநாவச்யகமாகையாலும், அநந்யபோக்த்ருத்வரூபஸ்வரூபத்துக்குவிருத்த

மாங்கயாலும் விஹித விஷயமான ஸ்வதாரங் களிலும் விரக்தி வேணும்.

### விஹித விஷய நிவ்ருத்தி

ஆனால், பூர்வாசார்யர்களிடத்தில் ப்ர ஜோத்பாதநம் ஏற்படுகை கூடுமோவென்னில்? பகவன் நியமனத்தாலும், ஆசார்ய நியமனத்தாலும் "நல்ல பதத்தால் மனைவாழ்வர்" என்கிற பாசுரப்படி காதாசித்கமாக பகவத் பாகவத கைங்கர்ய ரூபமான விசேஷ தர்மத்தை உச்தேசித்து ஸ்வ தார ப்ரவ்ருத்திகூடும். உத்கடேச்சையில்லாமல், ப்ரஜோத்பாதநம் கூடாதகையால், அநந்யபோக்யத்வ ஸ்வரூப விரோதம் ஏற்படுமாகையால், அதில்லாமையே பூர்ணாதிகாரம்.

இந்த விஷயம், பாகவதத்தில் ஏகாதச ஸ்கந்தத்தில், லோகே வ்யவாயாமிஷ மத்யஸேவா நித்யாஸ்து ஜந்தோ: நஹிதத்ரசோதநா, வ்யவஸ்திதி: தத்ரவிவாஹ யஜ்ஞ ஸுராக்ருஹேஷ்வாசு நிவ்ருத்திரிஷ்டா" என்கிற சுலோகத்தில் வ்யக்தம்.

இதன் அர்த்தம் லோகத்தில் மநுஷ்யனுக்கு ஸ்திரீ ஸங்கம், மாம்ஸ பக்ஷணம், மத்ய ஸேவை இவைகள் ராகப்ராப்தங்களாயிருக்கையாலே, நித்யங்களாகையால், அவைகளுக்கு விதியில்லை. ஆனால் விவாஹிதையான ஸ்திரீயிடத்தில் ருதுகாலத்தில் ஸங்கமத்தைப் பண்ணவேணும், யாகங்களில் மாம்ஸபக்ஷணம் பண்ணவேணும், ஸௌத்ராமணி யென்கிற யாகத்தில் மத்ய பானம் பண்ணவேணும் என்று விதி ஏற்பட்டிருப்பதால், அது கூடுமோ என்னில், இவைகளில் தானே ப்ருவ்ருத்தனானவனை, உத்தேசித்து அவிவாஹித ஸ்திரீ ஸங்கம் கூடாதென்றும், யாக பிந்ந ஸ்தலங்களில் மாம்ஸபக்ஷணம் கூடாதென்றும், அப்படியே, ஸௌத்ராமணி பிந்ந ஸ்தலத்தின் மத்யஸேவை கூடாது என்றும் இதர நிவ்ருத்தியில் விதிக்குத் தாத்பரியமாகும். எப்படி "பஞ்ச பஞ்ச நகா: பக்ஷ்யா:" என்கிறவிடத்தில் பஞ்சநக ம்ருக மாம்ஸ பக்ஷணம் ராகப்ராப்தமாகையால், தத் பின்ன ம்ருகமாம் ஸபக்ஷணம் கூடாதென்பதில் விதிக்கு தாத்பர்யமோ அப்படியே இதர நிவ்ருத்தி ரூப பரிஸங்க்யையில் விதிக்குத் தாத்பர்யம். ஸர்வப்ரகாரத்தாலும் இவைகளுடைய நிவ்ருத்திதான் ப்ரமாணத்தினுடைய முக்ய தாத்பர்யம் என்பதாம்.

இப்படியே மத்யஸ்தரான ஸ்ரீதரரும் வ்யாக்யானம் பண்ணியிருப்பதால், ப்ரபந்நனுக்கு விஹித விஷய நிவ்ருத்தி முக்யாதிகாரம். "உத்தர பூர்வாகயோ ரச்லேஷ விநாசௌ" என்கிற சூத்திரத்தின்படி, பக்தனுக்கும், ப்ரபந்நனுக்கும் உபாயாநுஷ்டாநாத் பூர்வபாவிகளாயுள்ள ப்ராரப்த பிந்நங்களான பூர்வாகங்கள் நஷ்டங்களாம். அதாவது அவைகளுக்கு ஸர்வேசுவரன் பல ப்ரதானம் பண்ணுகிறதில்லை. உபாயா நுஷ்டாநா நந்தர்பாவியாய், அபுத்திபூர்வமாயுள்ள பாபம் இவனிடத்தில் ஸம்பந்திக்கிறதில்லை. அதாவது ஸர்வேசுவரன் பல ப்ரதானம் பண்ண ஸங்கல்பக்கிறதில்லை. காதாசித்கமாக புத்தி பூர்வமான பாபம் ஏற்பட்டால் ப்ராய: சித்தத்தாலேயாதல், அநுபவத்தாலே யாதல் போகும். இவ்விடத்தில் பாபம் என்கிற சப்தத்தால் உத்தேச்யமான மோக்ஷ விரோதியான புண்யமும் விவக்ஷிதம். இதற்கு, "ஸர்வே பாப்மாநோ நிவர்த்தந்தே" "ஏதேவை நிரயாஸ் தாத" என்கிற இவை ப்ரமாணங்கள். "நாபுக்தம் க்ஷீயதேகர்ம என்பது அகிருத ப்ராய:சித்த விஷயம் ப்ராரப்தமாவது. பலோன்முகமான பாபம். புத்தி பூர்வகமான உத்தராகம் அடிக்கடி நேர்ந்தால் உபாய ப்ரச்யுதி ஏற்படும்.

இங்ஙனமன்றிக்கே, ப்ருஹ்மவிதபசாரம் நேர்ந்தால், அவர்கள் க்ஷாமணம் பண்ணிக் கொண்டாலல்லது, வித்யா:மாஹாத்மியத்தால் நிவ்ருத்தமாகாது. இந்த விஷயம் பாகவதத்தில் நவமஸ்கந்தத்தில் அம்பரீஷ வ்ருத்தாந்தத்தில் காணலாம். ப்ருஹ்மவிதபசார நிரூபணத்தை ஸ்ரீவசனபூஷணத்தில் கண்டு கொள்க. விஸ்தர பயத்தாலே இங்கு நிரூபிக்க படவில்லை.

### பிராயச்சித்தம்

ப்ராப்தங்களில் இவ்வுடம்பால் மட்டும் அநுபவிக்கத்தக்க ப்ராரப்த்தம் திருப்த்த ப்ரபந்நனுக்கு அநுபவத்தால் நசிக்கும். மற்ற ப்ராப்த்தகர்மங்கள் ப்ரபத்திமாஹாத்மயத்தாலே நசிக்கும். பக்தனுக்கு ப்ராரப்த ஸாமாந்யம் அநுபவ விநாச்யம். ப்ரார்ப்த கர்மாவஸாநத்திலே பலம். ஆர்த்த ப்ரபந்தனுக்கு உபாயாநுஷ்டாநாநந்தரம் இவன் கோலினபடி ப்ராரதமெல்லாம் அழியும். கீழ் நிருபித்தபடி சிலச் அதிகாரிகளுடைய சரீர ஸ்திதிக்கு பகவதிப்

சையே காரணம். புத்திபூர்வமான உத்தராகத்துக்கு, ப்ராய:சித்தம் பக்தி நிஷ்டனுக்கு "யோகமேவநிஷேவேத" என்கிறபடி பக்தியே, ப்ராய:சித்தம். ப்ரதிபதோக்த ப்ராய:சித்தம் வ்யபதிஷ்டனுக்கு லோக ஸங்க்ரஹார்த்தம் அநுஷ்டேயம். ப்ரபத்தி நிஷ்டனுக்கு "யத்புந: சரணம் வ்ருஜேத்" என்கிறபடியே பூர்வக்ருத ப்ரபத்தி ஸ்மரணம் ப்ராய: சித்தம். "யத்புந: சரணம் வ்ருஜேத்" என்கிறவிடத்தில் புந: ப்ரபத்தியைச் சொல்லாநிற்க, ப்ரபத்தி ஸ்மரணம்; என்பது கூடுமேயெண்ணில்? "ஸக்ருதேவ ப்ரபந்நாய" என்னும் ப்ரபத்தி ஸகிருத் கர்த்தவ்யமாகையாலே "ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று அந்த ப்ரபத்தி ஸர்வ பாபநிவ்ருத்தி ஸாதநமாக ஏற்படுகிறபடியால், ஸர்வ பாபாந்தர்க்கத புத்திபூர்வாகத்துக்கும் அதுவே ப்ராய:சித்தமாகையாலும், நம்முடைய ஸித்தாந்தத்தில் வ்யவஸாயாத்மகமான, ஜ்ஞானமே அநுவ்யவஸாயரூபமாகையால், ப்ரபத்தி ஸ்மரணமே புந: ப்ரபதநமாகையாலும் விரோதமில்லை.

இப்படி பாஷ்யகாரர் "க்ருதாந் க்ரியமாணாந் கரிஷ்ய மாணாந் ஸர்வாநசேஷத: க்ஷமஸ்வ" என்றருளிச் செய்திருப்பதாலும், அஜ்ஞாநாததவா ஜ்ஞாநாத் தத்ஸர்வம் சமயத்யாசு சரணாகதி ரஞ்ஜஸா" என்று ப்ரபந்ந பாரிஜாதத்திலிருப்பதாலும், பூர்வக்ருத ப்ரபத்தி ஸ்மரணமே ப்ராய:சித்தமாகக் கடவது.

"க்ருதாந் க்ரிய மாணாந் கரிஷ்யமாணாந்" என்கிற விடத்தில் 'கரிஷ்யமாணாந்' என்கிறவிது பாபாரம்பக பாப பரமென்னவொண்ணாது. 'கிருதாந்' என்கிறவிடத்தில், க்ருத சப்தம் ஏதத் வ்யதிரிக்தபரமென்று கொள்ள வேண்டிவரும். அப்போது கரிஷ்யமாண பதத்துக்கு லக்ஷணையும், க்ருத சப்தத்துக்கு ஸங்கோசமும் ஏற்படும். இவைகளில் காட்டிலும் புந: சப்தாஸ்வாரஸ்யம் ஸஹ்யம். மேலும், கரிஷ்யமாண சப்தம் பாபாரம்பக பாப பரமாகக்கொள்ளில், புத்திபூர்வாகம் வர ப்ரஸக்தியில்லை; ஆதலால் ப்ரபத்தி ஸ்மரணமே ப்ராயச்சித்தமாகக் கடவது. இங்கு வ்யபதிஷ்டனான அதிகாரிக்கு லோக ஸங்கிரஹார்த்தம் ப்ரதிபதோக்த ப்ராயச்சித்தம் அநுஷ்டேயம். ஆனால் வரப்போவதான நிமித்தத்தை உத்தேசித்து ப்ராய:சித்தம் அநுஷ்டிக்கும் பக்ஷத்தில் வரப்போவதான மஹாபாதகத்தை உத்தேசித்து முன்னதாகவே ப்ராய:சித்தம் பண்ணிக் கொள்ளலாமென்றேற்படுமே என்னில்; வித்தவ்யயாயாஸ ஸாத்யமான ப்ராயச்சித்தத்துக்கு, நிமித்த நிஃசயம்வேணும். லகு ப்ராயச்சித்தத்துக்கு சம்சய நிச்சய சாதாரணமான நிமித்தஜ்ஞாநமே போரும்.

மேலும், "ஐந்த்ராக்ந மேகாதச கபாலம் நிர்வபேத் ஜநதா மேஷ்யந:' என்றிருப்பதால் பின்னுண்டாகப்போகும் நிமித்தத்தை உத்தேசித்து, தத் ஸாதநமான தொன்றை முன்னாகவே அநுஷ்டிக்கலாம். ப்ராயச்சித்தம் ஏற்படாத வரையில் "கௌடில்யே ஸதி சிக்ஷயாப் நகயந் என்கிறபடியும், "கம்ஜாபவந்தி காணபவந்தி" என்கிறபடியும் "லகுகண்ட: ப்ரபந்நஸ்ய ராஜ புத்ரா பராதவத்" என்கிறபடியும் லகுவான சிக்ஷையைப் பண்ணி ஸர்வேசுவரன் கைக் கொண்டருளும். "நகலு பாகவதா யமவிஷம் கச் சந்தி" என்றிருப்பதால், யம யாதநாதிகள் ஏற்படாது. ப்ரபந்நனுக்கு விச்வாஸ மாந்த்யமிருந்தாலும், பூர்ண விசுவாஸத்தை, உண்டாக்கி ஸர்வேசுவரன் அங்கீகரித்தருளும்.

மேலும் ஆசார்ய நிஷ்டையுடையவனுக்கு ஆசார்யனுடைய ஸம்பந்தமே உத்தாரகமாகையால், அந்த ஆசார்யனை நினைத்து ஸர்வேசுவரன் க்ருபை பண்ணியருளுமென்பதில் ஸந்தேகமில்லை. அதாவது. வரதராஜ ஸ்தவத்தில் 'ராமாநுஜாங்க்ரி சரணோஸ்மி' என்கிறச்சுலோகத்தில் இந்த விஷயத்தை ஆழ்வான் அருளிச் செய்தார். இதன் அர்த்தம்- அடியேன் உடையவருடைய திருவடிகளை சரணமாக அத்யவஸித்தவன்; அந்த உடையவரும் ப்ரபந்ந குலத்துக்கு ப்ரகாசகராயிருந்தவர்; அவர் ஆளவந்தார் திருவடிகளில் ஆசிரயித்தவர்; ஆளவந்தாரும் நாதமுனிகளுடைய ஜந்ம வித்யா ஸம்பந்தமுள்ளவர்; நாதமுனிகள் ஆழ்வாருடைய வித்யா வம்சியர்; அந்த ஆழ்வாரும் ஸத்வாரகமாக அதாவது ஸேனை முதலியார் மூலமாகப் பெரியபிராட்டியாருக்கு தாஸர்; ஆக இப்படி தேவரீருடைய அந்தப்புர பரிகாரமாகையால் தேவரீராலே கடாக்ஷிக்கத் தகுந்தவன் என்பதாம்.

ஆக, நம்முடைய ஸம்ப்ரதாயஸ்தர்களெல்லாரும், ஸ்ரீபாஷ்யகாராபிமாநாந்தர்ப்பூதராகையால், பலஸித்தியில் கண்ணழிவில்லை. மணவாளமாமுநிகளும் காலத்ரேயபி கரண த்ரய நிர்மிதாதி பாபக்ரியஸ்ய சரணம் பகவத் க்ஷமைவஸாசத்வயைவ கமலாரமணேர்த்தி

தாயத் க்ஷேமஸ்ஸ ஏவஹி யதீந்த்ர பவத் ச்ரு தாநம்'' என்றருளிச்செய்தார்.

அப்படியே ஆர்த்தி பரபந்தத்திலும், ''இந்த அரங்கத்தி னினிதிரும் மென்றரங்கர், எந்தை யெதிராசர்க் கீந்தவரம்-சிந்தை செய் யில், நம்மதன்றோ நெஞ்சமே நற்றாதை சொம் புதல்வர், தம்மதன்றோ தாயமுறை தான்'' என்றும் அருளிச்செய்தார். இவற்றின் அர்த் தம்-காலத்ரயத்திலும் கரணத்ரயத்தாலும் செய்யப்பட்ட அதியான பாப கார்யத்தைப் பண்ணினவனுக்கு, ரக்ஷகம் பகவானுடைய க்ஷமையே; அந்த க்ஷமையை பகவானிடத்தில் தேவரீர் ஆசிருதர்களுக்காக ப்ரார்த்திருப்ப தால், அந்த ப்ரார்த்தனையே தேவரீரை ஆசிரயித்தவர்களுக்கு ரக்ஷை; அந்த ப்ரார்த் தனையும், ''மாந் தாரய மதீயாந் ஸர்வாந சேஷத:'' க்ஷமஸ்வ'' என்றருளிச் செய்தவை குடும்பியாயிருப்பாறொருவன் எனக்கு நெல் வேணுமென்றால், எனக்கு என்றது ஸகுடும்ப மான தன்னைச் சொல்லுமாபோலே இங்கும் ளும் தாரய'' என்றதும் ''ஆசிரிதர்களோடே'' சேரத்தம்மைச் சொன்னபடி. அதைப்பற் றியே ''க்ஷேமஸ்ஸ ஏவஹி யதீந்த்ர பவத் ச்ரு தாநாம்'' என்றருளிச்செய்தது.

அப்படியே ஆர்த்தி ப்ரபந்தத்திலும் பெரியபெருமாள் பாஷ்யகாரருக்குக் கொடுத் தவரம் ஆராய்ந்துபார்த்தால், பிதாவினு டைய ஸ்வம் புத்ரர்களுக்கு எப்படி தாயப்ராப் தமோ, அப்படியே புத்ரஸ் தாநீயர்களான நம்மதன்றோ என்று அருளிச்செய்தார். இத் தால் கீழ் நிரூபித்தபடியே ''ச்ருத்வா வரம்'' என்று தேசிகன் அருளிச்செய்தபடி பாஷ்ய காரருக்குப் பெரிய பெருமாள் கொடுத்த வரம் கீழ் நிரூபிக்கப்பட்ட வரமே. இப்படியே தேசிகனும் ரஹஸ்ய த்ரய ஸாரத்தில், குருபரம் கராதிகாரத்தில், ''ப்ரஜ்ஞா தாயம் திசது தயாதநா:'' என்று தாய சப்தத்தாலே வ்யவ ஹரித்தார். இதற்கு வ்யாக்கியை யான ஸார ப்ரகாசிகையில் ''யஸ்மாத் தர்மாநா சிநோதி ஸஆசார்யய: தஸ்மை நத்ருஹ்யேத் கதாசந ஸஹிவித்யாத:தம்ஜனயதி தச்ச்ரேஷ்டம்ஜந்ம இத்யுக்தே: குரு பரம்பரையா அபிஜநக பரம் பராத்வேந பித்ர பிதாமஹத நேதாய சப்தவ் யவஹாரவத்குருபரம்பராப்ராப்தாயாம் தாய சப்த வ்யவஹார:'' என்று நிருபிக்கப்பட்டது. இதன் அர்த்தம். ஆசார்யன் வித்யையால் இவனைப் பிறப்பிக்கிறான், வித்யா ஜந்மமே உத்க்ருஷ்டம்; வித்யாப்ரதனான ஆசார்யனும் ஜநகனாகையால், அந்த பரம்பரையும் ஜநக பரம்பரையாகையால், அந்த பரம்பரா க்ரமத் தால் வந்த தநமும் தாயமென்றே வ்யவஹரிக் கலாம் என்பதாம்.

அப்படியே, ''ப்ராப்தி தாயதந க்ரமா திஹ'' என்று தேசிகன் அருளிச்செய்தார். அப்படியே தாய முறைதான் என்று அருளிச் செய்தபடியால், பாஷ்யகார பரம்பரையும் ஜநக பரம்பரையாகையால், அவருக்குக் கிடைத்ததுவும் தத்ஸம்பந்திகளான நம்மது தான். 'உடையவர்' என்று உபயவிபூதி நிர்வா ஹகத்வத்தைப் பெரியபெருமாள் கொடுத்த படியால், ஸர்வேசுவரனைப் போல, இவரும் உத்தாரகாசார்யன். அப்படியே ஆழ்வாரும் ''பொன்னுலகாளீரோ'' என்கிற பாசுரப்படி உபயவிபூதி நிர்வாஹகர். அப்படியே பெரிய பிராட்டியும். ஆகையால் இப்படி உத்தாரகா சார்யர்களுடைய சரமபர்வ பூதரான பாஷ்யகாரரே, உத்தாரகத்வ ஸீமாபூமி. ஆகையால், இவருடைய ஸம்பந்தமே உத்தா ரகம்.

அவராலே நியமிக்கப்பட்ட சதுஸ் ஸப் ததி பீடஸ்தர்களான ஆசார்யர்கள் தத்கடித குருபரம்பரா கடகராய்க்கொண்டு, தத்ஸம்பந் தத்தை பஞ்ச ஸம்ஸ்காராதி முகமாக உண் டாக்குகிற படியில், உபகாரர்களாகையால் இவர்களும் உத்தேசியர்கள்-

இப்படி உடையவர் ஸம்பந்தம் ஏற்பட்ட போதிலும், அந்த ஸம்பந்தம் நழுவாமலிருக் கும்படி ததநபிமதங்களான தேவதாந்தர ஸம் பந்தம், மந்த்ராந்தர ஸம்பந்தம், தத்ஸம்பந்தி ஸம்பந்தம், பகவத பசாரம், பாகவதாபசா ரங்கள், இவைகளுடைய நிவிர்த்தி, சமதமங் கள் இவைகள் ஆவசியங்கள். இவைகளில்லாம லிருந்தால் ஸம்பந்தம் நழுவும்.

இந்த விஷயம், ''தீர்ப்பாரையாமினி'' கடைசிப் பாசுர வ்யாக்கியானத்தில் வ்யக்தம். ஆதலால் ஸ்வைரஸஞ்சார ப்ரஸக்தியில்லை. மோக்ஷ ஸாதநமான வ்யாபாரங்கள்வேண்டா. அதிகாரரூபமாயும், பகவத் பாகவத முகோல் லஸ ஜநகமாயுள்ளது அவர் ஜநீயம்.

இப்படி பக்திநிருபணமும், ப்ரபத்தி நிருபணமும், அதில் அவாந்தரபேத நிருபண

மும், ஆசார்யநிஷ்டையும், பாஷ்யகார அபிமதாந்தர்பூதனுயிருக்கை யென்பதும், நாமஸங்கீர்த்தனுதிகள் தனித்து உபாயங்களாகலாமென்பதும் நிருபிக்கப்பட்டது. இப்படி தத்வ ஹித புருஷார்த்தங்களில் தத்வநிருபணமும் ஹிதநிருபணமும் செய்யப்பட்டது. இனி புருஷார்த்தம் நிருபிக்கப்படும்.

### புருஷார்த்தம்

இனி, புருஷார்த்தம் நிருபிக்கப்படுகிறது: புருஷார்த்தமாவது-புருஷனுலே அர்த்திக்கப்படுமவை: அதாவது இதர இச்சா அநாதீன இச்சா விஷயமாயிருக்குமென்க. இதனுல், புருஷார்த்த ஸாதநம். இச்சாவிஷய மாயிருந்த போதிலும், இதரேச்சா அநதீநமான இச்சைக்கு விஷயமாகாது. இப்படிப்பட்ட புருஷார்த்தம் ஐசுவர்யமென்றும் கைவல்யம், என்றும் பகவந் லாபம் என்றும் மூன்று வகைப்பட்டிருக்கும். அவரவர் ஸுக்ருத விசேஷமடியாக, ருசிபேதத்தால், அந்தந்த புருஷார்த்தத்தில் இச்சையையுடையவர்கள் பலர். அந்த இச்சையாலே அவற்றின் ஸாதனங்களை அநுஷ்டிக்குமவர்களுக்கு பலப்ரதன் ஸர்வேசுவரன் ஒருவனே.

அதில் ஐசுவர்யமாவது: ஐஹிகமென்றும் ஆமுஷ்மிகமென்றும் இரண்டு வகையாயிருக்கும். ஐஹிகமாவது:-புத்ரபசுவந்நாதிகளும், அங்கநாபோக முதலியனவுமாம். ஆமுஷ்மிகமாவது:-ஸ்வர்க்காத்யனுபவம் தொடக்கமான அண்டாதிபத்ய பர்யந்தமான ஐசுவரியம். ஐஹிகமாயுள்ள ஐசுவரியத்துக்கு ஸாதநங்கள். "சித்ரயாபசுகாம" இத்யாதி சுருதிஸித்தமான, கர்மவிசேஷங்கள். அப்படியே ஸ்வர்க்காநுபவத்துக்கும், ஜ்யோதிஷ்டோம முதலான யாகங்கள் ஸாதநங்களாம்.

இவைகளால் ஆராத்யர்கள், அக்நீந்த்ராதி தேவர்கள் என்று சுருதியிற் சொல்லப்பட்டிருந்தபோதிலும், அவர்கள் ஸர்வேசுவரனுக்கு சரீரபூதர்களாகையாலே, சரீர வாசகமான சப்தங்கள் அபர்யவஸாந வ்ருத்தியாலே அவர்களை சரீரமாகவுடைய ஸர்வேசுவரனுக்கே வாசகங்களாகும். ஆகையால் அந்தர்யாமியாயிருக்கிற, ஸர்வேசுவரனே பல ப்ரதானம் பண்ணத்தட்டில்லை. இந்த பலசாதநமான கர்மாக்களுக்கு அந்தர்யாமியான ஸர்வேசுவரனே ஆராத்யனென்று அறிந்து கொள்ளாமல், அந்தந்த தேவதையே ஆராத்யரென்று நினைத்து, அநுஷ்டிக்கப்படுகிற ஸாத்நங்களுக்கும், அவர்களுக்கு அந்தர்யாமியான ஸர்வேசுவரனே வஸ்துகதியால் ஆராத்யனுகையால், அவனே பலப்ரதனுகிருன்; ஆனுல், அப்படி அநுஷ்டிக்கப்படுகிற கர்மாக்களுடைய பலம், அந்தமுடையதாயிருக்கும். தேகமே ஆத்மாவென்று நினைத்துச்செய்கிற தேஹபோஷணத்தாலுண்டாகும் சுகம் வஸ்து கதியால், தேஹாதிரிக்தமான ஆத்மாவுக்கே எப்படி ஏற்படுகிறதோ, அப்படியே அவனுக்கு சரீரரூபமான இதர தேவதைகளைக் குறித்துச் செய்யும் ஆராதனமும், ஸர்வ சரீரியான ஸர்வேசுவரனையடையத் தட்டில்லை. இந்த விஷயம் கீதோப நிஷத்துக்களில் ஸித்தம்.

இந்த ஐசுவரியத்துக்கு மேலெல்லையான அண்டாதிபத்தியத்தை யபேக்ஷிக்குமவன் ஸர்வேசுவரனையே நேரில் உபாஸித்துப் பெற வேணும் அப்படி ஸர்வேசுவரனை உபாஸிப்பதும் இந்திரிய ஜயம் முதலான பரிகரங்களை அபேக்ஷித்திருக்கும்: அந்திம ஸ்ம்ருதியும் வேணும். அப்படி அந்திமஸ்ம்ருதியேற்படாத பக்ஷத்தில் பல ஸித்தியில்லை.

இப்படியிருந்துள்ள ஐசுவரியம் ப்ருஹ்ம கல்பமுடி வாயிருக்கும். இந்த ஐசுவர்யத்தை அபேக்ஷிக்கிறவனும் அபூர்வைசுவரிய காமனென்றும் ப்ருஷ்டைசுவர்யகாமனென்றும் இரண்டு வகையாயிருப்பன். அதில், அபூர்வ ஐசுவர்யகாமன் தனக்கு முன்பு கிடைக்காதிருக்கிற ஐசுவர்யத்தை விரும்புமவன்; ப்ருஷ்ட ஐசுவர்யகாமன் தனக்குக் கிடைத்திருக்கிற ஐசுவர்யத்துக்குக் கேடுநேர்ந்தால், முன்பிருந்தபடியே செய்து வைக்கவேணும் என்று பிரார்த்தித்து உபாசனை பண்ணுமவன். இவ்வாறு ஐசுவர்ய ரூப புருஷார்த்தம் நிருபிக்கப்பட்டது.

### கைவல்யம்

இனி, கைவல்யம் நிருபிக்கப்படுகிறது. கைவல்யமாவது:-ப்ரக்ருதி ஸம்பந்தம் நீங்கின ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனுன ஆத்மாவினுடைய ஸ்வாநுபவ மாத்ரமாம். இந்த ஆத்மாநுபவம் ஐசுவரியாநுபவத்துக்கு மேற்பட்டதாயும், பகவதநுபவத்துக்குக் கீழ்ப்பட்டதாயுமிருக்கும். இந்த ஆத்மாநுபவமும் ப்ரக்ருதியை நீங்கின, ஆத்மாவினுடைய, அநுபவமாகையாலே, ப்ரக்ருதி மண்டலத்துக்கு மேலான நித்ய விபூதியினுடைய ஏகதேசத்தில் ஏற்பட்டிருக்கும். ஆதலால் இது மோக்ஷத்தில் அவாந்

தரபேதமாகச் சொல்லப்படும். இது நித்யமாயிருக்கும். இதற்கு ப்ரமாணம் சுருதி, ஸ்மிருதிதிஹாஸ புராணங்களும், பாஞ்சராத்ரமும், ஆழ்வார்களுடைய திவ்யஸூக்திகளும், பூர்வாசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளும் ஆம். அவைகள் இங்கு அடைவே விவரிக்கப்படுகின்றன:

சுருதியில் சாந்தோக்யத்தில் பஞ்சாக்நி வித்யா ப்ரகரணத்தில், ப்ரக்ருதி ஸம்ஸ்ருஷ்டனை சேதனனுடைய கர்மாநுகுணமாக ஏற்படும் கதி விசேஷங்களை நிரூபித்து, அதனால் ஏற்படும் ஜரா மரண ப்ரயுக்தமான து:கவிசேஷம் நீங்குவதற்காக, ப்ரக்ருதி வியுக்தனாய் ப்ருஹ்மாத்மகனான ஆத்மாவை உபாஸித்து அந்த உபாஸந பலமாய் வருகிற ஆத்மாநுபவத்தையுடையவனும், ப்ருஹ்ம ஸ்வரூபத்தை உள்ளபடியறிந்து உபாஸித்து அதனுடைய பலமாய் வருகிற ப்ருஹ்மாநுபவத்தையுடையவனும் என உபாஸகரை இரண்டு வகையாகப் பிரித்து, இவர்களுக்கு அர்ச்சிராதிகதியாலே பரமபத ப்ராப்தியும் சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படியே ப்ருஹதாரண்யகத்திலும் கீதையிலும் "ஆர்த்தோ, ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ, ஜ்ஞாநீசபரதர்ஷப" என்கிற சுலோகத்தில் ஆர்த்தீ என்று அபூர்வ ஐசுவர்யகாமனையும், அர்த்தார்த்தியென்று ப்ருஷ்ட ஐசுவரியகாமனையும் சொல்லி, ஜிஜ்ஞாஸு என்று பஞ்சாக்நிவித்யா நிஷ்டனை கேவலனைச்சொல்லி, ஜ்ஞாநீ என்று பகவத் ப்ராப்தி காமனையும் சொல்லி, அதன்மேல், "ஜராமரண மோக்ஷாய மாமா ச்ரித்ய யதந்தியே" என்று தொடங்கி, இந்தக் கேவலனுக்கு ப்ராப்யமான ப்ரக்ருதி வியுக்த ஆத்மஸ்வரூபத்தையும், த்யாஜ்யமான ப்ரக்ருதி ஸம்பந்தத்தையும், அந்திம காலத்தில், பகவத் ஸ்மரணம் ஆவசியகமென்பதையும், பிந்தி மூர்த்தந்ய நாடியாலே நிஷ்க்ரமணத்தையும், அர்ச்சிராதி கதியாலே கமனத்தையும், அதற்குமேல் ப்ரகிருதிவியுக்த ஆத்மஸ்வரூபாநுபவத்தையும் சொல்லி, ஐசுவர்யார்த்திகளுக்கு தூமாதிமார்க்கத்தாலே கமநமும் புநராவ்ருத்தியும் ஐசுவரியத்தின் அநித்யத்வமும் சொல்லியிருக்கிறது.

இப்படி கைவல்யார்த்தியை வேறதிகாரியாகச் சொல்லி, அவனுக்கு ஏற்படுகிற பலத்தையும், அது நித்யமென்பதையும் புநராவ்ருத்தியில்லை என்பதையும் ஸ்பஷ்டமாக நிரூபித்திருக்கிறது.

இப்படியே கீதா பாஷ்யத்திலும் பகவத் ப்ராப்திகாமனுடைய பலத்தையும், இவனுடைய பலத்தைக்காட்டிலும் கைவல்யார்த்தியினுடையபலம் அத்யந்த விலக்ஷணமென்பதையும், இருவர்க்கும் புநராவ்ருத்தியில்லையென்பதையும் நிரூபித்திருக்கிறது. இப்படியே பாத்ம புராணத்திலும் உத்தரகண்டத்தில் 223-வது அத்தியாயம் முதல்வஸிஷ்ட திலீப ஸம்வாதத்தில்,

ஈசுவரனுடைய விபூதித்வயத்தையும் சொல்லி, லீலாவிபூதியை நிரூபித்தவநந்தரம் நித்யவிபூதி நிருபண ப்ரகரணத்தில். ப்ரகிருதி மண்டலத்துக்கும் பரமபதத்துக்குமிடையே விரஜா நதியுள்ளதென்றும், அந்த விரஜாநதிக்கு அப்பால் நித்யவிபூதியுள்ள தென்றும் அந்த நித்யவிபூதியில் அநேக லோகங்கள் உள்ளனவென்றும் நிரூபித்துத் ததநந்தரம் கேவலருடைய ஸ்தானத்தையும், ஜ்ஞாநிகளுடையும் ஸ்தானத்தையும் நிரூபித்திருக்கிறது.

இப்படி நிருபித்திருப்பதால் நித்ய விபூதியிலேயே பகவதநுபவபரர்க்கு ஏற்பட்டிருக்கும் ஸ்தானத்தில் வேறும் கைவல்யார்த்திகளின் ஸ்தானமு முண்டென்பது விளங்குகிறது. அப்படியே ஸ்ரீவிஷ்ணு புராணத்தில், "யோகிநாம் அம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்ம ஸந்தோஷகாரிணாம்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்குக் கீழும் மேலும் அந்தந்த அதிகாரிகளுக்குத் தங்கள் தங்களுடைய போகஸ்தான வர்ணன ப்ரகரணத்தில் "ப்ராஜாபத்யம் ப்ராஹ்மணாநாம் ஸ்மிருதம் ஸ்தாநாம் க்ரியாவதாம்" என்று தொடங்கி, பத்யம் க்ருஹஸ்தாநாம் ப்ரஹ்மம் ஸந்யாஸிநாம் ஸ்மிருதம்" என்று ஐசுவர்யார்த்திகளில், அடங்கியவர்களாயிருக்கிற அந்தந்த அதிகாரிக்கு ப்ருஹ்மாண்டமத்தியத்தில், நசுவரங்களாய் ப்ருஹ்ம லோக பர்யந்தமான லோகங்களை ப்ராப்யமாகச்சொல்லி இதற்குமேல் "யோகிநாம் அம்ருதம்ஸ்தாநம் ஸ்வாத்மஸந்தோஷகாரிணாம்" என்று ப்ரக்ருதி மண்டலத்துக்கு மேற்பட்டதாகவே கைவல்யார்த்திகளின் ஸ்தானம் சொல்லப்பட்டிருக்கிறது.

இதையனுஸரித்து ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில், "முக்தாநாம் பரமாகதி:" என்கிற நாம வ்யாக்கியானவஸரத்தில், பரமேதி விசேஷணேந முக்தாநாமேவ கேஷாஞ்சித் அர்வாசிநாகதி: கம்யதே, கீயேதேச நிர்முக்த ஜரமரணத்மக கைவல்ய லக்ஷணை "ஜரா

மரண மோக்ஷாய மாமாச்ருத்ய யதந்தியே'' இதி தேஷாம் ஸ்தாநம்ச ஸம்ஸார பரமபத யோர்மத்யே'' என்று சொல்லியிருக்கிறது. ''ஸம்ஸார பரமபதயோர் மத்யே'' என்கிற இடத்தில் பரமபத சப்தமானது ஜ்ஞானிகளுக்கு அஜபால்யமான தேசவிசேஷத்தைச் சொல்லுகிறது. ''விரஜா பரமவ்யோம்நோ அந்தரம் கேவலம் ஸ்ம்ருதம்'' என்கிற வசனத்தில் பரமவ்யோம சப்தமும் ஜ்ஞானிகளுக்கு அநுபாவ்யமான தேசவிசேஷ பரமாயுள்ளது. அப்படிக் கொள்ளாமல் பரமவ்யோம சப்தம் நித்யவிபூதி ஸாமாந்ய பரமாகவே கொள்ளும் பக்ஷத்தில், மேல் ஜ்ஞானிகளுக்கு ப்ராப்யமான தேச விசேஷத்தை ப்ரதிபாதிக்கிற வாக்கியங்களோடு விரோதிக்கும்.

இப்படியே ஸ்ரீவிஷ்ணு புராணத்திலும் ப்ரதமாம்சத்தில் இருபத்திரண்டாவது, அத்யாயத்தில், ''ஸர்க்க ஸ்திந்யந்த காலேஷு'' என்கிற சுலோகத்தில், ''பரமம், பதம், தஸ்ய அருணம், மஹத்'' என்று தொடங்கி, 'தத்ப்ரஹ்ம பரமம்யோகீ' இத்யாதிசுலோகங்களுடைய முடிவில் 'ஆத்மயோகி, என்கிற கேவலனுக்கும், பகவத் யோகிக்குக்கு ஸ்தான விசேஷத்தைப்ரதிபாதிக்கிற விடத்தில், பரமம், அருணம், மஹத், என்று 'பரம' சப்தத்தாலே, சதுர்முக ப்ரஹ்ம லோகத்துக்கு மேற்பட்டதென்றும், 'மஹத்' என்கிற சப்தத்தாலே, ப்ரக்ருதிக்கு மேற்பட்டதென்றும், 'அருணம்' என்பதனுல் குணத்ரயரஹிதமென்றும் சொல்லி, அதற்கு மேலுள்ள சுலோகத்தில், ''தத்ராந்ய ஜ்ஞாநரோதேந யோகிநோ யாந்தியே லயம், ஸம்ஸார கர்ஷணோத்பாதே யாந்தி நிர்பீஜதாம்த்விஜ'' என்கிற சுலோகத்தில் 'தத்ர' என்று பூர்வோக்தமான பரிசுத்தாத்ம ஸ்வரூபத்தில் லயத்தை அடைந்திருக்கிற கேவலர்களான யோகிகளுக்குத் திரும்பியும் ஸம்சாரத்திற்குப் பீஜமான ப்ரகிருதி ஸம்பந்தத்தினுடைய நிவ்ருத்தியைஉபபாதித்துபுநராவ்ருத்தியில்லாமையை நிருபித்திருக்கிறது.

இதன் வியாக்யாதாவான எங்களாழ்வான் இந்த சுலோகங்களுக்கு வியாக்யானம் பண்ணுகிற இடத்தில், ''கேவலனுக்கு ப்ராப்யமான பகவத் ஸ்வரூபத்தையும் ப்ரதிபாதிக்கிறதென்று அருளிச் செய்திருக்கிருர். அந்த வ்யாக்யானத்தில், பரமம், பதம், தஸ்ய அருணம் மஹத் என்கிற இடத்தில், ப்ரமம்-விரிஞ்சாதிபதாத், அருணம் குணமய ப்ரகருதிவியுக்தம், மஹத்-அவ்யக்தாத், பத்யதஇதிபதம், முக்தஸ்வரூபம் ததபிபரமாத்மாந: ஸ்வரூபமித்யந்வய'' என்று ஸ்பஷ்டமாக நிருபித்திருக்கிருர்.

இப்படியே ப்ரஹத் ப்ருஹம ஸம்ஹிதையில், 'ஸம்ப்ராப்யாசார்ய சரணம் உபாயமவகத்யச, மதாஜ்ஞாகாரிணோ பூத்வா ஹ்யாஜீவம் ப்ராகிருதாம்தநும் ஹித்வா முக்தாயே பவந்தி த்விவிதாஸ்தேப்ரகீர்த்திதா:, கேவலாஸ் ஸேவகாச்சேதிகேவலாஸ் தநுவர்ஜிதா:, ஏவம் முக்தா மஹாதேவீ மமலோகேவிசந்திஹி, மாமேவ சரணம் யாதா: ஸர்வபாவேண, சிந்துஜே, அதிதீதா துஸ்தராம் மாயாம் கேவலாஸ் ஸேவகாஹிவா, பஹவோமத்பதம் ப்ராப்தா: ஸேவகா: ஸேவயாமம, கமநாகமநை: முக்தா: கேவலாஸ்து பவந்திஹி'' என்று சொல்லியிருக்கிறது.

இதன் அர்த்தம்—''ஆசார்யனை ஆசிரயித்து, உபாயத்தை அறிந்து என்னுடைய ஆக்ஞையை நடத்துகிறவர்களாய், ப்ராகிருத சரீரத்தை விட்டு முக்தராவார்கள். அந்த முக்தர்களும், கேவலர்களென்றும் ஸேவகர்களென்றும் இரண்டு வகையாயிருப்பார்கள், அவர்களில் ஸேவகர்கள் என்னுடைய ஸேவையாலே என்னுடைய ஸ்தானத்தை அடைவார்கள், கேவலர்கள் அசரீரிகளாய் கமநாகமனங்களில்லாமலிருப்பர்கள்'' என்பதாம். இதனுல், கேவலர்களுக்குப் புநராவ்ருத்தி யில்லையென்றும், ப்ரகிருதி மண்டலத்துக்கு, பஹிர்ப்பூதமான நித்யவிபூதியிலேகதேசம் அவர்களுடைய ஸ்தானமென்றும் விளங்குகிறது.

இப்படியே திருவாய்மொழியின் முதற்பத்தில், இரண்டாந் திருவாய்மொழியில் ஐந்தாவது பாட்டில், ''அற்றது பற்றெனில், உற்றது வீடுயிர், செற்றதுமன்னுறில், அற்றிறைபற்றே.'' என்கிற இடத்தில், ''விஷய ஸங்க நிவ்ருத்தமானுல், சேதனன் மோக்ஷத்தையடைகிருன், அதைவிட்டு மேலான பகவத் ப்ராதி ரூபபுருஷார்த்தத்தில் நிலைநிற்க வேண்டியிருந்தால், ஸ்வாமியான ஈசுவரனைப் பற்றவேணும்'' என்று சொல்லியிருக்கிறது, இத்தால் விஷயஸங்க நிவ்ருத்தியே மோக்ஷமென்றும், அதைக்காட்டில் மேலான மோக்ஷம் பகவத்ப்ராப்தி யென்றும் விளங்குகிறது. ஆனுல் மன்னுறில் என்கிறவிடத்தில்

நித்யத்வத்தைச் சொல்லுகிறபடியால், கைவல்யம் அநித்யமென்று ஏற்படாதோ வென்னில்? உபக்கிரமத்தில், உற்றது வீடுயிர் என்று கைவல்யத்தை மோக்ஷமாகச் சொல்லியிருப்பதால், மோக்ஷமென்பது நித்தியமாயிருப்பதாதலால் அதற்கு விருத்தமான் அநித்யத்துவம் கொள்ளக் கூடாது. ஆதலால் 'மன்' என்னும் நாநார்த்தவாசகம், மிகுதி என்னும் அதிசயார்த்தகமாயு மிருப்பதுபற்றி, மன்னுறில் என்கிறவிடத்தில், இதனின் மிக்கதான புருஷார்த்தத்தில் நிலை நிற்க வேண்டியிருந்தால், என்று அர்த்தம் கொள்ளவேணும்.

மேலும், திருவாய்மொழியில் அநேக ஸ்தலங்களில் கைவல்யம் நித்தியமென்றே ஏற்படுகிறபடியால் அதற்கு விருத்தமாக அர்த்தம் சொல்வது அநுபபந்நம். ஒரே கிரந்தத்தில் பூர்வாபர கிரந்தங்களுக்கு விரோதமில்லாமல் நிர்ணயிக்கப்படுமதான அர்த்தமே ஸங்கதமாகும். அப்படியன்றியிலே நாநார்த்த வாசகமான 'மன்' என்னும் சொல்லுக்கு வேறு இடங்களிற் சொல்லும் நித்யார்த்தத்தை இங்கும் கொண்டு அர்த்த நிர்ணயம் பண்ணுவது பூர்வாபரவிருத்தமாகையாலே அஸங்கதமாயிருப்பதால் சிரேஷ்டார்த்தமே இங்கு கொள்ளத்தக்கது.

இன்னும், முதற்பத்து ஏழாந்திருவாய்மொழி முதற்பாட்டில், "துறவிச் சுடர்விளக்கம் தலைப்பெய்வார்" என்கிறவிடத்தில், "துறவி-ப்ரகிருதிவியுக்தமான, சுடர்விளக்கம்-ஜ்ஞாநஸ்வரூபமாயும், ஜ்ஞாநாஸ்ரயமாயுமுள்ள ஆத்மாவை, தலைப்பெய்வார்-அடைய வேண்டியிருக்கிறவர்கள்" என்று பிரகிருதி வியுக்தாத்ம ஸ்வரூபமே கேவலர்களுக்குக் குறிக்கப்பட்டிருக்கிறது.

நாலாம்பத்தில், முதல் திருவாய்மொழி 'குறுகமிக' என்கிற பாட்டிற்கு வியாக்கியானமான ஆறுயிரப்படியில், "அஸ்திரத்வாதி தோஷா ஸம்பின்னமான கைவல்யத்தை ப்ராப்யமாகப் பற்றினாலோ வென்னில், ப்ராகிருத விஷய வைராக்ய பூர்வமாக ஜ்ஞான யோக நிஷ்டனானவனுக்கும் எம்பெருமானை, ஆசிரயித்தா லல்லது ஆத்மாவலோகந விரோதி கர்மம் போகாது; பகவத் ஸமாசிரயணத்தாலே ஆத்மாவலோகனம் பிறப்பது. பிறந்தாலும் அந்திமதசையில பகவதநுஸந்தாநம் பண்ணி ப்ரதிபந்தகத்தைப் போக்காதொழியில் பின்னை, ஆத்ம யாதாத்ம்ய ஆவிர்ப்பாவலக்ஷண மோக்ஷம் ஸித்தியாது. முக்ய மோக்ஷமாகிறதும், அந்த பகவத் கைங்கர்யமே" என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இத்தாலும் கைவல்யம் ஸ்திரமென்றும், அந்த கைவல்யமும் ஆத்ம யாதாத்மிய ஆவிர்ப்பாவரூபமான மோக்ஷமென்றும் ஏற்படுகிறது. ஆதலால் பகவத் கைங்கர்யம் முக்ய மோக்ஷமென்றும் கைவல்யம் அமுக்ய மோக்ஷமென்றும் ஏற்படுகிறது.

'இதுகலறப்பென்னும் ஞானிக்கு' என்கிற விடத்தில் 'ஸங்கோச ரூபமான கைவல்யத்தை மோக்ஷமென்று அபிமானிக்கிற ஜ்ஞானிக்கு' என்று அர்த்தம் ஏற்படுகிறபடியால், வஸ்துத: கைவல்யம் மோக்ஷமன்று என்று சில ஆநிகர்கள் சொல்லுவது ஸ்ரீபாஷ்யகாரருக்கு ஞான புத்ரரான திருக்குருகைப் பிரான் பிள்ளான் அருளிச்செய்த ஸூக்திக்கு விருத்தமாகையால் அநாதரணியம்.

கைவல்யம் ஸ்திரமென்றுசொல்வது, "வாயு சாந்தரிக்ஷஞ்ச ஏததம்ருதம்" என்பது போல சிரகால ஸ்தாயித்வத்தைச் சொல்லுகிறது. என்னுமதுவும் அநுபபந்நம் கீழ் ஐசுவரியத்தை பிரஸ்தாவித்து அந்த ஐசுவரியம். அஸ்திரமாகையால் அதை அபேக்ஷித்து இதை ஸ்திரமென்று சொல்லிருப்பதால் ஐசுவரியத்துக்குமேலெல்லையான அண்டாதிபத்தியம், ப்ரஹ்மகல்ப பரியந்தமிருப்பதால், அதற்கு மேலான ஸ்தைர்யம் சிரகால ஸ்தாயித்வரூபகமாகாது. மேலும் கைவல்யஸ்தாநம் ஸநகஸநந்தநாதியோகிகளுக்கு ஸ்தானமான ஜநோலோகம் என்று ரஹஸ்ய த்ரயஸாரம், முதலானத கிரந்தங்களிலிருப்பதால், ப்ருஹ்மலோகத்துக்குக், கீழ்ப்பட்ட தபோலோகத்துக்கும் கிழ்ப்பட்டதகையால் ஐசுவர்யத்துக்கு மேலெல்லையான அண்டாதிபத்யத்தைக் காட்டிலும், இது சிரகாலஸ் தாயியென்று சொல்லுவதும் அந்தியந்தா நுபபந்நம்.

மேலும், "வாயு:சாம்ருதஞ்ச" என்கிறவாக்கியத்தில் அம்ருத சப்தம் அந்யத்ர வாய்வந்தரிக்ஷாதிகளுக்குச் சொல்லுகிற அநித்யவத்துக்கு விருத்தமான நித்யத்வத்தை ப்ரதிபாதிப்பது கூடாமையால், சிரகால ஸ்தாயித்வபரமாகச் சொல்லவேணும். அப்படி இவ்விடத்தில் கைவல்யம் அநித்யமென்கிற ப்ரமாணமில்லாமையால் ஸ்வாரஸிகமான அர்த்தத்தை

விட்டு கௌணர்த்த கல்பநம் பண்ணுவதும் அநுபபந்நம்.

### கைவல்ய நித்யத்வம்

ஆரம்பத்தில், ஒன்பதாவது திருவாய்மொழியில், பத்தாம் பாட்டான 'குறுகா நீளா' என்பதன் வ்யாக்கியானமான, ஆரு யிரப்படியில், ''வைஷயிக ஸுகம் அல்பாஸ்திரத்வாதி தோஷ துஷ்டமாகையால், உமக் கபேக்ஷிதமன்றாகில் ப்ராசுர்ய ஸ்திரத்வாதி குணயுக்தமான கேவலாத்மாநுபவ லக்ஷண ஸுகத்தை ப்ராப்யமாகக் கொள்ளலாகாதோ என்னில், கேவலாத்மாநுபவ ஸுகம்து: காஸம் பின்னமாய், நித்யஸித்தமாய், நிரவதிக மாவது; த்வத் கைங்கர்யஸுகம் க்ஷணிகமாய் அத்யல்பமாவது; ஆகிலும் அந்த ஆத்மாநுபவ ஸுகம் ஒரு தட்டும், இந்த கைங்கர்ய ஸுகம் ஒரு தட்டுமானால், இத்தைக் கைவிட்டு அத்தைப் பற்றுகை உறுமென்றிருப்பரோ அறிவுடையார்; இப்பொருள் உபபாதநீயமோ அந்த (வைஷிக) சுகத்தினுடைய அல்பாஸ்திரத்வாதிதோஷ கீர்த்தனம் பண்ணிற்று அநபேக்ஷிதத்வ ஹேதுவாக என்று; ஸ்வரூப நிரூபணம் பண்ணின வித்தனை. வைஷயிக ஸுகம் அநபேக்ஷித மாகைக்கு (அடி) த்வத் கைங்கர்ய வ்யதிரிக்தமாகை. ஆதலால் அந்த வைஷயிக ஸுகத்தையும், கைவல்ய ஸுகத்தையுமொழிய த்வதநந்யார்ஹ சேஷத்வ ரூப ஸம்பந்தத்தை எனக்குத் தந்தருளவேணுமென்று எம்பெருமானைப் பிரார்த்தித்து முடிக்கிறார்'' என்றருளிச்செய்திருக்கிறார். பாட்டில் குறுகா நீளா என்பதினால், ஸங்கோச விகாஸங்களில்லையென்றும், 'இறுதி கூடா எனையூழி சிறுகா பெருகா' என்பதனால் நித்தியமாகையாலே ஸர்வகாலத்திலும் க்ஷயவ்ருத்திகளுமில்லையென்றும், 'அளவிலின்பம்' என்கையாலே, ஸ்வபாவத: பரிச்சேத ரஹிதமான ஆத்மானந்தமென்றும், சொல்லப்பட்டிருப்பதால், ஆத்மாநுபவரூபமான கைவல்யம் நித்யமென்றே ஏற்படுகிறது.

இப்படி இந்தப் பாசுர வ்யாக்யானமான ஆருயிரப்படியில், 'கேவலாத்மாநுபவம் துக்காஸம்பின்னமாய்நித்ய ஸித்தமாய் நிரவதிக மாவது' என்கிறதற்கு வஸ்துத: ஆத்மாநுவ ஸுகம் அஸ்திரமாயிருந்தபோதிலும், அது ஸ்திரமாக ஏற்பட்டபோதிலும் அத்யல்பமான தவத் கைங்கர்யஸுகத்திற்கு, ஸதிருசமாகுமோ என்று சில ஆதுநிகர்கள் அர்த்த வர்ண பண்ணினார்கள்.

கீழ் அவதாரிகையில், ''ப்ராசுர்யஸ்திரத்வாத்யநேக குணயுக்தமான கேவலாத்மாநுபவ லக்ஷண சுகத்தை'' என்றிருப்பதையும், திருவாய்மொழி வ்யாக்யானமான ஆருயிரப்படியில் பூர்வாபர க்ரந்தங்களில் கைவல்யத்தினுடைய நித்யத்வத்தைப் பிரதிபாதிக்கிறதையும் நிரூபியாமல், கைவல்யத்தினுடைய அநித்யத்வ ஸ்தாபநத்தில் அபிவேசத்தாலே சொன்னார்களித்தனை. ஸர்வஜ்ஞரான திருக்குருகைப்பிரான் பிள்ளானுக்கு பூர்வாபர க்ரந்தங்களுடைய விரோதத்தை அறியாமையை ஆரோபித்தார்கள்.

இது நிற்க; ஏழாம் பத்தின் ஐந்தாவது திருவாய்மொழியில் பத்தாம்பாட்டில், 'பெருந்துன்பம் வேரற நீக்கி' என்கிற விடத்தில் ஆருயிரப்படியில், ''கைவல்ய ரூப மஹானர்த்தத்திலும் புகாமே'' என்றருளிச் செய்திருக்கிறார். அதனால், கைவல்யத்தின் அவாந்தர பலம் அத்மாநுபவமென்றும், ஸாக்ஷாத் பலம் பகவதநுபவமென்றும் சொல்லுகிறவர்களுக்கு, கைவல்யம் மஹா அநர்த்தமென்று அருளிச் செய்திருப்பது விருத்தமாகும்.

எட்டாம்பத்தில், எட்டாந் திருவாய்மொழியில் ஏழாம் பாட்டில் 'அதுவே வீடு வீடாமே' என்கிற வாக்கியத்துக்கு ஆருயிரப்படியில், ''இந்த ஆத்ம ஸ்வரூபாவிர்ப்பாவமே மோக்ஷமாகிறது; மோக்ஷம் பெற்றால் பெறும் ஸுகமாவது அதுவே என்று அத்யவசித்துக் கொண்டு, வ்யதிரிக்த விஷய ஸங்கத்தையெல்லாம் விடில், ஆத்ம ஸ்வரூபாவிர்ப்பாவ லக்ஷணமாயிருந்த மோக்ஷம் கைவரும்'' என்றருளிச் செய்திருக்கிறார்.

இத்தால் கைவல்யம் ஆத்ம ஸ்வரூபாவிர்ப்பாவ மோக்ஷமென்றேற்படுவதால், கைவல்யம் நித்யமென்றும், ஸ்வரூபாவிர்ப்பாவத்துக்கு ஸ்தானமான நித்ய விபூதியே ஸ்தானமென்றும் ஏற்படுகிறது. ஒன்பதாவது பத்தில் முதல் திருவாய்மொழியின் ஒன்பதாம் பாட்டான 'ஆதுமில்லை மற்றவனில்' என்பதன் வ்யாக்யானமான ஆருயிரப்படியில் ''எல்லா, வற்றிலும் மேற்பட்ட புருஷார்த்தமன்றோ ஸாம்ஸாரிக து:க நிவ்ருத்தி ரூப கைவல்யம்; அத்தைப் புருஷார்த்தமென்று பற்றில் காது பெருக்கவென்று புக்கு, பண்டுள்ளத்தையும் கெடுத்துக் கூதையாக்கினாற்போலே, பண்டுள்ள ஸாம்ஸாரிக ஸுகத்தையும் இழக்குமித்

தனே'' என்றருளிச்செய்திருப்பதையுங் கண்டு கொள்க. இத்தால் காது பெருக்கப் புக்கு கூதையாக்கினால் ஆபரணத்தைப் பூணுகைக்கு முன்பிருந்த யோக்யதையும் போய் மேலும் அக் காது ஒன்றுக்கும் உபயோகமாகாதிருப்பது போலவே, பகவதநுபவமில்லாதிருக்கிற கைவல்யம் நித்யமாயிருப்பதால், ஸாம்ஸாரிக ஸுகாநுபவமுமில்லாமல், போய்விடுமாதலால் அத்தை விட்டு, ஈசுவரனையேபற்றவேணு மென்று அர்த்தம் ஏற்படுகிறபடியால் கைவல்யத்துக்கு அவாந்தர பலம் ஆத்மாநுபவமும் ஸாக்ஷாத் பலம் பகவதநுபவமுமா மென்று சொல்லுகிற பக்ஷத்துக்கு விருத்தமாம்.

இப்படி கைவல்யத்தினுடைய நித்யத்வம் ஆழ்வாருடைய திவ்ய ஸூக்திகளில் ஸ்பஷ்டம். ஆசார்யர்களில் ஆளவந்தார் கீதார்த்த ஸங்கிரஹத்தில், "ஐசுவர்யாக்ஷா யாதாத்ம்ய பகவச் சரணார்த்தி நாம்'' என்றருளிச்செய்திருப்பதாலும், சதுःசுலோகியில், "ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு'' என்று அருளிச்செய் திருப்பதாலும், ஐசுவர்யத்துக்கு மேலும், பகவதநுபவத்துக்குக்கீழும் அக்ஷர சப்தத்தாலே கைவல்யத்தை நிர்த்தேசித்திருப்பதால், அந்த அக்ஷர சப்தம் நக்ஷரதீத் யக்ஷரம் என்கிறவ்யுத் பத்தியால், நித்யத்வத்தைச் சொல்லுகிறது.

பாஷ்யகாரரும் கத்யத்ரயத்தில், "ஸர்வ காமாந்:ச ஸாக்ஷராந்'' என்று அக்ஷர சப்தத் தாலே கைவல்யத்தை நிர்த்தேசித்திருப்பதாலும், கீதாபாஷ்யத்தில், ஐசுவர்யார்த்திக்கு மேற்பட்ட அதிகாரியாயும், பகவச்சரணார்த்திகளுக்குக் கீழ்ப்பட்ட அதிகாரிகளாயும் கேவலரைக் குறிப்பிட்டு, அவர்கள் கைவல்யத்துக்காக அநுஷ்டிக்கிற உபாஸந ப்ரகாரத்தையும் அந்திம தசையில் அந்திமஸ்மிருதியையும், ஸுஷும்நா நாடியால் நிஷ்க்ரமணத்தையும், அர்ச்சிராதிகதியையும், ப்ரக்ருதி வியுக்தாத்ம ஸ்வரூபமே ப்ராப்யமென்பதையும், புநராவ்ருத்தியில்லையென்பதையும், ஜ்ஞானி நித்ய யுக்தன் என்பதையும் அதாவது:—ஈசுவரனையே ப்ராபகமும், ப்ராப்யமுமாகவுடையனென்பதையும், கைவல்யார்த்திக்கும் ஐசுவர்யார்த்திக்கும் தம்முடைய மனோரத ஸித்திக்காக ப்ராபகமாகவே அத்யவஸித்திருக்கை யுக்தமென்பதையும் நிரூபித்திருப்பதாலும்,

பட்டர் ஸ்ரீ குணரத்நகோசத்தில், 'ஐசுவர மக்ஷர கதிம்' என்று அக்ஷர சப்தத்தாலே கைவல்யத்தை வ்யவஹரித்திருப்பதாலும், பகவத் குண தர்ப்பணத்தில், முக்தாநாம் பரமா கதி:'' என்கிற நாமவ்யாக்கியானவுரைத்தில் "முக்தாநாமேவ கேஷாஞ்சித் அர்வாசீ நாகதி: சூரூயதே'' இத்யாதியாலே கைவல்யம் மோக்ஷமென்றும், அதற்கு ஸ்தானம் நித்ய விபூதியென்றும், சொல்லியிருப்பதாலும், ஆழ்வான் வரதராஜ ஸ்தவத்தில் "போகா இமே விதி சிவாதி பதஞ்ச கிஞ்ச ஸ்வாத்மாநுபூதிரிதி யாகில முக்திருக்தா'' என்று கைவல்யத்தை முக்தியாக வ்யபதேசித்திருப்பதாலும்,

சுருதப்ரகாசிகையில், "பாராசர்ய வசஸ் ஸுதாம்'' என்கிற சுலோகத்துள் "வ்யபகதப் ராணாத்ம ஸம்ஜீவிநீம்'' என்பதில் "ஜீவநம்—உஜ்ஜீவநம்; ஸம்ஸாரோந்மோசனம். ஸமிதி கைவல்யவ்யாவ்ருத்தி;' என்பதால், ஜீவநம்ஸம் ஸாரோந்மோசனரூபமென்று, கைவல்யத்தைச் சொல்லி, அது ஸம் என்னும் உபஸர்க்கத்தால் விலக்கப்பட்டமையால் அதற்கு பகவதநுபவ வைசிஷ்டயமாகிற ஸம்யக்த்வம் இல்லையென்று காட்டியிருப்பதாலும்,

வேதார்த்த ஸங்கிரஹ தாத்பர்ய தீபிகையில் "ஸோ'க்ஷர: பரம ஸ்வராட்'' என்கிற விடத்தில் அக்ஷரன் 'என்று முக்தனைச் சொல்லி, பரம: என்கிறவித்தால் கைவல்ய ரூப மோக்ஷ வ்யாவ்ருத்தி:' என்றிருப்பதாலும் கைவல்யம் நித்யமென்றும் மோக்ஷமென்றும் ஸ்பஷ்டமாயறியத்தக்கது.

ஆனால் ஸ்ரீபாஷ்யத்தில் அத்ரதிகரண பாஷ்யத்தில் 'த்ரையந்த நிஷ்ணாதாஸ்து' என்று தொடங்கி ஸ்வாபாவிக பரமாத்மாநுபவமே மோக்ஷமென்று நிரூபித்திருப்பதாலும், 'முக்திர்மோக்ஷா மஹாநந்த:' என்கிற கோசத்தாலும், கேவலாத்மாநுபவமாயும், அல்பாநந்த மாயுமிருப்பதால் இதை மோக்ஷமென்று வ்யஹரிப்பது எங்ஙனே என்னில், கீழ் உதாஹ்ருதங்களான அநேக ப்ரமாணங்களாலே கைவல்யம் மோக்ஷமென்றேற்படுகிறபடியால், உபய ஸாதாரணமாக அவித்யா நிவ்ருத்தியே மோக்ஷமென்று கொள்ளவேணும். அத்ரதிகரண பாஷ்யத்தில் வாதிகள் பலரும் மோக்ஷத்தை அநேக ப்ரகாரமாகச் சொல்லியிருப்பதால், அத்தை நிராகரிப்பதற்காக, பரமாத்மாநுபவமே மோக்ஷமென்று நிரூபித்தபடி; அந்த விவகாரத்தால் இதர வாதிகளுடைய மோக்ஷத்தை வ்யாவர்த்திக்கிறது. ஆகையால் அது சம்பவாபிப்ராயம்.

அதுவுமன்றி ஸாலோக்யம், ஸாரூப்யம் ஸாயுஜ்யம் என்கிற இவைகளும், மோக்ஷ சப்த வாச்யமாகையாலே, கேவல ப்ரமாத்மாநு பவமே மோக்ஷமென்பது ஸம்பவாபிப்ராயம்; அதுலக்ஷணமன்று. மோக்ஷங்களில் முக்ய மோக்ஷமென்றும், அமுக்யமோக்ஷமென்றும் வேண்டியிருப்பதாகத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் 'குறுகமிக' என்கிற பாட்டு வ்யாக் யானத்தில் அருளிச் செய்திருப்பதால், ஸ்வா பாவிக பரமாத்ம அநுபவமென்கிற இது முக்ய மோக்ஷபரம். கைவல்யாதிகளில் சொல்லுகிற மோக்ஷசப்தம் அமுக்யமோக்ஷபரம். உபய ஸாதாரண மோக்ஷ சப்தார்த்தம் அவித்யா நிவிருத்தி. ஆனால் நி:சேஷ கர்ம நிவ்வர்த்தி யேற்பட்டால், பகவதநுபவம் இல்லாமல் கேவலம் ஆத்மாநுபவமே வருமென்பது கூடுமோ வென்னில்? உபாஸநாரம்பத்தில் கைவல்யாதிகாரி ப்ரக்ருதி வியுக்தாத்ம ஸ்வ ரூபாவாப்தியையே புருஷார்த்தமென்று அத்ய வஸித்து உபாஸித்தபடியால், அந்த உபாஸ நத்தாலே ப்ரீதனான ஸர்வேசுவரன் தத்கிருதுந் யாயத்தாலே உபாஸநாநு குணமாக பலப்ர தானம் பண்ண ஸங்கல்பித்திருப்பதால், அந்த ஸங்கல்பத்தாலே இவனுக்கு பகவதநுபவம் ஏற்படவில்லை. ப்ரதிபந்தக கர்மநிவ்ருத்தி மட்டும் ஏற்படுமேயன்றி, உபாஸந ஜநித ஸங் கல்பத்துக்கு நிவ்ருத்தி யேற்படமாட்டாது.

'ப்ரஹ்மலோகாந் கமயதி' என்கிற இடத் தில் ப்ரஹ்மைவலோக: என்று கர்மதாரயஸ மாஸத்தைப்பண்ணி, ப்ரஹ்மலோக சப்தம் ப்ரஹ்மரூப ப்ராப்யபரமாக நிர்வஹித்து, 'அதி திபாசாந்' என்கிற இடத்தில், எப்படி பஹு வசனம் அவிவக்ஷிதமோ அப்படியே லோகாந் என்கிற இடத்திலும் பஹுவசனம் அவிவக்ஷி தம் என்று நிரூபித்து, அநந்தரம் ப்ரஹ்மணோ லோகாந்என்று தத்புருஷமாஸத்தைப்பண்ணி, லோக சப்தம் ஸ்தாநபரமாக நிரூபித்து லோ, கங்களே நித்யவிபூதியில் அநேகங்களாயிருப்ப தால், பஹுவசந ஸ்வாரஸ்யத்தைப்பற்றி, இப் படியொரு கல்பமிருக்கலாமென்று கார்யாதி கரணத்தில் ஜைமிநி மதோபந்யாஸ ப்ரகர ணத்தில் ஸ்ரீபாஷ்யத்தில் அருளிச்செய்திருப்ப தால், நித்யவிபூதியில் அநுபவ ஸ்தாநங்களாக பஹுலோகங்களுண்டென்றும், அந்தலோகங் களில் அநுபவ விசேஷங்களுமுண்டென்றும், அவற்றிற்கு போக்தாக்களான முக்தர்களும் பலர் என்றும் ஏற்படுகிறபடியால், ஸர்வகர்ம நிர்மோகம் ஏற்பட்டபோதிலும் முக்திபேதத் திற்குக்காரணம், அந்தந்த அதிகாரிகளுடைய உபாஸநாநுகுணமாக ஏற்படுகிற பலப்ரதாநம் ஈசுவரனுடைய ஸங்கல்பமே தவிர வேறொன் றும் காரணமாகமாட்டாதென்றறியத் தக்கது,

அப்படியே ஸாக்ஷாந் நித்யவிபூதியில் பிராட்டி முதலான மஹிஷீ வர்க்கங்கள், அநந்த கருட விஷ்வக்ஸேநாதிகள், இவர்களுக்கு ப்ரதி நியதங்களான கைங்கர்யங்களுடைய வ்யவஸ் தைக்கும் அந்தந்த அதிகாரிகளுடைய ருசிபே தத்தை யநுஸரிந்து ஏற்படுகிற பகவத் ஸங்கல் பமே காரணம். அங்ஙனமன்றிக்கே, பக்தைர்ப் பாகவதைஸ் ஸஹ' என்றும், வை. குந்தத் தமரரும் முநிவரும் வியந்தனர்'' என் றும் சொல்லுகிறபடியே அநுபவ நிஷ்டர், கைங்கர்யநிஷ்டர் என்று இரண்டதிகாரிகள் ப்ரமாண ஸித்தர்களாகையால், அவர்கள் ருசி பேதத்துக்கும் பகவத்ஸங்கல் பமே காரண மென்று சொல்லவேணும். கைங்கர்ய நிஷ்ட ருக்கு பகவத் விக்ரஹத்தினுடைய விலக்ஷண ஸௌந்தர்யாநுபவத்தால், 'காலாழும் நெஞ் சழியும்' என்கிறபடியே கரண சைதில்யமேற் படுமாகையால், அந்த ஸௌந்தர்யா நுபவம் கைங்கர்யத்துக்கு அந்தராய மென்று, பூர்வா சார்யர்கள் அருளிச்செய்த பாசுரங்களாலும் பலபேதமும் ஸுஸ்பஷ்டம்.

மேலும், திருவாய்மொழியின் நாலாம் பத்து இரண்டாந் திருவாய்மொழியின் நாலாம்பாட்டில் 'கோதில வண்புகழ்'என்பதன் வியாக்கியானத்தில், முக்தர்களில் அவரவர் களுக்கு ப்ரதிநியதகுணாநு பவமிருப்பதாயும், அவரவர்களாலநுபவிக்கப்படுகிற அந்தந்த குணங்களுக்கு அவரவர்கள் உத்கர்ஷத்தைச் சொல்லிக்கொண்டிருப்பார்கள் என்றும் ஆறு யிரப்படியில், திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச்செய்திருப்பதால், நி:சேஷ கர்ம நிவ் ருத்தி வந்த போதிலும், தத்தத்குணாநுபவரூப பலபேதம் பகவத்ஸங்கல்ப நிபந்தனமென்றே சொல்லவேணும்.

ஆதலால், ப்ரக்ருதி வியுக்தாத்ம ஸ்வரூபா வாப்திரூபமான கைவல்யம் ப்ரக்ருதிமண்டலத் தில், ஏற்படமாட்டாதாகையால், ப்ரக்ருதி பஹிர்பூதமான நித்யவிபூதியிலேகதேசமே கைவல்யஸ்தாநமென்று கொள்ளவேண்டியது ஆவ:சியகமாகையாலும், அப்படி பஹுப்ர மாணங்களு மிருப்பதாலும் கைவல்யம் நித்ய மென்றும் அதற்கு ஸ்தாநம் நித்யவிபூதியிலேக மதேசமென்றும் சொல்லுமது உபபந்நம்.

## கைவல்ய—பரபக்ஷம்

[கீழ் கைவல்யம் நித்யமென்றும், அது நித்யவிபூதியிலுள்ள தென்றும் ஸ்வபக்ஷ நிரூபணம் பண்ணப்பட்டது; இனி அது பிரகிருதி மண்டலத்திலுள்ள தென்றும், அநித்யமென்றும் சொல்லும் பரபக்ஷ வ்யவஹாரமிருக்கும்படியும், அதற்குச் சமாதானமும் சொல்லப்படும்.]

ஸ்ரீபாஷ்யத்தில் கார்யாதிகரணத்தில், 'அப்ரதீ காலம்பநாந் நயதி' என்கிற ஸூத்ரவ்யாக்யாநாவஸரத்தில்; பஞ்சாக்நி வித்யாநிஷ்டனை கேவலனுக்கு அர்ச்சிராதிகதி சொல்லியிருப்பதால், அர்ச்சிராதிகதி யுள்ளவனுக்கு ப்ரஹ்ம ப்ராப்தியும் அபுநராவ்ருத்தியும், ப்ரமாண ஸித்தங்களாகையால், தத்க்ருதந்யாயத்தாலே, ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸநம் உள்ள பஞ்சாக்நிவித்யா நிஷ்டனுக்கு அவசியம் ப்ரஹ்மப்ராப்தியுண்டென்று ஏற்படுகிறது. கீதாபாஷ்யத்தில் ப்ரக்ருதி வியுக்தாத்ம ஸ்வரூபாவாப்த பலமென்று சொல்லியிருக்கிறது. இந்த இரண்டு பலங்களும் ஏக காலத்திலுண்டாகுமென்று சொல்லவொண்ணாது. ஆதலால் பூர்வ ஆத்மாநுபவமும், பச்சாத் ப்ரஹ்மாநுபவமும் ஏற்படுமென்று கொள்ளவேணும். மதுவித்யையில் கார்யாவஸ்த காரணாவஸ்த ப்ரஹ்மோபாஸநத்தை விதித்து, அதற்குப் பலமாக பசுவாதிபத ப்ராப்தியும் பின்பு ப்ரஹ்மப்ராப்தியும் சொல்லியிருப்பதுபோல், இங்கு கொள்ளவேணும்.

இத்தை யநுஸரித்தே பாரதத்தில் சாந்தி பர்வத்தில் மோக்ஷ தர்மத்தில் 'சதுர்விதா மா ஜநா: பக்தா ஏவஹிதே ஸ்ம்ருத:' என்று தொடங்கி, 'ஸர்வேச் ச்யவநதர்மாண:ப்ரதிபுத்தஸ்து மோக்ஷபாக்' என்றிருப்பதால், கைவல்ய ரூபமான ஆத்மாநுபவம் அவாந்தரபலமாகையாலே, அநித்யமென்று கொள்ளவேணும். இந்த சுலோகம் கீதையில் 'சதுர்விதா பஜந்தே மாம்ஜநாஸ்ஸுக்ருதிநோர்ஜுந' என்கிற சுலோகார்த்தாநுவாதமாக ஏற்படுவதால், 'சதுர்விதா மம ஜநா:' என்கிறதினால் அபூர்வைசுஜர்ய காமன், ப்ருஷ்டைசுவர்ய காமன், ஆத்ம ப்ராப்தி காமன், பகவத் ப்ராப்தி காமன் என்கிற நாலு அதிகாரிகளையும் சொல்லி, மேல் 'ஸர்வேச் ச்யவந்தர்மாண:' என்கிறவித்தால் பகவத் ப்ராப்தி காம வ்யதிரிக்தர்களான மூவரும் ச்ச்யவநதர்மாக்கள்; பகவத் ப்ராப்திகாமனை ப்ரதிபுத்தன் மோக்ஷபாக் என்று சொல்லுகிறது. அதில் மூவரும் ச்ச்யவந தர்மாக்கள் என்கிற விடத்தில், ச்ச்யவநமாவது நழுவுதலாகையாலே தங்கள் தங்கள் பலங்களுடைய நழுவுதலைச் சொல்லுவதால், அவரவர்களுடைய பலம் அநித்யமென்றேற்படுகிறது. அதனால் கைவல்யம் அநித்யமென்றும்தான் கொள்ளவேணும்,

மதுவித்யா ந்யாயத்தாலே கேவலனுக்கு பகவத்ப்ராப்தி ஸாக்ஷாத் பலமாயிருப்பதால் அவாந்தர பலமான ஆத்மாநுபவ ச்யுதி நிந்தைக்கு ஹேதுவாகமாட்டாமையாலே ஐசுவர்யார்த்தியோடே இவனையும் சேர்த்துச் சொல்லுவது அஸங்கதம்.

ஆதலால், 'ச்ச்யவந தர்மாண:' என்பதற்கு பகவதநுபவச்ச்யுதி ரூபதர்மத்தையுடையவர்கள் என்று சொல்லவேண்டுகையால், அது நிந்தாஹேதுவாகையாலும், ஐசுவர்யார்த்தியோடு, ஸஹபடித்துச் சொல்லுவது ஸங்கதமாகையாலும், இதைக்கொண்டு கைவல்யம் அநித்யமென்று சொல்லவொண்ணாது எனில், கீழ் நிரூபித்தபடி ஆத்மப்ராப்தியும், ப்ரஹ்மப்ராப்தியும் அவாந்தரபலமாகவும், ஸாக்ஷாத் பலமாகவும், சொல்லவேண்டியது ஆவசியமாகையாலே, 'ச்ச்யவன தர்மாண:' என்கிற இடத்தில் ச்ச்யவநம் அவாந்தரபலமான ஆத்மாநுபவத்தினுடைய ச்ச்யவநமென்றே கொள்ளவேணும். மேல் உத்கிருஷ்டமான பகவத் ப்ராப்திபலம் ஏற்படுவதால், பூர்வபத ப்ரம்சம் நந்தாவஹமாட்டாதே என்னில், 'இந்த்ர லோகாத் பரிப்ருஷ்ட:' என்று மேல் வரப்போகிற உத்கிருஷ்ட பலத்திற்கு, பூர்வ பாவியான இந்திரலோக பரிப்ரம்சத்தை பரிப்ருஷ்ட:' என்பதனால் சொல்லியிருப்பது. போல், இங்கே ஆத்மாநுபவ பரிப்ரும்சமும் ச்ச்யவனமென்றே வ்யவஹரிக்கலாமானாலும் நிந்தாவஹமாக மாட்டாதே யென்னில், இதுவும் ஐசுவரியம்போல் அநித்யமென்று கொள்வதே விவக்ஷிதம்.

அதிவுமன்றிக்கே, ஆத்மாநுபவ காலத்தில், பகவதநுபவச்ச்யுதி ஏற்படுகிறபடியால், ஜ்ஞானியைப்போல் அவ்யவதாநேந பகவத் ப்ராப்தியில்லாமையைப்பற்ற, 'ச்ச்யவந தர்மாண:' என்கிற இடத்தில் ச்ச்யவநம் பகவதநுபவ ச்யவநம் என்றும் சொல்லலாம். ஆனால் அப்படி அநித்யமாயிருக்கும்பக்ஷத்தில் அந்த

ப்ரக்ருதி வியுக்தாமா நுபவம் ப்ரக்ருதி மண்டலத்தில், கூடாதாகையாலே தத்பஹிர்ப் பூதமான நித்யவிபூதியினுடைய ஏகதேசத்தில், சொல்லவேண்டுகையாலே, அநித்யமாகமாட்டாதே என்னில், ப்ரக்ருதி வியுக்தாத்ம ஸ்வரூபாவாப்தி என்கிற இடத்தில் ப்ரக்ருதி வியோகம் ஸ்தூல ப்ரக்ருதி வியோகமாகையால் ப்ரக்ருதி மண்டலத்திலேயே, அந்த அநுபவம் கூடும். அங்ஙனமன்றிக்கே ஆத்ம ஸ்வரூபாவாப்தி என்பது, அநுபவரூபமாகையால், இந்த ஆத்மாநுபவம் ப்ரக்ருதியை விஷயீகரியாமலும், பகவத் ஸ்வரூபத்தை விஷயீகரியாமலும், ப்ரக்ருதி மண்டலத்திலே வரக்கூடுமாகையால், ப்ரக்ருதி பஹிர்ப்பூத ஸ்தலத்தில் வரவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை.

ஆதலால் ப்ரக்ருதி வியுக்த என்கிற இடத்தில் ப்ரக்ருத்ய விஷயமென்றே அர்த்தம்கொள்ளவேணும். ஆனால் மோக்ஷம் என்று வ்யவஹாரம் எங்ஙனே என்னில், 'வீதராக பயக்ரோத: யஸ்ஸதாமுக்த ஏவஸ:' என்பது போல் கௌணமாகக் கொள்ளவேணும். இப்படிச் சொல்லும் பக்ஷத்தில், கேவலனுக்கு ஸுஷும்நா நாடியாலே நிஷ்க்ரமணமும் அர்ச்சிராதி கதியும் சொல்லியிருப்பதால், இதுகளையுடையவனுக்கு 'ஸஏகாந் ப்ஹ்மகமயதி' என்கிற சுருதியின்படி அவ்யவதாநேந ப்ரஹ்மப்ராப்தி ஏற்படுமென்று கீதாபாஷ்யத்திலும், வேதாந்த தீபத்திலும் கார்யாதிகரண சுருதப்ரகாசிகையிலும் சொல்லியிருப்பதால், அவாந்தர பலமான ஆத்மாநுபவம் கூடும்படி எங்ஙனேயென்னில், பாரதத்தில் மோக்ஷ தர்மத்தில் ஜாபகோ பாக்யாநத்தில், ஜாபகனென்கிற அதிகாரி ப்ரஹ்ம ப்ராப்தியாகிய பலத்தை உத்தேசித்து ஸம்ஹிதா ஜபமுதலான கார்யங்களைச் செய்துகொண்டு வந்தபடியால், அவனுக்கு மூர்த்தந்ய நாடியாலே நிஷ்க்ரமணமும் அர்ச்சிராதிகதியும்சொல்லி, அவாந்தர பலமாக சதுர்முக ப்ரஹ்மலோகத்தில் ப்ரஹ்மகாயநிஷேவணமாகிய அவாந்தர பலத்தை அநுபவித்து, பச்சாத் ப்ரஹ்மப்ராப்தியடைந்திருப்பதாய்ச் சொல்லியிருப்பதாலும், தைத்திரீயோபநிஷத்தில், சீக்ஷாவல்லியில் வ்யாஹ்ருத்யுபாஸநத்தை அங்கமாவுடைய ப்ரஹ்மோபாஸந உபதேச ப்ரகரணத்தில் 'பூர்புவஸ்ஸுவரிதிவா' என்று தொடங்கி, 'ஸஏஷோ அந்தர் ஹ்ருதய ஆகாச:' என்று ப்ரஹ்மோபாஸநத்தைச் சொல்லி, 'அந்தரேண தாலுகே' இத்யாதியாலே, மூர்த்தந்ய நாடியாலே, நிஷ்க்ரமணத்தைச்சொல்லி, அக்நியாதிலோகங்களில் சிரகாலமிருந்து பின்பு, 'ஆப்நோதி ஸ்வாராஜ்யம்' இத்யாதியால், பரமபத ப்ராப்தியும் சொல்லியிருப்பதாலும்,

இப்படியே தைத்திரீயோபநிஷத்தாலேயே தக்ஷிணாயநத்தில், சரீரவியோகம் வந்த உபாஸகனுக்கு அர்ச்சிராதிகதியைச்சொல்லி இந்த்ர சாயுஜ்யத்தை அவாந்தரபலமாகச் சொல்லியிருப்பதாலும், இப்படியே உத்தராயணத்தில் ம்ருதனை உபாஸகனுக்கு ஆதித்ய சாயுஜ்யத்தை அவாந்தரபலமாகச் சொல்லியிருப்பதாலும், அர்ச்சிராதி கதியாலே போகிறவர்களுக்கு அவாந்தரபலாநுபவம் உண்டென்று ஏற்படுகிறபடியால், கேவலனுக்கும் அர்ச்சிராதிகதி ஏற்பட்டிருந்தாலும், அவாந்தரபலமான ஆத்மாநுபவம் கூடும்.

ஜாபகோபாக்யான விஷயங்களான சுலோகங்கள்:

'ஜாபகாநாம் பலாவாப்திம் ச்ரோது மிச்சாமி பாரத, கிம்பலம் ஜபதாமுக்தம் க்வவா திஷ்டந்திஜாபகா:' என்று, தர்மபுத்தரர் பீஷ்மரிடத்தில், ஜாபகர்களுக்கு பலம் என்ன; ஜாபகர்கள் எவ்விடத்திலிருக்கிறார்கள்? என்று கேட்க, 'ஏஷ ப்ரவர்த்தகோ யஜ்ஞ:' என்று ப்ரவர்த்தி தர்மநிஷ்டனை ஜாபகனுடைய ஜபக்ரமத்தை நிரூபித்து, ''நிவர்த்தகம தோச்ருணு, யதாநிவர்த்ததே கர்ம ஜபதோ ப்ரஹ்மசாரிண:, ஏதத் ஸர்வ மசேஷேண யதோக்தம் பரிவர்த்தயேத், விரதம் மார்க்க மாஸாத்ய வ்யக்தா வ்யக்தமநாசிரயம்'' என்று நிவ்ருத்திதர்மநிஷ்டனை ஜாபகனுடைய உபாஸந க்ரம நிரூபணத்தைச்சொல்லி, 'தத்தியாத்யாயதி ப்ரஹ்ம ஜபந்வை ஸம்ஹிதாம் ஹிதாம்' இத்யாதியாலே ஸம்ஹிதா ஜப பூர்வகமாக ப்ரஹ்மத்யாநத்தை விதித்து, ஸவை தஸ்யாமவஸ்தாமவஸ்தாயாம் ஸர்வத்யாக க்ருத: ஸுகம், நிரிச்சஸ்த்யஜதிப்ராணாந் ப்ராஹ்மீஸம்விசதே ததும், அதவா நேச்சதே தத்ரப்ராஹ்மீநாய நிவேஷவணம், உத்க்ராமதி சமார்க்கஸ்த: நைவ க்வசந ஜாயதே, ஆத்ம புத்யா ஸமாஸ்தாய சாந்தீபூதோ நிராமய:, அம்ருதம் விரஜம் சுத்தம் ஆத்மாநம் ப்ரதிபத்யதே' என்று கீழ்ச்சொல்லப்பட்ட தியானத்துக்கு, பலத்தைச்சொல்லி, நிவ்ருத்திதர்ம

நிஷ்டனாய் நிஷ்காமனான ஜ்ஞாபகன் தேஹாவஸாநத்தில் ப்ரஹ்ம காயத்தை ப்ரவேசிக்கிறான். அவ்விடத்திலுள்ள போகத்தை இச்சியாத பக்ஷத்தில், அர்ச்சிராதி மார்க்கத்தாலே பரமாத்மாவை அடைகிறான் என்று பீஷ்மராலே ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஜ்ஞாபகனுக்கு மூர்த்தந்ய நாடியாலே நிஷ்க்ரமணத்தையும், இருநூறுவது அத்தியாயத்தில் 'அத தௌ ஸம்ஹிதௌ ராஜந்' என்று தொடங்கி, 'தாலுதேசமதோத்தாள்யப்ராஹ்மணஸ்ய மஹாத்மந:, ஜ்யோதிர் ஜ்வாலஸமஹந்ஜகாம த்ரிதிவம்ததா, ஹாஹாகார ஸ்ததாதிக்ஷு ஸர்வேஷாம்ஸமஹாநபூத்,தஜ்ஜோதிஸ்ஸ்துயமாநம்ஸ்ம ப்ரஹ்மாணம் ப்ராவிசத் ததா' என்கிற சுலோகங்களாலே மூர்த்தந்ய நாடியாலே நிஷ்க்ரமணத்தையும் ப்ரஹ்மகாய ப்ரவேசத்தையும் சொல்லியிருக்கிறது. இப்படிச் சொல்லும் பக்ஷத்தில், 'தஸ்யதாவதேவ சிரம் யாவந்நவிமோக்ஷ்யே அதஸம்பத்ஸ்யே' என்கிற சுருதியில், ஸத்வித்யா நிஷ்டனுக்கு சரீர வியோகாநந்தரம் உடனே ப்ரஹ்ம ப்ராப்தி சொல்லியிருக்கிறது. கூடும்படி எங்ஙனேயென்னில், ப்ராரப்த சரீரத்தினுடைய முடிவில் உபாஸகனுடைய ப்ரஹ்ம ப்ராப்தியில் விக்நமில்லையென்பதை, ப்ரதிபாதித்ததல்லது வித்யாபலமாய் வருகிற அவாந்தரபலாநுபவம் இல்லையென்று சொல்லவில்லை.

அப்படிச் சொல்லும் பக்ஷத்தில் அந்த சுருதியிலேயே தக்ஷிணாயந ம்ருதனுக்கும் உத்தராயண ம்ருதனுக்கும் அர்ச்சிராதி கதிமத்யத்தில் சந்த்ர ஸாயுஜ்யம் ஆதித்ய ஸாயுஜ்யம் இவைகளைச் சொல்லியிருப்பது கூடாது. ஆனால் வேதாந்த தீபத்தில் அர்ச்சிராதி கதியாலே போகிறவர்களுக்கு விளம்பமில்லையென்று சொல்லியிருப்பதாலும், அப்படியே காம்யாதிகரண சுருதப்ரகாசிகையில், 'அர்ச்சிராதி கதஸ்ய க்ரம முக்தை: ச்ருதிவிருத்தத்வாத் ஸௌநாந் ப்ரஹ்மகமய திதிஹி ச்ருதி. நது க்ரமேண கமயதீதி' என்று அர்ச்சிராதித்தியுள்ளவனுக்கு க்ரமமுக்தி சுருதிவிருத்தத்தை, அந்த சுருதியில் 'க்ரமேணகமயதி' என்றில்லாமையால், என்று நிருபித்திருப்பதாலும் ஜ்ஞாபகனுக்கு மூர்த்தந்ய நாடியாலே நிஷ்க்ரமணம் இல்லையென்றும், ஜிஹ்வையில் நின்றும் நிஷ்க்ரமணமென்றும் அதில் ப்ரமாணங்களான சுலோகங்களை உதாஹரித்திருப்பதினாலும் (அதாவது ஜ்ஞாபகோபாக்யாநே ப்ரஹ்மகாயம் ப்ரவிசதோ ஜ்ஞாபகஸ்ய ஜிஹ்வயா நிஷ்க்ரந்தஸ்ய மூர்த்தந்ய நாட்ய நிஷ்க்ரமணபாவாத் அர்ச்சிராதிகத்யபாவத: ஸ்புரதர.; 'அதவா நெச்சதேதத்ர ப்ரஹ்மகாய நிவேசனம் உத்க்ராமதிச மார்க்கஸ்த: ஹித்வா பூதோநிராமய:, இதிப்ரஹ்மகாய நிவேசனமநிச்சத: மூர்த்நிமார்க்கஸ்த தயா உத்க்ரமணவசநாச்ச' என்று அர்ச்சிராதிகதியுள்ளவர்களுக்கு, மத்யே விளம்பரமில்லையென்பது ஸ்பஷ்டமாயிருப்பதால், இப்படிச்சொல்லுமது அநுபபந்த மன்றோ என்னில்; கார்யாதிகரணத்தில் பூர்வபக்ஷியாலே 'ப்ரஹ்மணாஸஹ தேஸர்வே' என்கிற ப்ரமாணத்தை அவலம்பித்து, அர்ச்சிராதி கதியாலே போகிற எல்லோருக்கும் சதுர்முகனை யடைந்த பின்பு கிரமமாக ப்ரஹ்மப்ராப்தி சொல்லப்பட்டிருப்பதால், அதை நிராகரிப்பதற்காக அர்ச்சிராதி கதியாலே போகிற எல்லோருக்கும் கிரமமுக்தியென்று சொல்லுவது அநுபபந்நம், சிலர்க்கு க்ரமமுக்தி யிருந்தபோதிலும் எல்லோருக்கும் என்பது கூடாது என்று உபபாதித்ததேயொழிய அர்ச்சிராதிகதியுள்ள எல்லோருக்கும் க்ரமமுக்தியில்லை என்பதில் தாத்பர்யமில்லை. அப்படிச் சொல்லும்பக்ஷத்தில் கீழ்ச்சொன்ன அநுபபத்திகள் வருமாகையால் அது அநுபபந்நம்.

ஜ்ஞாபகோபாக்யானத்தில் ஜ்ஞாபகனுக்கு மூர்த்தந்யநாடி நிஷ்க்ரமணமில்லை. ஜிஹ்வையாலேயே நிஷ்க்ரமணமென்று உபபாதித்திருப்பது பாரதத்தில் எந்தப்பாடத்தை அவலம்பித்தோ தெரியவில்லை. இப்போது பட்யமான பாரத க்ரந்தத்தில் மூர்த்தந்ய நாடி நிஷ்க்ரமணம் ஸ்பஷ்டமாக ப்ரதிபாதிதமாயிருக்கிறது.

ஆக கீழ் உதாஹ்ருதங்களான ப்ரமாணங்களாலும், உபபத்திகளாலும் பஞ்சாக்நி வித்யா நிஷ்டனை கேவலனுக்கு அவாந்தர பலம் ஆத்மாநுபவமும், ஸாக்ஷாத்பலம் ப்ரஹ்மப்ராப்தியு மாகவேணுமென்பது உசிதமாகையால் கைவல்யம் அநித்யம்; அதற்கு புனராவ்ருத்தியில்லை என்று சொல்லுமதுவும், திரும்பி ஸம்சாரத்திற்கு வாராமலே பகவத் ப்ராப்தி வருவதால், புனரவரோகாபாவபரமென்றறியத் தக்கது. என்றிவ்வாறு பரபக்ஷ

வியவஹாரம் அநுவதிக்கப்பட்டன. இனிமேல் இவைகளுக்கு பரிஹாரங்கள் நிருபிக்கப்படு கின்றன.

### பரிஹாரங்கள்

'கைவல்யம் லீலா விபூதியிலுள்ளது என்னும் ப்ரதிபக்ஷ வ்யவஹாரங்களிருக்கும்படி சொல்லப்பட்டது. கீழ் இனி அவைகளுக்குப் பரிஹாரங்கள் நிருபிக்கப்படுகின்றன.

அந்தந்த ஸம்பிரதாயஸ்தர்களுடைய பூர்வாசார்யர்களாலே நிர்ணீதமான அர்த்த விசேஷத்துக்கு அநுபபத்தி யேற்பட்டால் அது அவசியம் பரிஹரணீயமாகையால் பரிஹார அவச்யகம். கேவலனுக்கு, கீதா நிருபணம் பாஷ்யத்தில் ஆத்மப்ராப்தியும் ஸ்ரீபாஷ்யத்தில் ப்ருஹ்மப்ராப்தியும் சொல்லியிருப்பதால், இரண்டு பலங்களுக்கு யௌகபத்யம் கூடாமையால், பௌர்வாபர்யேண நிர்வாஹம் பண்ண வேண்டியதென்பது அநுபபந்நம்; ஏனென்றால்? அநேக ப்ரமாணங்களால் ஆத்ம ப்ராப்தியே பலமென்றும், அது அவாந்தர பலமில்லை என்றும் அது முக்கிய பல மென்றும் சொல்லியிருப்பதால் அந்த ப்ரமாணங்களை யெல்லாம் இந்த அந்யதானுபபத்தியைக் கொண்டு பாதிப்பது கூடாது.

பூர்வ மீமாம்ஸையில் சுருதிகளில் ப்ரபல ப்ரமாணமாகவும் அதைக்காட்டிலும் லிங்கம், துர்ப்பலமாகவும் சொல்லப் பட்டிருக்கை யாலே, இந்த அந்யதா நுபபத்திரூப லிங்கத் தாலே இந்த சுருதி ரூபங்களான ப்ராமணங் களை பாதிக்க முடியாது. சப்தைக ஸமதிகம்ய மான அர்த்த விசேஷத்தில் சப்தமே அர்த்த நிர்ணயகமாகையால், அதில் கேவல யுக்திக்கு அவகாசமில்லை. அந்த யுக்தி ப்ரமாணாநுரோத மாயிருந்தால் கிராஹ்யமாகும். விருத்தமா யிருந்தால் அநாதரணீயம்.

இந்த விஷயம் 'ஆர்ஷதர்மோப தேசஞ்ச' என்கிற மனுஸ்மிருதி வசநஸித்தம்.

ஆனால் 'ஸர்வேச்யவநதர்மாண:' என்கிற ப்ரமாணத்துக்கு அநுகுணமான யுக்தியாகை யால் இதுவும் க்ராஹ்யமாகலாமென்று சொல்லுவதும் பொருந்தாது. ஏனென்றால், அந்த வசனமானது அநேகாந்யதாசித்தி களோடும் அநேகாசங்கைகளோடும் கூடினதா கையால் அநந்யதா ஸித்தங்களாயும் ஸ்பஷ்டார்த்த ப்ரதிபாதகங்களாயும் இருக்கிற அநேக ப்ரமாணங்களுக்கு முன்னிற்க மாட்டா தாகையால் அதைக்கொண்டு அர்த்த நிர்ண யம் பண்ணுவது அநுசிதம். அந்த அந்யதா ஸித்தி முதலானவைகள் நிருபிக்கப்படும்.

மேலும் ஆசார்யாளுடைய ஸூக்திகளில் இந்த கேவலனுக்கு ஆத்மாநுபவம் அவாந்தர பலமாகச் சொல்லப்படவில்லை; ப்ரத்யு விரோதமே ஏற்படுகிறது. அது கீழும் நிருபிக் கப்பட்டிருக்கிறது; மேலும் நிருபிக்கப்படும். ஆனால், ஆத்மப்ராப்தியும் ப்ரஹ்மப்ராப்தியும் பலமாகச் சொல்லியிருப்பதால் அது கூடும்படி யெங்ஙனே யென்னில்? ஸ்ரீபாஷ்யத்தில் சார் யாதிகரணத்தில் 'பஞ்சாக்நிவிதோபி அர்ச்சி ராதிகதி சரவணாக் அர்ச்சிராதிநாகதஸ்ய ப்ரஹ்மப்ராப்தி அபுநராவ்ருத்தி ச்ரவணாச்ச அத ஏவதத்க்ருதுந்யாயாத், ப்ரக்ருதி விநிர் முக்தி ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மாநுஸந்தாநம் ஸித்தம், என்றிருப்பதால் தத்க்ருதுந்யாயத் தாலே ப்ரஹ்மப்ராப்திக்கு அநுகுணமாக ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மாநுஸந்தானம் ஏற் படுகிறதென்று சொல்லியிருப்பதால், அந்த ஸ்வாத்மாநுஸந்தானத்தில் ப்ரஹ்மஸ்வருபம் விசேஷணமாகத் தோன்றுகிறபடியால் பலத்தி லும் விசேஷணதயா ப்ரஹ்மத்தினுடைய ப்ராப்தியே பலமென்று கொள்ளவேணும்.

விசேஷணதயா ப்ரஹ்மத்தினுடைய ப்ரா ப்தியாவது ஆத்மாநுபவத்தில் ஆத்மாவே ப்ரதாநபோக்யனும் ப்ரஹ்மஸ்வருபம் அப்ர தாநபோக்யமாயும் ஏற்படுகிற அநுபவம்; தத்க்ருது ந்யாயத்தில் அயோகவ்யவச்சேதம் ஏற்பட்ட போதிலும் (அதாவது உபாஸநத் திற்கு அவிஷயங்களான குணங்களும் அநநு பாவ்யங்களாகலாமென்று சொன்ன போதி லும்) உபாஸிதகுணங்களுக்கு விருத்தங்க ளான குணங்களே அநநுபாவ்யங்களென்று அங்கீகரிக்க வேண்டுகையால் ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸநத்தில் ப்ரஹ்மஸ்வருபத் திற்கு அப்ரதாநபோக்யத்வமே விஷயமாக யால் அநுபவத்திலும் அப்ரதாந போக்ய தவமே விஷயமாகவேணும். ப்ரதாநபோக்யத் வம் விருத்தமாகையாலே அநுபாவ்யமாகாது. தஹரவித்யையில் 'தஸ்மிந்யதந்தஸ்தது பாஸி தவ்யம் குணங்களுக்கு ப்ராதாந்யேந உபாஸ் யத்வம்' என்று ஏற்படுகிறதை யநுஸரித்து அநுபவதசையில் 'வ்ரஜந்தி ஏதாந்ச:ஸத்யாந் காமாந், என்று குணங்களுக்கு ப்ராதாந்யம் சொல்லியிருப்பது போல் இங்கும் கொள்ள வேணும்.

விசேஷண விசேஷ்ய பாவத்தால், ப்ராதாந்ய அப்ராதாந்யங்கள் விவக்ஷிதங்கள் அன்று என்று சொல்லில் சுருதியில் சாந்தோக்யத்திலும், ப்ருஹதாரண்யகத்திலும் பிந்நாதிகாரியாகச் சொல்லுமது அஸங்கதமாம். மதுவித்யா ந்யாயத்தாலே அவாந்தர பலகல்பமும் அநுபநந்நம். மதுவித்யையில், வஸ்வாதிபத ப்ராப்தியும் அநந்தரம் ப்ரஹ்மப்ராப்தியும் கண்டோக்தமாகையாலே பலத்வம் மேற்படலாம். மேலும் மதுவித்யாநிஷ்டனுக்கு அர்ச்சிராதிகதியும் மூர்த்தந்யநாடி நிஷ்க்ரமணமும், இல்லாமையால் இவ்விடத்தில் அவாந்தரபலம் ஆத்மாநுபவமாகவும், ஸாக்ஷாத்பலம் பகவதநுபவமாகவும் சொல்லப்படாமையாலும் மேலும் விருத்தமான வசனமேயிருப்பதாலும் மதுவித்யையை த்ருஷ்டாந்தீகரித்து பல த்வய கல்ப்பநம் பண்ணுவது அநுசிதம்.

மேலும் 'தேஷாம் ஞாநீ நித்ய யுக்த: ஏக பத்திர் விசிஷ்யதே' என்கிற சுலோக வ்யாக்கியமான கீதாபாஷ்யத்தில், இதரயோஸ்து யாவத் ஸ்வாபிலஷிதப்ராப்தி மயா போக: என்று ஐசுவர்யார்த்திக்கும் கைவல்யார்த்திக்கும் தங்களுடையபலங்களான ஐசுவர்ய கைவல்யங்கள் ஸித்திக்கிறபர்யந்தம் என்னிடத்தில் ப்ராபகத்வேந அத்யவஸாயம். ஞ்ஞாநிக்கு தானே ப்ராபகனும் ப்ராப்யனுமாகையால், என்னோடு நித்யயோக மேற்படுவதால் ஞ்ஞாநி நித்யயுக்தனென்று, சொல்லப்படுவன் என்றிருப்பதால், கேவலனுக்குஸாக்ஷாத் பலம் ப்ரஹ்ம ப்ராப்தியாயிருக்கும் பக்ஷத்தில், ஐசுவர்யார்த்தியோடு சேர்த்து, "யாவத் ஸ்வாபிஷிலப்ராப்தி, என்று சொல்லவேண்டியதில்லை. ஆனால் ஞ்ஞாநியைப்போல், அவ்யவதாநேந ப்ரஹ்மப்ரபத்தியில்லாமல், அவாந்தரபலமான ஆத்மானுபவத்தினுடைய, வ்யவதாநத்தைப் பற்றி இப்படிச் சொல்லுமது கூடுமெனில் மதுவித்யா நிஷ்டனையும் இந்த கோடியில் சேர்த்துச் சொல்லாமல், இவர்களை மட்டும் சொல்லுவது அநுபபந்நமேயாகும். இன்னும் இந்த விஷயத்தில் நிரூபிக்கவேண்டிய அம்சங்கள் மேலே வரும்.

மேலும் பஞ்சாக்நி வித்யா நிஷ்டனை கேவலனுக்கு அவாந்தர பலம் ஆத்மாநுபவம், ஸாக்ஷாத்பலம் பகவத நுபவம் என்று சொல்லுவது மத்யஸ்தர்களான பூர்வாசார்யர்களுடைய வசன விருத்தம்.

கீழ் நிரூபித்தபடி திருவாய்மொழியில்கைவல்யபரமான பாசுரங்களின், திருக்குருகைப் பிரான்பிள்ளான் வ்யாக்யானத்தினுடைய வாக்யங்களுக்கு விரோதம் ஸ்பஷ்டம்.

மேலும் கார்யாதிகரண சுருத ப்ரகாசிகையில் பாதநிமதோ பந்யாஸாவஸரத்தில், அர்ச்சிராதி கதியாலே போகிறவனுக்கு சதுர்முக ப்ரஹ்மலோக ப்ராப்தியும், அநந்தரம் பரப்ரஹ்ம ப்ராப்தியும் கூடுமென்பதை, ஜாபகோபாக்யானத்தில் ஜாபகனுக்கு மூர்த்தந்யநாடி நிஷ்க்ரமணமும் அர்ச்சிராதி கதியும் அவாந்தர பலமான, சதுர்முகலோக ப்ராப்தியும், அநந்தரம் ப்ரஹ்ம பிராப்தியும் பாரதத்தில் சொல்லப்படவில்லையென்று சுருத ப்ரகாசிகையில் நிராகரித்திருக்கிறது.

பஞ்சாக்நிவித்யா நிஷ்டனை கேவலனுக்கு அர்ச்சிராதிகதி ஏற்பட்டு அவாந்தரபலம் ஆத்மாநுபவமும் அநந்தரம் ப்ரஹ்மாநுபவமும் ஸித்தாந்த ஸித்தமாயிருக்கும் பக்ஷத்தில் கார்யாதிகரண பூர்வபக்ஷி பஞ்சாக்நி வித்யாநிஷ்டனையே எடுத்து அவனுக்கு அர்ச்சிராதிகதி பூர்வகமாக பலத்வயத்தையும் உங்களுடைய ஸித்தாந்தத்திலிருப்பதுபோல், இதுவும் கூடுமென்று சொல்லாமல், அப்ரஸித்தமான, ஜாபகோபாக்யானத்தை உதாஹரணமாகக் காட்ட வேண்டியதில்லை. இதைக்கொண்டே கேவலனுக்கு பலத்வயமில்லையென்று ஸ்பஷ்டமாயறியலாம்.

அர்ச்சிராதிகதியுள்ள தக்ஷிணாயநத்தில் சரீர வியோகம் ஏற்பட்டவனுக்கும், உத்தராயணத்தில் சரீரவியோகம் ஏற்பட்டவனுக்கும், வ்யாஹ்ருதி சரீரக ப்ரஹ்மோபாஸகனுக்கும், அவாந்தர பலமாக சந்த்ரஸாயுஜ்யமும், ஆதித்யஸாயுஜ்யமும், அந்நிலோக வாஸமும் அவாந்தரபலமாக ஏற்படுவது போல் கேவலனுக்கும் கூடுமென்பது அநுபபந்நம். கீழ் நிருபித்த அதிகாரிகளுக்கு ஏற்பட்டிருக்கிற சந்த்ர ஸாயுஜ்யம் முதலானவை வித்யையினுடைய அவாந்தர பலமன்று; அந்த ஆதிவாஹிகர்களில் அந்யதமரான சந்த்ரன், ஆதித்யன், அக்நி இவர்களுடைய ஸத்காரவிசேஷத்தாலே ஏற்படுகிற விச்ரமார்த்தமுள்ள விளம்பம். இப்படியே 'அயநேபிசதக்ஷிணே' என்கிற இடத்தில் சுருத ப்ரகாசிகையில் நிருபிக்கப்பட்டிருக்கிறது.

இப்படிச் சொல்லாத பக்ஷத்தில் கார்யாதிகரண சுருதப்ரகாசிகையில் அர்ச்சிராதிகதி

யுள்ள எல்லாருக்கும் அவ்யவதாநேந ப்ரஹ்ம ப்ராப்தி என்று நிரூபித்திருப்பது விருத்தமாம்.

ஆனால், கார்யாதிகரண பூர்வபக்ஷி அர்ச்சிராதிகதி ஏற்படுகிற எல்லாருக்கும், அவ்யவதாநேந ப்ரஹ்ம ப்ராப்தியில்லையென்று சொல்லுவதை நிராகரிப்பதற்காக, அர்ச்சிராதிகதியாலே போகிற சிலர்களுக்கு, வ்யவதாநேந ப்ரஹ்ம ப்ராப்தியிருந்தபோதிலும் சிலர்களுக்கு, அவ்யவதாநேந ப்ரஹ்ம ப்ராப்தியென்பது அந்த சுருதப்ரகாசிகையின் அபிப்ராயம் என்று சொல்லுவதும், அநுபபந்நம். சரீர வியோகம் வருகிறவர்களுக்கு தக்ஷிணாயநம், உத்தராயணம் இவையொழிய வேறு காலங்களில்லை. அப்படியிருக்க எல்லாருக்குமே அர்ச்சிராதிகதியும், அவ்யவதாநேந ப்ரஹ்ம ப்ராப்தியும் ஸ்பஷ்டமாயிருக்க, சிலர் என்று விபஜித்துச் சொல்லுமது கூடாது.

மேலும், கேவலனுக்கு ஏற்படுகிற பலத்வயம் ஒரே வித்யையினுடைய பலமா? அல்லது பின்னவித்யா பலமா? ஒரேவித்யையினுடைய பலமென்று சொல்லுமது ஒரு வித்யைக்கு பலத்வயம் கூடாமையால் அநுபபந்நம். மது வித்யை ஒன்றாயிருந்தபோதிலும் பலத்வயமேற்படுவதுபோல, இங்கும் கூடுமென்பதும், அநுபபந்நம். மது வித்யையில் கார்யாவஸ்த ஆதித்ய சரீரக ப்ரஹ்ம ஸ்வரூபமும் ஏற்படுகிறபடியால் பலபேதமேற்படலாம். இங்கு அப்படி விஷய பேதமில்லாமையாலே அது கூடாது.

ஆனால் பஞ்சாக்நிவித்யையில் ஜீவாத்ம ஸ்வரூபமும் பரமாத்ம ஸ்வரூபமும் விஷயமாக ஏற்படுகிறபடியால் அந்த விஷயபேதத்தைக் கொண்டு, பலத்வயம் ஏற்படாளாமென்னில் ஸர்வ ப்ரஹ்ம வித்யைகளிலும் இந்த விஷய பேதம் ஏற்படுவதால், பலத்வயமும் ஏற்படும். மதுவித்யையினுடைய பலங்களான கார்யாநுபவ நித்யாநுபவங்களுக்குக் காலபேதம் ஏற்படுவது ஆவசியகமாயிருப்பது போல் இங்குக் கூடாது. ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸநமாகையாலே அதற்குப் பலமாக கேவலாத்மாநுபவம் ஏற்படாது.

இரண்டாவது பக்ஷமும் அநுபபந்நம். ஒரே அதிகாரிக்கு வித்யத்வயா நுஷ்டாநம் அநுபபந்நமாகையால் கார்யாதிகரண சுருத ப்ரகாசிகையில், ஜாபகனுக்கு மூர்த்தந்யநாடியால் நிஷ்கிரமணமில்லை. ஜிஹ்வையில் நின்றும் நிஷ்க்ரமணந்தான் பாரதத்திற் சொல்லப்பட்டிருக்கிறதென்று நிரூபித்திருப்பது பாரதத்தில் எந்த பாடத்தை அவலம்பித்ததோ தெரியவில்லை என்று சில ஆதுநிகர்கள் சொல்லுவது ஸர்வஜ்ஞராயிருந்துள்ள சுருதப்ரகாசிகாகாரருக்கு அஜ்ஞாநத்தை யேற்படுத்துகிறதாக இருக்கிறது. இதுவுமொரு வியப்பே.

இதுவுமன்றி 'ஸைநாந் ப்ரஹ்ம கமயதி' என்கிற சுருதியானது அவ்யவதாநேந ப்ரஹ்ம ப்ராப்தியைச்சொல்லவில்லையென்று, சில ஆதுநிகர்கள் சொல்லுமதுவும் கீழ் உதாஹ்ருதங்களான சுருதப்ரகாசிகா வாக்கியங்களுக்கு விருத்தமென்பதையும் கண்டுகொள்க.

ப்ரக்ருதிவியுக்த, ஆத்ம ஸ்வரூபாவாப்தி ப்ரக்ருத்யவிஷயக பகவத்விஷயக ஆத்மாநுபவ ரூபமாகையாலே ப்ரக்ருதி மண்டலத்தில் கூடும் என்பதும் அநுபபந்நம். ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் 'முக்தாநாம் பரமாகதி:' என்பதன் வ்யாக்யாநத்தில் 'பரமேதி விசேஷணேந முக்தாநாமேவ கேஷாஞ்சித் அர்வாசீநா கதி: ச்ரூயதே' என்று நிரூபித்தும்.

ப்ரக்ருதிபந்த அவித்யாகர்ம ஸம்ஸ்கார ருசி விபாகேப்ய: ஆவரணேப்ய: ஏகாந்ததோ அத்யந்தத:ச விச்லிஷ்டா: முக்தா: என்று நி:சேஷ ப்ரக்ருதி விநிர்மோகமுள்ளவர்களே முக்தர்களென்றும் அவர்களுக்கே கைவல்ய ரூப மோக்ஷமுண்டென்றும் சொல்லியிருப்பதாலும், கீதாபாஷ்யத்தில், பலவிடங்களில் ப்ரக்ருதிவியுக்த என்பது ப்ரக்ருதி விநிர்மோகத்தையே, நிரூபித்திருப்பதாலும், திருவாய்மொழியில் 'சென்றாங்கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால்' என்று கேவலனுக்கு ஸர்வகர்ம விநிர்மோகத்தைச் சொல்லியிருப்பதாலும், "த்ருஷ்ட்வா நுகூலமாத்மாநம் அந்யத்ர விகதஸ்ப்ருஹ: போக்யபூத பராத்மாநம் உபாயத்வேநாநுஸந்த தத் தேநைவச பராதோநக்ஷயே ஸத்யபிகர்மணும், திரோஹிதே ஈசாநுகூல்ய: ஸ்வாத்மாநம் போக்யமச்நுதே" என்று கேவலனுக்கு ஸர்வகர்ம க்ஷயமுண்டென்றும், ஈசுவர விஷயத்தில் ஆநுகூல்யஜ்ஞாந மில்லாமல், ஆத்மாவையே போக்யமாக நினைத்து, அந்த ஆத்மாநுபவத்துக்காக ஈசுவரனையே உபாயமாக அநுஸந்திக்கிறவனும், அந்த அபராதத்தாலே, ஸர்வகர்ம க்ஷயம் ஏற்பட்ட போதிலும், கேவலாத்மாவையே போக்யமாக கொள்ளுகிறானென்றும், தேசிகனுக்கு ஆசார்யரான வாதிஹம்ஸாம்

பிளாஹார் அருளிச் செய்திருப்பதாலும், ப்ர க்ருதி மண்டலத்தில் ஆத்மாநுவம் ஏற்படும் பக்ஷத்தில் ஸர்வ கர்மக்ஷயம் ஏற்படமாட்டா தென்றும் ஸர்வகர்மக்ஷயம் சொல்லியிருப்ப தால் அவ்வாத்மாநுபவம் பிரக்ருதி மண்டலத் திலில்லையென்பதும் வெளியாம்.

மேலும் பஞ்சாக்நி வித்யா நிஷ்டனுக்கு ப்ரக்ருதி மண்டலத்தில் ஆத்மாநுபவம் ஏற் படும் பக்ஷத்தில், சரீரவியோக காலத்திலேயே மூர்த்தந்ய நாடி நிஷ்க்ரமணமும் அர்ச்சிராதி கதியும் சொல்லியிருப்பது விருத்தமாம். பூர்வா சார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளில் பலவிடங் களிலும் முக்தியென்று ஸர்வகர்ம விநிர்மோ கத்தையே ப்ரதிபாதித்திருப்பதால், அவை களுக்கு கொளணூர்த்த கல்பநம் பண்ணுவது அநுபபந்நம்.

இப்படி பஹுப்ரமாணோபபத்திகளாலே, அவாந்தர பல கல்பநம் அநுபபந்நமாகையால், பஞ்சாக்நி வித்யா நிஷ்டனை கேவலனுக்குசரக் ருதி மண்டல பஹிர்ப்பூதமான நித்யவிபூதியி னுடைய ஏகதேசத்தில் ஸ்தாநமென்றும், ப்ரஹ்மாத்க ஸ்வாத்மாநுபவமே பலமென் றும், அதில் ப்ரஹ்ம ஸ்வரூபத்துக்கு அப்ரதாந போக்யதையா பாநமும், ஆத்ம ஸ்வரூபத் துக்கு ப்ரதாநபோக்யதயாபாநமும் உண்டென் றும் கொள்ளவேணும்.

இப்படியிருப்பதற்குக் காரணம் ஸர்வகர்ம நிர்மோகம் ஏற்பட்டபோதிலும், அந்தஉபாஸ நஜந்ய பகவத் ஸங்கல்பமேயாம். இப்படியே பூர்வாசார்யர்களுடைய அபிப்பிராயமென்பது ஸ்பஷ்டம். ஆத்ம ஸ்வரூபாவிர்ப்பாவமே கை வல்ய மோக்ஷமென்பது திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச்செய்த ஆறுயிரப்படியில் வ்யக்தம். அந்த ஆத்மஸ்வரூபாவிர்ப்பாவமும், 'பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய' என்கிற சுருதி யின்படி, பரப்ரஹ்ம ஸம்பத்யநந்தரகாலிகமா கையாலே, அந்த ஸம்பத்தின் நித்ய விபூதி யிலேயே ஏற்படுவதாகச் சொல்லுகையால், தததந்தரபாவியான கைவல்யமும் நித்யவிபூதி யின் ஏகதேசத்திலேயே கொள்ளவேணும். பரஹ்ம ஸமத்யநந்தரபாவியான இந்த ஸ்வரூ பாவிர்ப்பாவம் கேவலனுக்கும், ப்ரஹ்மவித்யா நிஷ்டனுக்கும் ஸாதாரணம். தததந்தரபாவி யான திவ்யநகரப்ரமேசம். பர்யங்காரோஹ ணம் முதலானவை ப்ரஹ்மவித்யா நிஷ்டனுக்கு அஸாதாரணம். ப்ரஹ்மஸ்வரூபமாவது 'ஸர் வத: ப்ருஷ்டேஷு' என்கிற சுருதியின்படி ப்ரக்ருதி மண்டலத்திற்குப்புறம்பு அனுபவதே சமிருப்பதால் அதுவே கேவலனுக்கு அனுபவ தேசதயா அநுபாவ்யம்ப்ராஹ்மவித்யா நிஷ்ட னுக்கு அநுபவ தேசமாயும், ஸாக்ஷாத் ப்ராப்ய மாயுமிருக்கும். மதுவித்யையில் பல த்வயம் ஸ்ரீபாஷ்ய முதலான க்ரந்தங்களில் ஸ்பஷ்ட மாக ப்ரதிபாதித்திருப்பதுபோல, பஞ்சாக்நி வித்யாநிஷ்டனுக்கும் பலத்வயமிருக்கும் பக்ஷத் தில் ப்ரதிபாதித்திருக்கலாம். மேலும் பலத்வய மில்லையென்பதற்கே கீழ்நிரூபித்தபடி ப்ரமா ணோபபத்திகளிருப்பதையும் கண்டுகொள்க.

இப்படியிருக்க கேவலம் அந்யதாநுபபத்தி யைக்கொண்டு அநந்யதாஸித்தங்களான அநேக ப்ரமாணங்களுக்கு விருத்தமாக அவாந் தர பல கல்பநம் முதலானவை அநுபபந்நம் என்பது ஸ்பஷ்டம். இப்படி கைவல்ய ஸ்வரூபம் யதாமதிநிரூபிக்கப்பட்டது. இதனுடைய விஸ் தரம் பூர்வாசார்ய க்ரந்தங்களிற் கண்டு கொள்க. இனி ப்ரஹ்மவித்யா நிஷ்டனுடைய பலம் நிரூபிக்கப்படும்.

### பிரஹ்ம வித்யா நிஷ்டன் அனுபவம்

இனிமேல் ப்ரஹ்மவித்யாநிஷ்டனுடைய பலம் நிரூபிக்கப்படுகிறது. ப்ரஹ்மவித்யையா வது பக்தி ப்ரபத்திகள். அவற்றுள் பக்தியாக வது தஹரவித்யை முதலிய பேதத்தாலே பல வகையாம். இன்னும் அந்த பக்தியே உபாய பக்தியென்றும், பலபக்தியென்றும் அதிகார பக்தியென்றும் பஹுவிதமாயிருக்கும்.

அதில் உபாய பக்தியாவது, மோக்ஷ ஸாதந மாக உபாஸகர்களால் அநுஷ்டிக்கப்படுமதான, நிரந்தர ஸ்ம்ருதி ரூபமான ஜ்ஞானவிசேஷம். பலபக்தியாவது ப்ரபந்நர்களுக்கு போஜந க்ஷுந் ந்யாயத்தாலே சரீர வியோகாந்தரம் அநுபவத் துக்கு உபகாரணமான அபிநிவேசம். இது ப்ரபக்தி பலமாய் வருமதாகையாலே, பலபக்தி யென்று வழங்கப்படும்.

அதிகார பக்தியாவது 'மயர்வற மதிநல மருளினன்' என்கிற படியே பகவத் கடாக்ஷ விசேஷத்தாலே, ஆழ்வார்களுக்குக் கிடைத்த ப்ரேமரூபாபந்நமான ஜ்ஞான விசேஷம். இந்த ப்ரேமவிசேஷத்தாலே "காலாழும் நெஞ்சழி யும்" என்கிறபடியே கரண சைதல்யம் பிறந்து "அடைவுபட உபாயாந்தரங்களை, அநுஷ்டிக்க முடியாமையாலும், தியாஜ்யமான ஸம்ஸாரத் தினுடைய கொடுமையை அநுஸந்திப்பதா லும், ப்ராப்யமான ப்ரஹ்மாநுபவ அலாபத் தாலே உண்டான க்லேசத்தாலேயும், அவிளம்

ப்ய பலப்ரதமான ஸித்தோபாயத்தைப் பரிக்ரஹிக்கையாகிற ப்ரபத்திக்கு அதிகாரமாயிருக்கும்.

இப்படியே ப்ரபத்தியும் பஹுப்ரகாரையென்று கீழ் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இவைகளுக்குப் பலம் பகவதநுபவம், அநுபவ ஜநித ப்ரீதிகாரித கைங்கர்யம், கைங்கர்ய ஜனிதபகமந்முகோல்லாஸம். இவைகளும், இவைகளுடைய சரமபர்வமாக வருகிற ஆசார்ய பாகவத அநுபவ கைங்கர்யங்கள் முதலானவையுமாம்

பக்தர்களுக்கு அநுபவமே புருஷார்த்தமென்றும், ப்ரபந்நர்களுக்கு கைங்கர்யமே புருஷார்த்தமென்றும் சொல்லப்படும். இந்த அநுபவ கைங்கர்யங்களும், பரார்த்த ஸ்வார்த்த பேதத்தால் வேறு பட்டுமிருக்கும். ஆனல் "யேநயேந தாதா கச்சதி காமாந்து காமருப்யநுஸஞ்சரந்" இத்யாதி சுருதிகளாலே ப்ரஹ்ம வித்யா ஸாமாந்யத்துக்கு கைங்கர்யமே பலமாகச் சொல்லியிருப்பதால், இது கூடும்படி எங்ஙனே என்னில்; இருவர்களுக்கும் அநுபவ கைங்கர்யங்கள் ஏற்பட்டிருந்த போதிலும், "பக்தைர்பாகவதைஸ் ஸஹ". "வைகுந்தத்தமரரும், முநிவரும் வியந்தனர்" என்கிற ப்ரமாணங்களின்படி அநுபவநிஷ்டர்கள், கைங்கர்ய நிஷ்டர்கள் என்று ப்ரகாரபேதம் ஏற்பட்டிருப்பதால், பக்தனுக்கு அநுபவத்தாலேயுண்டான ப்ரீதியாலே ஏற்படுகிற கைங்கர்யமானது, அந்த தசையிலேற்படுகிற அநுபவ விசேஷத்திற்கு ஸாதநமாய்க்கொண்டு அப்ரதாநமாயிருக்கும்.

ப்ரபந்நனுக்கு த்வயமே சரண மந்த்ரமாகையாலே, அதில் உத்தர வாக்யத்தில் சொல்லுகிறபடி கைங்கர்யமே பலமாக, தத்க்ருது ந்யாயத்தாலே ஏற்படுகிறபடியால் அந்த கைங்கர்யத்துக்கு அநுபவம் சாதநமாயிருக்கும். அநுபவத்தாலேயுண்டான, ப்ரீதியானது கைங்கர்யத்திலே மூட்ட அந்த கைங்கர்யமே பரம புருஷார்த்தமாயிருக்கும். இவைகளுக்கு கைங்கர்ய ஸாதநமாக அநுபவமேற்படும்.

இப்படி, ப்ராதாந்ய அப்ராதாந்ய பேதத்தாலே, அதிகாரிவ்யவஸ்தைகூடும். இத்தையநுஸரித்தே, ஸ்ரீவசநபூஷணத்திற்குத் திருவாய்மொழிப்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்யானத்தில், பலபேத மில்லை என்பதற்கும் உபபத்தியேற்படும்.

## ஆனந்தம் துல்யம்

இப்படி அதிகாரி பேதமிருந்தபோதிலும், ஆனந்த தாரதம்யமில்லை. அது எப்படியென்றால், ஈசுவரனுக்கு ஜகத் வ்யாபாராதிகளாலே உண்டான ஆனந்தமும், பிராட்டிமார்களுக்கு, தாங்கள் பத்நீ முறையாலுண்டாகிற ஆனந்தமும், பெரியதிருவடி முதலானவர்களுக்கு வாஹனம், சயநம் முதலானவையாக இருக்கிறதாலுண்டான ஆனந்தமும், வெவ்வேறுயிருந்த போதினும், ஆனந்த தார தம்யமில்லையென்பதுபோல் இதுவுங்கூடும்.

நித்யர்கள், முக்தர்கள், பிரட்டிமார், ஈசுவரன் இவர்களுக்கு ஆனந்தம் வெவ்வேறுயிருந்தபோதிலும், ஈசுவரன் ஸர்வ ஸ்வாமிவாகையாலே, அவனுக்குண்டாகிற ஆனந்தம் தங்களுடையதாயுமிருக்கும். மற்றவர்கள் பரஸம்ர்த்யைக ப்ரயோஜனர்களாகையாலே தங்களுக்கு வருகிற ஆனந்தம்போல் மற்றவர்களுடைய ஆனந்தமும் தங்களுடையதாகவே யிருக்கிறபடியால் ஆனந்தம் அவிசிஷ்டமாயிருக்கும். இந்த விஷயம்" "போகமாத்ர ஸாம்யலிங்காச்ச" என்கிற ஸூத்ர ஸித்தம். ஆதலால் கைங்கர்ய நிஷ்டர்களோடு, அநுபவநிஷ்டர்களோடு வாசியற எல்லார்க்கும் ஆனந்தம் துல்யம்.

அநுபவ கைங்கர்யங்கள் ஸ்வார்த்தங்களாயும், பரார்த்தாங்களாயுமிருக்கும். ஸ்வார்த்தத்தையாவது, அநுபவகைங்கர்யங்களாலுண்டாகிற போகத்தில், தங்களுக்கு அப்ராதாந்யமும் ஈசுவரனுக்கு ப்ராதாந்யமும் ஏற்படுகை.

## போக மாவது

போகமாவது;—கிருதார்த்த தா புத்தி. அவற்றுள் பரார்த்ததையாவது, இவைகளாலுண்டாகிற போகம் ஈசுவரனுக்கேயாக தங்களுக்கு சைதந்யகார்மாய் அவகாதஸ்வேதம் போலவே ஆநுஷங்கிகமாயாவது, ஈசுவரனுடைய போகாதிசயாதாநேச்சையாலாவது வருகிற போகத்தில் தங்களுக்கு அந்வயமில்லாமை, தங்களுடைய அனுபவ கைங்கர்யங்களாலுண்டாகிற பகவந்முகோல்லாஸானுபவமே இவர்களுக்கு புருஷார்த்தம். இந்த விஷயம், திருமந்த்ரத்தில் 'நாராயணாய' என்கிற வ்யக்த சதுர்த்தியோடு, அந்விதமான நம: பதத்தால் ஏற்படுகிறது. அது எப்படியென்றால், அந்த வ்யக்த சதுர்த்தி "தாதர்த்யே சதுர்த்தி" என்கிற அநுசாசனத்தால்தாதர்த்யவாசியாக ஆகி

ந்து. அந்த் தாதர்த்யமாவது சேஷத்வம். இம் ப்ரணவத்தில் லுப்த சதுர்த்தியாலே சேஷத்வம் சொல்லப்பட்டிருப்பதால், இந்த சதுர்த்தியில் 'நாகிஞ்சிதகுர்வத: சேஷத்வம்' என்கிற ந்யா யத்தால், கிஞ்சித்கார மில்லாதபோது சேஷத் வம் ஸித்தியாமையால், சேஷவ்ருத்தியைச் சொல்லுகிறது.

அவ்விடத்தில், லுப்த சதுர்த்தியில் 'அஸ்மி' என்று அத்யாஹரித்துக் கொள்ளவேண்டியதா கையாலே, சேஷத்வ ஸ்வரூபயோக்யதையைச் சொல்லுகிறது. இவ்விடத்தில் அந்த சேஷத்வ பலோ பதாநத்தைச்சொல்லி' அது அஸித்த மாகையால், 'ஸ்யாம்' என்று கிரியையினு டைய, அத்யாஹாரத்தாலே, அந்த பலோ பதாந ப்ரார்த்தனையைச் சொல்லுகிறது.

இப்படி ப்ரார்த்தனையைச்சொல்லுவதால் கைங்கர்யம் ப்ராத்த நீயமென்று கிடைக்கிறது. சேஷத்வம் பஹு பதார்த்த கடிதமாகையால், அந்தப் பத ஸமபிவ்யாஹாரத்தாலே, சேஷத் வம் கிடைக்கிறது. அதில் சதுர்த்தியினுடைய அர்த்தம் இச்சை. அந்த இச்சா விஷயத்வம் ஸித்தவஸ்துவுக்குக் கூடாமையால், அதிசய விசிஷ்டனுன நாராயணனை விஷயமாக உடைத் தாயிருக்கிறது.

அப்படியே, 'ஸ்யபாம்' என்கிற இடத்திலே யும், வேதநத்துக்கு வ்பாபாரவிசிஷ்டவேஷண இச்சாவிஷயத்வம் சொல்லுகிறது. ஆகையால் சதுர்த்தியர்த்தமான இச்சையில் ப்ரகிருத் யர்த்தமான நாராயண பதார்த்தம் விஷ யதாஸம்பந்தேந இச்சையில் அந்விதமாய், அப் படி நாராயண பதார்த்தாந்விதமான இச்சை ஜந்யதாஸம்பந்தேந வ்யாபார விசிஷ்ட ஜீவ பதார்த்த ஏகதேச வ்யா பாரத்தில் அந்வயிக் கிறது. ஆக, "அதிசய விசிஷ்ட நாராயண விஷயக இச்சா ஜந்ய வ்யாபார விசிஷ்ட: ச்யாம்" என்று போதம் ஏற்படுகிறபடியால், பரகதாதிசயாதாயகமான வ்யாபார விசேஷ ரூப சேஷவ்ருத்தி ப்ரார்த்தனை ஏற்படுகிறபடி யால், இந்த சேஷ வ்ருத்தி, பரார்த்தனை விஷ யம் என்றேறப்படுகிறது.

அதில் மத்யமபதமான நம: பதத்தினு டைய அர்த்தமானது காகாக்ஷி ந்யாயத்தால், ப்ரவணத்திலும், ஸ்வஸ்தாநத்திலும், வியக்த சதுர்த்தியிலேயும், அந்விதமாகிறது. அதில், நம: ஸ்யாம் என்று அத்யாஹ்ருதமான ஸ்யா மென்கிற க்ரியாபதத்தோடு சேர்ந்து அந்வித மான நம: பதமானது, 'அதிசய விசிஷ்டமா யிருந்துள்ள அஸ்மத் சப்தார்த்த விஷயக இச்சா ஜந்ய வியாபார விசிஷ்ட தஸ்யாம்' என் றேறப்படுகிறது.

இத்தால் ஸ்வாதிசய ஆதாயக வ்யாபாரம் அபுருஷார்த்தமாய் பகவததிசய ஆதாயக வாயபாரமே புருஷார்த்தமாக ஏற்படுகிறது. இப்படி ஏற்படுகிறபடியால், தனக்கு பகவத னுபவ கைங்கர்யங்களில்,உண்டாகிற போகத் தில் அந்வயமிருக்குமாகில், அந்த போகரூப மான ஸ்வாதிசயா தாயக வ்யாபாரம் இவனுக்கு ஏற்படுகையால், இந்த ப்ரார்த்தனை கூடாது. ஆதலால் சைதந்ய கார்யமாய் தனக்கு வரு கிற போகம், பகவத்போகாதிசயதாயகமாய்க் கொண்டு உத்தேச்யமாகிறது.

இவனுக்கு வருகிற போகம், பகவத் போ காதிசயாதாயகமாய்க் கொண்டு, உத்தேச்ய மாகும் என்னும் அர்த்தத்தை, ஆழ்வார் தனக் கேயாகவெனைக்கொள்ளுமீதே" என்றருளிச் செய்தார். அதில் எனக்கேயாக என்கிற ஏவகா ரத்தால், ஸ்வபோகம் வ்யாவர்த்திக்கப்படு கிறது. அப்படியே ஆண்டாளும், "மற்ற நங் காமங்கள் மாற்று" என்று ஸ்வபோகத்தில் அந்வயமில்லாமையை வெளியிட்டாள்.

இப்படியே த்வயத்தில் உத்தர கண்டத் திலும், நம: சப்தத்தால் இந்த அர்த்தமேற்படு கிறது. இப்படி, ஸர்வப்ரமாண மூலபூதமான திருமந்த்ரத்தினுடைய அர்த்மாக பரார்த்தா நுபவ கைங்கர்யங்களுடையபடி நிருபிக்கப் பட்டது.

இந்த பரார்த்தானுபவ கைங்கர்யங்களில் உபாஸகர்களுக்கும் ஸ்வகத ஸ்வீகாரநிஷ்டர் களுக்கும் அந்வயமில்லை. அதில் உபாஸகர்கள் மந்த்ரத்தினுடைய ஸ்தூல யோஜனையைப் பற்றிப் போகிறவர்களாகையாலே அந்வய மில்லை. ஸ்வகத ஸ்வீகாரநிஷ்டர்களும் அப்ப டியே, ஸ்தூலயோஜநாநிஷ்டர்களாகையாலே அவர்களுக்கும் அந்வய மில்லை.

அநுபாய ப்ரபத்திநிஷ்டர்கள் திருமந்த்ரத் தினுடைய ஸூக்ஷ்மயோஜநாநிஷ்டர்களாயும், த்வயத்தையே ப்ரபத்யநுஷ்டாந மந்த்ரமாக அவலம்பித்தவர்களாகையாலும், தத்கிருது ந்யாயத்தாலே, பலதசையில் பரார்த்தாநுபவ கைங்கர்யங்கள் பலமாக ஏற்படுகிறது.

உபாஸகர்களும், ஸ்வகதஸ்வீகார நிஷ்டர் களும் இப்படி இல்லாமையால் தத்க்ருதுந்யா யத்தாலே ஸ்வார்த்தாநுபவ பரார்த்தகைங்கர் யங்களை பலமாக அடைகிறார்கள்.

தத்க்ருது ந்யாயம் அயோக வ்யவச்சேத பரமாயிருந்தாலும் உபாஸித விருத்தாகாரப் ராப்தி கூடாமையால், இந்த அதிகாரிகளுக்கும் உபாயாநுஷ்டான தசையில் ஸ்வார்த்தானுபவ கைங்கர்யங்களே பலமாக உத்தேதிசித்திருப்ப தால், இதற்கு விருத்தமான பரானுபவ கைங் கர்ய ப்ராப்தி கூடாது.

ஆனால், கத்ய வ்யாக்யானத்தில், பெரிய வாச்சான்பிள்ளை நித்ய விபூதியினுடைய நிரூ பணவசரத்தில், "போக்ய போகோப கரண" என்கிறவிடத்தில், நித்யவிபூதியில் ஸ்வார்த்த போகமேயில்லாமையால், போக்த்ரு நிர்த்தேச மில்லையென்றும், லீலாவிபூதியில், "போக்த்ரு போகோபகரண' என்றிருப்பதால், ஸ்வார்த் தபோக்தாக்களைச் சொல்லுகிறதென்றும், அருளிச்செய்திருப்பதால், நித்யவிபூதியில் பலபேதமில்லை என்று ஏற்படுவது கூடும்படி எங்ஙனே என்னில் லீலாவிபூதியில் ஸ்வார்த்த போகமே ப்ரதானமாயிருப்பதால் அப்படி நித்ய விபூதியில் ஸ்வார்த்தபோகம் ப்ரதாநமா யில்லாமையைப்பற்றி அருளிச்செய்ததாகை யாலே, அநுபபத்தியில்லை. நித்யவிபூதியில் ஸ்வார்த்தபோகம் அப்ரதாநமாயுள்ள அதி காரிகளும், ஸ்வபோகமும் பரார்த்தமாயிருக் கும் அதிகாரிகளும், உண்டென்பதற்கு அநுப பத்தியில்லை.

ஸ்ரீவசனபூஷணத்துக்கு திருவாய்மொழிப் பிள்ளை அருளிச்செய்த வ்யாக்யானத்திலும் பலபேதமில்லை என்பதற்கு தாத்பர்ய அனு பவ கைங்கர்ய ரூப பலபேதமில்லை என்பதே; மற்றப்படி பரார்த்த ஸ்வார்த்தபேதமில்லை என்பதில் தாத்பர்யமில்லை.

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த ஸ்ரீவசநபூஷண பங்கதியில் உத்தேச்யபே தத்தை நிரூபித்திருக்கிறபடியால், அந்த உத்தேசானு குணமாகவே, பலஸித்தி சொல்ல வேண்டியது ஆவசியகமாகையாலே, பலபேத முண்டென்பது ஸ்பஷ்டம்.

இப்படியே மணவாளமாமுனிகள் வ்யாக் யானத்திலும் ஏற்படுகிறது. முக்தியில் பலபேத மில்லையென்பது, கைவல்யத்தை முக்தியாகவும் தத் க்ருது ந்யாயத்திற்கு அந்யயோக வ்யச்சே தமே அர்த்தமென்றும் சொல்லுகிற ஸித்தாந் தத்தில் கூடாததலால், அந்த உபபத்திகளைக் கொண்டு அனுபவ கைங்கர்யங்களில், பரார்த் ததை ஸ்வார்த்ததை உண்டென்பது ஸித்தம். இப்படி, சில ஆசார்யர்களுடைய நிர்வாஹம்.

அன்றிக்கே, "இவற்றை தர்மமென்கிறது ப்ரமித்த அர்ஜுனன் கருத்தாலே" என்று லோக தேசிகன் அருளிச்செய்திருப்பதால், பக்தி முதலானவைகளுக்கு வாஸ்தவமான உபாயத்வமில்லை; அந்த உபாயத்வம் ஈசுவர னுக்கேயுள்ளது. பக்தியில் வருகிற உபாயத்வ பக்தி ப்ராந்தி ரூபையென்றேற்படுகிறபடியால் "நா தத்வஜ்ஞாநாந் முக்தி:" என்பதால் தத் வஜ்ஞாநமில்லாதவர்களுக்கு முக்தியில்லை என்று சொல்லியிருப்பதால், உபாயத்வபுத்யா பக்தியை அநுஷ்டித்தவர்களுக்கு, மோக்ஷ மில்லையென்பது ப்ரமாண விருத்தமாகையால் உபாஸநா தசையில் பக்தியை உபாயபுத்யா அநுஷ்டித்தபோதிலும், அநந்தரம் தத்வஜ்ஞா நம் பிறந்தே மோக்ஷம் கிடைக்கிறதென்றே கொள்ளவேணும். அப்பொழுது பல பேதம் ஏற்படமாட்டாது. ஆதலால், ஸ்ரீவசன பூஷண வ்யாக்யானத்தில் உத்தேச்யம் என்பது ப்ரதி பத்தி மாத்ரத்தை அவலம்பித்துச்சொல்லிய விஷயம் என்று சில ஆசார்யர்களுடைய அபிப் ராயம்.

அப்படியேற்பட்டால் கைவல்யார்த் திக்கும் உபாஸநாதசையில் ஸ்வஸ்வரூபத்தில் போக்யதா புத்தியிருந்தபோதிலும் நாதத் வஜ்ஞாநாந்முக்தி:" என்றிருப்பதால், பின்பு யதாவஸ்தித உபாஸந மேற்பட்டு ப்ருஹ்மா நுபவமும் ஏற்படலாம்.

அப்படியிருக்க, கைவல்யத்தில் பலபேத நிரூபணத்தில் ப்ரபாஸமே வ்யர்த்தம். இவை களில் ஸ்வாரஸ்யாஸ்வாரஸ்யங்களை அறிவுடை யோர் ஆராயக்கடவது.

இப்படி இந்த பாரார்த்த போகத்தை சுருதியில் ப்ரதிபாதித்திருக்கிறது. அதாவது "அஹமந்ந மஹமந்ந மஹமந்நாத:" என்கிற சுருதியில், அந்நம் என்று தன்னுடைய போக்ய தையைச்சொல்லி, அந்நாதனை தான் அந்த மென்று சொல்லுவதால், அந்த அந்நாத்வம் அந்நத்வோபயோகியாக ஏற்படுகிறது.

இப்படியே, "படியாய்க் கிடந்து, உன் பவளவாய் காண்பேன்? என்கிற இடத்தில், 'படியாய்க்கிடந்து' என்று அசித்வத் பாரதந்த் ரியத்தையும் 'காண்பேன்' என்பதால் ஸ்வா னுபவஜநித பகவந்முகோல்லா ஸாஸாநுபவத் தையும் சொல்லுகிறபடியால், சைதந்ய கார்ய மான போகத்தையும் சொல்லுகிறது.

இப்படி இந்த மந்த்ரார்த்தத்தை அஷ்ட சுலோகியில் பட்டர் மந்த்ர ப்ரஹ்மணி

என்கிற சுலோகத்தாலே, அருளிச்செய்தார். அந்த சுலோகமாவது— "மந்த்ரப்ரஹ்மணி மத்யமேந நமஸா பும்ஸஸ்வரூபம்கதிர்; கம்யம் சிக்ஷிதமீக்ஷிதேந: புரத; ப:சாத ஸ்தாநத: ஸ்வாதந்த்ர்யம் நிஜரக்ஷணம் ஸமுசிதவ்ருதி: ச நாந்யோசிதா தஸ்யைவேதிஹரே: விவிச்ய கதிதம் ஸ்வஸ்யாபிநார்ஹம்தத:" என்பதாம். இதன் அர்த்தம்:—

மந்த்ர ப்ரஹ்மணி என்பதால் மந்த்ர சிரேஷ்டமான திருமந்த்ரத்தைச் சொல்லுகிறது. அதில் மத்யமமான நம: சப்தத்தால் (பும்ஸ:) சேதநனுடைய ஸ்வரூபம் ஸ்வீயமான ஆகாரமான பகவத் போகார்த்த ப்ரவ்ருத்தி 'யோக்யத்வமும் கதி:' என்பதினால், நாராயண சப்தத்தில் 'ஈயதே' கரணவ்யுத்பத்தியால், ஏற்பட்ட உபாயமும், கம்ய சப்தத்தால், வ்யக்த சதுர்த்தியினுடைய வ்யங்க்யார்த்தமான பகவத் பிரீதி ரூபமான பலமும், விவக்ஷிதம். 'சிக்ஷிதம்' என்பதாலே நபும்ஸக ஏக வாக்ய விவஸக்ஷயால் இந்த மூன்றையும் சொல்லுகிறது: 'ஈக்ஷிதேதநபுரத:' என்பதால், பூர்வ வாக்யமான ப்ரணவத்திலும் உத்தரவாக்யமான நாராயணபதத்திலும் ஸ்வ வாக்யத்திலும், வாக்யைக வாக்யமாக பர்யாலோசநம் பண்ணுகையாலே. "ஸ்வாதந்த்ரியம்":— ஸ்வாதீநத்வம். அதாவது முன்சொல்லப்பட்ட, ஸ்வரூப சிக்ஷாபலிதமான அர்த்தத்தையே விவக்ஷிக்க, வேண்டியபடியால் ஸ்வபோகார்த்த ப்ரவ்ருத்யர்ஹத்வம் விவக்ஷிதம். "ஸமுசிதவ்ருத்தி:—" ஸ்வார்த்தவ்ருத்தி அநுசிதை, பாரார்த்தை யானவ்ருத்தி. ஸமுசிதை கேவல பரார்த்தவ்ருத்தி ஸமுசிதை: சேதனனுக்கு ஸ்வபோகார்த்த ப்ரவ்ருத்தியைக்காட்டிலும், தேவதாந்தரபோகப்ரவ்ருத்தி, பகவத்போகார்த்த ப்ரவ்ருத்தி யோக்யதையை ஸம்பாதிக்கையாலே உசிதை. தேவதாந்தரபோகார்த்த ப்ரவ்ருத்தியை விட்டு, வருகிற பகவத்போகர்த்த ப்ரவ்ருத்தி ஸமுசிதை. 'நாந்யோசிதா' அந்யோசிதையன்று. 'தஸ்யைவ' என்று 'பதிம்விச்விஸ்ய' என்று ப்ரஸித்தனை ஈசுவரனுக்கே உசிதை. 'ஹரே: விவிச்சய கதிதம்':—இப்படி ஹரியைக்குறித்துச் சொல்லப்பட்டது. 'வஸுரந்யோவிபுரஸி' என்கிற சுருதியாலும், 'அவசதாஹம் தவாஸ்மி' என்கிற உபப்ருஹ்மணத்தாலும், ப்ரணவம் ஈசுவரனைக் குறித்துச் சொல்லுகிற உக்திரூபமாகையாலே ஹரியைக்குறித்துச் சொல்லப்பட்டதென்கிற அர்த்தம் ஏற்பட்டது. 'நயந்யோசிதா'—இன்னொருவருக்கு உசிதையன்று. 'ஸ்வஸ்யாபிநார்ஹம் தத்':—தனக்கும் ஈசுவரனுக்கும் பொதுவான சேஷத்வம் கூடாது என்று அர்த்தம். ஆதலால் ஈசுவரனுக்கே சேஷமாயிருக்கை ஸ்வரூபம் என்பதாம். இப்படி அனுபவ கைங்கர்யங்களில் பாரார்த்யமே உத்கிருஷ்டமென்பது ஸித்தம்.

இப்படி தத்வஹித புருஷார்த்தங்கள் நிரூபிக்கப்பட்டன. இப்படியிருந்துள்ள புருஷார்த்த ப்ராப்திக்கு ஸாதநமான உபாயநுஷ்டானம் செய்த அதிகாரியிருக்கும்படி நிரூபிக்கப்படுகிறது.

### அதிகாரி நிரூபணம்

இங்கு உபாயம் என்றது பக்தி, ப்ரபத்தி இவைகளை, பக்தி நிஷ்டன் நித்ய நைமித்திக கர்மாக்களை, பலாபிஸந்தியில்லாமல் தன்னால் உபாயமாக அனுஷ்டிக்கப்படுகிற பக்திக்கு அங்கங்களாக அனுஷ்டிக்கக்கடவன். அப்படி அனுஷ்டிப்பதும், அங்கியான பக்தி யோகானுஷ்டான காலத்துக்கு அவிருத்தமான காலத்தில் ஏற்படும். பக்தி யோகானுஷ்டான தசையில், அங்கபூதங்களான கர்மாக்களுடைய லோபம் ஏற்பட்டாலும், அது ப்ரத்யவாயாவஹமாக மாட்டாது. ஆதலால் விஹிதத்வ புத்யா அனுஷ்டிக்கும் பக்ஷத்தில், யோக தசையிலேற்படும் கர்மலோபம் ப்ரத்யவாயாவஹமாம். ஆனால், "யோகமேவ நிஷேவேத" என்கிற வசனத்தின் படி அனுஷ்டிக்கப்படுகிற யோகமே ப்ராய:சித்தமாகலா மென்னில், அது ப்ராமாதிகமாக ஏற்படுகிற கர்மலோபத்துக்கு ப்ராய:சித்தமாகுமே யொழிய புத்தி பூர்வமாக ஏற்படுகிற இதற்கு ப்ராய:சித்தமாகாது. இதுவும் அபுத்தி பூர்வமென்னில், கர்மலோபாவஹமான பக்தி யோகனுஷ்டானமே ஸம்பவியாது. புத்தி, பூர்வமாக ஏற்படுகிற கர்மலோபத்துக்கும் இதுவே ப்ராய:சித்தமென்று சொல்லில், காதாசித்கமாக ஏற்படும் புத்திபூர்வக கர்மலோபத்துக்கு ப்ராய:சித்தமாகாதத்தையொழிய அஸக்ருத்தாக நேரும் புத்தி பூர்வக கர்மலோபத்துக்கு இது ப்ராய: சித்தமாகாது.

அப்படி புத்தி பூர்வக கர்ம லோபம் அடிக்கடி ஏற்படும் பக்ஷத்தில் பக்தியோகானுஷ்டானத்துக்கு 'ஸந்த்யாஹீநோஅசுசிர், நித்ய மநர்ஹஸ் ஸர்வகர்மஸு' என்கிற வசனப்படி

அநர்ஹனுவன். இந்த விஷயம் 'அக்நிஹோத்ராதிஷு தத்கார்யாயைவ தத்தர்சநாத் ஸஹகாரித்வேந' இத்யாதிகளில் ஸ்பஷ்டம். 'விஹிதத்வாச்சாச்ரம கர்மாபி' என்பது புபுக்ஷு விஷயம்.

ஆதலால் ஸ்வ வர்ண ஸ்வாசிரம உசிதங்களான, நித்திய நைமித்திக கர்மாக்களை, அங்கியான பக்தியோகத்துக்கு அவிருத்த காலங்களில் அங்க புத்யா அனுஷ்டிக்கக் கடவன்.

திருமந்த்ரத்தில் நம:பதார்த்தமான அநந்ய சரணத்வமாகிற உபாய பாரதந்தர்யரூப ஸ்வரூபத்துக்கு விருத்தமென்கிற புத்தியாலும், துஷ்கரத்வ புத்தியாலும், ப்ராரப்த கர்மாவஸாநத்தியிலேயே பலம் ஏற்படுகிறபடியாலும், பக்தியோகத்திலிழியாமல் அநந்ய கரணத்வரூப ஸ்வரூபத்துக்கு உசிதமாயும் ஸகிருத் கர்த்தவ்யமாகையாலே ஸுகரமாயும் ப்ராரப்த்த சரீராவாஸநத்திலேயே பலமேற்படுகிறபடியாலே, அவிளம்ப்யபல ப்ரதமாகையாலும், "த்வமேவ உபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநா மதி:" இத்யாதி ப்ராமணத்தின்படி ஸர்வேசுவரனையே உபாயமாகப் பற்றுகையாகிற அதிகாரி விசேஷணீபூத ப்ரபத்தி நிஷ்டனுக்கு நித்ய நைமித்திக கர்மாக்களை அங்கங்களாகக் கொள்ளில் ஸஹகாரி நிராபக்ஷமான ஸித்தோபாய நைரபேக்ஷ்யத்துக்கு ஹானி வருகையாலும், ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்று ஸர்வ தர்மத்யாகம் அங்கமாக ஏற்படுகிறபடியால் விஹதத்வபுத்யா அநுஷ்டிப்பதும் விருத்தமாகையால் ஸர்வ ஸ்வாமியான ஈசுவரனுடைய ஆஜ்ஞா ப்ரவர்த்தநத்தில் ராகத்தாலே விதி பராமர்சமில்லாமல் போகரூபமாக அனுஷ்டிப்பதால், ஸர்வேசுவரனுடைய முகோல்லாஸமே ப்ரயோஜனமாக ஏற்படுகிறபடியால், கேவல பரார்த்த கைங்கர்யபுத்யா அனுஷ்டேயம்.

ஸங்கல்ப பேதத்தாலே கர்மபேத மேற்படுகிறபடியால், 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய, என்கிற இடத்தில் சொல்லப்படுகிற த்யாக விஷயமான கர்மாக்களைக்காட்டிலும் கேவல கைங்கர்ய புத்யா அனுஷ்டிக்கப்படுகிற கர்மாக்கள், பின்னங்களாகையாலே அங்கமான ஸர்வ தர்ம த்யாகத்துக்கும் விரோதமில்லை.

இப்படி அனுஷ்டிப்பதும் ப்ரபத்தி நிஷ்டனுக்கு ஏற்படுகிற விசேஷ தர்மங்களுடைய அனுஷ்டானத்துக்கு அவிருத்த காலங்களில் ஏற்படும். நித்திய நைமித்திக கர்மாக்கள் ஆஜ்ஞா ஸித்தங்களேயாகிலும் அது ப்ரபந்நனுக்கு ஆஜ்ஞா ஸித்தங்களான விசேஷ தர்மங்கள் இவனுக்கே அஸாதாரணங்களாகையாலும் அஸாதாரண தர்மா விருத்த காலங்களிலேயே ஸாதாரண தர்மங்கள் அனுஷ்டிக்க வேண்டுகையாலே அஸாதாரண தர்மாநுஷ்டான காலங்களில் ஏற்படுகிற ஸாதாரண தர்ம லோபம் ப்ரத்யவாயாவஹமாகாது.

இந்த விஷயம், 'மத்கர்ம குர்வதாம் பும்ஸாம் யதிகர்ம விலும்பதி, தத்கர்ம ப்ரகுர்வந்தி த்ரிஸ்ர:கோட்யோ மஹர்ஷய:' இத்யாதி ப்ரமாணஸித்தம். இவ்விஷயம் கீழே விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்டது.

இந்த ப்ரபத்திநிஷ்டனும் ஸ்வநிஷ்டன், உக்திநிஷ்டன், ஆசார்யஷ்டன் என்று மூன்று வகையாயிருப்பான்.

ஸ்வனிஷ்டனுவான்:— ப்ரபத்தி சாஸ்த்ரத்தில் யதாவஸ்தித ஜ்ஞானமுள்ளவனுய் ப்ரபத்யை யதாவத்தாக அநுஷ்டித்த ஆசார்யனை ஆசிரயித்து ததுபதிஷ்ட மார்க்கத்தாலேநேரே ஸர்வேசுவரனை யுபாயமாகப் பற்றினவன்.

உக்தி நிஷ்டனுவான்:— ப்ரபத்தி விஷயத்தில் ஸமுதாய ஜ்ஞான முடையவனுய் விசேஷ ஜ்ஞானமில்லாதிருக்கிற அதிகாரி; ப்ரபத்தி சாஸ்திரத்தில் யதாவஸ்தித ஜ்ஞானமுடையவனுய், ப்ரபத்தியை யதவத்தாக அநுஷ்டித்த ஆசார்யனை ஆசிரயித்து, அதனுல் உபதிஷ்டமான ப்ரபத்தி மந்த்ரத்தினுடைய அநுச்சாரணத்தைப் பண்ணுகிறவன்.

ஆசார்ய நிஷ்டனுவான்:— கீழே நிருபித்தபடி, பூர்ணமான ஜ்ஞானுனுஷ்டானமுடைய, ஆசார்யனை ஆசிரயித்து அவனுக்குப் பரதந்திரனுய், அவனுல் அனுஷ்டிக்கப்பட்ட ஆத்மாத்மீய பரந்யாஸ ரூபையான சரணுகதியில், தான் ஆத்மீயனுக அந்வயித்து, தான் தனித்து சரணுகதி பண்ணுமல், ஆசார்யாபிமானத்தில் ஒதுங்கியிருக்குமவன்.

இந்த அதிகாரி மற்ற அதிகாரிகளிற் காட்டில் உத்கிருஷ்டன். எப்படி அஜ்ஞஸர்வஜ்ஞபக்தாநாம் கதிர்கம்யோ பவேத்அரி: என்கிற ப்ரமாணத்தின்படி சக்தனுகிலுமாம் பிரபத்திநிஷ்டனுமவன் பக்திநிஷ்டனைக்காட்டிலும் உத்கிருஷ்டனுகிருனே; அப்படியே சக்தனுகிலுமாம், அசக்தனுலுமாம் ஆசார்ய நிஷ்டை

யில் அந்வயித்தவன் மற்றவர்களைக்காட்டிலும் உயர்ந்தவனுவான்.

இந்த ஆசார்ய நிஷ்டைக்கு அஜ்ஞரோடு ஸர்வஜ்ஞரோடு, சக்தரோடு அசக்தரோடு வாசியற ஸர்வரும் அதிகாரிகள்; இதற்கு ப்ர மாணேபபத்திகள் இனி நிரூபிக்கப்படும்.

**பிரமாண உபபத்திகள்**

1. "ஸித்திர்ப்பவ திவாநேதி ஸம்சயோச்யுத ஸேவிநாம் அஸம்சயஸ்து தத்பக்த பரிசர் யாரதாத்மநாம்"
2. "மமமத் பக்த பக்தேஷு ப்ரீதிரப்யதிகா பவேத்"
3. "குருரேவ பரப்ரஹ்ம குருரேவ பராகதி:"

இத்யாதிகள் ப்ரமாணங்களாகும்.

இவைகளுக்கு அர்த்தம், (1)ப்ரதமபர்வ மான ஸர்வேசுவரனை ஆசிரயித்தவர்களுக்கு மோக்ஷஸித்தியில் சம்சயமுண்டாகும். ஏனெ னில் ஸர்வேசுவரன் ஸ்வதந்த்ரனுகையாலும் ப்ரபல ப்ரதிதகமான ப்ரஹ்மவித்அபசாரம் தேருகைக்கு ஸம்பாவனையுண்டாகையாலும், பலஸித்தியில் கண்ணழிவுண்டு. அப்படியன் றிக்கே சரபர்வம் ஸ்வாதந்த்ரிய கந்தமன் றியிலே அநுக்ரஹைகசீலமாயிருக்கிறபடியா லும், ப்ரஹ்மவித்தினுடைய கௌரவஜ்ஞாந பூர்வகமாக ஆசிரயித்தபடியால் ப்ரஹ்மவித்தி னுடைய அபசாரத்துக்கு ப்ரஸக்தியிலாமை யாலும், பலஸித்தியில் கண்ணழிவில்லை என்றும்.

(1) என்னுடைய பக்தர்களிடத்திலுங் காட்டில், என்னுடைய பக்தபக்தர்களிடத்தில் எனக்கு ப்ரீதி அதிசயிதமாயிருக்கும் என்றும், ஆசார்யனே பரம்ப்ரஹமம் என்றும், ஆசார்யனே பரமோபாயமென்றுமாம்.

ஆழ்வார்களில் தலைவரான நம்மாழ்வார் திருவாய்மொழியில், "பயிலுஞ்சுடரொளி" "நெடுமாற்கடிமை" என்னுமிவற்றில், சரம பர்வமே ப்ராப்ய ப்ராபகமாக அருளிச்செய் தார்.

திருமங்கையாழ்வார், "மற்றுமோர் தெய் வமுளதென்றிருப்பா ரோடுற்றிலேன்" என் கிற பாசுரத்தில், திருமந்த்ரத்துக்குப் பரம தாத்பர்யம் பாகவத_கைங்கர்ய மென்றருளிச் செய்தார்.

இத்தை அநுஸரித்தே "நண்ணுதவாள வுண" ரிலும், "கண்சோரவெங்குருதி"யிலும், சரமபர்வத்தினுடைய ப்ராப்யத்வ ப்ராபகத் வங்கள், பாவநத்வ போக்யத்வங்கள் இவைகளை அருளிச்செய்தார்.

தொண்டரடிப்பொடியாழ்வார் "தின்னடி யார்க் காட்படுத்தாய் பள்ளியெழுந்த ருளாயே" என்று பாகவதசேஷத்வத்தைப் புரு ஷார்த்தமாக ப்ரார்த்தித்தார்.

திருப்பாணுழ்வார், "அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்" என்றருளிச் செய்தார்.

திருமழிசையாழ்வார், "மாருயதானவனை" என்கிற பாட்டில், "மற்றவரைச் சாத்தி யிருப்பார் தவம்" என்று ப்ரதமபர்வநிஷ்டர் களைக் காட்டிலும், சரமபர்வநிஷ்டரே உத் கிருஷ்டரென்று அருளிச்செய்தார்.

ஆண்டாள், "நல்லவென்றேழி நாகணை மிசைநம் பரன்" என்கிற பாட்டில், தனக்குப் பெரியாழ்வார் ஸம்பந்தமே உத்தாரகமென்று அருளிச்செய்தார்.

மதுரகவிகள், ஆழ்வாரையே ப்ரதம பர்வ மான பகவத்விஷயத்திற் காட்டிலும் ப்ராப் யத்வ, ப்ராபகத்வ, பரதேவதாத்வ, போக் யத்வ, பாவநத்வாதி குணவிசிஷ்டராக அத்யவ ஸித்து, 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்கிற பிரபந்தத்தை அருளிச் செய்தார். அதில் "தேவுமற்றறியேன்" என ஆழ்வாரைத்தவிர வேறு தெய்வத்தை அறியேன் என்று அருளிச் செய்தார். இப்பிரபந்த மொன்று கொண்டே சரமபர்வம் உத்கிருஷ்டமென்று அறுதி யிடலாம்.

வேதோபப்ரஹ்மணமாய், இதிஹாஸ ஸ்ரேஷ்டமாயுள்ள ஸ்ரீ ராமாயணத்தில் ஸ்ரீசத் ருக்நாழ்வான் ராமாநுவ்ருத்தியை விட்டு, சரம பர்வமான பரதாழ்வானுடைய அநுவ்ருத்தியே தமக்குப் பரம புருஷார்த்தமாக அத்யவ ஸித்து ப்ரதமபர்வத்தைக் கணிசியாதிருந்தார். இந்த பரதாநுவ்ருத்தியை விசேஷ தர்மமாக நம்மாசார்யர்கள் அறுதியிட்டிருக்கிறுர்கள்.

இனி, ஆசார்யர்களில் ஆளவந்தார், "தவதாஸ்ய ஸுகைக ஸங்கிநாம்" என்கிறச் சுலோகத்தில் சரமபர்வபூதர்களான பாகவதர் களுடைய திருமாளிகைகளில் அன்றே பிறந்து அன்றே வளர்ந்து அன்றே நசிக்கும்படியா யிருக்கையாலே, திருமாளிகை ஸம்பந்த விற சேத ப்ரஸக்தியன்றிக்கே இருக்கும் கீடஜன் மமே தமக்குப் புருஷார்த்தமென அறுதியிட் டார். பின்னும் "பிதாமஹம் நாதமுநிம்

—13

விலோக்ய'' என்று வித்யையாலும் ஜந்மத்தாலும் தமக்கு பிதாமஹராயிருக்கிற நாத முனிகள் 'ஸம்பந்தமே உத்தாரகமாக அத்யவஸித்து, அந்த ஸம்பந்தத்தையே பார்த்து என்னுடைய அபராதத்தைக் கணிசியாமல், கிருபைபண்ணி யருளவேணுமென்று எம்பெருமானை ப்ரார்த்தித்தார். ஸர்வஸங்கபரித்யாகம் பண்ணின ஆசிரமத்திலிருந்தும் ஜ்ஞானுதிகருடைய திருமேனி ஸம்பந்தமே உத்தேச்யம் என்பது தோன்ற ''பிதாமஹம்'' என்று ஸாதித்தார்.

திருவரங்கத்தமுதனுர், பாஷ்யகாரரையே ப்ரதம பர்வாபேக்ஷயர் தமக்கு உத்தேசியராக அத்தியவஸித்து தம்முடைய அத்தியவஸாய விசேஷத்தை அநேக பாசுரங்களால் வெளியிட்டார்.

ஆழ்வானும் 'ராமாநுஜாங்கிரி சரணேஸ்மி' என்கிற சுலோகத்தாலே, ஸ்ரீபாஷ்யகார ஸம்பந்தமே உத்தாரக மென்றருளிச் செய்தார்.

வடுகநம்பி, எம்பெருமானுரையே ப்ராப்ய ப்ராபகமாக அத்தியவஸித்திருந்தமை ஸுஸ்பஷ்டம்.

முதலியாண்டன் பாஷ்யகார ஸம்பந்தமே தமக்கு உத்தாரகமென்று அத்தியவஸித்த விஷயத்தை ''ஒருமலையில் நின்றும்'' என்று தொடங்கிய முதலியாண்டான் பாசுரங் கொண்டறிலாம்.

பட்டர், ''தவபரோஹ மகார்ஷிஹி தார் மிகை: கரணமித்யபி வாசமுதீரயம்'' என்று ஆசார்யநிஷ்டையே தமக்கு உபாதேயமென்று அருளிச்செய்தார்.

லோகதேசினும், ஸ்ரீவசனபூஷண திவ்ய சாஸ்திரத்தில் ''ஆசார்யாபிமானமே உத்தாரகமென்பது, வேதபரமதாத்பர்ய'' மென்று அறுதியிட்டு, 'வேதார்த்தம்' என்று துடங்கி 'ஆசார்யாபிமானமே உத்தாரகம்' என்று நிகமித்தருளினுர்.

வேதாந்ததேசிகனும் ரஹஸ்யத்ரய ஸாரத்தில், ஆசார்யநிஷ்டையை நிபுணகிருத்திய மென்று, அருளிச்செய்ததுமன்றி, மற்ற இடங்களிலும் ''த்வய்யாசார்யைர் விநிஹிதபரா'' என்று துடங்கி, ''ஸுரயோ மேஸ்வதந்தாம்'' என்று ஆசார்யநிஷ்டர்களைத் தமக்கு போக்கியமாக அநுஸந்தித்தார். தமக்கும் ஆசார்யநிஷ்டையை, 'புநருக்த உபாயயேஷ:' என்று வெளியிட்டார். பின்னையும், 'வளவுரைதந்தவனருளே மன்னிய மாதவத்தோர்' என்று ஆசார்யநிஷ்டர்களை மஹா தபஸ்விகளென்று கொண்டாடியிருக்கிருர். இன்னமும், 'இன்பத்திலிறைஞ்சுததில்' என்கிற பாட்டில், 'அன்பர்க்கே அவதரிக்கும் ஆயன் நிற்க' என்று ப்ரதமபர்வமான, ஈசுவரனைக் காட்டிலும் யோக்யத்வாதிகளான குணங்கள் ஆழ்வார்க்கே யுள்ளதென்று கண்ணிநுண் சிறுத்தாம்பின் அர்த்தத்தை வெளியிட்டு, உத்தேசிப விரோதி பாபமாண்கயாலே, ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யத்துக்கு விரோதியான பகவத்ப்ராவண்யத்தைத் துன்பமாகவும் அந்தத் துன்பமற்றியிருக்கிற மதுரகவிகளால் வெளியிடப்பட்ட பாசுராமான சரமபர்வாபிமானமே நல்வழியான ப்ரபத்தியில்விஸ்வாஸமுள்ளவரகளுக்கு உபதேய மென்னுமதை யருளிச் செய்தார். இப்படி ஆசார்ய நிஷ்டைக்கு ஆதிக்யஸூசகமான வேதாந்த தேசிகனது ஸூக்திகள் பலவுள. அவையெல்லாம் விஸ்தரபயத்தால் இங்கு விடவேண்டிற்று.

மணவாள மாமுனிகளும் ஆர்த்திப்ரபந்தத்தில் இவ்வர்த்தத்தை அருளிச் செய்தார். ''அநதி க்ரமணீயம் ஹிசரக்ரஹணம்'' என்கிறபடியே ஈசுவரனுக்கு சரண ஸ்தாநியர்களான, ஆசார்யர்களுடைய வரணம் ஈசுவரனுக்கு அநதி க்ரமணீயமாம். ஆகையால் ப்ரதமபர்வமான பகவத்ஸமாசிரயணத்துக்குப் பல ஸித்தியில் கண்ணழிவுண்டேயாகிலும், ஆசார்ய ஸமாசிரயணத்துக்குக் கண்ணழிவு சொல்ல வழியில்லை.

இப்படி இருந்துள்ள ஆசார்யநிஷ்டனுக்கு ஆசார்யமுகோல்லாஸமே புருஷார்த்தமாகையால் ததர்த்தமாக நித்யநைமித்திகாதி கர்மங்கள் அவசியம் அநுஷ்டேயங்கள். எல்லா அதிகாரிகளுக்கும் நிஷித்த வர்ஜநம் ஆவசியகம்.

இப்படி இருந்துள்ள ப்ரபத்திநிஷ்டனுக்கு நிஷித்தவர்ஜநம் ஆவசியகம்; கேவலாசிரமீ பக்திநிஷ்டன் இவர்களுக்கும் ஆவசிகயம் ''வர்ஜநீயம் அக்ருத்யந்து ஸர்வேஷாம் கரணைஸ்த்ருபி:'' என்று கரண த்ரயத்தாலேயும் அகிருத்தியத்தைச் செய்யக்கூடாதென, ப்ரமாண மிருப்பதால், அதில் மந்தாதிகள் பாபம் என்கிற புத்தியாலே செய்ய மாட்டார்கள். அப்படி ப்ராமாதிகமாக நேரும் பக்ஷத்தில் அவைகளுக்கு விஹிதங்களான ப்ராய:சித்தங்களை அநுஷ்டிக்கை ஆவசியகம்.

பரமைகாந்திகளான, உத்தமாதிகாரிகள் பகவதநபிமதத்தில் ருசியில்லாதவர்களாகை யாலே நிஷித்த்ததைச் செய்யவேமாட்டார் கள். அப்படி ப்ரமாதிகமாக நேர்ந்தால் ப்ராய: சித்தம் புந: ப்ரபதநமாவது, ப்ரபத்தி ஸ்மரண மாவது ஆவசியகம். ப்ரதிபதோக்த ப்ராய: சித்தம் லோகஸங்க்ரஹார்த்தம் அநுஷ் டேயம்.

### பஞ்ச காலிக கர்மாக்கள்

இந்த பரமைகாந்தியான அதிகாரிக்கு பஞ்ச கால்கங்களான கர்மாக்களுடைய அனுஷ்டானம் ஆவசியகம்: பாஞ்சகாலிக கர்மாக் களாவன:— ஒரு தினத்தை ஐந்து பாகமாக பிரித்து அந்த ஐந்து காலங்களிலே: க்ரமமா யநுஷ்டிக்கப்படுமவையான அபிகமந உபா தாநஇஜ்யா ஸ்வாத்யாய யோகங்களாம்.

அவைகளில் அபிகமனமாவது:—ப்ராஹ்ம முஹூர்த்தத்தில் எழுந்திருந்து, பகவந்நாம ஸங்கீர்த்தனாதிகளைப் பண்ணி, தந்ததாவநாந ஊர்த்துவபுண்ட்ரதாரண ஸந்த்யாவன ஜப முதலானவற்றோடு அர்ச்சாரூபி பகவதபி கமநம் செய்கை.

உபாதாநமாவது:—பகவதாராதனத்துக்கு உபயுக்தங்களான திரவ்யங்களை ஸம்பா திக்கை.

இஜ்யையாவது:— பகவதாராதநம்.

ஸ்வாத்யாயமாவது:—இதிஹாஸ புராண படனம். ததர்த்தவிசாரம், தத்பாடநம், க்ரந்த நிர்மாணம், க்ரந்தலேகநம் இவைகள்.

யோகமாவது:— ஸர்வேசுவரன் ஸர்வ சேஷி; சேதநன் சேஷபூதன் என்று சேஷ சேஷிபாவாநுஸந்தானம். இவைகளுக்கு ப்ர மாணங்கள்.

"ஆமுஹூர்த்தார்த்து வைப்ராஹ்மாத் அந் யூநம் ப்ரஹராரமத்ஸுநீ;
ஸ்நநார்ச்சநஜபஸ்தோத்ர பாடை: காலம் விநோதயேத்
உபாதாந விதிம்வக்ஷ்யே யோக்யா யோக்ய விபாகத:
த்விதியகால கர்த்தவ்யம் வக்ஷ்யாமி முநி புங்கவ."
என்று தொடங்கி,
"யதாசாஸ்திரமுபாதாநம் ஆசரந் போக நிஸ்ப்ருஹ:
பகவத்கர்ம லாபேநத்ருப்தோயஸ் ஸுஸு கீபவேத்."

என்பனவாம்.

இனி, பகவதாராதநரூபமான இஜ்யை யின் ப்ரகாரம் மேல் விவரிக்கப்படும், "பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யந்மே பக்த்யா ப்ரயச் சதி" இத்யாதிகளாம்.

ஸ்வாத்யாய யோகங்களுக்கு ப்ரமாணம்:
"ஸச்சாஸ்த்ர பாடபடநை: சாஸ்த்ரார்த்த ஸ்யாபிசிகயா:
சாஸ்த்ரார்த்த ஜ்ஞாபநைர்வாபி சிக்ஷயேத் சாஸ்த்ரமாதாரத்
வ்யாக்யாநைர் லேகநைர்வாபி க்ருந்த நிர் மாண கர்மணா
சிஷ்யாணாம் சிக்ஷயாவாபி ஸ்வாத்யாயார்த் தாய உச்யதே."

என்றும்,

"ஈத்ருச: பரமாத்மாயம் ப்ரத்யகாத்மா ததேத்ருச.
தத்ஸம்பந்தா நுஸந்தநம் இதியோக: ப்த சகீர்த்தி:"

என்றும் சொல்வனவாம்.

இப்படியிருந்துள்ள அபிகமந, உபாதாந, இஜ்யா, ஸ்வாத்யாய, யோகங்கள் கைங்கர்ய புத்யா அநுஷ்டேயங்கள். இவைகளை முழுதும் அநுஷ்டிக்க சக்தியில்லாமலிருந்தால் இந்த ஐந்து கர்மாக்களுக்குள் அநுஷ்டிக்க முடிந்த ஏதேனும் ஒரு கர்மாவை அநுஷ்டித்தால் போரும். இஜ்யா ரூபமான பகவதாராதனமே ப்ரதானமாயிருக்கிற அதிகாரிக்கு, "இஜ்யா ஏவது கேவலம்" என்கிற வசனத்தாலே அந்த பகவதாராதனமே அந்த பாஞ்சகாலிக கர்ம ஸ்தாநாபந்நம்.

அல்லது ஸ்வாத்யாயமாவது, யோகமா வது, அநுஷ்டிக்கும் பக்ஷத்தில் அதுவே பாஞ்ச காலிக கர்மஸ்தாநாபந்நமாகலாம். இதனை, "ஸ்வாத்யாயே நாபிவிதுஷ: ஸ்வயோகேநாபி வா க்ருதம்" என்கிற ப்ரமாணத்தாற் கண்டு கொள்வது.

ஆசார்ய நிஷ்டனுக்கு ஆசார்யராத னமே பாஞ்சகாலிக கர்மஸ்தாநாபந்நம். அப் படியே பாகவதாராதந நிஷ்டனுக்கும் பாகவ தாராதநமே தத்ஸ்தாநாபந்நம். இதற்கு ப்ர மாணம். "பூஜநேந குரோர்வாபி ஸதாம்வா பரிவேஷணைத்" என்பதாம்.

இப்படி இருந்துள்ள அதிகாரிக்கு ஸ்நாநம் முதலான நித்ய கர்மாக்களுடைய அநுஷ் டான க்ரமம் நிரூபிக்கப்படுகிறது. அதில்

பகவதாராதன உபயுக்தமாகவே, ஸ்நாநம் அநுஷ்டேயம். பதிவ்ரதைகளான ஸ்திரீகளுடைய தேஹம் பர்த்தாக்களுக்கு எப்படி போகோபகரணமோ அப்படியே பாகவதாளுடைய தேஹமும் ஈசுவரனுக்கு போகோபகரணம். அதற்குப்ரமாணம்:"ஸதீநாம்யோஷிதாம் தேஹ: யதோப கரணம் பவேத், பர்த்ரூணும் பகவத் பக்ததேஹ: தத்வத் ஜகத்குரோ:" என்பதாம்.

அந்த ஸ்நாநம் நித்யமென்றும், நைமித்திகமென்றும் காம்யமென்றும் மூன்று வகையாயிருக்கும். அதில், நித்யஸ்நாநம் பகவதாராதநோபயோகி யாகையாலே நித்யமநுஷ்டேயம். நைமித்திகமாவது. சண்டாளாதி அசுத்த ஸ்பர்சமுண்டாளுல், அதற்கு ப்ராய: சித்தமாக அவசியமநுஷ்டேயமான ஸ்நாநம். அங்ஙனமன்றிக்கே பகவதுத்ஸவாந்தத்தில், அவப்ருத நிமித்தமான ஸ்நாநம்.

தாஸர்களாயிருக்கிறவர்களுக்கு, ஸ்வாம்யுத்ஸவ உபலாளனம் கிங்கர தர்மமாகையாலே, பரமைகாந்திகளுக்கு அநுஷ்டேயம். அப்படியே ஆழ்வார், ஆசாரியர்களுடைய உத்ஸவாந்தத்தில் அவப்ருத நிமித்தமான ஸ்நாநம் அநுஷ்டேயம். இதற்கு ப்ரமாணம். "உத்ஸவாவப்ருதே விஷ்ணோ: ய:ஸ்நாயாத் விஷ்ணுநாஸஹ, ஸவைகுண்டம் வ்ருஜேத்லோகம் நசேத் நரகமாம்நுயாத்" இதன் அர்த்தம். விஷ்ணுவோடே உத்ஸவாவப்ருதத்தில், ஸ்நாநம் எவன் பண்ணுகிருனே அவன் வைகுண்டத்தை அடைவன். அப்படிச் செய்யாத பக்ஷத்தில் நரகத்தை அடைவன் என்பதாம். பக்தோத்ஸவத்தைப் பற்றிய ப்ரமாணங்களில்,

'பக்தோத்ஸவம் ததாராத்ரௌகுர்வீத ஸுக
பாவஹம்
அந்தேசாவப்ருதம் குர்யாத் புண்யதோயே
மநோஹரே
ப்ரபடேத் விஷ்ணுஸூக்நாநி பாவமாநைர்
விசேஷத:
விசிஷ்டை: வைஷ்ணவைதஸ்ஸார்த்தம் ஸ்நாத
வ்யம் தத்ரபக்தித:"

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இதன் அர்த்தம், மங்களகரமான பக்தோத்ஸவத்தை ராத்திரியில் பண்ணக்கடவன். முடிவில் புண்யதீர்த்தத்தில் அவப்ருத ஸ்நாநம் பண்ணக்கடவன். விஷ்ணுஸூக்தம், பாவமாநிகள் இவைகளைப் படிக்கக்கடவன். அதுவும் விசிஷ்டர்களான வைஷ்ணவர்களோடு, பக்தியோடே அந்த ஸ்நாநம் கர்த்தவ்யம் என்பதாம்.

உபராக ஸ்நாநம் லோகஸங்க்ரஹார்த்தம் ஆவசியகம். அது தவிர ஸேதுஸ்நாநம் ஸமுத்திர ஸ்நாநம் கங்கை முதலான தீர்த்தங்களில் ஸ்நாநம் இவைகள் அகரணேப்ரத்யவாயமல்லாதனவாகையாலே காம்யமாம். ப்ராத: காலங்களில் அந்த தீர்த்தங்கள் ஸந்நிஹிதங்களாயிருந்தால், அவைகளில் ஸ்நாநம் பண்ணக்கடவன்.

அங்ஙனமன்றிக்கே, "யத்ரபாகவதா ஸ்நாநம் குர்வந்தி விமலாசயா தத்தீர்த்தம் அதிகம் வித்தி ஸர்வபாபப்ரணுசநம். ஸ்நா தஞ்சகுருணுயத்ர தீர்த்தம் நாந்யத்ததோதிகம்." என்பதனுல், பாகவதாள் நீராட்டம் செய்த தீர்த்தமும் ஆசார்யனுலே பரிக்கிரஹிக்கப்பட்ட தீர்த்தமும் மிகவும் போற்றப்பட்டன.

கங்கை முதலான புண்யதீர்த்தமும் பாகவதாசார்ய பரிக்ருஹீத தீர்த்தமும் சேர்ந்திருக்குமிடத்தில் பாகவதாசார்ய பரிக்ருஹீத தீர்த்தத்திலேயே, ஸ்நாநம்பண்ணவேணும். அங்ஙனமன்றிக்கே கிரியைக்கு அங்கமான ஸ்நாநமும், மலநிவ்ருத்தியர்த்தம் செய்கிற ஸ்நாநமும், கிரியா ஸ்நாநமும் இவைகளும் அநுஷ்டேயங்கள்.

தந்த தாவனம் முதலான வ்யாபாரங்களுடைய நிரூபணம் விஸ்தரபயத்தாலே இங்குச் சொல்லப்படவில்லை. அவற்றையெல்லாம் மற்ற தர்மசாஸ்திரங்களில் நிரூபித்திருப்பதாற் கண்டுகொள்க.

இனி ஊர்த்துவ புண்ட்ர தாரணம் நிரூபிக்கப்படும்.

### ஊர்த்வ புண்ட்ரம்

இனி ஊர்த்துவ புண்ட்ர தாரணம் நிரூபிக்கப்படுகிறது. ஊர்த்துவ புண்ட்ரத்துக்கு நிரவ்யம், "விஷ்ணேருத்ருத யாக்ஷேத்ரே பர்வதாக்ரெள ப்ரசஸ்தயா ம்ருதோர்த்துவ புண்ட்ரம்" என்றும், சுவேத ம்ருத்திகோப நிஷத்தில் சுவேத மிருத்திகையே சிறந்ததென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

அந்த புண்ட்ரம் ஹரிபாதாகிருதியாகவும், நடுவில் அந்தராளமுடையதாகவும் அடியில் பாதத்தோடு கூடியதாகவும் தரிக்கக் கடவன். இவைகளுக்குப் பிரமாணம். ஆதர்வணத்தில், "ஹரே: பாதா க்ருதிம் ஆத்மநோ ஹிதாய

மத்யேச்சித்ரம் ஊர்த்துவ புண்ட்ரம்யோ தாரயதி ஸபரஸ்ய ப்ரியோ பவதி'' என்றும், ''அத ப்ரதிபத்ய நாரதோப்ருஹ்மாண மந்வ யுங்த'' என்று ஆரம்பித்து, ''தத்ரஹிதம் கர்ம விபலம் ரக்ஷாம்ஸி க்ருஹ்ணீயு:'' என்றும், இதற்கு அநந்தரம், ததேவம் அப்யுக்தம் பவதி நாசாதி கேசாந்தம் ஊர்த்துவ புண்ட்ரம் விஷ்ணோ ஸ்திதஸ்ய சரண த்வயா க்ருதிம் ஏகாங்குல பாததரோஸ்து மூலேததுத்பந்நே த்வேசாகேததைவ மத்யாவகாசோ அங்குளா தந்யூந: ஸஸ்ரீப்ரதிஷ்டாயை ஸ்ரீர் ஹரித்ரா'' என்றும் சொல்லப்படுகிறது.

இதற்கு அர்த்தம்:— எம்பெருமானுடைய திருவடி போன்ற நடுவில் அந்தராளமுள்ள ஊர்த்துவ புண்ட்ரத்தை யாவனொருவன் தரிக்கிருனே, அவன் பரனுக்குப் பிரியனுனவன் என்றும், நாரதர் நமஸ்கரித்து ப்ரஹ்மாவை வினவுகிருர் என்று தொடங்கி, ஊர்த்துவ புண்ட்ரமில்லாதவன் செய்த கர்மம், நிஷ்பலம்; ராக்ஷஸர்கள் பறித்துக்கொள்வார்கள் என்று சொல்லிவிட்டு, நாஸம் முதல் கேசம் வரை, நின்று கொண்டிருக்கிற விஷ்ணுவினுடைய இரண்டு திருவடிகள் போன்ற ஆதாரத்தையுடையதென்றும், ஓரங்குலமுள்ள பாதமாகிற அடிமரத்திலுண்டான இரண்டு கிளைகள் போன்றதென்றும், நடுவில் அந்தராளம் ஓரங்குலத்துக்குக் குறையாமலிருக்க வேண்டுமென்றும், அவ்விடத்தில் லக்ஷ்மியினுடைய ப்ரதிஷ்டையின் பொருட்டு, ஸ்ரீசூர்ணத்தைத் தரிக்கவேண்டுமென்றும் சொல்லப்படுகிறது.

அப்படியே பராசர ஸம்ஹிதையில், ''நாஸாதௌ த்வ்யங்குலம் பாதம் மத்யம் ஸார்த்தாங்குலம் ந்யஸேத், பார்சுவமங்குல மாத்ரந்து, ஸுஸ்பஷ்டம் தாரயே த்விஜ:'' என்று சொல்லப்படுகிறது. இதற்கு அர்த்தம், நாஸையினுடைய அடியில் இரண்டங்குலமுள்ள பாதத்தை தரிக்கக் கடவன்; நெற்றி நடுவில் அந்தராளம், ஒன்றரை யங்குலமிருக்க வேண்டும்; பார்சுவங்களில் ஒரு அங்குல அகலமிருக்க வேண்டும்; இப்படி ஸ்பஷ்டமாக தரிக்கக் கடவன் என்று சொல்லப்படும். மற்ற இடத்திலும், ''கூர்ச்ச மத்யே ஸ்கேத்பாதம்'' என்று சொல்லப்படுகிறது. கூர்ச்சமாவது புருவங்களுடைய மத்திய பாகம்.

தீபாகிருதி யென்றும், கூர்மாகிருதி என்றும், வேணுபத்ரா கிருதியென்றும், ஹரி பாதகிருதியென்றும், சொல்லப்பட்டவைகளில் ஹரிபாதகிருதியான புண்ட்ரமே ப்ரசஸ்தமென்று சொல்லப்பட்டிருக்கிறது; அந்த ஹரி பாதகிருதியென்றது பாதத்வயாகிருதி என்று சொல்லப்பட்டிருக்கிறது.

''நாஸதௌ த்வ்யங்குலம் பாதம்'' என்கிற வசனத்தாலே பாதத்வயாகிருதியான புண்ட்ரத்திற்கு, பீடஸ்தாநீயமான பாதம் நாஸாமூலத்திலிருக்க வேண்டுமென்றும் சொல்லப்படுகிறது. சில பிரமாணங்களில் பாத விதாநம் பாத த்வயாகாரம் சொல்லப் படாமலிருந்த போதிலும், 'அநுக்தம் அந்ய தோக் ராஹ்யம்' என்கிற ந்யாயத்தாலும், குணோபஸம்ஹார ந்யாயத்தாலும் பாத ஸஹிதமாய் பாதத்வயாகிருதியான புண்ட்ரமே தார்யமென்று ஏற்படுகிறது.

மேலும் ப்ராசீனங்களான திவ்யதேசங்களிலும் முதலியாண்டான், குமாரரான கந்தாடையண்ணனுலே பிரதிஷ்டிதமான பாஷ்யகாரருடைய, அர்ச்சாவிக்ரஹத்தின் லலாடத்திலும், இந்த புண்ட்ரமே ஏற்பட்டிருக்கிறது.

ஸச்சரித்ர ரக்ஷையிலும், தேசிகன் ஹரி பாதாகிருதியான புண்ட்ரமே ப்ரசஸ்தமென்றும், ''நாஸிகா மூலமாரப்ய'' என்று, அந்த புண்ட்ரமும் நாஸிகாமூலம் முதல்ருக்க வேண்டுமென்றும், அருளிச் செய்திருக்கிருர். ஆகையால், பாதஸஹித ஹரிபாதாகிருதி புண்ட்ரம் ப்ரசஸ்தமென்று ஏற்படுகிறது.

மற்ற புண்ட்ரங்களுக்கும் ப்ரமாணங்களிருக்குமாகில், யதா ஸம்ப்ரதாயம் அந்தந்த புண்ட்ரதாரணம் அநுஷ்டேயம். அந்த புண்ட்ரங்களாவது, துவாதசபுண்ட்ரங்களென்றும் த்ரயோதச புண்ட்ரங்களென்றும் பக்ஷத்வயமிருக்கிறது. அவைகளில் த்வாதச புண்ட்ர தாரணமே ப்ரசஸ்தமென்று ஸச்சரித்ர ரக்ஷையில் ஏற்படுகிறது. அப்படியிருந்துள்ள த்வாதசபுண்ட்ர தாரணம் பரமைகாந்திகளுக்கு ஆவசியகம். அநுகல்பமாக லலாடபுண்ட்ர தாரணமும், பின்புறத்தில் புண்ட்ரதாரணமும், சொல்லப்பட்டிருக்கிறது. ''லலாடகேசவம் த்யாயேத்'' என்கிற ப்ரமாணப்படி, அந்தந்த புண்ட்ரங்களில் கேசவாதி த்வாதச மூர்த்திகளையும், அம்ருதோத்பவாதி தேவி விசிஷ்டங்களாக த்யானம் பண்ண வேணும். அந்தராளத்திலும், ஸ்ரீசூர்ண தாரணம் ஆவசியகம்.

இவைகளுக்குப் ப்ரமாணம் பாத்மத்தில் உத்தரகண்டத்தில் ''ஏவம் த்வாதசபுண்ட்ராணி ப்ராஹ்மண: ஸததம் தரேத்'' என்றும் ''தத்தத் புண்ட்ரேஷு தந்மூர்த்திம், த்யாத்வா மந்த்ரேண தாரயேத், அந்தராளேஷு ஸர்வேஷு ஹரித்ரம் தராயேத் ஸ்ரீயம்'' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இனி ஸர்வேசுவரனையும், ஆசார்யன் பாகவதாள் இவர்களையும் தினந்தோறும் தெண்டம் ஸமர்ப்பிக்கிறதும், பரமேகாந்திகளுக்கும் அவசியகம். அது ஸகிருத்தாகவும், பல முறை அஸ்கிருத்தாகவும் ஒருமுறை அநுஷ்டிக்கப்படுகிறது. இதில் அஸகிருத் வந்தனத்துக்கு ப்ரமாணம் நிருபிக்கப்படும்.

**தண்டனிடுதல்**

ஸர்வேசுவரனையும், ஆசார்யனையும், பாகதவரையும் தினந்தோறும் தண்டன் ஸமர்ப்பிக்கிறதும் பரமைகாந்திகளுக்கு ஆவசியகம். அது ஸகிருத்தாகவும். அஸகிருத்தாகவும் அநுஷ்டிக்கப்படுகிறது. இவ்விஷயத்தில் ஸகிருத் வந்தனத்துக்கு ப்ரமாணமில்லையென்று, சிலர் அதை உபேக்ஷிப்பதால் அது ப்ரமாணசித்தமென்பது இங்கு விவரிக்கப்படுகிறது.

வந்தனம், காயிக ப்ரபத்தி ரூபமான உபாயமாயும், பலரூபமாகமிருக்கும் '' நீத்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா:'' என்பது பலரூபமாயிருப்பதற்கு ப்ரமாணமாம்.

உபாய ரூபமான வந்தனம், ''ஸக்ருதேவஹி சாஸ்த்தார்த்த:'' என்கிற வசனப்படி ஸகிருத்தாகவே அநுஷ்டிக்க வேணும்.

பலரூபமான வந்தனம் அநேகாவ்ருத்தி விசிஷ்டமாகவுமிருக்கலாம். ஆனால் பன்னிரண்டு தரம் என்றும், இரண்டு தரம் என்றும், நாலு தரம் என்றும் ஸங்கியாவிதி ஏற்படமாட்டாது.

''அபரிமிதகிருத்வஸ்தோம:' என்கிற சுருதியின்படியும், ''கைகளாலாரத் தொழுது'' என்றும், ''நம:புரஸ்தாத் அதப்ருஷ்டதஸ்தே'' என்றும் சொல்லுகிற ப்ரமாணப்படியும் ராகப்ரேரிதனாய்க் கொண்டு அஸங்கியேயமான வந்தனத்தையும் அநுஷ்டிக்கலாம். ஆனாலும் ஸ்துதியில், ஸக்ருத்தே நம:' என்று ஸகிருத் வந்தனம் சொல்லப்பட்டிருக்கிறது.

தேசிகன் ஸ்தோத்ரபாஷ்யத்தில், ''நமோ நமோ வாங்மந்திராய பூமயே'' என்கிற சுலோக வ்யாக்கியாநத்தில், அந்த நமோ நம: என்கிற த்விருக்தி ''பௌந:புந்யம் அலங்க்ருதி:'' என்கிற வசனப்படி, ஆதரத்தாலேற்படுகிறதென்றும், ''ஏகோபிஸு க்ருஷ்ணே ஸுக்ருத ப்ரணாம:'' என்கிற வசனப்படி ஸக்ருதாவ்ருத்தி ப்ரணாமமே உசிதமென்றும் அருளிச் செய்திருக்கிறார்.

அதுவுமின்றி, யதிராஜஸப்ததியில் ''ப்ரணாமம் லக்ஷ்மணமுநி: ப்ரதி க்ருஹ்ணாது மாமகம்'' என்பதில், 'ப்ரணாமம்' என்று ஏகவசனமாக அருளிச் செய்திருக்கிறபடியாலும், ஏகவார ப்ரணாம மேற்படுகிறது. ஆனால் அது ஜாத்யேகவசனமென்று சொல்லும்பக்ஷத்தில் ''ஆக்ஷேபத: ப்ராப்தா தாபிதா நிகஸ்யைவ க்ராஹ்யத்வாத்'' என்கிற ந்யாயத்தாலே 'ப்ரணாமாந்' என்று பஹுவசனத்தாலேயே அருளிச் செய்திருக்கலாம். அப்படிக்கில்லாமையாலும், ஸ்தோத்ர பாஷ்யத்தில் ஸக்ருதாவ்ருத்தி ப்ரணாமமே உசிதமென்று, அருளிச் செய்திருப்பதாலும், ஏகவாரப்ரணாமம் தேசிகனுக்கு அபித்மென்று தெரிகிறது.

ஸக்ருத்வந்தனம் நிஷித்தம்; அஸக்ருதாவ்ருத்தி வந்தனமே விஹிதமென்று சொல்லும் பக்ஷத்தில் காயிகப்ரபத்திரூபமான வந்தநத்திலேயும் அஸக்ருதாவ்ருத்தி ஏற்படும். அப்போது ''ஸக்ருதேவஹி சாஸ்த்ரார்த்த:'' என்கிற ப்ரமாண விரோத மேற்படும். ப்ரதிதிநம் அபிகமந காலத்தில், 'புத்ர: ப்ரேஷ்யஸ்தத சிஷ்ய: ஆத்மாநஞ்ச நிவேதயேத்'' என்கிற சாண்டில்ய வசனப்படி, ப்ரபத்திவிஹிதையால் அப்பொழுது அஸக்ருதாவ்ருத்தி கூடாது.

அப்படியே ஆசார்ய விஷயத்திலும் பாகவத விஷயத்திலும் ப்ரதிதிந மேற்படுகிற அபசாரக்ஷாரபணத்திற்காக ஏற்படுகிற வந்தநத்திலும் அஸக்ருதாவ்ருத்தி கூடாது. வைகாஸநத்தில் ''ப்ரணாமம் தண்டவந் நமஸ்காரம் பஞ்ச ஏகம் வா குர்யாத்'' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஸாத்வத தந்த்ரத்தில் ''ப்ரதக்ஷிண ப்ரணாமாந் யுக்மாந் குர்யாத் விசக்ஷண:'' ''ஏக த்ரி பஞ்ச ஸப்தாதிகணநா விஷயஞ்சயத்'' என்றிருக்கிறது, சுருதியிலும் ''ஸக்ருத்தே நம:'' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில் யுக்மத்வாயுக்மத்வங்களுக்கு ஏகத்ர ஸமாவேசம் கூடாமையாலே ஸமுச்சயம் கூடாது: விகல்பமே சொல்லவேணும்.

"த்ரீந் வ்ருணீதே ந சதுரோவ்ருணீதே" என்கிற விடத்தில் மூன்று பேரை வரிக்க வேணும்; நாலு பேரை வரிக்கக்கூடாது என்று சொல்லியிருக்கிறபடியால், மூன்று பேரை வரிக்கவேணும் என்றதனுலேயே நாலு பேரை வரிக்கலாகாது என்றேற்படுகிறபடியால், 'ந சதுரம்வ்ருணீதே' என்பது விதியன்று; அநுவாதம் என்று சொல்லுமாப் போலே, ஏகப்ரணமம் விதிக்கிறவிடத்திலேயும், அதிக ஸங்க்யாவ்ய வச்சேதம் ஏற்படும். அப்படியே 'த்ரீந்' என்கிறவிடத்திலும் அதிக ஸங்க்யா வ்யவச்சேதமேற்படும். ஆகையால் ஏகவார ப்ரணமத்திற்கும் அநேகவார ப்ரணமத்திற்கும் விகல்பமே சொல்ல வேண்டும். அதில் ப்ரபத்திநிஷ்டர்களுக்கு அடிக்கடி பகவத் பாகவத விஷயங்களிலேற்படுகிற அபசார க்ஷாபணத்திற்காக காயிக ப்ரபத்திரூபமான வந்தன மேற்படுகிறபடியால், அந்த வந்தனம் ஸக்ருதாவ்ருத்தமாகவே இருக்கவேண்டும். பலரூபமான வந்தனம் அஸக்ருதாவ்ருத்தமாயிருக்கலாம். ஆனுல் ஸங்க்யா நியமமில்லை. வந்தன ஸாமாந்யமே ஸக்ருத்தாயிருக்கக்கூடாது என்று சொல்லுவது ப்ரமாண விருத்தம்.

பாஞ்சராத்ர ரக்ஷை முதலிய இடங்களில் சதுஸ் ஸங்கியை முதலான ஸங்கியாவிதாநம் ப்ரபந்நேதர விஷயம். "விப்ராணும் ஜ்நாநதோஜ்யேஷ்ட்யம்" என்கிற மநுவசனத்தின் படிக்கும், "வைஷ்ணவோ வைஷ்ணம் த்ருஷ்ட்வா" என்கிற வசனப்படிக்கும், ப்ராஹ்மணர்களுக்கு ஜ்ஞாநத்தாலே உத்கர்ஷமும், வைஷ்ணவர்களுக்கு பரஸ்பரம் வந்தநீயத்வமும், சொல்லப்பட்டிருப்பதால் வய:க்ரம நியமமில்லை.

சிஷ்யாசார்யர்களில் ஆசார்யன் சிஷ்ய விஷயத்தில் வந்தனம் செய்யக்கூடாதென்றும், பிதாவானவன் புத்ரனை வந்தனம் செய்யக்கூடாதென்றும், அப்படியே வயோதிகர்கள் இளம்வயதினரை வந்தனம் செய்யக்கூடாதென்றும் இருந்தபோதிலும், விசேஷித்து ஜ்ஞானுதிகர்களாயிருந்தால், அவர்களுடைய ஜ்ஞானுதிக்கியத்தைக் கண்டு பரவசர்களாய் வந்தனம் செய்வது பல விடங்களிலிருப்பதால் அதுவும் உபபன்னம். இவைகளுக்குப் ப்ரமாணமும் அநுஷ்டானமும் நிரூபிக்கப்படும்.

"பித்ருநத்யா பயாமாஸ சிசுராங்கிரஸ: கவி:, புத்ரகா இதிஹோவாச ஜ்ஞாநேந பரிக்ருஹ்யதாந்"—இதற்கு அர்த்தம்:— சிசுவாயிருக்கிற ஆங்கிரஸர் பிதிர்க்களை அத்தியயனம் பண்ணிவைத்தார்; தான் புத்திரனுயிருந்த போதிலும்— வித்யா ப்ரதானம் பண்ணின படியால், பிதிர்க்களைப் புத்திரர்களே என்று கூப்பிட்டார் என்பதாம்.

திருநெடுந் தாண்டகத்தில் "வளர்த்ததனுற் பயன்பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினுளே" என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்தார்.

ரகுவம்சத்தில், ராவணவதாநந்தரம், பெருமாள் புஷ்பக விமானத்தில் எழுந்தருளி, அயோத்தியை யடையும்போது பரதாழ்வான் பெருமாளைத் தண்டம் ஸமர்ப்பித்த பின்பு "துர்ஜாதபந்து: அயம்ருக்ஷஹரீசுவரோ மே பௌலஸ்த்ய ஏஷ ஸமரேஷு புர: ப்ரஹர்த்தா, இத்யாதரேண கதிதௌ ரகுநந்தநேந வ்யுத்க்ரம்ய லக்ஷ்மணவுபௌ பரதோ வவந்தே" என்று சொல்லப்பட்டிருக்கிறது. (இது பெருமாள் பரதாழ்வானைக் குறித்து அருளிச்செய்யும் வார்த்தை) இதன் அர்த்தம்:– ருக்ஷங்களுக்கும், வானரர்களுக்கும், மஹாராஜாவான ஸுக்ரீவன் எனக்கு ஆப்தபந்து; இந்த விபீஷணுழ்வான் யுத்தங்களில் முன்னின்று யுத்தம் பண்ணுகிறவர்;' என்று சொல்லிய வார்த்தையைக்கேட்டு மஹாராஜரையும், விபீஷணுழ்வானையும் பரதன் தெண்டனிட்டார். இளைய பெருமாளை, தனக்குப்பின் பிறந்தவரென்கிற கிரமத்தை அதிக்ரமித்து, அவருக்குப் பெருமானிடத்திலிருக்கும் பக்த்ய திசயத்தைக்கண்டு பரவசராய் தெண்டனிட்டார் என்பதாம். இப்படியே அதன் வ்யாக்கியாதாவான மல்லிநாதர், வ்யாக்யானம் பண்ணியிருக்கிறுர். ஸங்கல்ப ஸூர்யோதயத்தில், விவேகன், ஸுமதி, விஷ்ணுபக்தி இவர்களுடைய ஸமாகமத்தில் விஷ்ணுபக்தியைப் பார்த்து, நம்மால் ப்ரதிஷ்டிதையாயிருந்த போதிலும் ஈசுவரனுடைய மூர்த்திபோலிருக்கிற விஷ்ணு பக்தியை ஸுமதியே! நீயும் நமஸ்கரிக்கவேணும் என்று ஸுமதி நமஸ்கரிக்கும் படி செய்துவிட்டு, தானும் நமஸ்கரித்த பிறகு விஷ்ணுபக்தியும், எனக்கு பூர்வஜனுயிருக்கிற உமக்கு ப்ரதிவந்தனம் பண்ணுகிறேன் என்றிருக்கிறது. (இது பத்தாவது அங்கத்திலிருக்கிறது) அந்த வாக்யங்கள் வருமாறு:—

"(ஸ்வாகதம் மஹாப்ரபாவே ஏஷா மம வந்தநீயா (ப்ரகாசம்) விதிவச நியதேந விஷ்

ணுபக்தே ப்ரணிபதநெந வயக்ரமாதிகோபி, உசிதமுபசராமி விச்வமாந்யாம் ஹரிபதபத்ம ரதிம் பராமஹம்த்வாம். ஸமதிம் விலோக்ய ப்ரியேத்வமப்யேநாம் அஸ்மத் ப்ரயுக்த ப்ர திஷ்டாமபி, ஆதிபுருஷ மூர்த்திமிவ ப்ரணந்து மர்ஹஸி, விஷ்ணுபக்தி: ஸப்ரசரியம் மஹா ராஜ அநாதி ஸம்ஸார ஸாகர நிமக்நம் அஸ்மத் குலபதிம் புருஷமுத்ருதவதே பூர்வ ஜாய பவதே ப்ரதிப்ரணமம் அபிரோசயாமி'' என்க.

பாரதத்தில், அத்தியந்தம் வயோதிகரான மார்க்கண்டேயர் அதிந்யூனவயஸ்கரான பரா சரரை அவருடைய ஜ்ஞாதிக்கத்தைப் பார்த்து நமஸ்கரித்தாரென்று சொல்லியிருக்கிறது. இதை அநுஸரித்தே ஈட்டிலும், ''அம்மணி யாழ்வான் சிஷ்யனைத்தெண்டனிட நிற்கு மாம்'' என்றருளிச் செய்திருக்கிறார். ஒருகால் ஸ்ரீபாஷ்யகாரர் பஹுசிஷ்யர்களுடன் எழுந்த ருளும்போது, பாஷ்யகாரருக்கு ஆசார்யரான பெரியநம்பி பரவசராய் தெண்டம் ஸமர்ப்பித் ததாக ஆசார்ய ஸூக்தியுமிருக்கிறது. ஈசுவர னும் பாகவதவிஷயத்தில் சேஷவ்ருத்தியை அபிஷ்டிக்கிறானென்று தேசிகன் அருளிச் செய் திருக்கிறார். ஈசுவரனுக்கு ஸர்வ சேஷித்வம் ஸ்வரூபமாயிருந்த போதிலும், ஸார்வபௌ மனை ராஜாவுக்கு அபிமதையான மஹிஷி விஷயத்தில் அநுவர்த்தன ப்ரணமாதிகள் ஏற் பட்டிருப்பது போல் அத்யந்தாபிமதையான பிராட்டியைக்காட்டிலும், அத்யந்தாபிமதர் களான பாகவதர்களிடத்தில் அநுவர்த்த நாதிகள் ஏற்பட்டிருக்கின்றன.

இந்த விஷயம் பாகவதத்தில் ஏசாதச ஸ்கந்தத்தில் ''நிரபேக்ஷம் முநிம் சாந்தம் நிர் வைரம் ஸமதர்சிநம், அநுவ்ரஜாம்யஹம் நித்யம் பூயேத்யங்க்ரி ரேணுபி:'' என்று பக வான் அருளிச்செய்திருக்கிறார். இதன் அர்த் தம்:— ஒன்றிலும் அபேக்ஷையில்லாதவனையும் மநநசீலனையும், சாந்தியோடு கூடினவனையும், ஒருவரிடத்திலும் த்வேஷ மில்லாதவனையும் ஸர்வத்ர ஸமதரிசியாயுமிருக்கிற புருஷனை அவனுடைய பாததூளியாலே நான் பரிசுத்த னாகும் பொருட்டுப் பின் செல்கிறேன் என்ப தாம்.

இப்படியே ஆழ்வார் விஷயத்திலும் சேஷ சேஷி பாவம் மாறுடி ஸர்வேசுவரன் ஸம்ஸலே ஷித்ததாக ''உருகுமால் நெஞ்சம்'' என்கிற திருவாய்மொழியில் வ்யக்தமாக இருக்கிறது.

ஆதலால் விதியில் காட்டிலும் ராகம் ப்ர பலமாகையாலே, அந்த ராக ப்ரேரிதராய் சேஷசேஷிபாவம் மாறுடி பாகவதர்கள் பரஸ் பரம் இருப்பது ப்ரமாணங்களாலும் ஆசாரத் தாலும் ஸித்தம். ஆச்ரமம், வயஸ்ஸு, மற்ற உத்கர்ஷ ஹேதுக்கள் இவைகளெல்லாவற் றையுங் காட்டில் ஜ்ஞானமே உத்கிருஷ்டமா கையால், அந்த ஜ்ஞானத்தாலேயே ப்ராஹ் மணர்களுக்கு ஜ்யைஷ்ட்யம் ஏற்படுமென்று மனுஸ்மிருதியில் சொல்லியிருப்பதும் கண்டு கொள்க.

அப்படியே ''வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா தண்டவத் ப்ரணமேத் புவி, தயோர்மத்யே கதோ விஷ்ணு:'' என்கிற ப்ர மாணத்திலும் வைஷ்ணவர்கள் இருவருடைய ஸமாகமத்தில் நடுவே ஸர்வேசுவரன் எழுந் தருளியிருப்பதாகச்சொல்லியிருப்பதால், பரஸ் பரம் இவர்கள் வந்தனம் பண்ணிக்கொள்வதும் ஸர்வேசுவானிடத்திலேயே சேரும்.

அங்ஙனமன்றிக்கே ''ஜங்கம ஸ்ரீவிமாநாநி ஹ்ருதயாநி மநீஷிணாம்'' என்கிற ப்ரமாணத் தின்படி ஈசுவரன் எழுந்தருளியிருக்கும் ஜங் கம விமாநங்களாகையாலே பரஸ்பரம் வந்த நீயர்கள்.

ஆதலால் ஸ்ரீவைஷ்ணவர்கள் பரஸ்பரம் வந்த நீயர்கள் என்பது நிரூபிக்கப்பட்டது. மேல் வந்தன விஷயத்தில் ஜாத்யாச்ரம நியம மில்லை என்பது நிரூபிக்கப்படும்.

### வந்தன விசாரம்

வைஷ்ணவர்களுடைய பரஸ்பர வந்தன விஷயத்தில் வப:க்ரமத்தால், ந்யூநாதிக்க பாவம் இல்லை என்று நிரூபிக்கப்பட்டது.

இனி, உத்தமாசிரமிகளுக்கு க்ருஹஸ்தர் கள் வந்தநீயர்கள் அல்லர் என்று சில ஸம்ப்ர தாயஸ்தர்களும், உத்தமாசிரமிகளாயிருந்த போதிலும், ப்ரஹ்மவித்துக்களாயிருக்கிற வைஷ்ணவர்கள் விஷயத்தில் ஆசிரமாதிக்க புத்தியாலே வந்தனம் செய்யாமலிருப்பது அநுசிதமென்று சில ஸம்ப்ரதாயஸ்தர்களும் சொல்லுகிறார்கள்.

இவ்விரண்டு பக்ஷங்களுள் வந்தனம் செய்யக்கூடாது என்பதற்குப் ப்ரமாணம். ''த்ரயஏவயதேர் வந்த்யா:'' என்று தொடங்கி ''மாதா வ்ருத்தயதிர்ஹரி:'' என்று மாதா வும், தன்னைக் காட்டிலும் அதிக ஸங்கல்பத்தை யுடைய ஸந்யாஸியும், ஈசுவரனும் வந்தநீயர்

கள்: மற்றவர்கள் வந்தநீயர்களல்லர் என்றிருப்பதாலும், "ஸ்வதர்மஸ்தாந் யதீந் வ்ருத்தாந் தேவாம்ச்ச ப்ரணமேத்யதி:, நாந்யமாச்ரமிணம் கஞ்சித் ப்ரசஸ்தம்பி ஸந்நமேத், ப்ரஹ்மவித்யாயுதமபி நநமேத் இதி நி:சிதம்" என்கிற வசனத்தாலும் க்ருஹஸ்தன் ப்ரஹ்மவித்தாயிருந்தபோதிலும் உத்தமாசிரமிகளுக்கு வந்தநீயனல்லனென்றேறப்படுகிறது.

இந்தப் ப்ரமாணங்களைக்கொண்டு உத்தமாசிரமிகளுக்கு க்ருஹஸ்தர்கள் ஒருபோதும் வந்தநீயர்களாகார் என்பது சில ஸம்ப்ரதாயஸ்தர்கள் அபிப்ராயம், இப்படியேற்படும். பக்ஷத்தில், யதிகளாயிருந்த மூன்று திருநாமங்களும் க்ருஹஸ்தராயிருந்த கோபால தேசிகனிடத்தில் விசேஷார்த்தக் கிரஹணத்துக்காக அநேகாவர்த்தி தெண்டம் ஸமர்ப்பித்தார்கள் என்று அந்த ஸம்ப்ரதாயஸ்தர்கள் சொல்லுகிறபடியால், க்ருஹஸ்த ஸாமாந்யம் வந்தநீயமன்று சொல்லுவது கூடாது.

ஆனால் அந்த வசனம் ஆசார்யனல்லாத க்ருஹஸ்த விஷயமென்று சொல்லும் பக்ஷத்தில், ஆசார்ய பரமாசார்ய ஸமாகமத்தில் பரமாசார்யனே வந்தநீயனென்று ப்ரமாணமிருப்பதால், ஆசார்ய பரமாசார்ய வ்யதிரிக்தவிஷயமென்று அந்த வசனத்தைக் கொள்ளவேணும் அதுநிற்க.

"ஆசார்ய வதாசார்ய புத்ரேவ்ருத்தி:" என்கிற ப்ரமாணப்படி ஆசார்ய புத்ரனும் ஆசார்யனைப்போல, நுவர்த்தநீயனுகிறபடியாலும் அப்படியே ஆசார்ய துல்யர்களான ப்ரஹ்ம வித்துக்களும் அநுவர்த்தநீயராகிறபடியாலும் இவர்களைத்தவிர மற்ற க்ருஹஸ்தர்களே வந்தநீயர்களாகார் என்று கொள்ளக்கடவது.

மேலும், "வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா தண்டவத் ப்ரணமேத்புவி" என்கிற வசனப்படி வைஷ்ணவர்கள் பரஸ்பரம் வந்தநீயர்களாகையாலே, வைஷ்ணவ க்ரஹஸ்தர்களும் வந்தநீயர்கள். ஆனால் 'வைஷ்ணவோ வைஷ்ணவம் திருஷ்ட்வா' என்கிற வசனமானது வைஷ்ணவ யதி வ்யதிரிக்த விஷயமென்று சொல்லுவதற்கு, "ப்ரஹ்ம நிஷ்டம் ப்ரசஸ்தமபி" என்கிற வசனம் பிரமாணமாகக் கொள்ளவேணும். அப்படிக்கொள்ளில் ப்ரஹ்மநிஷ்டசப்தமும் ப்ரசஸ்த சப்தமும் அவைஷ்ணவ க்ருஹஸ்த விசேஷ விஷயமாகையாலும், சாமாந்யவசனத்தைக் கொண்டு விசேஷவசனத்தை பாதிப்பது சாமாந்ய விசேஷ ந்யாயவிருத்தம்.

மேலும், "ஆச்ரமாதிக்யபுத்யாய: நநமேத் ப்ரஹ்மவாதிநம்" என்கிற விசேஷ வசனமிருப்பதால் 'வைஷ்ணவோ வைஷ்ணவர் த்ருஷ்ட்வா' என்கிற, இடத்தில் வைஷ்ணவ சப்தம் யதிவ்யதிரிக்த வைஷ்ணவ பரம் என்று சொல்லுவது அநுபபந்நம்.

வந்தனத்துக்கு ப்ரயோஜகம் யதித்வம் மாத்ரமென்று சொல்லும் பக்ஷத்தில் அவைஷ்ணவ யதிகளும் வந்தநீயர்களாக வேணும். அவர்களும் வந்தநீயரென்று சொல்லுமது, "அவைஷ்ணவ நமஸ்காராத் ஸத்ய: பததி" என்கிற வசனப்படி அநுபபந்நம்.

இப்படி வைஷ்ணவர்கள் பரஸ்பரம் வந்தநீயர்கள் என்று சொல்லும் பக்ஷத்தில், அவரவர்ணஜரான வைஷ்ணவர்களும் வந்தநீயர்களாக ப்ரஸங்கியாதோவென்னில், "ப்ரத்யக்ஷிதாத்ம நாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்" என்றும், "பக்திரஷ்டவிதாஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே, தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸசபூஜ்யோ யதாஹ்யபம" என்கிற ப்ரமாணப்படிக்கும், 'பழுதிலா வொழுகலாற்று' என்கிற பாசுரப்படிக்கும் அபகர்ஷப்ரயோஜகமான பகவந்நிக்ரஹ ஸங்கல்பம் பகவதநுக்ரஹ விசேஷத்தாலே நஷ்டமாகிறபடியால் அவர்களும் வந்தநீயர்கள்தான்.

இந்த விஷயம் ஆழ்வார் விஷயத்தில் ப்ராஹ மணுத்தமரான மதுரகவிகளின் அநுவர்த்தநத்தாலும், திருமழிசைப் பிரானுக்குப் பெரும்புலியூர் ஸ்வாமிகள் யாகத்தில் அக்ரபூஜை கொடுத்தமையாலும், திருப்பாணாழ்வாரை லோகஸாரங்கமஹாமுநிகள் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போய்ப் பெரிய பெருமாள் ஸந்நிதியிற் சேர்ப்பிக்கையாலும், அதிசயித ப்ரபாவர்களான ஜ்ஞானிகள் விஷயத்தில் வந்தனம் கூடும்.

அதைக்கொண்டு அவரவர்ணஜர்களான ஆதுனிக பாகவதர்களும் ஏன் வந்தநீயர்களாகக் கூடாதென்று கேட்கும் பக்ஷத்தில் அந்த அதிகாரிகளைப்போல் ஜ்ஞானபக்திபூர்த்தியும், அஹங்கார நிவ்ருத்தியும் இல்லாமையாலும் அதற்கு ப்ரஸக்தியில்லை, அப்படி அதிகார பூர்த்தியிருக்கும் பக்ஷத்தில் அவர்களும் வந்த

நீயர்கள்தான். இந்த விஷயம் கீழ் நிரூபிக்கப் பட்டிருக்கிறது. இனி, ப்ரக்ருத விஷயம் நிரூபிக்கலாகும்.

"நித்யாபி வாஞ்சித பரஸ்பர நீச பாவை:" என்றும், "க்ரயவிக்ரயார்ஹ தசயா ஸமிந்ததே" என்றும் சொல்லுகிறபடியே ஸ்ரீ வைஷ்ணவர்கள் பரஸ்பரம் உத்தேசியர் களாகையாலே ஸ்ரீவைஷ்ணவர்களாய் ப்ரஹ்ம வித்துக்களான கிருஹஸ்தர்கள் வந்த நீயர் களில்லையென்று சொல்லும் பக்ஷத்தில் இந்த ப்ரமாணங்கள் வியர்த்தங்களாம்.

ஈசுவரனுங்கூட ஜ்ஞாநிகள் விஷயத்தில், "நிரபேக்ஷம் முநிம் சாந்தம்" என்கிற வசனப் படி கௌரவிப்பதாக ப்ரமாணமிருப்பதால், இந்த விஷயம் கிம்புநர் ந்யாய யஜ்ஞேத்யயநம் தாநம் தாநம் தப: ப்ரஹ்மசர்யம்" என்று தப: சப்தத்தாலே நிர்த்திஷ்டமான உத்த மாச்ரதமத்தையுடையைவர்களைக் காட்டிலும், "தஸ்மாந் ந்யாஸ மேஷாந் தபஸா மதிரிக்த மாஹு:" என்கிற சுருதியாலும், "அதிரிக்தம் தப:ச்ருதம்" என்கிற உபப்ருஹ்மணத்தாலும், உத்தமாசிரம ரூபமாகிய தபஸ்ஸைக் காட்டிலும் சரணாகதி ரூபமான தபஸ்ஸு ப்ரபலமாகையாலே சரணாகதி நிஷ்டர்களான ஸ்ரீவைஷ்ணவ கிருஹஸ்தர்கள் அதிகர்களாகையாலே வந்தநீயர்கள்.

இந்த ப்ரமாணர்களைக்கொண்டே கிருஹஸ்த வந்தந நிஷேதம் அவைஷ்ணவ விஷயமென்றே கொள்ள வேணும். ஜ்ஞாதக்க ளுடைய உத்கர்ஷத்துக்கு ப்ரயோஜநம் வயஸ்ஸு, ஆசிரமம் முதலானவைகளல்ல. பகவத்விஷய நிரதிசய ப்ரீதிரூபமான பக்தி விசேஷத்தோடும் தப:ச்ரேஷ்டமான சரணவரணத்தோடும் கூடின வைஷ்ணவ ஸாமாந்யமும் உத்தேசியமாகையால், இதில் கிருஹஸ்தாகிருஹஸ்த விசாரம் அநுசிதம்.

மேலும், ஆசார்யதுல்யர்களாயும் பரஸ்பரோத்தேசியர்களாயும் தப:சிரேஷ்ட சரணாகதி நிஷ்டர்களாயுமிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால், பாரவசியத்தாலே தடுமாறி வந்தனம் முதலான அநுவர்த்தநாதிகள் தன்னடையே வருமாகையால், இதை விதி தடுக்க மாட்டாது. இதனுடைய விஸ்தரம் பூர்வாசார்யர்களுடைய கிரந்தங்களில் காண்க. இவ்விடத்தில் விஸ்தர பயத்தாலே, நிரூபிக்கப்படவில்லை. "யதிமபி க்ரஹிணாம் வந்தனம் காரயந்த:" என்று யதிகர்த்ருக்கிருஹஸ்த வந்தனத்தை தோஷமாகச் சொன்ன சில கவிகளுடைய உக்தியைப் பார்த்து இது அஸங்கதமென்று சொல்லுமவர்களுவரை விப்ரதிபத்தி நிராகரணத்தின் பொருட்டு இப்படி நிரூபிக்கலாயிற்று.

கீழ் நிரூபித்தபடி ப்ரமாணோபபத்திகளிருக்க, இவைகளை நிரூபியாமல் அபிநிவேசத்தலே இப்படி தூஷிப்பது அத்யந்தாநுசிதமென்பது வ்யக்தம் என்று சொல்லுவர்கள். மேலும் பெருமாள் உத்ஸவ காலங்களில், எழுந்தருளும்போது முந்தி இயல் கோஷ்டியும் பிந்து வேதபாராயண கோஷ்டியும் நடந்து வருவதும் ஸம்பிரதாய ஸித்தமாயிருக்கிறது. இயல் கோஷ்டி க்ருஹஸ்த ஸமுதாயமாகையாலே, அவர்கள் வந்தநீயர்களல்லரென்று அந்த கோஷ்டியை விலக்கி பெருமாள் ஸந்நிதியில் போய் தண்டம் ஸமர்ப்பிக்கிறார்கள். சில உத்தமாசிரமிகள். அதைப் பற்றி விசாரிப்போம். "ஸமஸ்தபரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:" என்ற கத்யஸூக்திப்படி பரிவாரத்தோடே கூடிய எம்பெருமானுடைய வந்தனம் ப்ராப்தமாயிருந்த இயல் கோஷ்டியும் பரிவார கோஷ்டியில் சேர்ந்தபடியால் இந்த கோஷ்டியை கிருஹஸ்த சமுதாயமென்ற புத்தியினாலே தெண்டம் ஸமர்ப்பிக்காமல் எம்பெருமானுடைய நிக்கிரஹத்துக்கு ஹேதுவாம் என்பது வ்யக்தம்.

அதுவுமன்றி, "உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகந்தொறும்" என்கிற பாசுரத்தின் படி விசேஷஜ்ஞர்களான, ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியிலும், அருளிச்செயல் நடையாடுமிடத்திலும் எழுந்தருளியிருப்பர் பாஷ்யகாரர் என்றிருப்பதால், இந்த கோஷ்டி ஸ்ரீபாஷ்யகாரருடைய கோஷ்டியே தவிர வேறு கிருஹத ஸமுதாயமெனறு நினைத்து தண்டம் ஸமர்ப்பிக்காமலிருப்பது உசிதமாகுமா?

ஆக யதிதர்மஸமுச்சமயதில் யதிகள் பிரசஸ்தனாக இருக்கிறவனையும், பிரஹ்ம நிஷ்டனையும் தெண்டன ஸமர்ப்பிக்கக்கூடாதென்கிற இடத்தில் ப்ரசஸ்தசப்தமும் ப்ரஹ்மநிஷ்ட சப்தமும் ஸாமாந்யவாசியாகையாலே, "வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா" என்கிற விசேஷ வசனத்தைக்கொண்டு, வைஷ்

ணவ்பதிரிக்த க்ருஹஸ்த விஷயமென்றே கொள்ள வேண்டும்.

ஆதலால் ப்ரஹ்மவித்துக்களான க்ருஹஸ்தர்கள் உத்தமாசிரமிகளுக்கு வந்தனீயர்களே. இனி பகவதாராதநவிஷயம் நிரூபிக்கப்படும்.

இனி பகவதாராதன விஷயம் நிரூபிக்கப்படுகிறது. அதில் திருவாராதனத்துக்கு கண்டாநாதம் ஆவசியகமென்றும், அநாவசியகமென்றும் விவாதமிருப்பதால் அது முதலில் நிரூபிக்கப்படும்.

பராசரஸம்ஹிதை, பாரத்வாஜ ஸம்ஹிதை, சாண்டில்ய ஸம்ஹிதை' இவைகளில் கண்டையைப் பற்றிச் சொல்லவில்லை. பாகவதத்திலும், பதினோராவது ஸ்கந்தத்தில் திருவாராதன விதியிலும் கண்டாநாதம் செய்யச் சொல்லவில்லை. ஸ்ரீபாஷ்யகாரரும் தாம் அருளிச்செய்த நித்யத்திலும் சொல்லவில்லை. நடாதூர் அம்மாள் அருளிச்செய்த திருவாராதந கல்பத்திலுமில்லை, ஸ்ம்ருதிரத்நத்திலுமில்லை.

ஆனால் இவ்விடங்களிற் சொல்லாமலிருந்தாலும், "அநுக்தம் அந்யதோக்ராஹ்யம்" என்கிற ந்யாயப்படி கெண்டாநாதமாவசியகமென்று சொல்லும் பக்ஷமானது கண்டாநாதத்திற்கு பூதாபஸரணபலத்தை உத்தேசித்ததாயிருக்கிறது. அந்த பூதாபஸரணமானது "உத்பதந்தி ஹ பூகாயே ப்ரத்வ்யந்தரிக்ஷவாஸிந:, யேசாத்ர விக்நகர்த்தார: தேநச்யந்த்யாஜ்ஞயா ஹரே:" என்கிற வசநபடனத்தால் ஏற்படுகிறபடியால் அந்ய தாஸித்தமாகையால் அநுபபந்நம். ஏனெனில் சிராத்த காலத்தில், "ஆயஸம்கண்டநாதஞ்ச" என்று கெண்டாநாதத்திற்கு நிஷேதமிருந்த போதிலும், "அபஹதாஸுரா" என்கிற மந்த்ரபடநத்தாலேயே பூதாபஸரணம் ஏற்படுமோ அப்படியே இங்கேயும் ஏற்படும்.

மேலும், "த்ரவந்தி தைத்யா: ப்ரணமந்தி தேவதா." என்கிற வசனத்தின்படி உத்தயாதிகாரியான ஸ்ரீவைஷ்ணவனிடத்தில், பூதாதிகள் வர ப்ரசக்தியில்லாமையாலே கண்டாநாதம் அநாவசியகம்.

மேலும், கொண்டநாத மேற்படுகிற பக்ஷத்திலும் தக்ஷிண ஹஸ்தத்தாலே தீபாதி ஸமர்ப்பிக்கும் ஸமயத்தில் வாமஹஸ்தத்தாலே கண்டாநாதம் பண்ணுவது அநுசிதம். ஏனெனில், "தெக்ஷிணாசாரேணகர்த்தவ்யம்" என்கிற ப்ரமாணத்தைக்கொண்டு, கர்த்தவ்ய ஸாமாந்யம் தக்ஷிண ஹஸ்தத்தாலேயே செய்ய வேண்டுமென்றிருக்கபடியாலும், வைகுண்டாநாதியத்தில், கெண்டை, அக்ஷமாலை முதலிய வைகளுக்கு ப்ரதிஷ்டை ப்ரோக்ஷணம் இவைகள் ஆவசியகமென்றிருப்பதால் அப்ரதிஷ்டித கண்டாநாதம் கூடாமையாலும் அநுபபந்நம்.

அப்ப்ரதிஷ்டித கண்டாநாதம் கூடாதென்பதற்கு ப்ரமாணம். "அஸம்ஸ்க்ருதாயா: சல்ந: க்ராமாதே: சாலநம்பவேத், நிஷ்பலா சாபி பூஜாஸ்யாத் பரஸ்ய பரமாத்மந:" என்கிற ப்ரமாணங்களைக்கொண்டு ஆலயங்களில், ப்ரதிஷ்டித கண்டாநாதநம் அந்யகர்த்ருகமாகச் செய்யப்படுகிறபடியால், அவ்விடத்தில் கண்டநாதநம் உசிதமாகும். திருவாராதனத்தில் அப்ரதிஷ்டித கண்டாநாதம் வாமஹஸ்தத்தால் செய்ய வேண்டியிருப்பதால் அநுசிதம்.

வங்கிபுரத்துநம்பி ஆஹ்நிகத்திலும், பட்டர் ஸாதித்த கிரியாதீபத்திலும் கண்டாநாதம் சொல்லியிருப்பது என்னென்னில், கிரியாதீபமென்கிற க்ருந்தம் பட்டருடைய திருவம்சத்தில் ஆறுவது பட்டர் அருளிச்செய்ததாக சரமசுலோக சந்திரிகையிலிருப்பதால், சாக்ஷாத் பராசரபட்டர் அருளிச்செய்ததன்று. ஸாக்ஷாத் பராசரபட்டர் அருளிச்செய்ததாக ஸச்சரித்ரபரித்ராணத்தில் ஸ்ரீ அண்ணவையங்கார்ஸ்வாமி அருளிச்செய்திருக்கிறார். அப்படியிருந்தபோதிலும் பட்டர் ஒரு ஸ்ரீவைஷ்ணவருக்கு திருவாராதன க்ரமத்தை விஸ்தரேண உபதேசித்துத் தாம் திருவாராதனம் பண்ணும்போது ஸங்கிரஹித்துச் செய்தருளினதாகவும், அதைச் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் கேட்க, அந்த அதிகாரிகளுக்கு அப்படியே உபதேசிக்க வேண்டும்; பூர்ணாதிகாரிகளுக்கு ஸங்கிரஹித்துச் செய்வதே போரும் என்று அருளிச்செய்ததாக, பூர்வீக கிரந்தங்களிருக்கிறபடியால் அது மந்தாதிகாரி விஷயம்.

கண்டநாதம் ஆவசியகமென்று அங்கீகரித்தாலும், அப்ரதிஷ்டித கண்டாநாதம் வாமஹஸ்தத்தாலே செய்வது கூடாதாகையால் அந்யகர்த்ருக ப்ரதிஷ்டித கண்டாநாதமே சொல்லப்பட்டதென்று கொள்ள வேணும், அப்படிக்கில்லாமல் வாமஹஸ்தத்தாலே அப்ரதிஷ்டித கெண்டாநாதம் சேய்விப்பது கூடாதென்பது வ்யக்தம்.

இந்த பகவதராதனத்தில், ஆழ்வார்கள் முதலான ஆசார்யர்களுடைய ஆராதனமும் முக்யம். அதற்கு ப்ரமாணம் ஸ்ரீவைகுண்டநாதீயத்தில், ''மத்பக்தாந் சடகோபாதிந் பூஜயேத் வைஷ்ணவோத்தம:'' என்றும், ''சடாரி பரகாலாதி பக்தாந் ஸம்பூஜயேத் விஜ:'' என்றும், ''மத்பக்த சடகோபதி பக்தாநாம் பூஜநேஸதா, சடாரி பரகாலாதி பக்தாநாம் துவிசேஷத: மூர்த்தி ப்ரதிக்ருதிம் குர்யாத் லோஹசைல ம்ருதாதிபி.'' என்றும் நாராயண ஸம்ஹிதை, விஷ்ணுதத்வம், சாண்டில்ய ஸம்ஹிதை, பராசர ஸம்ஹிதை, இவற்றில்ருப்பதால், ஆழ்வார்கள் முதலான ஆசார்ய விக்ரஹங்களை லோஹத்தாலே யாவது ஏறியருளப்பண்ணி ப்ரதிஷ்டை செய்து ஆராதிப்பது சாஸ்தர ஸித்தம்.

## ஆழ்வார் பிரஸாதம்

ப்ரஸங்காத் இவ்விடத்தில் ஆழ்வார்களுக்கு நிவேதிதமான அந்நத்தைக்கொண்டு, சிராத்தம் செய்கிற விஷயம் நிரூபிக்கப்படும்.

ஆழ்வார்களை அபிநவதசாவ தாரமாக தேசிகன் அருளிச் செய்திருக்கிறபடியால் பகவதவதார பூதர்களான ராமகிருஷ்ணுத்யர்ச்சா விக்ரஹங்களுக்கு நிவேதிதமான அந்நம் எப்படி சிராத்தார்ஹமோ அப்படியே இதுவும் கூடும். அதுவுமன்றி, உசனஸ்மிருதியில் ''விஷ்ணவே கல்பிதஞ்சாந்நம் தத்யாத் பக்தேபய ஏசவ, வைச்வதேவம்தத: குர்யாதி ச்ராத்த கர்மாதிகம்தத:'' என்று பக்தநிவேதிதமான அந்நத்தைக்கொண்டு சிராத்தம் செய்யலா மென்றிருப்பதாலும், பகவத் நிவேதிதமான அந்நத்தைக் கொண்டு செய்ய வேணுமென்கிற வசனத்திலும் ஸபரிவார பகவந் நிவேதிதமான அந்நத்தைக் கொண்டு செய்ய வேணுமென்று அர்த்தம் கொள்ள வேண்டுமாகையாலும், பரிவார பூதர்களான ஆழ்வார் முதலான ஆசார்ய விக்ரஹங்களுக்கு நிவேதிதமான அந்நத்தைக் கொண்டு சிரார்த்தம் செய்யலாம்.

ராமகிருஷ்ணுத் யவதாரங்களில் அந்த திவ்ய மங்கள விக்ரஹங்கள் அப்ராகிருதங்களாகையாலே ப்ராஹ்மணத்வ க்ஷத்ரியத்வ ஜாதி முதலானவைகளில்லாதிருப்பது போல் ஆழ்வார்கள், அபிநவ தசாவதாரமென்று சொல்லுகிற பக்ஷத்திலும் ஜாதி முதலானதுகளில்லாமையாலே ஜாதி ப்ரயுகத நிகர்ஷத்தைக்கொண்டு, தந்நிவேதர்ந்நத்தால் செய்யலாகாதென்பதும் அநுசிதம்.

மேலும், ''யதந்ந: புருஷோபவதி ததந்நா: ஸ்தஸ்யதேவதா:'' என்பதால், எந்த அந்நம் புருஷனுக்கு விஹிதமோ அந்த அந்நத்தைக் கொண்டே தேவதைகளை ஆராதிக்க வேண்டுமென்று சொல்லியிருப்பதாலும், 'பகவத் புக்தசேஷம்யத் புக்தம் பாகவதேநயத், ததேவபோக்ய முக்திஷ்டம் பகம்த்யாக ஸேவிபி:'' என்று பகவத் பாகவத புக்த சேஷமே இவனுக்கு அந்நமாகையால், அந்த அந்நமே பித்ருதேவதைகளுக்கும் போரஜ்யமாகும்.

சிலர் சிராத்தம் பித்ருசரீரக அந்தர்யாம்யாராதனரூபமாகையாலே, அதில் பராங்குசாதிநிவேதிதாந்நம் கூடாதெனச் சொல்லுவர்கள். அப்போது நித்ய போஜனமும் அந்தர்யாம் யாராதநரூபமாகையாலே சிராத்தபிந்ந காலங்களில் நித்யமான ஆராதனத்திலும் பராங்குசாதி நிவேதநாநுபபத்தி ஏற்படும். அது ஸ்வாநுஷ்டாந விருத்தம்.

மேலும், நம்முடைய ஸித்தாந்தத்தில் எல்லாம் அந்தர்யாம்யாராதந ரூபமாகையால், பராங்குசாத்யாராதநமும் பராங்குசாதி சரீரக பகவதாராதநமாகையாலே, பராங்குசாதி நிவேதநம் சிராத்த காலத்திலும் கூடும்.

சிராத்தகாலத்தில் பிராட்டிக்கு நிவேதிதமான அந்நத்தைக் கொண்டு சிராத்தம் செய்யக் கூடாதென்று சில ஸம்பிரதாயஸ்தர்கள் சொல்லுமதுவும், பிராட்டி ஈசுவரகோடி கடிதையென்றும் மோக்ஷ ப்ரதத்வாதிகளுண்டென்றும் சொல்லுவதற்கு நேர்விருத்தமாம்.

## ஸ்ரீபாத தீர்த்தம்

ப்ரபந்நர்கள் ப்ரதிதினம் பாகவத ஸ்ரீபாத தீர்த்த நிஷேவணம் செய்யவேணும். அதுவுமன்றி, ''குருணமந்திமதிதேன ஜநமபேச்ரவணேபிவா, ஹரிமப்யர்ச்சயேத் பக்த்யாதத் பக்தாந்ச்ச விசேஷத.'' என்று சொல்லப்பட்டிருப்பதால் ஆசார்யர்களுடைய தீர்த்த திவஸங்களிலேயும் திருநக்ஷத்ர திநங்களிலேயும் மற்றப்படி ஆழ்வார் முதலான பூர்வாசார்யர்களுடைய தீர்த்த திருநக்ஷத்திர திநங்களிலேயும் பாகவத ஸ்ரீபாததீர்த்த நிஷேவணம் ஆவசியகம். ''ததீய்யாராதநந்தத் பாததீர்த்த நிஷேவணஞ்ச'' என்று மற்றொரு இடத்திலிருப்பதாலும், ''ஸந்நியோகசிஷ்டந்யாய''த்தாலே பாகவ தாராதந ஸ்தலங்களிலெல்

ஸாம் ஸ்ரீபாததீர்த்த நிஷேவணமாவசியகம், ''த்ரி: பிபேத் பிந்துவர்ஜிதம்'' என்று திரிரா வ்ருத்திக்கும். 'ஸோமபாநஸமம்' என்று இரண்டாவ்ருத்திக்கும் ப்ரமாணமிருப்பதா லும். பூர்வாசார்யர்களிடம், இரண்டு ஸம்ப்ர தாயங்களு மிருந்து வந்திருப்பதாலும் யதா ஸம்ப்ரதாயம் அநுஷ்டேயம். ஸ்ரீபாததீர்த்த ஸ்வீகார விஷயத்தில் ஸ்ரீபாததீர்த்தம் ஸாதிக் கிற ஸ்வாமிகள் உத்தேசியர்களாகையாலே, அவர்களுடைய திருவுள்ளத்தை யநுஸரித்து நடப்பது முக்யம். இனி,

### பஞ்ச மஹாயஜ்ஞங்கள்

ப்ரபந்நனுக்குப் பஞ்சமஹாயஜ்ஞம் கர்த் தவ்யமா? அன்று? என்பது விசாரிக்கப்படும்.

சுருதியில் 'தேவயஜ்ஞோ' என்று தொடங்கி பஞ்சமஹாயஜ்ஞங்கள் அவசியம் கர்த்தவ்யங்களென்று சொல்லப்பட்டன. ''பஞ்சயஜ்ஞாந்ச்ச யோமோ ஹாத் நகரோதி க்ருஹாச்ரமீ, தஸ்யநாயம் நசபர: லோகோ பவதி தர்மத:, அக்ருத்வாவைசுவதேவந்து புஞ்ஜதேயேத்விஜாதமா:, வ்ருதாதேநாந்நபா நேநகாகயோநிம் வ்ரஜந்திதே'' என்கிற ப்ர மாணங்களாலே கிருஹஸ்தனை ப்ராஹ்மண னுக்கு பஞ்சமஹாயஜ்ஞங்கள் அவசிய கர்த் தவ்யங்களென்றும், பண்ணாவிடில் ப்ரத்யவாய விசேஷ மேற்படுமென்றும் சொல்லப்பட்டன. ஆகையால் பஞ்ச மஹாயஜ்ஞங்கள் அவசிய கர்த்தவ்யங்களாமே என்னில் அதற்கு ஸமா தானம் சொல்லப்படுகிறது.

பஞ்சமஹாயஜ்ஞங்கள் ''பஞ்சஸூநாக்ரு ஹஸ்தஸ்ய வர்த்தந்தேஹ்யாய:, ஸதாகண்டி நிபேஷ்டிநீ சள்ளி உதகும்ப உதஸ்கர: ஏதா ஸாம்பாவநார்த்தந்து பஞ்சரயாஜ்ஞா: ப்ர கிர்த்திதா:'' என்று கிருஹஸ்தருக்கு தினந் தோறும் சாகம தண்டுலம் முதலானவைகளில் கண்டனம், மேதநம் பாகம் முதலானவை களைச் செய்யவேண்டியிருப்பதால். அவைகள் ஜீவாதிஷ்டிதங்களாகையால் அவற்றை ஹிம் ஸிப்பதால். வரும் பாபத்துக்கு ப்ராயச்சித்த மாக பஞ்சமஹாயஜ்ஞம் விதிக்கப்பட்டன. ப்ரபந்நருக்கு தேஹாரணம் பரமாத்மஸமாரா தந ஸமாப்திப்ரதிபத்திருபமாம். அதாவது பகவதாராதநத்துக்காகவே ஏற்பட்ட ப்ரஸா தத்திற்கு ஆராதகனைவனுடைய தேக தாரணத்தில் விநியோகம் ஏற்படவேண்டும். அப்படி ஏற்பட்டால்தான் ஆராதனபூர்த்தி, அது எப்படிப்போலே என்னில்? யாகத்தில், ''ப்ரயாஜசேஷேண ஹவீம்ஷி அபிகாரயதி'' என்று ஹோரமத்திலுபயுக்தங்களான ஹவி ஸ்ஸுகளை ப்ரயாஜசேஷத்தாலே அபிகாரம் பண்ணவேணும். அப்படிச் செய்யாவிடில் ஹோமபூர்த்தியில்லை: என்பதாக ஒன்றில் விநியுக்தமான பதார்த்தற்றிற்கு, ஸம்ஸ்கார ரூபமாக மற்றொன்று விதிக்கப்படுகிறது போல வும்; கிராத்தத்தில் பித்ருதேவதாராதனத்தில் உபயுக்தமான அந்நத்திற்கு, ''இஷ்டை: ஸஹ புஜ்யதாம்'' என்று இஷ்டபோஜநம் இல்லா விடில் சிராத்தபூர்த்தி ஏற்படாததுபோலவும், பரமாத்ம ஸமாராதநோபயுக்த த்ரவ்யத் துக்கு ஆராதகனுடைய தேகதாரணத்தில் விநியோகமில்லாதிருக்கும் பக்ஷத்தில், ஆரா தனபூர்த்தி இல்லையென்றேற்படுகிறது. இதை உபயுக்தஸம்ஸ்காரரூபையான ப்ரபத்தி யென்று சொல்லுகிறது. ஆதனால் ப்ரபந் நனை பரமேகாந்திக்கு ஸ்வார்த்தமாக ஒரு ப்ரபத்தியுமில்லாமையால், பாவதாராதனார்த் தமே நித்யங்களான பாகாதிகளேற்படுகிறபடி யால், அதிலேற்படுகிற கண்டநீ முதலான பஞ்சஸூநைகள் தண்டுல சாகாதிகளுக்கு ஹிம்ஸாரூபமாகமாட்டாது.

''வேத வித்யாவ்ருதஸ்நாதே ச்ரோத்ரியே க்ருஹமாகதே, நந்தந்த்யோ ஷதய: ஸர்வா: யாஸ்யாம: பரமாம்கதிம்'' என்பதனுல் ஒரு பாகவதனுடைய ஆராதநத்துக்கு உபயுக்தங் களான சாகம் முதலானவைகள் உத்தம கதியை அடையப்போகிறோமென்று ஸந்தோ ஷிப்பதாகச் சொல்லப்பட்டிருப்பதாலும். யாகத்தில் பசு ஹிம்ஸை உதர்க்கத்தில் பசு விற்கு, ஸ்வர்க்கஸாதநமாகையாலே ஹிம்ஸை யாகமாட்டாதென்பது போலவும் ஹிம்ஸை யாகமாட்டாது: ஆகையால் பஞ்சஸூநாக ப்ராய:ச்சித்தரூபமான பஞ்சமஹாயஜ்ஞங்கள் ஆத்மார்த்தமான பாகமுடையவன் விஷய மென்றறியத் தக்கது.

ஆனால், யாஜ்ஞயவல்க்ய ஸ்மிருதியில் ஆத்மார்த்த பாகத்தை நிஷேதித்து பகவ தர்த்த பாகத்தைச் சொல்லி, அந்த அதிகா ரிக்கு பஞ்சமஹாயஜ்ஞங்களும் விதிக்கப்பட்ட னவே என்னில், அந்த அதிகாரிக்கு பகவதர்த்த பாகம் ப்ரதாநமாயும், தேஹதாரணம் அப்ர தாநோத் தேசியமாயுமிருக்கும்; அப்படிப் பட்ட அதிகாரிக்கு அந்த வசனம் ஏற்பட்டது.

இந்த அதிகாரி ஸர்வாத்மநா தேஹ காரணத்தை உத்தேசியமாக நினைக்கிறவனல்லன். ஸமாராதந ஸமாப்த்தி ப்ரஸாத ப்ரதிபத்தி ரூபமாக தேஹதாரணமேற்படுகிறது. ஆகையால் இந்த அதிகாரிக்கு அந்த பாப ப்ரசக்தியில்லை.

மேலும் பாகவதத்தில் ஏகாதச ஸ்கந்தத்தில், ''தேவர்ஷிபூதாப்தந்ருணாம் பித்ரூணும் நகிங்கரோ நாயம்ருணீச ராஜன்'' என்கிற சுலோகத்தில் ப்ரபந்நனானவன் பஞ்சமஹாயஜ்ஞதேவதைகளான தெய்வங்கள் ருஷிகள் முதலானவர்களுக்கு கிங்கரனுமன்று; ருணியுமன்று என்று சொல்லியிருக்கிறபடியால் அவருடைய கிங்கரவ்ருத்தியின் பொருட்டும் ருணநிவ்ருத்தியின் பொருட்டும் ஏற்பட்டுச் செய்யப்படுகிற பஞ்ச மஹாயஜ்ஞத்தில் இவனுக்கு அதிகாரமில்லை. பாகவத வ்யாக்யாதாவான ஸ்ரீதரரும் இந்த சுலோக வ்யாக்யானவஸரத்தில் ப்ரபந்நனுக்குபஞ்சமஹா யஜ்ஞங்கள் வேண்டியதில்லை யென்று நிரூபித்திருக்கிறுர்.

கீழுதாஹரிக்கப்பட்ட வசனங்களால் நித்யத்வமேற்படுகிறதேயென்னில்? பஞ்சஸூநாகத்திற்கு ப்ரஸக்தியுள்ள அதிகாரி ப்ராய:ச்சித்தம் செய்யாத பக்ஷத்தில், கர்மாநதிகாரத்துக்கு, ஹேதுவான தோஷாதி சயத்தைச் சொன்னபடி.

கிஞ்ச, பரமைகாந்தி வ்யதிரிக்த மந்தாதிகாரி விஷயத்தில் நித்யத்வத்தைச் சொல்லியபடி. எப்படி சிவராத்ரி அவைஷ்ணவ விஷயத்தில் நித்யத்வேநகர்த்தவ்யமாயும், வைஷ்ணவ விஷயத்தில் அகர்த்தவ்யமாயு மிருக்கிறதோ அப்படியே இதுவுமிருக்கும்.

யாஜ்ஞவல்க்ய ஸ்மிருதியின் வ்யாக்யாதாவான விஜ்ஞாநேசுவரர் வைசுவதேவத்தை புருஷ ஸம்ஸ்காரமாகச் சொல்லியிருக்கிறுர்; அந்த புருஷ ஸம்ஸ்காரமாயும் சிலர் சொல்லியிருக்கிறுர்கள். பரமைகாந்திக்கு ''மந்நிமித்தம் க்ருதம் பாபம் அபிதர்மாய கல்ப்பதே'' என்கிற வசனத்தாலே, கேவல பகவதாராதந உபயுக்தபாகத்தில் பஞ்சஸூநாகம் ஏற்படாமையாலே தத்ப்ராய:ச் சித்தமான வைசுவதேவம் ஸம்ஸ்காரமாகமாட்டாது. பகவதாராத நார்த்தம் கல்பிதமான, அந்நத்துக்கும் இது ஸம்ஸ்காரமாகமாட்டாது.

கிஞ்ச, ''கிம்கார்யம் வைசுவதேவேந: தேவபூஜாபரஸ்யவை, கிம்வாயஜ்ஞேநதாநேந வைசுவதேவேந பூமிப, வைசுவதேவஹுதோச்சிஷ்டம் நபபும்ஜ்யாத் வைஷ்ணவோத்தம:, விஷ்ணோ: நிவேதி தாந்நந்து பாவநம் லோக பாவநம், தேநைவ சரிதார்த்தத்வாத் ஸாது தத்வம் நிவேதிதம், கதம் ப்ராணாஹுதி: குர்யாத் தேவதாந்த்ரசேஷக:'' என்று பகவதாராதநமே முக்கியமென்றும், வைவேதேவாதிகள் வேண்டியதில்லையென்றும் ஸ்பஷ்டங்களான வசனங்களிருப்பதால். வைசுவதேவாதிகள் ப்ரபந்நனுக்கு அநாவசியகங்கள்.

சில ஸம்ப்ரதாயஸ்தர்கள் ''வைசுவதேவாக்ருதம் பாபம் பிக்ஷுரேகோவ்யபோஹதி, நபிக்ஷுணா க்ருதம் பாபம் வைசுவதேவொவ்யபோஹதி'', என்கிற பராசர வசனத்தாலே ஸந்யாஸியினுடைய ஆராதனத்தாலே, வைசுவதேவாகரணத்தால் ஏற்படும் தோஷம் போய்விடுமென்றிருப்பதால், நித்யமான ஆராதநத்தில் அர்ச்சாரூபியான ஸ்ரீபாஷ்யகாரருடைய ஆராதநம் ஏற்படுகிறபடியால், வைசுவதேவாகரணத்தால் ஏற்படுகிறதோஷம் ஸம்பவிக்க மாட்டாது. ஆனுல் ஸ்மிருதிரத்நாகரத்தில் வைசுவதேவம் பண்ணுகிறதற்கு முந்தி ஸந்யாஸி வந்தால், அந்த ஸந்யாஸிக்கு பிக்ஷையே கொடுக்கவேணும். அப்போது வைசுவதேவாகரணத்தால் தோஷம் ஏற்படமாட்டாதென்று அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது. அதில் வைசுவதேவாத் ப்ராக் என்று அத்தியாஹாரம் ஏற்படும்; அதைக் காட்டிலும் அத்யாஹாரமில்லாமல் ஏற்படுகிற அர்த்தம் ஸ்வாரஸிகமாகையால் இதுவே உசிதமென்று சொல்லுவார்கள்.

கீழ் நிரூபித்தபடி பஞ்சமஹாயஜ்ஞங்கள் பஞ்சஸூநாக ப்ராய:ச்சித்தமாக ஏற்படுகிறபடியால், பஞ்சஸூநாக ப்ரஸக்தியில்லாமலிருக்கிற பரமைகாந்திக்கு அவைகள் அநாவசியகங்களாகையால் பஞ்சமஹாயஜ் ஞவிதாயக வசனங்கள் பரமைகாந்தி வ்யதிரிக்த விஷயங்கள்.

மேலும் சரணாகதி நிஷ்டர்களுக்கு உத்பந்நாநர்த்த நாசநமான ப்ராய:ச்சித்தம் அநுஷ்டேயமன்று. அதற்கு ப்ரமாணம், ''ப்ராய:ச்சித்தாத்மக: த:ச்சித் உத்பந்நாநர்த்தநாசந:, தமம்சம்நைவ குர்வீ தமநீஷீ பூர்வராசிவத்'' என்பதால் உத்பந்நாநர்த்த நாசமான கார்யம் கர்த்தவ்யமன்று என்று ஏற்படுகிறது.

கிஞ்ச, ''க்ருதாஸ்ஸமஸ்தா யஜ்ஞாச்ச, தாநாநிசதபாம்ஸிச, ப்ராய:ச்சித்தமசேஷண

நித்யமர்ச்சய தாஹூதிம்'' என்று நித்யமான பகவதாராதநத்தாலேயே பஞ்சமஹாயஜ்ஞங்கள் பண்ணினதாக ஏற்படுகிறபடியாலும் அனை அநாவசியகம்.

விஷ்ணுகஸ்து பஞ்சமஹாயஜ்ஞங்கள், "யத் பலம் ஸோமயாகேந ப்ராப்நோதி தநவாந் த்விஜ:, ஸம்யக் பஞ்சமஹாயஜ்ஞை: தரித்ரஸ்ததவாப்நுயாத்'! என்று பிருகுமஹருஷியும். 'யஏதாந் அவ்யக்ரம் யதோபதேசம் குருதே நித்யம் தஸ்யஸ்வர்க்க: புஷ்டிச்சேதி'' என்று ஆபஸ்தம்பரும் சொல்லியிருக்கிறபடி பஞ்சமஹாயஜ்ஞகரணத்தில், ஸ்வர்க்காதிபல மேற்படுகிறபடியால் அந்த பஞ்சமஹாயஜ்ஞங்கள் காம்யகர்மங்களாகவும் ஏற்படுகின்றன. காம்யகர்மாக்கள் பரமைகாந்திக்கு த்யாஜ்யங்களாகையால், அதனாலும் அநநுஷ்டேயங்கள். ஆனால், அகரணே ப்ரத்யவாயா ஹங்களான வசனங்களுக்கு கதியென்னென்னில், அது ப்ரபந்நேதர விஷயமென்று பூர்வமே ஸமாதாநம் சொல்லப்பட்டது.

### பரிசேஷணம்

போஜந காலத்தில் ப்ராணாஹுதிகளை போஜந பாத்ரத்தை ஸ்பர்ஸித்துக்கொண்டே செய்யவேணும்; ப்ராணாஹுத்யநந்தரம் பாத்ர ஸ்பர்சங் கூடாதென்பதாக கௌதம க்ரியாகாண்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆபஸ்தம்ப ஸூத்ரத்தில் "நாபஜஹீத அபஜஹீதவா'' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதன் அர்த்தம் போஜநபாத்ரத்தைப் போஜந காலத்தில் விடக்கூடாது. அல்லது விடலாம் என்பதாம். இந்த விஷயத்தில் மாதவ ப்ரப்ருதிகள் ப்ராணாஹுதிபர்யந்தம் விடக்கூடாது; அதற்குப் பின்பு விடலாம் என்று அர்த்தவர்ணனம் பண்ணியிருக்கிறார்கள். இதற்கு வ்யாக்யையான உஜ்வலையில்,

"நாபஜஹீத போஜனபாத்ரம் ஸவ்யேந பாணிநா நமுஞ்சேத் முஞ்சேத்வா கிமர்த்தமிதம்...ப்ரகாராந்தரம் ஸம்பவதி ஸத்யம் ப்ரக்ரமாத்து நியம்யேதிந்யாயேந யஏவம்ப்ரகார: ப்ரதமம் போஜநே ஸஏவ ஆந்தாதநுஷ்டேய: ஏவமர்த்தமிதமிதி'' இதற்கு அர்த்தம் போஜன காலத்தில் போஜன பாத்ரத்தை இடது கையால் பிடித்தும் கொள்ளவேணும்; அதவா பிடித்துக் கொள்ளவேண்டியதில்லை. ஆனலிப்படி இரண்டு ப்ரகாரமாகச் சொல்லியதென்னென்னில், ஆதியில் எந்தக்கிரமம் ஏற்பட்டதோ அந்தப்படியே முடிவுவரையில் செய்யவேண்டும் என்பதற்காக இப்படி இரண்டு ப்ரகாரமாகச் சொல்லப்பட்டது என்று ஹரதத்தர் சொல்லியிருக்கிறார். ஆதலால் போஜந காலத்தில் போஜநபாத்ர ஸ்பர்சம் போஜநபர்யந்தம் இருக்கவேண்டுமென்றும், அதவா போஜந காலம் முதல்முடிவு வரையில் பாத்ரஸ்பர்சம் இல்லாமலேயிருக்க வேண்டுமென்றும் ஏற்படுகிறது.

கௌதமக்ரியாகண்டத்தில் சொல்லியிருக்கிறபடி போஜநகாலத்தில் ப்ராணாஹுதிக்குப் பிறகு பாத்ரஸ்பர்சம் நிஷித்தம் என்று ஏற்படுகிறது. ப்ராணாஹுதி பர்யந்தம் பாத்ர ஸ்பர்சம் நியமேந செய்ய வேண்டுமென்றும், தத நந்தரம் பாத்ரஸ்பர்சம் அநியதமென்றும் சிலருடைய அபிப்ராயம். சிலர் "நாபஜஹீத அபஜஹீதவா'' என்கிற ஸூத்ரத்திலேற்பட்டிருக்கிற விகல்பம் வ்யவஸ்தித விஷயம். ஆதலால் சிராத்த காலத்தில் ப்ராணாஹுதி பர்யந்தம் பாத்ரஸ்பர்சம் ஆவசியகம்; நித்ய போஜநத்தில் பாத்ர ஸ்பர்சமே வேண்டியதில்லை யென்று சொல்லுகிறார்கள்.

இப்படி அநேக பக்ஷங்களிருந்த போதிலும் "நாபஜஹீத'' என்கிற ஸூத்ர வ்யாக்யாதாவான ஹரதத்தர் சொல்லியபடி போஜந பர்யந்தம் பாத்ர ஸ்பர்சமிருக்க வேண்டியது முக்யம்; இல்லாவிடில் தாவத்பர்யந்தம் பாத்ர ஸ்பர்சமே வேண்டியதில்லை என்பதுதான் உசிதம். ஏனென்றால் "ஜுஹுபாத்வக்த்ர குண்டகே'' என்று போஜநமே ஆஹுதிருபமாகச் சொல்லப்பட்டமையால் ஆஹுதி காலத்தில் பாத்ரஸ்பர்சம் ஆவசியகமாகையாலே போஜந பர்யந்தம் பாத்ர ஸ்பர்சம் இருக்க வேண்டுமென்பது முக்யமே. அப்படி முக்யாநுஷ்டானத்துக்கு ஸௌகர்யமில்லாமையாலே இப்படி போஜந பர்யந்தம் பாத்ர ஸ்பர்சம் இல்லாமலுமிருக்கிறது.

இது நிற்க, பரிசேஷணவிஷயத்தில் லவணத்தோடே கூடிய வ்யஞ்ஜநத்தை ப்ராணாஹுத்யநந்தரம் பரிவேஷணம் பண்ணவேணுமென்றும் ப்ரஸாதம் வ்யஞ்ஜநம் இவைகளை தர்வியாலேயே பரிவேஷணம் செய்ய வேணுமென்றும் சாஸ்த்ரமிருப்பதால், அப்படியே செய்ய வேணுமென்பது சில ஸம்ப்ரதாயஸ்தர்களுடைய அபிப்ராயம். ஆகிலும் "ஸ்வாஹா ப்ரணவ ஸம்யுக்தம்'' என்று தொடங்கி "ஸமாநாயேதி பஞ்சமீம்'' என்று சொல்லிவிட்டு,

"சேஷமந்நம்யதாகாமம்புஞ்ஜீத வ்யஞ்ஜனைர் யுதம்" என்று சொல்லப்பட்டிருப்பதாலும் சிராத்தகாலத்தில் ப்ரஸாதம், வ்யஞ்ஜனம் இவைகளுடைய பரிவேஷணம் ப்ராணாஹு திக்கு முந்திப் பண்ணுகிறபடியாலேயும், காசியபஸ்மிருதியில், ப்ராணாஹுதிக்கு முந்தி லவணாந்வித வ்யஞ்ஜந பரிவேஷணம் கூடாதென்றும், தர்வியாலேயே பரிவேஷணம் செய்ய வேண்டுமென்றும் சொல்லிவிட்டு, "நிவேதிதம் பகவதே யதந்நம் வ்யஞ்ஜநாந்விதம் ஏவம் நசைவநியம: ததந்ந பரிவேஷணே" என்று சொல்லியிருப்பதாலும், மற்ற ஸ்மார்த்தர்களுடைய அநுஷ்டானத்திலும், ப்ராணாஹு திக்கு முந்தியே வ்யஞ்சனஸஹிதமான அந்த பரிவேஷணம் ஏற்பட்டிருப்பதாலும் இந்த நியமங்களில்லாமலே அந்நபரிவேஷணம் கூடுமென்று தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களபிப்பிராயம். ஏகாதசி சிராத்தவிஷயம் நிரூபிக்கப்படும்.

### ஏகாதசி சிராத்த விஷயம்

ஸ்மிருதி புராணங்களுள் ஆசார ப்ரதிபாதநத்தில் இதம்பரப்ர வ்ருத்தைகளான ஸ்மிருதிகளில் காட்டிலும் ததநதிகிருதங்களான புராணங்கள் ஆசாரவிஷயத்தில் துர்ப்பலங்களாகையாலே ஸ்மிருதிகளில் ஏகாதசி சிராத்தம் பண்ணலாமென்று சில ஸம்பிரதாயஸ்தர்கள் சொல்லுகிறார்கள்.

இதற்கு ஸமாதானம் பின்வருவது கண்டறியத்தக்கது. சாரீரகமீமாம்ஸையில் இரண்டாவது அத்தியாயத்தின் ப்ரதமபாதத்தின் ப்ரதம ஸூத்ரத்தில் "நாந்ய ஸ்மிருத்ய நவகாசதோஷ ப்ரஸங்காத்" என்கிற ஸூத்ர வ்யாக்யாநத்தில், ஸ்ம்ருதிகள் ஆசார விஷயத்தில் ப்ரமாணமாவதுபோலே தத்வவிஷயத்திலும், ப்ரமாணமாகலாம் என்று நிருபித்திருப்பதுபோல் தத்வப்ரதிபாதகங்களான இதிஹாஸ புராணங்களும் பகவதாராதன ரூபமான கர்ம ப்ரதிபாதநத்திலும் இதம்பரப்ர விருத்தங்களாகையாலே, ஆசார விஷயத்திலும் ப்ரமாணமாகலாம்; மேலும் ஆசார ஸாமாந்யாதிக்ருத ஸ்மிருதிகளிற் காட்டிலும், விசிஷ்டாதிகாரிகளுடைய ஆசார ப்ரதிபாதகங்களான புராண வசனங்கள் ப்ரபலங்கள்.

விசிஷ்டாதிகாரிகளாவார் பகவதாராதன பூதகர்மா நுஷ்டாதாக்கள். ஹரிதினதிலகத்திலும், "பௌராணிக்யாது ருக்மாங்கத சரித மூகப்ராப்த கத்யா பதவ்யா சுத்தாம் ஸித்தாந்தயந்த; கதிசநக்ருதிந: ஸர்வதோஸந்தி வித்தம்" என்கிற சுலோகத்தில் "புராணத்தில், ருக்மாங்கத சரிதத்தால் ஏற்பட்டிருக்கிற மார்க்கத்தாலே தசமீவித்தையான ஏகாதசியை சில ப்ராஜ்ஞர்கள் விடுகிறார்கள்" என்று தேசிகன் அருளிச் செய்திருக்கிறபடியால் ஸ்மிருதிகளில் ஏகாதசியில் தசமிவேதை தோஷமன்று என்று சொல்லுகிற பாகத்திற்கு புராணத்தால் பாதம் ஸூசிதமாகிறது

மேலும், பாஞ்சராத்ரம் வேததுல்ய ப்ரமாணமாகையால் அந்த பாஞ்சராத்ரத்தில் ஏகாதசி சிராத்தம் கூடாதென்பது ஸ்பஷ்டம். வைதிக ஸார்வபௌமர் தசநிர்ணயீ என்கிற கிரந்தத்தில் ஸ்ரீ ஜயந்தீ நிர்ணயத்தில் ராத்ரி பாரண விஷயத்தில், ஸ்மிருதி விருத்தமாகையாலே ராத்ரி பாரணம் கூடாதென்று ஆக்ஷேபித்து, புராணங்களில் ராத்ரி பாரணம் முக்கியம் என்று சொல்லியிருப்பதால் ஆசார விஷயத்தில் ஸ்மிருதிகளைப்போல புராணங்களும் பிரமாணமாகுமென்பது. "ஸ்மாந்திச ஸ்ம்ருதேச்ச ஸித்தம்" என்றும், மேலும் பாஞ்சராத்ரம் வேததுல்ய ப்ரமாணமாகையால் அந்த பாஞ்சராத்ரத்தில் ஸ்ரீஜயந்தியில் ராத்ரி பாரணம் முக்யமென்றிருப்பதால், ராத்ரி பாரணம் ஆவசியகமென்றும் நிருபித்திருக்கிறார். ஆனால் ஏகாதசி சிராத்தம், அவசியம் கர்த்திவ்யம் என்று அவர் நிரூபித்திருப்பது கூடுமோவென்னில், அபிநிவேச விசேஷமானது ஸ்வவசனங்களில் பூர்வோத்தர விரோதத்தைக்கூட மறக்கும்படி செய்யுமென்பது. "அபிநிவேசவசீக்ருத சேதஸாம்" இத்யாதி ப்ரமாணங்களா லறியத்தக்கது.

ஸ்மிருதியிலும் ஏகாதசியில் ஏற்பட்ட சிராத்தத்தை த்வாதசியில் பண்ணவேண்டுமென்பதாகச் சொல்லியிருக்கிறது. பிருஹத்தாரித ஸ்மிருதியில் "ஸூதகாதௌயதா ச்ராத்தம் ஸூதகாந்தே விதீயதே, ததைவேகாதசீ ச்ராத்தம். த்வாதச்யாமேவ காரயேத்" என்று ஏகாதச சிராத்தத்தை த்வாதசியிற் செய்யும்படி சொல்லியிருக்கிறது.

ஹாரீத ஸ்மிருதியில் "பித்ரோ ச்ரார்த்தம் நகுர்வீத ஏகாதச்யாம் த்விஜோத்தம, த்வாச்யாம் தத்ரகுர்வீத நோபவாஸதிநேக்வசித், ஏகாதசீதிநே ப்ராப்தேமாதாபித்ரோர்ம்ருதே அஹநி, தத்திநம்து பத்ரியஜ்ய த்வாதச்ய மேவ காரயேத்" என்று சொல்லியிருக்கிறது.

ஆகையால் விஜ்ஞாநேசுவர ப்ரப்ருதிகளால் உதாஹரிக்கப்பட்டிருக்கிற ஏகாதசீ சிராத்த கர்த்தவ்யத்வ ப்ரதிபாதக வசநங்களுக்கும் ஏகாதசீ சிராத்தம் கர்த்தவ்யமன்று என்றேற்படுகிற வசனங்களுக்கும் ஸ்மார்த்த, வைஷ்ணவரூப அதிகாரி பேதத்தாலே வ்யவஸ்தைகாலாதர்சம் முதலான கிரந்தங்களில் பண்ணியிருப்பதால் விரோதமில்லை.

மேலும் ஏகாதசீ தினத்தில் அந்நமானது பாபத்திற்கு ஆசிரமமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பிருஹ்மகைவர்த்தத்தில், "நகேவலம் அகம் புங்க்தே யோபுங்தே ஹரிவாஸரேதிநே அத்ரஸர்வ பாபாநி பவந்த்யந்நஸ்திதாநிது, யாநிதாநிச பாபாநிச ப்ருஹ்மஹத்யாஸமாநிச, அந்நமாச்ருத்ய திஷ்டந்தி ஸம்ப்ராப்தே ஹரிவாஸரே" என்பதால் ஏகாதசியில் ப்ருஹ்மஹத்திக்கு ஸமமான பாபங்கள் அந்நத்தை ஆசிரயித்திருக்கின்றனவென்று சொல்லப்பட்டிருக்கிறது.

மேலும் ஏகாதசியில் பிதுர்க்களுக்கே அந்நம் கர்ஹிதமென்று சொல்லப்பட்டிருக்கிறது. "மாத்ருபர்த்ரு பித்ருணும் தத அந்நம் துர்க்கதி ஸாதநம், கர்ஹிதாந்நம் நசாச்நந்திபிதர: ச திவௌகஸ:, மத்யபாநம் நரச்ரேஷ்ட பீத்வைகோ நரகம் வ்ருஜேத், ஏகாதஸ்யந்ந காமஸ்து பித்ருபிஸ்ஸஹமஜ்ஜதி" என்பதனால், மத்யபாநம் பண்ணினவன் தானொருவன் நரகத்திற்கும் போகிறன். ஏகாதசியில் போஜனம் பண்ணினவன் தன்னுடைய பிதிர்க்களோடே நரகத்தில் முழுகுகிறுன என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படியே, "புங்க்ஷ்வபுங்க்ஷ்வேதியே ப்ருயாத்தமாஹுர் ப்ருஹ்ம காதுகம்" என்பதனல் ஏகாதசியில் யாவனொருவன் ஒருவனை போஜனம் பண்ணும்படி சொல்லுகிருனே அவன் ப்ருஹ்மஹத்தியைப் பண்ணுகிறவனுகச் சொல்லப்படுகிருன். ஆதலால் கர்த்தா போக்தா இருவருக்கும் பிரத்தியவாய மேற்படுவதால் ஏகாதசி சிராத்தம் ஸர்வ ப்ரகாரத்தாலும் நிஷித்தமென்றேற்படுகிறது.

ஆனல் பாரதத்தில் "அஷ்டௌதாந்ய வ்ருதக்நாநி ஆபோமூலம் க்ருத: பய:, ஹவி: ப்ராஹ்மணகாமாய குரோர்வசந மௌஷதம்" என்பதனல் வ்ருததினங்களில் தீர்த்தம் கிழங்கு நெய் பால் ஹவிஸ்ஸு நிமித்ருணம் ஆசார்யநியமநம் ஔஷதம் இவைகளேற்பட்டால் உபவாஸமில்லாமலிருந்தாலும் ப்ரபத்தியவாயமில்லை என்று சொல்லியிருப்பதால் ஏகாதசி சிராத்தம் பண்ணலாமென்னில், 'அவ்ருதக்நாநி' என்று சொல்லியிருப்பதால், ஏகாதசி சிராத்த வ்யதிரிக்த வ்ருததினங்களில் சரிதார்த்தமாயிருப்பதால் ஏகாதசி சிராத்த நிஷேத வசநங்களுக்கு விரோதமாகாது.

இதுநிற்க, ஏகாதசியில் ஏகோத்திஷ்டம் ஏற்பட்டாலும் அதையும் மறுநாளே செய்ய வேணுமென்பது ப்ரமாணஸித்தம். "ஆத்யச்ராத்தம் ஹரிதிநேயதி குர்யாத் விமோஹிதா கர்த்தா ப்ரதிக்ரஹீதாச உபௌநிரயபாதிநௌ" என்பதனல் ஏகாதசியில் ஏகோத்திஷ்டம் வந்தால் அதை மறுநாள் செய்ய வேணுமென்பதறியாமல், ஏகாதசியில் செய்தால் அதன் கர்த்தாபோக்தா இவர்களெல்லாரும் நரகத்தில் விழுகிறுர்கள் என்று பாரத்வாஜர் சொல்லியிருக்கிருர்.

போதாயநரும், "ஆத்ய ச்ராத்தம் ஹரிதிநே யதிஸ்யாத் தந்நகாரயேத், பிண்டமேகம் ப்ரதாயாத த்வதாச்யாம ச்ராத்த மாசரேத்" என்பதனல் ஏகாதசியில் ஏகோத்திஷ்டம் நேர்ந்தால், அன்று ஏகபிண்ட ப்ரதாநம் பண்ணி விட்டு மறுநாளில் ஏகோத்திஷ்ட சிராத்தம் பண்ணவேணுமென்று சொல்லியிருக்கிருர்.

ப்ருஹத் ப்ரசேதஸ் என்பவரும் "ஆத்ய ச்ராத்த மபித்யாஜ்யம் ஸம்ப்ராப்தே ஹரிவாஸரே, ப்ரதாயைகம் ததாபிண்டம் பரேஹ்நி சிராத்த மாசரேத், ஏகாதசே த்வாதசேவா ச்ராத்த மாத்யம் ஸமாசரேத், ஏகாதசத்வாதசயோ: விசேஷோநஹி வித்யதே" என்பதனல், ஏகாதசியில் ஆத்ய சிராத்தம் வந்தாலும் அன்று ஏகபிண்ட ப்ரதாநம் பண்ணிவிட்டு, மறுதினத்தில் அந்த சிராத்தம் பண்ணத் தக்கதென்றும் பதினென்றுவது தினத்துக்கும் பன்னிரண்டாந்தினத்துக்கும். தியாஸமில்லையென்றும் ஆகையால் பதினேராம்நாள் ஏகாதசியானல் பன்னிரண்டாம் நாள் ஏகோத் திஷ்டம் செய்யலாமென்றும் சொல்லியிருக்கிருர்.

இப்படி பாரத்வாஜர், போதாயநர், ப்ருஹத்ப்ரசேதன் என்னும் ஸ்ம்ருதி கர்த்தாக்கள் சொல்லிய வசனங்கள் ஏகாதசி சிராத்தம் அநுஷ்டேயமன்றென்பது வ்யக்தம்.

மேலும் பாஞ்சராத்ரத்தில், ஆமே நாபி ஹிரண்யேந ச்ராத்தம் ஏகாதசிதிநே, குர்வந் நரகமாப்நோதி யாவதாபூத ஸம்ப்லவம், க்ரஸ் தாஸ்தமித ஆதித்யே யதாச்ராத்தம் பரே அஹநி, தத்தைவ ஏகாதசி சிராத்தம் த்வாதச் யாமேவ காரயேத்' என்பதனுல் ஆமசிராத்த மாவது ஹிரண்ய ச்ராத்தமாவது ஏகாதசியில் செய்கிறவன் ப்ரளய பர்யந்தம் நரகத்தை அடைகிறுன் என்றும், சூர்யன் கிருஸ்தாஸ்த மிதனுல் அன்று செய்யவேண்டிய சிராத் தம் மறுநாள் செய்யப்படுவது போலவே ஏகாதசி சிராத்தமும் மறுநாள் செய்யவேண்டு மென்றும் சொல்லப்பட்டன. "ம்ருதாஹம்ஸ மதிக்ரம்ய" என்கிற வசனம் உதாஹரிக்கப் பட்டுள்ள வசன விசேஷங்களாலே க்ரஹணம், ஏகாதசி முதலிய தினங்களில் பாதிக்கப்பட்டு அவையொழிந்த தினங்களில் சரிதார்த்தமாவ தால் அது பாதகமாகாது.

சிரவணத்வாதசியில் வாமநஜயந்தி வரு மாகையால் அன்று உபவாஸமிருந்து சிராத் தம் மறுநாள் செய்யவேண்டாமோ என்னில் வாமனவதாரம் பாத்ரபதமாஸத்தில் காலே யில் கந்யாலக்கினத்திலாகையால் உத்ஸவாந் தத்தில் பாரணம் ஏற்பட்டிருப்பதால் அன் றைய தினமே போஜனம் சிராத்தம் முதலான வைகள் செய்யலாம். வ்யாஸ ஸம்ஹிதையில் "மாஸிபாத்ரபதே சுக்ல த்வாதச்யாம் ச்ரவ ணே ததா, கந்யாலக்நேது கந்யாம்சே ஜாதஸ்ரீ வாமநோ விபு:, தத்தித்யாம் வ்ரு:சிகே லக்நே வ்ரு:சிகாம்சே தரிவிக்ரம:, ஸஏவ வாமந: ஸாக்ஷாத் ஸர்வஸ்யாபி விபு: ப்ரபு:, தத்வத்ததாசதம் த்யாயேத் ஸர்வலோக ஜயா ய்ச, மோக்ஷார்த்தேச விசேஷண ஸர்வசந்த விமுக்தயே, தஜ்ஜயந்த்யர்ச்ஜநம் க்ருத்வா உத்ஸவாந்தேச பாரணம், குர்யாத் ஸவைஷ் ணவைஸ்ஸார்த்தம் பகவத் தர்ம்ம ஸித்தயே" என்பதனுல் பாத்ரபத சிரவணத்வாதசியில் வாமநாவதாரமும் திரிவிக்ரமாவதாரமும் ஏற் பட்டனவென்றும் அந்த அவதார தினத்தில் வாமநாராதநம் பண்ணிவிட்டு உத்ஸவாந்தத் தில் வைஷ்ணவர்களோடுகூட பாரணம் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படியே மாசி மாசம் க்ருஷ்ணபக்ஷ த்வதேசியும் சிரவண த்வாதசியானுலும் ஸ்ரீ வராஹஜயந்தி யாகையாலே, இந்த ந்யாயத் தால் அன்றும் உத்ஸவாந்தத்தில் பாரணம் பண்ணவேண்டும். ஸ்ரீராமநவமியும் ஜயந்தி யாகையால், பகலில் கடகலக்கினத்திந் உத்ஸ வமாதலால், உத்ஸவாந்தத்தில் பாரணமும், சிராத்தமும் பண்ணலாம். அஹோராத்ரம் உபவாஸவிதி அவைஷ்ணவ விஷயம். நரஸிம்ஹ ஜயந்தியுந் இப்படியே. இனி வைஷ்ணவ விதவைகளிந் வபநநிஷேதம் நிருபிக்கப்படும்.

### விதவை வபனம்

இனி, விதவைகளுடைய வபநநிவேஷதம் நிருபிக்கப்படும்:— பர்த்ருபந்தாயஜாயதே சிரஸோமுண்டநம் தஸ்மாத் கார்யம் விதவயா ஸதா" என்று வைகுண்டநாதீயத்திலும்,

"ஹரிஸேவாவிஹீநாயா விதவாகேச தாரிணீ, உபவாஸவிஹீநாயா வ்ருதஹாநாத் விதூஷிதா" என்று சேஷதர்மத்திலும்,

"மாஸகேசாது விதவா மாவிகேசா ஸகர் த்ருகா, மாவ்ருதீஸ்யாத் ஸதாகேசீ மாரண் யோ நகரா ச்ரய:, மாதநீச அப்ரதாதாமே ராஜ்யே வஸது நிர்க்ருண:" என்று நாரதீயத் திலும் சொல்லப்பட்டிருப்பதால், விதவை களுக்கு கேசதாரணம் கூடாதென்று ஏற்பட்டி ருந்த போதிலும்,

"வித்வத்விப்ரந்ருபஸ்திரீணும் வபநந்து நிஷித்யதே முமுக்ஷுர்யதி ஸாதஸ்யா: வபநம் நைவகாரயேத்" என்றும், ககேசுவர ஸம்ஹி தையில், "ப்ரயோஜநாந்தரா ஸக்தா விதவா வாபயேச் சிர:, முமுக்ஷுர் யதிஸாதஸ்யா: வபநம்து நிஷித்யதே" என்றும் சொல்லப்பட் டிருப்பதால், வித்வான்களாயிருக்கிற ப்ராஹ் மணர்களுடைய ஸ்திரீகள், ராஜஸ்திரீகள் இவர்களுக்கு வைதவ்யம் நேர்ந்தால், வபநம் வேண்டியதில்லேயென்றும், முமுக்ஷுக்களான ப்ரபந்ந ஸ்திரீகளுக்கும், வபநம் வேண்டிய தில்லேயென்றும் ஏற்படுகிறது. இதனுல் கீழ்ச் சொல்லிய வபநவிதாயக வசநங்கள் அமுமுக்ஷு விஷயவவமன்றறிய வேண்டும்.

இப்படியே, வாசிஷ்ட ஸம்ஹிதையில், "சரணுகதி நிஷ்டாசேத் ப்ரபந்நா விதவாஹதீ க்ஷெளரகர்ம நகுர்யாத்ஸா பகவத்ரோஹிணீ பவேத்" "நகரோதி யதாக்ஷெளரம் கேவலா விதவாயதி, தாம்த்ய ஜேதபரேராஷ்ட்ரே பதிதாம்பாப காரிணீம்" என்ற வசனங்களால் சரணுகதி நிஷ்டைகளான ஸ்திரீகளுக்கு வப நம் வேண்டியதில்லேயென்றும், கேவல விதவை களுக்கு வபநம் ஆவசியகமென்றும் சொல்லப் பட்டுள்ளன.

''வித்வத் விப்ரந்ருபஸ்திரீணும்'' என்கிற சுலோகத்தில் விதவைகளான ராஜஸ்திரீகளுக்கு வபநம் கூடாதென்பதை அநுஸரித்து ஆப்ததமனை போஜராஜா போஜசம்புவில், ''வைதவ்யோசித வேஷ நி:ச்சித மநோலங்கா வதூஜூடாம்'' என்று ஹநுமான், லங்காத ஹநம் பண்ணுகிறகாலத்தில் உண்டான தூம ஸமூஹத்தை வைதவ்யத்திற்கு அநுகுணமான வேஷத்தில் நிச்சயத்தையுடைய லங்கையாகிய ராஜஸ்திரீயின் ஜடையாகச் சொல்லியிருக்கிருர். ஆதனால் அந்த ராஜஸ்திரீகளோடு சேர்த்துச் சொல்லியிருக்கிற வித்வத்விப்ர ஸ்திரீகளுக்கும் வபநம் கூடாதென்பது ஸித்திக்கிறது. வித்வத்விப்ரர்கள் கீழ்ச்சொல்லப்பட்டுள்ள வசனப்படி சரணுகதி நிஷ்டர்களென்று அறியத்தக்கது.

### மூலமந்த்ர உச்சாரணம்

இனி ஸ்திரீ சூத்திரர்களுக்கு ப்ரணவத்தோடே கூடின மூலமந்திரத்தின் உச்சாரணம் கூடும் என்னும் விஷயம் விசாரிக்கப்படும்.

ப்ரணவ ரஹிதமான மூலமந்த்ரத்தில் தான், ஸ்திரீ சூத்திரர்களுக்கு அதிகாரம் என்று சில ஸம்ப்ரதாயஸ்தர்களுடைய அபிப்ராயம். அதற்கு ப்ரமாணம்:— ''நா ஸ்வர: ப்ரணவோங்காநி நாப்யந்ய விதயஸ்ததா, ஸ்த்ரீணுந்து சூத்ரஜாதிநாம் மாந்த்ரமாத்ரோக்தி ரிஷ்யதே, தத்ர உத்தராயண ஸ்யாதி: பிந்து மாந் விஷ்ணுரந்தத: பீஜமஷ்டாக்ஷ ரஸ்யஸ்யா தேநாஷ்டாக்ஷரதா ஸ்ம்ருதா'' என்பதாம். இதற்கு அர்த்தம்— ஸ்வரம், ப்ரணவம், அங்கங்கள் வேறு விதிகள் இவைகள் ஸ்த்ரீ சூத்ரர்களுக்குக் கூடாது; நாராயண பதத்தில் ''நார'' ''அயன'' என்கிற இடத்தில் அந்த உத்தர பதாதியான அகாரம் அநுஸ்வாரத்தோடே கூடியதாய்க்கொண்டு திருமந்த்ரத்துக்கு பீஜமாகிறது; ப்ரணவத்தைவிட்டு அந்த பீஜபூதமான 'அம்' என்கிறதோடு சேர்த்து 'அம் நமோநாராயணுய' என்கிற அஷ்டாக்ஷரத்தில் ஸ்த்ரீ சூத்ரர்களுக்கு அதிகாரம். ப்ரணவஸ்தாநத்தில் அகாரமும் மகாரமும் ஏற்பட்டிருக்கிறபடியால், ''ஸர்வம் வாக்யம் ஸாவதாரணம்'' என்கிற நியாயத்தாலே ஏவகாரஸ்தாநீயமான உகாரார்த்தத்தோடே கூடின அநந்யார்ஹ சேஷத்வம் ஏற்படுகிறது. இத்தை அநுஸரித்தே ப்ரபந்தங்களிலும் புராணங்களிலும் ஸ்த்ரீ சூத்ரர்களுக்கு ப்ரணவரஹிதமான மந்த்ரோச்சாரணமே சொல்லப்பட்டிருக்கிறது.

வராஹபுராணத்தில் கைசிக மாஹாத்மியத்தில் ''நமோநாராயணேத் யுக்த்வாச் வபாச: புநராகமத்'' என்று நம்பாடுவான் ப்ரணவ மில்லாமலேயே உச்சரித்ததாகச் சொல்லியிருக்கிறது.

பெரியாழ்வாரும் ''நாடுநகரமு நன்கறிய நமோநாராயணுய'' என்றும், ''நல்லாண்டென்று நவின்றுரைப்பார் நமோநாராயணுய'' என்றும், தம்முடைய ப்ரபந்தங்களில் ஸ்த்ரீ சூத்ரர்களுக்கும் அருளிச் செய்திருக்கிருர் இதனை மற்ற ஆழ்வார்கள் திவ்யஸூக்திகளிலும் கண்டுகொள்ளலாம். இன்னும் ''வைதிகம் ப்ராஹ்மணுநாம் ஸ்யாத் ராஜ்ஞாம் வைதித தாந்த்ரிகம், தாந்த்ரிகம்வைச்ய சூத்ராணும்'' என்றும் ப்ரவேநவிஹீநாஸ்து தாந்த்ரிகா ஏவ கீர்த்திதா:'' என்றும் சொல்லப்பட்டன என்பர்.

இதற்கு சமாதாநம்:—

தாந்த்ரிகமான மந்த்ரம் ப்ரணவரஹிதமான மந்த்ரம்போலே ஸ்வரவிஹீநமான ப்ரணவத்தோடே, கூடின மந்திரமும் தாந்திரிக மந்த்ரமேயாம். ''ஸர்வேஷாம் தாந்த்ரிகந்து வா'' என்றும், ''வைச்ய சூத்ராணும்'' என்றும் த்ரைவர்ணிகர்களான வைசியர்களையும் சேர்த்துச் சொல்லியிருப்பதால் ஸ்வர ரஹித ப்ரணவத்தோடே கூடின மந்த்ரமே தாந்த்ரிகமென்று கொள்ளவேணும். மேலும்,

''ஓமித்யே காக்ஷரம் நம இதி த்வே அக்ஷரே'' என்று ப்ரணவத்தோடே கூடியே மந்த்ரத்துக்கு அஷ்டாக்ஷரத்வம் சொல்லியிருப்பதால், அந்த அஷ்டாக்ஷரத்தில் முமுக்ஷுக்களான, ஸ்த்ரீ சூத்திரர்களுக்கும் அதிகாரம் உண்டு என்று கொள்ளவேணும். இப்படியன்றிக்கே மந்த்ரஸாமாந்யத்தை ப்ரணவத்தோடே, சேர்த்து அநுஸந்திக்கிற கிரமத்தைப்பற்றிப் பார்த்தால், அந்த மந்த்ரஸாமாந்யத்துக்கும் ஆகந்துகமான ப்ரணவத்தினுடைய அநுஸந்தானம் கூடாதென்று கொள்ள வேணும். ''மந்த்ர மாத்ரோக்திரிஷ்யதே'' என்கிற வசனப்படி மந்த்ரத்தை மட்டும் சொல்லலாம் என்றேற்படுகிறபடியால் ப்ரவணத்தோடு கூடிய மூலமந்த்ரமே மந்த்ரமாகையால் அந்த வசனமானது நைஸர்க்கிக ப்ரணவயுக்த மூலமந்த்ர விஷயமன்று.

மேலும் அநுபநீதனை த்ருவனுக்கு நாரதர் த்வாதசாக்ஷரத்தை உபதேசிக்கிற கிரமத்தைச் சொல்லுகிற பாகவதத்தில், "ஓம் நமோ பகவதே வாஸுதேவாய" என்று உபதேசித்ததாகச் சொல்லியிருக்கிறது.

ஹரிவம்சத்தில் கண்டாகர்ணன் அத்யந்தம் சூத்ராதி ஜாதிகளைக்காட்டிலும் நிக்ருஷ்டமான பிசாசு ஜாதியிற் பிறந்திருக்கச் செய்தேயும் ப்ரணவ ஸஹிதமான த்வாதசாக்ஷரத்தை உச்சரித்ததாகச் சொல்லியிருக்கிறது.

அநுபநீதர்களான பாலர்களுக்கு அக்ஷராப்யாஸகாலத்தில் "ஓம் நமோ நாராயணாய" என்று அக்ஷராப்பியாஸம் பண்ணுவிக்கிறார்கள். ஆதலால் நிஷேதம் ஸ்வரயுக்த ப்ரணவ விஷயமாகவும் ஆகந்துக ப்ரணவஸஹிதமந்த்ர விஷயமாகவும் கொள்ளவேணும்.

"தாப:புண்ட்ரஸ் ததாநாம மந்த்ரோயாக:ச்ச பஞ்சம:" என்று மந்த்ரத்கோடே ஸஹபடிதமான யாகத்தில் அதிகிருதர்களான ஸ்த்ரீசூத்ரர்களுக்கும் யாகோபயுக்த மந்த்ரோச்சாரணம் ரதகாராதிகரண ந்யாயத்தாலேகூடும். மேலும், அத்யயநவிதி அத்ருஷ்டார்த்தமாகையாலே அந்த அத்யயன நிஷேதமும் அத்ருஷ்டார்த்தமாகவே கொள்ளவேணும். ஸ்த்ரீ சூத்ரர்களுக்கு அர்த்தபஞ்சக ஜ்ஞான ரூபமான த்ருஷ்டார்த்தம் பலமாகையாலே அது நிஷேதத்துக்கு விஷயமன்று.

மேலும், திருமங்கையாழ்வார், "மற்றுமோர் தெய்வமுளதென்றிருப்பாரோ" என்கிற பாசுரத்தில் ஸர்வேசுவரனிடத்தில் நின்றும் அஷ்டாக்ஷரத்தைத் தாம் பெற்றதாக அருளிச்செய்திருப்பதால் அந்த அஷ்டாக்ஷரம் சுருதிஸித்தமாகையால், ப்ரணவஸஹிதமாகவே கொள்ளவேணும். இத்தை யநுஸரித்தே பராசர ஸம்ஹிதையில் "ஸதாப்ரணவ ஸம்யுக்தம் மூலமந்த்ரத்வயாதிகம், வேதஸ்வராதி வர்ஜம் ஸ்யாத் சூத்ராணும் மந்த்ரஜாபநே" என்று ஸ்வராஹிதமான மந்த்ரோச் சாரணம் கூடுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

"தாராதிர் முக்தயெ ததா, பீஜாதிர்ப்புக்தயே ததா" என்று சொல்லியிருக்கிறபடியால், முமுக்ஷுக்களான ஸ்திரீ சூத்திரர்களுக்கு பரணவ ஸஹிதமான மந்த்ரோச்சாரணம் கூடும். ஆதலால் ஸ்வராஹிதமான மந்த்ரோச்சாரணம் கூடும். ப்ரணவோச்சாரண நிஷேத வசனம், அமுமுக்ஷு விஷயமாதல் ஸ்க்ரயுதவ ப்ரணவ விஷயமாதல் கொள்ளவேணும். இனி பாகவதோச்சிஷ்டாசந விஷயம் நிரூபிக்கப்படும்.

### பாகவத உச்சிஷ்டம்

இனி பாகவதோச்சிஷ்டாசநம் நிரூபிக்கப்படும்.—

பாகதோச்சிஷ்டாசநமாவது:— அவர்கள் அமுதுசெய்த இலைத்தளிகையில் தான் ப்ரஸாத ஸ்வீகாரம் பண்ணுவது; அதுவுமன்றி பாகவதாள் அமுது செய்த பின்பு பாண்டஸ்தமான ப்ரஸாத சேஷத்தை ஸ்வீகரிப்பதுவுமாம்.

அவர்கள் அமுது செய்த இலைத்தளிகையில் ப்ரஸாதத்தை ஸ்வீகரிப்பது ஆசார்ய விஷயமென்றும், மற்ற பாகவதர்களுடைய உச்சிஷ்டாசனம் பாண்டஸ்த புக்தசேஷாநமென்றும் சில ஸம்ரதாயஸ்தர்களுடைய அபிப்பிராயம்;

"அதற்கு ப்ரமாணம்:— "நாராயணைக நிஷ்டஸ்ய யாயாசேஷ்டாததர்ச்சயம்" என்று தொடங்கி, "ததுச்சிஷ்டம் ஸுபாவநம்" என்று சொல்லப்பட்டிருக்கிறது; நாராயணைக நிஷ்டனுவான்:— காஷ்டாபந்நமான அநந்யோபாயத்வமென்ன, அநந்யபோக்யத்வாதி வ்யவஸாய மென்ன, அதற்கு அநுகுணமான ஆசாரமென்ன இவைகளாலே, பூர்ணனை உத்தமாதிகாரி; இந்த உத்தமாதிகாரி ஸாமாந்யத்தைச் சொல்லுகிற இதுசாமாந்ய விசேஷ நியாயத்தாலே ஆசார்ய விஷயமேயாம்; "யேசோபகுர்வதேஜ்ஞாநம் கிமயேச்யுத ஸம்ச்ரயம் விநோச்சிஷ்டாசநம் கார்யாவ் ருத்தி: தேஷ்வபி கௌரவாத்" என்று உச்சிஷ்டாசநம் ஆசார்ய வ்யதிரிக்த விஷயத்தில் கூடாதென்று விலக்கப்பட்டிருக்கையாலே ஆசார்யோச்சிஷ்டா சநம்மே கர்த்தவ்யமென்றேற்படுகிறது; ஆதலால் ஆசார்ய வ்யதிரிக்த விஷயத்தில் பாண்டஸ்தப்ரஸாதசேஷாசநமே கொள்ளவேணும் அதுவுமின்றி "உச்சிஷ்டமகுரோரபி' என்று நிஷேதமிருப்பதாலும் இது ஸித்தம்" என்பர்.

இவ்விடத்தில் "நாராயணைகநிஷ்ட" சப்தம், சாமாந்ய விசேஷ ந்யாயத்தாலே ஆசார்ய மாத்ரபர மென்று சொல்லுவது அநுசிதம். பிதா, ஜ்யேஷ்ட ப்ராதா இவர்களுடைய உச்சிஷ்டாசநம் சாஸ்திர ஸம்மதமாகையாலே, அவர்கள் ஆசார்ய வ்யதிரிக்தர்களாகையாலே அவர்கள் விஷயத்திலும், உச்சிஷ்டாசந நிஷேத ப்ரஸங்கம் வரும்; ஆதலால் குருசப்தம்

யாருடைய உச்சிஷ்டாசநம் சாஸ்த்ராநுமதமாயிருக்கிறதோ, அவர்களெல்லோருக்குமே உபலக்ஷகம். ஆதலால் "நாராயணைக நிஷ்டஸ்ய" என்கிற சப்தமானது ஆசார்ய விஷயமாத்ரமென்று ஸங்கோசிப்பது அந்யதா ஸித்தம், "யேசோப குர்வதே ஜ்ஞாநம் கிமப்யச்யுத ஸம்ச்ரயம்" என்கிற வசநம் நாராயணைகநிஷ்டனை பூர்ணாதிகாரி மாத்ர விஷயமன்று. "கிமபி" என்று ஸ்வல்பஜ்ஞாந உபகர்த்ருத்வம் சொல்லுகிறபடியால் மத்யமாதிகாரி விஷயமாகவும் கொள்ளவேணும். உச்சிஷ்டமென்பது அவர்களமுது செய்த இலைத்தளிகையிலுள்ள ப்ரஸாதத்தைத்தான் முக்யமாகச் சொல்லும். பாண்டஸ்த சேஷத்தைச் சொல்வது அஸ்வரஸம்.

இப்படியே ஆசார்யதுல்யர்களான பாகவதர்களுடைய உச்சிஷ்டாசநம் சேஷத்வ ஜ்ஞாந வர்த்தகமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியே தொண்டரடிப்பொடியாழ்வாரும், "போனகம் செய்த சேடம் தருவரேல் புநித மன்றே" என்றருளிச் செய்தார். "ஆதலால், "நாராயணைக நிஷ்டஸ்ய" என்று சொல்லப்படுகிற அதிகாரிகள் ஆசார்ய துல்யர்களான ஜ்ஞானபூர்த்தியுள்ள பாகவதர்களை விலக்காதென்றே கொள்ள வேணும்.

இனி, பஞ்ச ஸம்ஸ்கார விஷயத்தில், தாப ஸம்ஸ்காரம், ஹோம பூர்வமாகவே செய்ய வேணுமென்று சொல்லப்படுகிறது; அப்படி ஹோமமில்லாமல் செய்வதும் சில ஸம்ப்ரதாயங்களில் ஏற்பட்டிருக்கிறது. அதற்கு ப்ரமாணம்—பாரத்வாஜஸம்ஹிதையில், அமீ பரமஸம்ஸ்காரா: பாரமைகாந்த்ய ஹேதவ:, ஸர்வத்ரஹரிரேவ அர்ச்ச்ய: நாக்திகர்மேதி கேசந" என்று சொல்லப்பட்டிருக்கிறது. கீழ் தாபாதிஸம்ஸ்காரங்கள் ஹோமபூர்வமாகவே செய்யவேண்டுமென்று சொல்லிவிட்டு, அப்படி அக்நி கர்மாவான ஹோமம் வேண்டுவதில்லை யென்று சிலர் சொல்லுவர்கள் என்றிருப்பதாலும், "பதிவ்ருதா நிமித்தம்ஹி வலயாதி விபூஷணம்" என்னுமாப் போல தாபாதிஸம்ஸ்காரங்கள் பகவத் தாஸ்யசிந்ஹங்களாகையாலும், ப்ராய: சித்தரூபங்களல்லாமையாலும், ஹோமம் அநபேக்ஷிதம்.

**யதிகளுக்கு மடாதிபத்யம்**

இனி யதிகளுக்கு மாடாதிபத்யகூடும் விஷயம்:—

"மாடாதிபத்யம் யதி: குர்யாத் விஷ்ணு கார்யார்த்த வ்ருத்தயே" என்று தொடங்கி, விஷ்ணு கைங்கர்யத்தின் விர்த்தியின் பொருட்டும் ஸித்தாந்த ஸ்தாபநத்தின் பொருட்டும், மாடாதிபத்தியத்தைச் செய்ய வேண்டுமென்று சொல்லியிருப்பதால், விசேஷ தர்மங்களான கைங்கர்ய ப்ரப்ருதிகளுக்கு அவிரோதேந ஸாமாந்ய தர்மங்கள் அநுஷ்டேயங்களாகையாலே விசேஷ தர்மாநுஷ்டான காலத்தில் யதிகளுக்கு விதிக்கப்பட்டிருக்கிற ஸாமாந்ய தர்மத்துக்கு லோபமிருந்தாலும் ப்ரத்யவாயமில்லை என்று கீழ் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. யத்யந்நாதி நிஷேத விஷயமும் அவைஷ்ணவ யத்யந்நாதிகளில் சரிதார்த்தமாம். தத்ஸ்வீகாரம் மதாந்தர ஸ்தர்களிடத்திலுமிருப்பதால், இந்த விஷயத்தில் நிரூபணத்தை நிறுத்தி விட்டேன்.

பகவத் ஸந்நிதியில் பாகவதஸமாகமம் நேர்ந்தால் பரஸ்பரம் வந்தநம் கூடும். இதர வந்தன நிஷேதம் பரஸ்பர வ்யதிரிக்த விஷயம். இந்த விஷயம் சாண்டில்யஸ்ம்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

"பகவந்மந்திரேவ்ருத்தாந் பூஜ்யாநபி விசேஷத: விநாபாகவதச்ரேஷ்டம் ப்ரணமாத்மை: நசார்ச்சயேத்" அப்படியே அர்ச்சா ரூபிகளான ஆசார்யர்களுடைய வந்தனமும் பகவத் ஸந்நிதிகளில் கூடும். பாரத்வாஜ ஸ்ம்ருதியில், "பரிவாரந்:சஸேவேத பக்த்யாபர மயாஹரே: தத்ததர்ச்சாகதாந் பக்தாந் ஆசார்யாந்:ச விசேஷத:" என்று பகவத்ஸந்நிதியில், அர்ச்சா ரூபிகளான ஆசார்யர்களுடைய நமஸ்காரம் விஹிதம்.

இந்த விஷயத்தில் பூர்வாசார்யர்கள், அநுஷ்டித்ததாக ஒரு ஐதிஹ்ய மேற்பட்டிருக்கிறது. அதாவது (திருவிருத்த வ்யாக்யானத்தில்) ஸ்ரீ பாஷ்யகாரர் பகவத் ஸந்நிதியில் எழுந்தருளியிருக்கும் போது ஸ்ரீபாஷ்யகாரரை அநேக ஸ்ரீ வைஷ்ணவர்கள் தெண்டன் ஸமர்ப்பிக்க, அப்போது ஒரு வித்வான் பகவத் ஸந்நிதியில் இதர வந்தனம் கூடாதென்று, சாஸ்திரம் சொல்லியிருக்க இப்படி ப்ராஜ்ஞர்களாயிருப்பவர்கள், ஸ்வாமியைத் தண்டன் ஸமர்ப்பிக்க அதை ஸ்வாமி அங்கீகரித்திருப்பது கூடுமோ என்று கேட்க, அதற்கு ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த ப்ரகாரமாவது:—"ஒரு ராஜாவினுடைய ஸமீபத்தில் அவன் பார்த்திருக்கச்

செய்தே அவனுடைய பாதுகையை ஒருவன் தன்னுடைய ஸிரஸாலே வஹித்துக்கொண்டு அந்தப் பாதுகைகளுக்கு, நாநாவித பூஜைகளை யும் செய்தால், அது ராஜாவினுடைய அநுக்கிரஹத்துக்குக் காரணமாமே யல்லாது நிக்கிரஹத்துக்குக் காரணமாக மாட்டாது: அதுபோலவே எம்பெருமானுடைய பாதுகா ஸ்தாநாபந்நர்களான பாகவதர்களைத் தண்டன் ஸமர்ப்பித்தால் அது எம்பெருமானுடைய விசேஷாநுக்ரஹத்துக்குக் காரணமாமே யல்லது நிக்ரஹத்துக்குக் காரணமாக மாட்டாது: வந்தன நிஷேதமும் பாகவதவ்யதிரிக்த விஷயம்'' என்றார் என்பதாம்.

ஆக இப்படி ப்ரமாணங்களாலும் உபபத்திகளாலும் ஆசார்யாநுஷ்டான ப்ரகாசகமான ஐதிஹ்யத்தாலும் பகவத் ஸந்நிதியில் பாகவதவந்தனம் கூடுமென்றாயிற்று. இப்படி ப்ரமாணஸித்தமாயுள்ள அநுஷ்டானங்களைச் சிலர், ''விததைதிஹ்ய ஸஹஸ்ரவர்ணநேந'' (என்பது போன்ற வாக்கியங்களால்) ''பொய்யான ஐதிஹ்யங்களைச் சொல்லிக்கொண்டு சில கலகர்கள் லோகத்தை வஞ்சிக்கிறார்கள்'' என்று நிந்திக்கிறார்கள். தங்களுடைய ஸம்ப்ரதாயங்களிலும் அப்படியே அநேக ஐதிஹ்யங்களைத் தாங்கள் சொல்லிக்கொண்டிருப்பதை அவர்களறிருந்திருந்தால் நிந்திக்கமாட்டார்கள். அவற்றையெல்லாம் இங்கு விஸ்தரித்து நிரூபிப்பதில் விஸ்தரபயத்தால் நிறுத்தி விட்டேன்.

## ஆராதன விஷயம்

இது நிற்க: ஆராதனவிஷயம் நிரூபிக்கப்படுகிறது—பகவத் ப்ரபந்நனுக்குப் பகவதாராதனம் ப்ரதாநம். குருபரம்பராராதநப் அப்நாம் ஆசார்யநிஷ்டனுக்கு ஆசார்யாராதநமற் ப்ரதாநம். பகவதாராதநம் ஆசார்யநிஷ்டனுக்கு ஆசார்யமுகோல்லாஸ ஹேதுவாக அநுஷ்டிக்க வேண்டுவதாகை யாலே அப்ரதாநம். இதற்கு ப்ராணம்.—ச ''உபாயோபேய பாதேந தணமேவ ரம்ம ஜேத், கர்மநியச்ச சந்த்யச்ச கீர்த்தநயச்ச ஸர்வதா'' என்று அப்படி பாஷ்யகாராபிமான நிஷ்டர்களுக்குப் பாஷ்யகாரருடைய பமஞநீந மாக உபயவேதாந்த ப்ரவசனமும், அவரருளிச்செய்த கத்யத்தில் ப்ரதிபாதிக்கப்பட்ட பகவதாராதநமும், பாஷ்யகாரருடைய ஸம்பந்த ஞாபகமாகாகையாலே ஆவசியகம். இது நிக: ஆழ்வார்கள் ஆசாரியர்கள் இவர்களுடைய ஆராதன விஷயத்தில் ப்ரமாணம் நிரூபிக்கப்படுகிறது —

வைகுண்டநாதீயத்தில், நாராயண ஸம்ஹிதையில் ''மத்பக்தாந சடகோபாதீந் பூஜயேத் வைஷ்ணவோத்தம:, மந்த்ரரத்ந விதாநைச்ச உபசாரைச்ச ஸர்வச:, மத்ஸாந் நித்ய ஸதாதத்ர மமப்ரீதிகரம் சுபம், மயிஜாநிகம வித்தி மத்ஸாயுஜ்ய மவாப்நுயாத்'' என்று சொல்லப்பட்டுள்ளன. ஆகையால் இப்படி ஆழ்வார்கள் முதலானவர்களை ஆராதிக்க வேண்டியது அவசியமென்றும், அது பகவத் ஸாந்நித்யத்திற்கு ஹேதுவென்றும் சொல்லப் பட்டன. இப்படி திங்மாத்திரம் ஆசார்ய விஷயத்தில் நிரூபிக்கப்பட்டது.

ஆக, தத்வஹித புருஷார்த்தங்களில் தத்வம் ஸ்ரீமந்நாராயனனென்றும், பக்தி ப்ரபத்யாதிகள் ஹிதமென்றும், அவைகளில் அவாந்தாரபேதமும், கைங்கர்யமே புருஷார்த்தமென்றும், அந்த கைங்கர்யத்தில் ஸ்வார்த்த பாரார்த்தாதி பேதமும், இப்படியிருந்துள்ள அதிகாரிக்கு நித்யநைமித்திக கர்மங்கள் லோக ஸங்க்ரஹத்தை அநுஸரித்து, அநுஷ்டிக்க வேண்டியதென்றும், அதனாலுண்டாகிற பகவந் முகோல்லாஸம் புருஷார்த்தமென்றும், இந்த அதிகாரிக்கு ஏற்பட்டிருக்கிற ஆசாரப்ரகாரங்களுக்கு யதாமதி நிரூபிக்கப்பட்டன.

முற்றுப்பெற்றது.

# அடிக்குறிப்பு

1. நிரதிசயம்-ஒப்பற்றது; புருஷார்த்தம்-புருஷனால் விரும்பப்படுவது.
2. உபயுக்தர்-உபயோகப்படுவது.
3. பிரமம்-மயக்கம்.
4. அநவதானம்-கவனமின்மை
5. ஆநுபூர்வி-முன்னுள்ளதைப் பின்னுள்ளது ஒட்டியிருப்பது. அதாவது-வேதாக்ஷரக் கூட்டங்களின் கிரமமான தொடர்பு.
6. துல்யம்-ஸமம்.
7. அந்ய பரங்களன்று-அமுக்யங்களன்று.
8. இதன் பொருள்:- ஜகத் சரீரகனை பரமாத்மாவைச் சொல்லுகிற இவ் வேதாந்த சாஸ்திரமானது ஜைமினியாலே சொல்லப்பட்ட பதினாறு அத்யாயங்களோடு கூடின பூர்வ மீமாம்ஸையோடே பொருந்தினதாயிருக்கையாலே, இவ்விரண்டும், ஒரு சாஸ்திரமென்று ஸித்திக்கிறது; என்பதாம்.
9. இதன் பொருள்: ராமாயணம் போல மஹாபாரதமும் பிரமாணமாகக் கொள்ளத்தக்கது; என்பதாம்.
10. இதற்குக் கூர்மபுராண வசனம்:-
    "அக்நே: சிவஸ்யமாஹாத்ம்யம் தாமஸே ஷுப்ரகீர்த்யதே:
    ராஜஸெஷுச மஹாத்ம்யம் அதிகம் ப்ரு ஹ்மணோவிது:
    ஸாத்விகேஷ்வத கல்பேஷுச மஹாத்ம்ய ம் திகம்ஹரே:
    தேஷ்வேவயோக ஸம்ஸித்தா கமிஷ்யந்தி பராங்கதிம்"
11. பகவத் குணங்களைத் தமிழ்ப்பாட்டாலே பாடிக் கொண்டிருந்த ஒரு பிராமணனைக் கண்டு, வேதகானம் உனக்கு விஹிதமாயிருக்கச் செய்தே அதைவிட்டு நீ பாஷாகானம் பண்ணுவது அகிருத்தியமென்று தண்டித்த ஒரு ராஜாவுக்கு, அந்திம காலம் வந்தவாறே யமகிங்கரர்கள் வந்து அந்த ராஜாவை யமதர்மனிடம் கொண்டு போய் விட, அந்த ராஜா யமதர்மனைப் பார்த்து இங்கே வருவதற்கு நான் என்ன பாபம் செய்தேன்? என்று கேட்க, அப்போது, "பிரமாணனால் ஹரிகீர்த்தனமல்லாத பாஷாகானம் தான் செய்யலாகாது; யார்க்கும் ஹரிகீர்த்தனமான பாஷாகானம் செய்வது தோஷமாகாது; ஆகையால் தோஷமில்லாமலே ஹரிகீர்த்தனம் பண்ணின பிரமாணனைத் தண்டித்ததனால் நீ பாபம் செய்தவனானாய்" என்று யமதர்மன் சொல்லியபடி.
12. ஸம்ஸ்கிருத பாஷையிலுள்ள வேதங்கள் எப்படி நித்யங்களாயும் பிரமாணங்களாயுமிருக்கின்றனவோ? அப்படியே த்ராவிட பாஷையிலுள்ள பிரபந்த ரூபங்களான வேதங்களும் நித்யங்களாயும், பிரமாணங்களாயுமிருக்கின்றன.
13. ஹே பகவத் பாதுகாய்! விந்திய பர்வதத்தைத் தடுத்தபடியாலே தடையில்லாமலெங்கும் செல்ல வல்லவராயும், ஸமுத்ர முழுவதையும் ஆசமன தீர்த்தமா பன்னியுண்டவராயும், வாதாபி என்கிற அசுரனை கபளீகரித்து விழுங்கியவராயும், கும்ப ஸம்பவராயுமிருக்கிற, அகஸ்த்ய கடையதாய் ஸ்வேச்சையாலே வந்திருக்கிற நித்தியமான திரவிட பாஷையானது சடகோப ரூபியான உன்னுடைய திருப்பவளத்தில் நின்று வெளிப் புறப்பட்டு புராதனமான வேத ஸமூஹங்களுக்கும் முந்தியெண்ணத் தகுந்ததாயிருக்கிறது.
14. யாவரொருவர் லோகோஜ் ஜீவனார்த்தமாக வேதங்களைத் தமிழ்ப் பாசுரங்களாக வெளியிட்டருளினரோ......
    (இது ரஹஸ்யத்ரஸாரத்தில் உதாஹரணமாக எடுக்கப்பட்ட பிரமாண வாக்யம்)
15. கலியுகத்தில் முன்னே அவதரித்திருக்கிற பெரியோர்களிடத்தில், பின்பு ஈசுவரன் தான் ஆவேசித்துத் தன் விருப்பத்தை நிறைவேற்றுகிறான்.
16. ஸாக்ஷாந் நாராயணன் தன்னுடைய கிருபையாலே ஆசார்யனாகிற மனுஷ்ய ரூபத்தை யெடுத்துக் கொண்டு ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தில் முழுகியிருக்கிறவர்களை சாஸ்திரமாகிற கையாலே கரையேற்றுகிறான்.
17. திருவேங்கடமுடையானுடைய அவதாரமோ? அன்றி அவனுடைய கண்டாமணியின் அவதாரமோ? என்பதாம்.
18. தேவதைகளுக்கு விரோதிகளான அசுரர்களுடைய சைந்யங்களுக்குப் பயத்தை உண்டுபண்ணுகிறதாயும் ஸ்ரீய: பதியினுடைய கைங்கர்ய விதியிலே நியமிக்கப்பட்டிருக்கிறதாயுமுள்ள கண்டாமணியானது, வித்வான்களுக்குச் சத்ருக்களாயிருக்கிறவர்களுடைய கூட்டத்துக்கு பயத்தை உண்டுபண்ணுகிறவராயும், ஸ்ரீய: பதியினுடைய கைங்கர்யத்திலே அதிகிருதராயுமிருக்கிற தேசிகனாக அவதரித்ததென்று வித்வான்களாலே உபபத்திகளைக் கொண்டு உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது.
19. திருவனந்தாழ்வான் உபய வேதாந்தங்களினுடைய ரக்ஷணத்தின் பொருட்டு முந்தி உடையவராயும், பிந்தி மணவாளமா முனிகளாயும் அவதரித்தார் என்பதாம்.

20. அவயவ ஸம்ஸ்தானம்-அவயவஅமைதி

21. சரு — ஹோமத்துக்குரித்தான அன்னம்.

22. தன்னுடைய வார்த்தையாலே க்ஷத்திரியரான விசுவாமித்திரனை பிராமணனுக்கின வசிஷ்டருடைய என்பதாம்.

23. பிறவியினாலும், உபநயனத்தாலும், பிராமண்யத்தாலும், மூன்று பிறப்பையுடைத்தாயிருக்கிற விசுவாமித்திரரிடத்தினின்றும் என்பதாம்.

24. முந்தி க்ஷத்திரியனாயிருந்து பிந்தி பிராமண்யத்தை யடைந்த விசுவாமித்திரருடைய ஸஹவாஸத்தால் உண்டாயிருக்கிற புண்யத்தைப் போல என்பதாம்.

25. யோகிகள் எந்த ஜாதியிலும் பிறக்கிறார்கள். அவர்கள் பரமாத்மாவை சாக்ஷாத்கரித்தவர்களாகையால் அவர்களின் ஜாதி நிரூபிக்கத் தக்கதன்று.

26. பகவத் பக்தி மாஹாத்ம்யத்தால் துர்ஜாதி ரூப தோஷமில்லாதவன்.

27. ஸர்வேசுவரன், தேவமனுஷ்யாதி ஜாதிகளில் அவதரிப்பது போல அப்படியே அவனுடைய பக்தர்களும், அவதரிக்கிறார்கள். ஜாதி வ்ருத்த குணங்களால் இதில் நிந்திக்கத் தக்க தொன்றுமில்லை என்பதாம்.

28. ஸாஜாத்யம்-ஒரினமாதல்.

29. பீஷ்ம துரோணாதிகளையும் என்னையும் விட்டு சூத்ரான்னத்தை புஜித்த காரணமென்ன? என்பதாம்.

30. பிராமணனிடத்திலாவது க்ஷத்திரியனிடத்திலாவது ஞானத்தைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டும் என்பதாம்.

31. அநுவ்ரஜ்யை- பின்னிற்றல்; சுச்ரூஷை- பணிவிடை

32. லோகஸங்க்ரஹம்-லோகாநுக்ரஹம்.

33. தூஷ்ணீம்ஸம்ஸ்காரம் - மந்திரமின்றி தந்திரிகமாகச் செய்யும் கிரியைகாரம்.

34. வேம்பிலுண்டான புழுவானது அதில் குணதோஷ க்ரஹணம் செய்து பிரவ்ருத்தி நிவ்ருத்தி பண்ணாமல், அதின் அதீனமாயிருந்து கொண்டு அதில் போக்யதா புத்தியோடு அதை அநுவர்த்தித்துக் கொண்டிருக்கும் என்பதாம். இதனால் அந்தப் புழுவுக்கு வேம்பிலிருக்கிற போக்கியதா புத்தியானது எப்படி ஸத்தாப்ரயுக்தமாயிருக்கிறதோ அப்படியே ஈசுவர விஷயத்திலும் சேதனன் குணக்ரஹணம் பண்ணாமலே போக்கியதா புத்தியோடு அவனை அநுவர்த்தித்து அவனதீனமாயிருக்கை ஸத்தாப்ரயுக்தமான நிருபாதிக சேஷத்வம் என்றதாயிற்று.

35. இந்த சுலோகம் ஸ்ரீராமாயணத்தில் அநுஸூயைப் பார்த்து பிராட்டி அருளிச்செய்த வார்த்தை; என்னுடைய பர்த்தாவான பெருமாள் குணஹீனராயிருந்தாலும் நான் அநுவர்த்தித்திருக்கை எனக்கு ஸ்வரூபம் என்பதாம்.

36. தாசர; ச தேபூதா:- தாசபூதா: 'பூ ஸத்தாயாம்' என்கிற தாதுவினால், பூதா: என்பதற்கு ஸத்தாவிஸிஷ்டர் என்பது பொருள். தாஸ பூதா: என்பது ஹேது கெர்ப்ப விசேஷணமாகையால் தாஸ்யத்தாலே ஸத்தைப் பெற்றிருக்கிறவர்கள் ஆத்மாக்கள் என்று அர்த்தமாம். அதாவது ஸர்வேசுவரனுக்கு நிருபாதிக சேஷத்வமான தாஸ்யத்தாலே ஸத்தை பெற்றிருப்பவர் சேதனர் என்றபடி. தாஸ்யமாவது—சேஷிபக்கல் பிரீதியோடே கூடின சேஷத்வமாம்.

37. ஆத்மாவானவன ஜ்ஞான ஸ்வரூபனாயும் ஸுகரூபியாயும் பரமாத்மாவுக்கு சேஷமாயு மிருப்பன் என்பதாம்.

38. இந்த சுலோகம் விசுவாமித்திரரைப் பார்த்து பெருமாள் இளைய பெருமாள் இவர்கள் சொல்லும் வார்த்தை (இ—ள்) ருஷிகளுக் கெல்லாம் சிரேஷ்டமான விஸ்வாமித்ர மஹருஷியே நாங்களிருவரும் தேவரீருக்குக் கிங்கரர்களாக சமீபத்திலிருக்கிறோம் என்பதாம்.

39. முன்பு லோகத்துக் கெல்லாம் நாதனாயிருந்த பெருமாள் சுக்ரீவனை சரணமடைந்தார் என்பதாம்.

40, கட்டிப் பொன் போலிருக்கையாவது:- ஒருவன் மதீயம் என்று அபிமானித்து வைத்திருக்கும் கட்டிப் பொன்னானது அப்பொன்னுடையவனுக்கு, பொன்னுடைமை என்னும் ஓரம்சமாகிய ஸ்வம்மாய், அவனை ஸ்வாமியாக்கிக் கொண்டு, அவன் பொன்னுடையன் என்னும் சிறப்படைதற்கு உறுப்பாய், அவனுக்கு இஷ்டவினியோக போக்யமாருப்பது போல சேதனனும் சர்வேசுவரனுக்கு சரீரமாயிருக்கும் ஓரம்சமாய், தத்விபூதியந்தர்க்கதமான ஸ்வம்பாய், அவனை ஸ்வாமியாக்கிக் கொண்டு, அவன் தாஸ விஷ்டன் என்னும் சிறப்பு (வைசிஷ்ட்யம்) அடைதற்கு உறுப்பாம். அவனுக்கு இஷ்டவிநியோக யோக்யமாயிருக்கை.

41. பணிப்பொன் போலிருக்கையாவது:- தட்டான் கைப் பட்டுப் பணிசெய்யப் படுகிற பொன்னானது அவனுக்கு அது சேஷமல்லாமலிருந்தாலும், அவன் அதனை உருக்கவும், தட்டவும், நீட்டவும், ஆக்

கவும், அழிக்கவும், ப்ரவ்ருத்திக்கு மளவில் அது நெகிழ்வதும், வளைவதும், நிமிர்வதும், நீள்வதும், ஆவதும், அழிவது மாகி ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளில் ஸ்வாதீனதையின்றி அவனை வசப்பட்டிருப்பது போலே, சேதனனும் தன் ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளில் தனக்கு ஸ்வாதீனதையின்றி ஸர்வேசுவரனிஷ்டப்படி ஆக்கவும், அழிக்கவும், வசப்பட்டிருக்கை. ஆகவே, ஸ்திதி ப்ரயுக்தமான பராதீனதையே சேஷத்வ மென்றும், க்ருதிப்ரயுக்தமான பராதீனதையே பாரதந்த்ரியமென்றுங் கண்டு கொள்வது. பகவத்ஸம்பந்தமான சேஷத்வ பாரதந்த்ரியங்களிரண்டும் சேர்ந்தேயிருக்குமாகையால் அவற்றைத் தனித்தனி பிரித்துணர்ந்து கொள்ளும்படி இவ்வுதாரணங்கள் காட்டப்பட்டன. இன்னும், அக்நிசேஷமான தூமம் அக்நிபரதந்தரமாகாமல் வாயுபரதந்த்ரமாயிருப்பது கொண்டும் சேஷத்வ, பாரதந்த்ரியங்களுக்குத் தனித்தனி ப்ரஸித்தியுண்டென்று கண்டு கொள்ளலாம்.

42. பர்த்தாவான ஸர்வேசுவரனுடைய போகத்துக்கு அதிசயத்தை விளைப்பதான தன்னுடைய போகத்தை அநுபவிக்கிறுள் என்பதாம்.

43. இதன் பொருள். தத்—அந்த கர்த்ருத்வமானது. பாரத்—ஈசுவரனுலே வருகிறது' ச்ருதே-வேதத்திஞற் சொல்லப்படுகிறது.

44. இதனுடைய விஸ்த்ருதமான நிரூபணம் ஸ்ரீ. உ. வே. தேசிக வரதாசார்யரெழுதிய விசிஷ்டாத்வைதம் என்கிற விஷயத்திலிருப்பதால் அங்கு பார்த்துக் கொள்ளக் தக்கது.

45. சேதனனுக்கு நியத விசேஷணமாயுள்ள ஜ்ஞாநமானது இவனுடைய கர்மாவாலே மறைக்கப்பட்டதாய்க் கொண்டு பிறப்புக்குத் தக்கபடி ஏற்றத் தாழ்வாய் இருக்கும். அதாவது ப்ராணனில்லாத தாதுவர்க்கங்களில் மிகவும் குறைவாயும், புல், புண்டு, மரங்களில் அவைகளைக் காட்டிலும் அதிகமாயும், விலங்கினங்களில் அதிலும் மிகுதியாயும் இப்படியே மனுஷ்யர்களிடத்தில் இன்னும் மிகுதியாயும் இருக்கும் என்க.

46. கையில்லாமல் பதார்த்தங்களைக் கொள்ளுகிறுன், காலில்லாமல் ஓடுகிறுன், கண்களில்லாமல் பார்கிறுன். காதில்லாமல் கேட்கிறுன், என்பதாம்.

47. வாலா நெல்லியினுடைய நுனியை நூறு பங்காக்கி அதில் ஒன்றையெடுத்து நூறு பாகம் பண்ணிய அதிலொரு பாகத்தின் அளவு ஆத்மாவுக்கு உள்ளது என்பது ஆம்.

48. ஆத்மா அணுபரிமாணன்: அது எப்படியென்ருல்? சரீரத்திலின்றும் வெளிப்புறப்பட்டு பரலோகத்துக்குப் போகிருனென்றும் மறுபடி இந்த லோகத்துக்கு வருகிருனென்றும் பிரமாணமிருப்பதால் என்றவாறு.

49. ஆத்மா தன்னுடைய குணமான ஜ்ஞானத்தால் எங்கும் வியாபித்திருப்பன். அது எப்படியென்ருல் ஸூர்யன் ப்ரபையாலே வ்யாபிப்பது போல என்க.

50. "ராஹோ: சிர;" என்பதற்கு ராஹு சிரோபாகமாகவிருக்கச் செய்தேயும் "ராஹோ:" என்கிற ஷஷ்டிக்கு அபேதம் அர்த்தமாய் ராகுவைக் காட்டிலும் பேதமில்லாமலிருக்கிற சிரசு என்று அர்த்தமாகிறது. "மமாயமாத்மா" என்பதற்கு என்னுடை இந்த ஆத்மா என்பது பொருள். இவ்விடத்தில் ஷஷ்டிக்கு அபேதம் அர்த்தமாய் என்னைக் காட்டிலும் வேறில்லாதவன் ஆத்மா என்பது பொருளாம். "சிலாபுத்ரஸ்ய சரீரம்" என்பதற்கு, சிலாமயமான புத்ரனுக்கு சிலை சரீரம், என்று பொருள்படும். இங்கும் ஷஷ்டிக்கும் அபேதமே அர்த்தம்.

51. "புருஷாவாத்மமானவெள" என்கிற கோசத்தின்படி இவ்விடத்தில் புருஷனென்பது ஆத்மாவை, "யம்" என்பதால் ஜாத்யாதி நியமமில்லை. ஜதிமாதின்றுள்ள யாதொரு ஆத்மாவை மதுவென்னும் அசுரனை நிரசித்தாற் போல ரஜோகுண தமோ குணங்களை நிரஸித்துக் கொண்டு போருகிற ஸர்வேசுவரன் "த்ருசிப்ரேக்ஷணே" என்கிற தாது பாடத்தின் படி ப்ரக்ருஷ்டமான ஈக்ஷணமென்று சொல்லப்படுகிற கடாக்ஷத்துக்கு விஷயமாக்குகிருனே அந்த ஆத்மா ஸத்வநிஷ்டனுய் மோக்ஷத்திலே ருசியுள்ளவனுக ஆகிருன் என்பது.

52. காரணம் ஒன்றும் அபேக்ஷியாத என்னுடைய கடாக்ஷத்தாலே, மோக்ஷத்தை அடைகிருன் என்று பகவத் வாக்கியம்.

53. இப்படிப்பட்ட நான் புருஷகாரத்தை யாவது மற்ருெரு காரணத்தையாவது அபேக்ஷியாமல் கேவலம் என்னுடைய இச்சையாலே ஒருகால விசேஷத்திலே ஒருவனைக் கடாக்ஷிப்பேன் என்றவாறு.

54. மயர்வற மதிநல மருளினன் என்று உபக்ரமத்தில் பகவத் கிருபையைச் சொல்லி "என்கொலம்மான் திருவருள்" என்று உபஸம்ஹாரத்திலும் கிருபையைச் சொல்லுகிறபடியாலே "மாலேயேறி மாலருளால் ன்னுகுருகூர்ச்சடகோபன்" என்கிற ாடியே பகவத்கிருபையாலே தரித்திருக்கிற ஆழ்வாருடைய பக்திக்குக்

காரணமாக பகவத்கிருபையே ஆழ்வார் ஈசுவரனுடைய திருவடியை சேரு கைக்கு ஸாதநம் என்றவாறு.

55. நித்ய விபூதியிலிருக்கிற பாஞ்சஜன் யாழ்வான், திருவாழிலாழ்வான், நந்தக முதலான பஞ்சாயுதங்கள் ஈசுவரனிடத்திலிருக்கிற ப்ரேமாதிசயத்தாலே ரக்ஷகனை ஈசுவரனிடத்தில் ரக்ஷ்யத்வபுத்தியைப் பண்ணி அத்தாலே அவனுக்கு மங்களாசாஸநம் பண்ணிக் கொண்டிருப்பார்கள் என்பதாம்.

56. மஹாமதியான விதுரர் தன்னுடைய கிருஹத்தில் க்ருஷ்ணனுக்கு தான் ஸமர்ப்பித்த ஆசனத்தை, துர்யோதனனுடைய ஸஹவாஸ தோஷத்தால் துர்யோதனனைப் போல் தானும் பொய்யாஸனம் போட்டிருக்கலாமென்று கலங்கி தடவிப் பார்த்தார் என்றபடி.

57. ஜ்ஞானத்தினுடைய பரிபாகத்தாலே வரும் அஜ்ஜானம் மிகச் சிறந்த தென்றபடி.

58. கர்மாவை அபேக்ஷித்து ஈசுவரன் சேதனர்களுக்கு ஸுகதுக்கங்களைக் கொடுப்பதால் ஒருவனுக்கு ஸுகத்தைக் கொடுக்கையும், ஒருவனுக்கு துக்கத்தைக் கொடுக்கையுமாகிற பாரபக்ஷ தோஷமில்லை என்பதாம்.

59. ஈசுவரனுடைய ஸ்வாதந்த்ரியமானது உபந்நமென்றும், அநுபந்நமென்றும் விசாரிக்கத்தக்கதன்று என்பதாம்.

60. ராஜாவில்லாத தேசத்தில் யானையானது யாரையாவது ஒரு ராஜஸிம்மாஸனத்தில் கொண்டு வந்து வைத்தால் அது விசாரிக்கத் தகாதது போலேயும், ராஜாவானவன் நிகிருஷ்டனாயிருக்கும் மொருவனை தன்னுடைய இச்சையாலே உத்க்ருஷ்டனாக்கி வைத்தால் அதுவும் விசாரிக்க வொண்ணாது போலேயும், ஸர்வேசுவரன் தன்னுடைய இச்சையாலே நித்ய ஸம்ஸாரிகளிலொருவனை நித்ய ஸூரிகளோடு ஒரு கோவையாகச் சேர்க்குமது விசாரிக்கத் தக்கதன்று என்பதாம்.

61. சேதனனுக்குத் தன்னிடத்தில் ப்ராதிகூல்ய மில்லாமையே பற்றாகக் கொண்டு இவன் பண்ணின அளவில்லாத அபராதங்களைக் காணக் கண்ணிட்டு தன்னையடைகிறதற்கு ஸாதனமான உபாயங்களில் ருசியை உண்டாக்குகிறான் என்பதாம். (இதுவும் ஸ்வாதந்தர்யத்தில் ஒரு வகை)

62. ஸர்வேசுவரன் உபநிஷத்துக்களில் தன்னுடைய ப்ராப்திக்குத் தானே உபாயமாகச் சொல்லப்படுகிறான். அவனுடைய ப்ரஸாதத்துக்கு ஸாதனமாக பக்திப்ரபத்திகள் சொல்லப்பட்டன. அந்த பக்திப் பரபத்திகளை இவனனுஷ்டிப்பதற்குப் காரணம் இவனுடைய யாத்ருச்சிக ஸுக்ருதங்கள், அதற்குக் காரணம் ஸ்ருஷ்டிகாலத்தில் இவனுக்கு கரணகளேபரங்களைக் கொடுத்து ஜ்ஞானம் முதலானதையும் கொடுத்தவனும் ஸர்வத்தையும் சிருஷ்டிகக வல்லவனுமான ஸர்வேசுவரன் என்பதாம்.

63. ஒரு வ்யாஜத்தையும் அபேக்ஷியாமல் அபாயமில்லாத உபாயமாக உம்மைச் சொல்வார்கள் என்பதாம்.

64. ஒரு வ்யாஜத்தையும் அபேக்ஷியாமல் ஸுஹ்ருத்தாயிருக்கிறவனை என்பதாம்.

65. இந்தவாசார்யன் என்று ஈசுவரன் பர்யந்தம் குருபரம்பரை அநுஸந்தேயம், பிராட்டிக்கு வல்லபனான ஈசுவரன் முதலாகவும், நாதமுனிகள், ஆளவந்தார் இவர்கள் நடுவாகவும், கொண்டு ஸ்வாசார்யனளவும் குருபரம்பரை அநுஸந்திக்கத்தகும்.

66. மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்கு உள்ளீடான வஸ்துவிலும், மந்த்ரப்ரதனான ஆசார்யன் பக்கலிலும், எப்போதும் பக்திபண்ண வேண்டும்; இதுவே முக்கியமான சாதனமாகும்.

67. அந்த ஆசார்யன் அந்த ஸிஷ்யனுக்கு வித்யா ஜந்மத்தைப் பிறப்பிக்கிறான். அதுவே உத்க்ருஷ்டமான ஜன்மா. சரீரத்தையுண்டு பண்ணின பிதாவைக் காட்டிலும் ஜ்ஞான ஜந்மத்தை உண்டாக்கிய பிதாவே சிறந்தவன்.

68. இப்படி சேதனனுடைய துர்க்கதியைக் கண்டு பொறுக்க மாட்டாமல் அவர்களுக்கு ஹிதோபதேசம் பண்ணுகைக்கு ஹேதுவான க்ருபை ஸர்வலோக மாதாவான பிராட்டிக்கும், மகனான ப்ரஹ்லாதாழ்வானுக்கும், ஆழ்வாருக்கும், ஆழ்வாருடைய திருவடிகளை ஆசிரயித்து உஜ்ஜீவித்தவரான உடையவர்க்குமேயுள்ளது.

69. ப்ருஷ்டைசுவர்யகாமன், அபூர்வமாக ஐசுவரியத்தை அபேக்ஷிக்கிறவன், ப்ரக்ருதியை விட்டும் பிரிந்த ஆத்மஸ்வரூபத்தையடைய விரும்புமவன், ஈசுவரனையடைய விரும்பும் ஜ்ஞாநி, இவர்கள் நால்வரும் என்னை யு பாஸிக்குறார்கள்.

70. ப்ரதீ காலம்பனங்களைக் காட்டிலும் வேறுபட்டிருக்கிற ப்ருஹ்மாத்மக மான ஸ்வாத்மாவை உபாஸிக்கிறவர்களையும் அர்ச்சிராதி கதியாலே சேர்ப்பிக்கிறானென்று வியாசர் சொல்லுகிறார் என்பதாம்.

71. யாதொரு பரமபதத்தில் எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரித்தவர்களாய் எப்போது

முள்ளவர்களாயிருக்கச் செய்தேயும் நூதன வயஸ்கர்களாயிருக்கிறவர்கள் என்பதாம்.

72. யாதொரு பரமபதத்தில் எப்போதுமுள்ளவர்களாயிருக்கிற நித்ய ஸூரிகளிருக்கிறார்களோ? என்பதாம்.

73. நித்ய ஸூரிகள் எப்போதும் ஈசுவரனை ஸாக்ஷாத்கரித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதாம்.

74. இதன் அர்த்தம் மஹத்தத்வ முதலாக பஞ்ச பூதங்கள் முடிவாக எழுங்கூடி அண்டத்தை யுண்டாக்கும் என்பதாம்.

72. இதன் அர்த்தம். அண்டங்கள் அளவிறந்தன என்பதாம்.

76. இதன் அர்த்தம். ப்ரக்ருதி மஹத் அஹங்காரம் ஆகாச முதலான பூதங்கள் இவைகளால் சூழப்பட்ட அண்டமாகிற குடத்துக்குள்ளே எழுசாண் சரீரத்தையுடைய நான் எவ்வளவு? இப்படிப்பட்ட அநேகாண்டங்கள் தொங்குகிற ரோம கூபங்களையுடைய உம்முடைய மஹிமை எவ்வளவு? என்று (ப்ருஹ்மா ஸ்துதித்தபடி.)

அடிக்குறிப்புகள் மூலநூலில் வெளிவந்துள்ளவரை இங்கே கொடுக்கப்பட்டுள்ளது.

* * *




ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ ராமாயண ஸாரம்

காரப்பங்காட்டில் தோன்றி சென்னை மற்றும் நாட்டின் பல பகுதிகளிலும் பல்லாயிரக் கணக்கான உபன்யாஸங்களை நிகழ்த்திப் பெயர் பெற்றவர் ஸ்ரீ உ. வே. வித்வான் வெங்கடாசாரியார் ஸ்வாமி. க்ரந்த காலக்ஷேபங்கள் மூலம் அனேக வித்யார்த்தங்களையும், பிரவசன கர்த்தாக்களையும் உலகுக்கு உபகரித்தவர்.

ஸ்ரீராமாயண உபன்யாஸத் தொடரை பார்த்தஸாரதி பக்த ஸபை சார்பில் திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் நிகழ்த்திய போது வெளியிடப் பெற்ற விழா மலரில் இந்நூல் இடம் பெற்றது.

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவசியம் "அறிய வேண்டிய அர்த்தங்கள்" என்று கூறப்பெறும் அர்த்த பஞ்சகத்தை உள்ளத்தில் கொண்டு ஸ்ரீராமாயணத்தை ஆராயும் ஓர் ஆய்வு நூலாக மீமாம்ஸா நியாயங்களின் உதவி கொண்டு இந்நூலை ஸ்வாமி இயற்றியுள்ளார்.

மிக்க இறைநிலை மெய்யாம் உயிர்நிலை தக்கநெறி தடையாகி தொக்கியிலும் ஊழ்வினை வாழ்வு, ஆகிய ஐந்து செம்பொருட்களும் தூய தமிழ் நடையில் எழுதப்பெற்றுள்ளது. தற்காலப் போக்கைக் கருத்தில் கொண்டு ஸ்வாமி கால்நூற்றுண்டிற்கு முன்னமேயே ஸம்ப்ரதாய மணிப்பிரவாள நடையை விட்டு தமிழ் மரபு நடையை மேற்கொண்டுள்ளது குறிப்பிடத்தக்கதாம்.

ஸ்ரீராமாயணம் ஸ்ரீவைஷ்ணவக் கருத்துக்களுக்கு ஊற்றுக் கண்ணாக விளங்குவ ஸ்ரீராமாயண ஸாரம் என்னும் இந்நூல் ஸ்ரீவைஷ்ணவ உபன்யாஸகர்களுக்கு வழிகா அமைந்துள்ளது எனலாம்.

காரப்பங்காடு ஸம்ப்ரோக்ஷண வைபவத்தை ஒட்டி இப்போது வெளிவரும் ஸ்ரீராமாயண ஸாரம் என்னும் இந்நூலை ஸ்ரீவைஷ்ணவ உலகம் வரவேற்கும் என எண்ணுகிறோம்.

விலை: ரூபாய் ரீ.

கோதா நிலையம் வெளியீடு

10, தியாகராஜபுரம்

சென்னை—600 004.